உட்கவர் மனம்



மரியா மாண்டிசோரி

ஆசிரியர்

மரியா மாண்டிசோரி

தமிழாக்கம்

பெ. தூ. வைத்தீஸ்வரன், B.Sc.,



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வெளியீடு—43



# உட்கவர் மனம்

## (ABSORBENT MIND)

ஆசிரியர்

மரியா மான்டிசோரி

தமிழாக்கம்

சி. ந. வைத்தீஸ்வரன், B. Sc.,




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்



## அணிந்துரை

### (திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழ் நாடு அரசாங்கம், சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கல்லூரித் தமிழ்க் குழுவொன்றை நிறுவி அதன் மூலம் கல்லூரி மாணவர்கட்குத் தேவையான பல தமிழ் நூல்களை வெளியிட்டு வந்தது. தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்றுகொண்ட பிறகு, தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில், இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளி வர வேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் 1962ல் நிறுவப்பெற்றது.

உலகின் பிற பகுதிகளிலுள்ள மக்களின் அறிவு வளர்ச்சிக்குக் குறையாமல் தமிழ் மக்களும் அறிவு வளர்ச்சி பெறவேண்டுமானல், பிற மொழியிலுள்ள நூல்களைப் படிக்க முடியாதவர்கள் தமிழின் மூலமே எல்லாவற்றையும் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்படவேண்டும். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே தமிழ் வெளியீட்டுக் கழகம் கல்லூரி மாணவர்களுக்குரிய நூல்களை வெளியிடுவதுடன், பொது மக்களுக்கும் பயன்படுகின்ற முறையில் வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், விஞ்ஞானக் கலைகள் ஆகிய பல துறைகளிலும் பல்வேறு நூல்கலை வெளியிட முனைந்துள்ளது.

அத்தகைய முயற்சிகளுள் ஒன்ருக ‘உலகவர் மனம்’ என்னும் இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 43-வது வெளியீடாக வருகிறது.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து, இதுவரை 78 நூல்கள் தமிழ் வெளியீட்டுக் கழகத்தால் வெளியிடப் பெற்றுள்ளன. இந்நூல்களை வாங்கிப் படிப்பதன் மூலம் தமிழ் மக்கள் மேலும் வளர்ச்சி பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

**எம். பக்தவத்ஸலம்**

# மொழிபெயர்ப்பாளரின் நன்றியுரை

நான் காலஞ்சென்ற **டாக்டர் மரியா மான்டிசோரி** அம்மையாருடன் அடையாறு, கோடைக்கானல் பிலானி ஆகிய இடங்களில் துணை ஆசிரியனாகத் தொண்டாற்றும் பேறு பெற்றேன். அன்று முதல் அவர்களின் நூல்களை நம்மவருக்கு அறிமுகப்படுத்தி என் நன்றியைச் செலுத்த வேண்டுமென்ற பேரவாக்கொண்டிருந்தேன். 'குழந்தைமை ரகசியம்', 'புத்துலகுக்கான கல்வி' என்ற இரு மொழிபெயர்ப்புகள் வெளி வந்தன.

**'உட்கவர் மனம்'** இன்று கலைச்சொற்களுடன் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 43-வது மலராய்க் காட்சி அளிக்கிறது. இது தமிழ் வெளியீட்டுக் கழகத்தார் அம்மையாருக்குக் காட்டும் பாராட்டென்றும், குழந்தை உலகத்துக்கே செய்யும் பெருந்தொண்டென்றும் கருதுகின்றேன். குறுகிய காலத்துக்குள் இதைச் சிறப்பாக வெளியிட்ட கழகத்துக்கு என் பாராட்டுகள் உரியன.

மொழிபெயர்க்க அனுமதி தந்த மரியா மான்டிசோரி அவர்களுக்கும், அடையாற்றுத் தியசாபிகல் பப்ளிஷிங் ஹௌசுக்கும் என் நன்றி உரியது.

நல்லவற்றையும் தீயவற்றையும் குழந்தை மனம் தனக்குள் கவர்ந்துகொண்டு நிரந்தரமாக்கிக்கொள்கிறது. குழந்தையே மனித குலத்துக்கு வித்தாகிவிடுகிறது. 'உலகம் அழியப்போகிறதே!' என்று அஞ்சுவோர்க்கு இனிமேல் முதியோரால் வழி காட்ட இயலாது. ஏனென்றால், இன்று வெறி பிடித்துத் திரியும் முதியோர் யார்? இளமையிலேயே பல வெறிகளைத் தம்முள் நிலைநிறுத்திக் கொண்டவர்களல்லவா! குழந்தையின் உட்கவர் மனத்தில் தேடினால் அங்குக் கிடைக்கும், தத்தளிக்கும் உலகத்துக்கு, ஒரு கலங்கரை விளக்கம்! தேடுவோம்.

**சி. ந. வைத்தீஸ்வரன்**

# முதற்பதிப்பின் முன்னுரை

**டாக்டர் மரியா மான்டிசோரி** அஹமதாபாதில் சொற்பொழிவுகள் ஆற்றினார். அவற்றை அடிப்படையாகக்கொண்டு இந்நூல் உருவாகி இருக்கிறது.

அம்மையார் இத்தாலிய நாட்டவர்; **மான்டிசோரி** ஆசிரியர் பயிற்சியை நடத்தி வைக்கச் சென்னைக்கு வந்தவர். இரண்டாம் மகாயுத்தம் வந்தது. எதிரி நாட்டைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால் கோடைக்கானல் எல்லையைக் கடக்கக்கூடாது என்ற கட்டுப்பாட்டுடன் அங்கேயே இருந்தார். அங்கேயே பயிற்சியையும் நடத்திவந்தார். விடுதலை பெற்ற பிறகு முதற்பயிற்சியை அலகபாதில் ஏற்பாடு செய்தார். அது யுத்தம் முடியும் வரை நடந்தது.

அவர் குழந்தையின் தனிப்பட்ட மனச்சத்திகளை இந்நூலில் நமக்கு எடுத்துக் காட்டுகிறார். ஆசிரியர் இல்லாமலும், சாதாரணமாகக் கருதப்படும் எவ்விதக் கல்வித் துணைக் கருவிகளுமில்லாமலும், பெரும்பாலும் கவனிப்பாரற்றும் தடை செய்யப்பெற்றும் இருப்பினும், மிகச் சில ஆண்டுகளுக்குள் மனித ஆளுமையின் எல்லாச் சிறப்பியல்புகளையும் குழந்தை தானாகவே தனக்குள் உருவாக்கிக் கொள்கிறது.

குழந்தை பிறக்கும் பொழுது உடல் வலிமை குன்றியதாயும், சாதாரணமாக மனத்துக்குரிய பெற்றிகளை இன்னும் பெறாத நிலையிலும் இருக்கிறது. அதன் நிலை பூச்சியம் என்றே கூறிவிடலாம். இந்த நிலையில் இருந்த குழந்தை ஆறு வயதுக்குள் எல்லா இனங்களையும்விட முன்னேறிவிடுகிறது. இது வாழ்க்கையின் அற்புதங்களுள் ஒன்றென்பதற்கு ஐயமில்லை.

இந்த நூலில் **டாக்டர் மான்டிசோரி அம்மையார்** தம்முடைய தீர்க்கதரிசன ஒளியைக் காட்டுகிறார். குழந்தைகளுடன் நெருங்கிப் பழகி, கவனித்து, புறநிலைத் தோற்றப் பொருள்களை ஆய்ந்து மதிப்பிட்ட காரணத்தால், இந்த ஒளி தோன்றியிருக்கிறது. மனித வாழ்க்கையின் முதற்பருவம், வாழ்க்கைக்கே தீர்ப்பளிக்கும் பருவமாகும்.

வயது வந்தவர்கள் இப்பருவத்துக்குச் செய்ய வேண்டுவதையும் இந் நூல் குறிப்பிடுகிறது. 'பிறப்பிலிருந்தே கல்வி' என்று இப்பொழுது எங்கும் ஏற்றுக்கொண்டு வரப்படுகின்ற கருத்துக்கும் இந்நூல் நடை முறையில் விளக்கம் தருகிறது.

கல்வி என்பது வாழ்க்கைக்குத் துணையாகும் பொழுதுதான் இதைத் தர முடியும். அப்பொழுது கல்வி என்பது கற்பித்தல் என்ற குறுகிய வரம்பைக் கடந்து, ஒரு மனத்திலிருந்து மற்றொரு மனத் துக்குப் புகட்டக்கூடிய அறிவையும் இலட்சியங்களையும் தாண்டி விடுகிறது.

மான்டிசோரி முறையைச் சேர்ந்த முக்கியமான கருத்துகளுள் ஒன்று 'சூழ்நிலையைத் தயாரித்தல்' ஆகும். குழந்தை பள்ளிக்கூடத் தில் சேருவதற்கு மிக முன்னரே 'பிறப்பிலிருந்தே கற்பித்தல்' என்ற கொள்கைக்கு இக்கருத்துத் திறவுகோலாகிறது. தொடக்கத்திலிருந்து மனிதத் தனியனைப் பண்படுத்துவதற்கும் இது திறவுகோல் ஆகிறது.

பல நாட்டுக் குழந்தைகளை நேரடியாகக் கவனித்து அவற் றுடன் பழகிக் குழந்தைத் தன்மையை மலரச் செய்து, மனச் சத்தியை தெய்விகச் சிறப்படையச் செய்தவர் விஞ்ஞான முறை அடிப்படையில் இக்கொள்கையை வழங்குகிறார். **மான்டிசோரி அம்மையார்** குழந்தையிடம் கண்ட இத்தெய்விகச் சிறப்புக்கும் இன்று மனிதக்குலம் அளிக்கும் காட்சிக்கும் எவ்வளவு முரண்பாடு உள்ளது? வளரும் பருவத்தில், மனிதக்குலம், கவனித்துப் போற்றப் படாத காரணத்தால், தன் பரம்பரைக்கே பெருந்தொல்லை தரும் முறையில் வளர்கிறது.

மரியா மான்டிசோரி

# உட்கவர் மனம்

## பொருளடக்கம்

நூற்பிரிவு பக்கம

நூற்பிரிவு பக்கம்

# 1. உலகத்தைத் திருத்தி அமைப்பதில் குழந்தையின் பங்கு

குழந்தையின் உள்ளத்தில் மாபெருஞ்சத்திகள் நிறைந்திருக்கின்றன. இச்சத்திகள் காப்பாற்றப்பட வேண்டும். இதற்கென்று தோன்றிய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் நாம். நம் எண்ணங்கள் மேன்மேலும் தெளிவாகப் பெருகிக்கொண்டே போகின்றன. அத்தகைய எண்ணச் சங்கிலியையும் நமது இயக்கத்தையும் பிணைக்கின்ற ஒரு தனி வளையமே இந்நூல்.

இன்று உலகம் பெரிய குழப்பத்தில் இருக்கிறது. அதன் வருங்காலச் சீரமைப்புக்கென்று பல திட்டங்கள் தோன்றியிருக்கின்றன. இவற்றை நிறைவேற்றி வைப்பதற்குக் கல்வியே எல்லாவற்றிலும் சிறப்பான வழியென்பது பலராலும் கருதப்பட்டு வருகிறது. நாகரிகம் உயர்ந்த நிலை அடைந்திருப்பதாகத் தோன்றின போதிலும், மன வளர்ச்சியைப் பொறுத்தமட்டில் அது மிகவும் தாழ்ந்த நிலையில் இருக்கிறதென்பதை எவரும் மறுப்பதில்லை.

போர்கள் ஒழிய வேண்டும். அமைதியாய் ஒன்று கூடி வாழ்கின்ற சமூகம் வேண்டும். இவற்றை நிலை நாட்ட வேண்டுமென்ற ஆவலுக்குத் தக்க அளவு சமூகம் மன முதிர்ச்சியை இன்னும் அடையவில்லை என்று நானும் நம்புகிறேன். மனிதர் தம் விதியைத் தாமே உருவாக்கிக்கொள்வதற்கு இன்னும் ஆயத்தமாகவில்லை. உலக சம்பவங்களை அடக்கி நல்வழியில் திருப்புவதற்கு அவர்கள் முன் வருவதில்லை. அதற்குப் பதிலாக, மனிதன் அவற்றுக்குப் பலியாகிவிடுகிறான்.

மனித இனத்தை மேம்படுத்தும் பல வழிகளுள் கல்வியும் ஒன்றென்பது ஒப்புக்கொண்டிருந்த போதிலும், மனத்தின் கல்வியைப் பற்றியே இன்னும் கருதப்பட்டு வருகிறது. மக்கள் பழைய முறைகளைப் பின்பற்றி மனத்தைப் பழக்கலாம் என்று திட்டமிடுகின்றார்கள் ;

புதுச் சத்திகள் நிறைந்த சீரமைப்புகளை அனுசரிக்க முயற்சி செய்யா மல், மனத்தைப் பழக்கப் பார்க்கின்றூர்கள்.

மதமும் தத்துவ ஞானமும் இப்பணிக்குப் பேருதவி செய்ய முடியு மென்பதில் யான் ஐயப்படுவதில்லை. மிக்க நாகரிகமடைந்துள்ள இந்த உலகத்தில் எத்துணைத் தத்துவஞானிகள் இருக்கின்றூர்கள் ! இதற்கு முன் எத்தனை பேர்கள் இருந்திருக்கிறூர்கள் ! வருங்காலத்தில் எத் தனை பேர் தோன்றுவார்களோ ! ஆன்ற குறிக்கோள்களும் உயர்ந்த தரமும் நம்மிடம் எப்பொழுதும் இருந்துவந்திருக்கின்றன. நாம் போதிப்பதில் அவை பெரும்பகுதியைக் கொள்கின்றன. எனினும், போரும் பகையும் தணிந்தபாடில்லை. பழைய முறைகளைப் பின்பற்றி அறிவூட்டுவதே கல்வியென்று எப்பொழுதும் கருதப்பட்டு வருவ தானுல், மனிதனுடைய வருங்காலத்தை நல்வழிப்படுத்த முடியும் என்ற நம்பிக்கைக்குச் சிறிதும் இடமில்லை. தனி ஒருவனுடைய முழு வளர்ச்சி பின் வாங்கும்பொழுது வெற்று அறிவை மட்டும் ஊட்டிப் பயனென்ன ? அதற்குப் பதிலாக, ஓர் உள்ளம் நிறை பேர் வழியைப் பற்றி நாம் கவனம் செலுத்தவேண்டும். அவர் ஒரு சமூகப் பேர்வழி ; ஒரு புதுமை உலகச் சத்தி வாய்ந்தவர் ; அவர் குழுவைச் சேர்ந்தவர் எண்ணற்றவர் ; இப்போது மறைந்திருக்கின்றனர் ; புறக்கணிக்கப் பட்டிருக்கின்றனர். உதவியும் கடைத்தேறும் வழியும் தேவையானுல், அவை குழந்தைகளிடமிருந்துதான் வரவேண்டும். ஏனென்றுல், **மனிதனை ஆக்குகின்றவர்கள் குழந்தைகளே.**

குழந்தையிடம் அளவிட இயலாத சத்திகள் குடிகொண்டிருக் கின்றன. இந்தச் சத்திகள் ஒளிபொருந்திய எதிர்காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும். நமக்கு உண்மையாக வேண்டுவது ஒரு புது உலகமானுல், மேலே குறிப்பிட்ட மறைந்த சத்திகளைக் குறிக்கோளா கக்கொண்டு கல்விக்குப் பயன்படுத்த வேண்டும்.

இப்பொழுது பிறந்த குழந்தையின் மனவாழ்க்கையைப்பற்றி ஒரு புது அக்கறை உயிர் பெற்றெழுவதை நாம் பார்த்து வருகிறோம். குழந்தை பிறந்த மூன்று மணி நேரத்திலிருந்து அதனுடைய வளர்ச் சியை உளவியலார் சிலர் தனிப்பட்ட முறையில் ஆராய்ந்துவந்திருக் கின்றனர். வேறு சிலர் குழந்தையைப்பற்றிக் கூர்ந்து கவனித்த பிறகு குழந்தையின் முதலிரண்டு ஆண்டுகளே மனித வாழ்க்கையில் மிகவும் முக்கியமான பருவமென்று முடிவு கட்டுகின்றனர்.

மனிதனுடைய ஆளுமையின் பெருமை பிறக்கும் பொழுதே ஆரம்பமாகிறது. இது ஒரு தெய்விக (Mystic) உடன்பாடெனலாம். இது அடியாகப் பிறக்கின்ற தீர்மானம் அதிசயமாகத் தோன்றலாம்.

அதாவது, கல்வி என்பது பிறப்பிலிருந்தே ஆரம்பிக்க வேண்டுமென்பது. இது அதிசயந்தான். பிறந்த குழந்தைக்குக் கல்வி கற்பிப்பதென்பது நடைமுறையில் சாத்தியமா? அது போகட்டும். குழந்தையின் முதல் ஈராண்டுகளிலேதான் கல்வி புகட்ட இயலுமா? இந்தச் சின்னஞ்சிறு சிசுவுக்கு என்ன பாடம் சொல்லி வைப்பது? நாம் சொல்வது ஒன்றும் இதற்குப் புரியாதே! தன்னுடைய உறுப்புகளை இயங்க வைக்கவும் இன்னும் இதற்கு இயலாதே! இந்தக் குழந்தையின் கல்வி என்னும்பொழுது இதனுடைய சுகாதாரத்தைப் பற்றியா குறிப்பிடுகிறோம்? இல்லவே இல்லை. இதற்குமேல் எவ்வளவோ குறிப்பிடுகிறோம்.

குழந்தையின் உள்ளத்தில் ஒரு சத்தி குடிகொண்டிருக்கிறது. இந்தச் சத்தியை மலரும்படி செய்வதே கல்வியின் பேருதவியாகும். இவ்வாறு குழந்தையின் இளமைக் கல்வியைப்பற்றி நாம் அறிந்து கொள்ளவேண்டும். அப்படியானால், நாம் சாதாரணமாகக் கையாளும் முறையை இங்குப் பயன்படுத்த இயலாதென்பது ஆகிறது. ஏனென்றால், அந்த முறைப்படி, பேச்சுதான் முக்கியமான போதனை முறையாய் இருக்கிறது.

## வீணான செல்வங்கள்

பச்சைக் குழந்தைகளுக்கென்று தனிப்பட்ட ஓர் உளவியல் சத்தி அளிக்கப்பட்டிருக்கிறது என்னும் உண்மையானது அண்மையில் நடைபெற்ற ஆராய்ச்சிகளால் விரிவாகப் பரவச்செய்த உண்மையாகும். இந்த உண்மை ஆசிரியனுக்கு ஒரு புது வழியைக் காட்டுகிறது. இது சாதாரணமாகப் பின் பற்றும் வழியன்று; இது வரை எல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டதும் அன்று. எனினும், மனிதனை முக்கியமாகப் பாதிக்கக்கூடியதாகும். குழந்தையின் உண்மையான ஆக்கும் சத்தி பலமான சத்தி என்பது ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகக் கவனிக்கப்படாமல் இருந்திருக்கிறது. எத்தனையெத்தனை மனிதர் பூமியில் நடமாடியிருந்திருக்கின்றனர்! பிறகு அதன் மேல் மண்ணை உழுதிருக்கின்றனர்! அவர்கள் பூமிக்கடியில் புதைந்து கிடக்கும் அளவிலாச் செல்வங்களைப்பற்றி முதலில் சிந்தித்திருப்பார்களா? அதே போல, இக்காலத்தில் வாழ்கின்றவரும் நாகரிக வாழ்க்கையில் முன்னேற்றத்திற்கு மேல் முன்னேற்றம் அடைந்துவருகின்றனர்; ஆனால், குழந்தை உலகத்தின் உள வாழ்க்கையில் புதைந்து கிடக்கின்ற செல்வங்களைப்பற்றிக் கவனித்து வருகின்றனரா?

இந்தப் பூமியில் மனிதன்தான் தோன்றிய காலத்திலிருந்து இந்தச் சத்திகளையெல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஒடுக்கி அழித்தே வந்

திருக்கின்ருன். இந்தச் சத்திகள் குழந்தையின் உள்ளத்தில் குடி கொண்டிருக்கின்றன என்பதை உள்ளுணர்வு (Intution) எதுவும் இன்று வரை வெளிப்படுத்தத் தொடங்கவில்லை. அண்மையிலேதான் காரல் (Carrel) என்பவர் பின் வருமாறு எழுதியிருக்கிருர் :

'' குழந்தைப்பருவம், எல்லாவற்றிலும் செல்வமுடையது என்பது வெளிப்படை. இப்பருவத்தை எந்தெந்த வகைகளில் இயலுமோ, அந்தந்த வகைகளில் கல்வியில் பயன்படுத்தவேண்டும். இந்தப் பருவ வாழ்க்கை வீணுகுமாளுல், இதற்கு ஈடு செய்யவே இயலாது. இளமை ஆண்டுகளைப் புறக்கணிப்பதற்குப் பதிலாக உயர்ந்த பாதுகாப்புடன் இப்பருவத்தைப் பக்குவப்படுத்துவது நம் கடமையாகும்.

இது வரை சேகரிக்கப்படாத கனிகளின் மதிப்பை இன்று நாம் உணர ஆரம்பித்திருக்கிரேம். இவை பொன்னைவிட மதிப்புடையவை. ஏனென்ருல், இவை மனிதனது சொந்தச் சத்தியாகும்.

முதல் இரண்டு ஆண்டு வாழ்க்கை நம்முன் புது உதய வெளியைக் காட்டுகின்றது. ஏனென்ருல், இது வரை உணரப்படாத உள இயல் அமைப்பின் சட்டங்களை நாம் காணலாம். இந்த அற்புதங்களை நமக்கு எடுத்துக் காட்டுவது குழந்தையே ஆகும். பெரியவர்களிடம் காணப்படாத ஒரு புது வகையான உளவியல் வாழ்க்கையை நமக்குக் குழந்தை எடுத்துக் காட்டுகிறது. இங்கு இதோ புது வழி ! குழந்தைக்கு உளவியல் பரிசோதனைகளை இனி உளவியல் அறிஞர் செய்து பார்க்க வேண்டுவதில்லை. குழந்தை இயலை ஆராய்பவர்களுக்குத் தங்களுடைய உளவியல் தன்மையை வெளியாக்கித் தருவனவும் குழந்தைகளே.

இது தெளிவில்லாதது போலக் காணலாம். ஆனல், இன்னும் பல நுட்பங்களை ஆழமாக ஆராயப் புகும் பொழுது இது தெளிவு பெறும். அறிவை உட்கவர்ந்துகொள்கின்ற மனத்தைக் குழந்தை பெற்றிருக்கிறது. தனக்குத் தானே கற்பித்துக்கொள்ளும் சத்தியும் அதற்கு இருக்கிறது. இதை நிரூபிக்க ஓர் எடுத்துக்காட்டே போதும். பெற்ருேர் பேசும் மொழியைக் குழந்தை பேசிக்கொண்டே வளர்கின்றது. ஆனல், பெரியவர்களுக்கு ஒரு மொழியைக் கற்றுக் கொள்வதென்பது ஓர் அரிய பெரிய செயலாக இருக்கிறது. குழந்தைக்கு எவரும் பாடம் கற்பிக்கிறதில்லை. எனினும், அது பெயர்ச்சொற்களையும், வினைச்சொற்களையும், உரிச்சொற்களையும் பிழையில்லாமல் பயன்படுத்துகிறது.

குழந்தையிடம் மொழி வளர்ச்சி எவ்வாறு நடைபெறுகிறது என்பதை ஆராய்வதில் உயர்ந்த இன்பம் இருக்கிறது. மொழியின்

ஆரம்பப் பகுதியான பெயர்ச்சொற்கள் குழந்தையின் ஒரு குறிப்பிட்ட வயதில் தோன்றுகின்றன. குழந்தையின் இந்தச் செயலைக் காலத்தைக் குறிக்கும் ஒருவர் மேற்பார்வையிட்டு வருவது போலத் தோன்றுகிறது. குழந்தையின் மொழி ஆராய்ச்சியில் தம்மை ஈடுபடுத்தியவர் எல்லாரும் இவ்வுண்மையையே கண்டிருக்கின்றனர். இயற்கை அன்னையால் வகுக்கப்பட்ட கடுமையான காரியத் திட்டத்தைக் குழந்தை பின்பற்றுவதாகத் தெரிகிறது. எவ்வளவு ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்ட பழங்காலப் பள்ளிக்கூடச் சாதனைகளையும் இன்னும் சீர்திருத்துகின்ற அளவுக்குக் குழந்தை காலந்தவருமல் ஒன்றும் விடாமல் பழகி வருகிறது; இந்தத் திட்டத்தைத் தொடர்ந்து நேர்மையான உழைப்பினுல் இலக்கணத்தில் உள்ள பற்பல சிக்கல்களையும், மொழியின் அமைப்புகளையும் தானே கற்றுக்கொள்கிறது.

## உயிர் நிலையான ஆண்டுகள்

கஷ்டப்பட்டுச் சொல்லிக்கொடுக்கும் ஆசிரியர் ஒருவர் குழந்தையின் உள்ளத்தில் இருப்பதாக நாம் கற்பனை செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. உலகத்தில் உள்ள எல்லா நாட்டிலும், எல்லாக் குழந்தைகளிடமும் ஒரே மாதிரிப் பலனைக் காண வைக்கும் திறமை வாய்ந்தவராய் இருக்கிருர் அந்த ஆசிரியர். பிழையில்லாமல் பெரியவர்கள் பேசுகின்ற மொழியானது அவர்கள் குழந்தைப் பருவத்தில் கற்றுக்கொண்ட மொழியாகும். அப்பருவம் எப்படிப்பட்டது ? எவராலும், எதையும் அவற்றுக்குக் கற்பிக்க இயலாத பருவம். இது மட்டும் அன்று. வயது வந்த பிறகு குழந்தை வேருெரு மொழியையும் கற்கவேண்டிய நிலை ஏற்பட்டால், முதலில் கற்றுக்கொண்ட மொழியைப்போலப் பிழையின்றிக் கற்றுக்கொள்ள வைக்க எந்த நிபுணராலும் இயலாது.

குழந்தை வளர்வதற்கு உதவி புரிகின்ற ஒரு தனி உளவியல் சத்தி குழந்தையிடம் இருக்க வேண்டுமென்பது உறுதி. இது மொழிக்கு மட்டுமன்று. ஏனென்ருல், இரண்டு ஆண்டு நிறைவுக்குள் குழந்தை தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களையும் மக்களையும் உணர்ந்துகொள்கிறது. இதை ஏற்றுக்கொள்ளும்பொழுது மனத்தில் பதியும் உள்ளமைப்புத் தொழிலைச் செய்கிறது என்பது முன்னிலும் தெளிவாகிறது. நமக்கு இப்பொழுது இருப்பனவெல்லாம் குழந்தைப் பருவத்தில் ஆக்கப்பெற்றவையே. அதுவும், நாம் நம் வாழ்க்கையில் ஈராண்டுக் குழந்தையாய் இருந்தபொழுது அந்தக் குழந்தை நம்மை உருவாக்கியிருக்கிறது. குழந்தையைச் சுற்றிலும் உள்ள பண்டங்களைத் தெரிந்துகொள்வதுடன் நம்முடைய பழக்க வழக்கங்களுக்குத்

தக்கபடி தானும் பழகிக்கொள்ளுகிறது. இவையெல்லாம் இன்னும் யாராலும் கற்பிக்க இயலாத பருவத்தில் இருந்துகொண்டே நம்முடைய நுண்ணறிவின் சிக்கலான அமைப்புகளையும், நம்முடைய மதக் கொள்கைகளின் அடிப்படைகளையும், நம்முடைய சிறப்பான தேசீயச் சமுதாயப் பற்றுகளையும் தனக்குள் அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. குழந்தையின் அகத்தில் குடிகொண்டுள்ள ஆசிரியருக்கு இடம் கொடுப்பதற்காக நம் போன்ற பெரியவர்களின் ஆய்வுக்கு (Reasoning) வசப்படாமல் குழந்தையை இயற்கையன்னை இளம்பருவத்தில் காத்திருப்பது போலத் தோற்றுகிறது. வயதில் முதிர்ந்தோருடைய நுண்ணறிவு சிறு குழந்தையின் சத்தியைத் திருத்தியமைப்பதற்கு முன் முழு உள அமைப்பையும் தனக்குள் ஆக்கிக்கொள்வதற்குக் குழந்தைக்கு அவகாசம் இருக்கிறது.

மூன்று வயதிற்குள் முழு மனிதனுடைய ஆளுமையின் அடிப்படையைக் குழந்தை அமைத்துவிடுகிறது. அதற்குப் பிறகுதான் சிறந்த அறிஞருடைய தொடர்புகள் வேண்டியிருக்கின்றன. இந்த வயதிற்குள் குழந்தை அடைந்திருக்கின்ற மகத்தான வெற்றிகளைக் கவனிக்கும் பொழுது, மூவாண்டில் பள்ளிக்கூடத்திற்குப் புதிதாகப் போகும் பொழுது சிறு குழந்தை அப்பொழுதே ஒரு சிறு அளவு ஆளாகிவிட்டது என்று கருதலாம். உள இயலார் நம்முடைய திறன்களையும் குழந்தையின் திறன்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்திருக்கின்றனர். ' மூன்றுண்டிற்குள் குழந்தை சாதித்த அளவு நாம் சாதிக்க வேண்டுமானுல், சுமார் 60 ஆண்டுகள் ஆகும்,' என்று உளவியலார் அடிக்கடி வலியுறுத்தியிருக்கின்றனர்; இந்த உண்மையைக் கீழ் வருமாறு எடுத்துக் கூறுகின்றனர்:

"மூன்றுண்டில் குழந்தை ஒரு பெரிய மனிதனுகிவிடுகிறது." சூழ்நிலையிலிருந்து உட்கவர்ந்துகொள்ளக்கூடிய இந்த வியத்தகு சத்தி இன்னும் அடியோடு மறைந்துவிடவில்லை.

எங்களுடைய முதற்பள்ளிக்கூடங்களில் குழந்தைகள் மூன்று வயதிலேயே வந்து சேர்ந்தன. அவற்றுக்கு யாராலும் பாடம் கற்பிக்க இயலவில்லை. ஏனென்றுல், அவை போதனையை ஏற்றுக் கொள்ளவில்லை. எனினும், மனிதனுடைய ஆன்மாவைப்பற்றிய அற்புதமான உயர்ந்த உண்மைகள் அவற்றுல் வெளியாயின. எங்களுடையது சாதாரணப் பள்ளிக்கூடமன்று; '**குழந்தைகளின் இல்லமாய்**' இருந்தது. நேரடியாகக் கற்பித்தலுக்கு மாருகப் பரவலான பண்பாட்டை உட்கவர்ந்துகொள்ளும் வகையில் ஓர் இடத்தைக் குழந்தைகளுக்கென உருவாக்கியிருந்தோம். இந்த இல்லத்திற்கு வந்த குழந்தைகள் தாழ்மையான சமூக நிலையைச்

சார்ந்தவை. அவற்றின் பெற்றோர்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாது. ஆயினும், அந்தக் குழந்தைகள் ஐந்து வயதிற்குள் எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டன. எவரும் அவற்றுக்குப் பாடம் சொல்லித்தரவில்லை. வந்தவர்களுள் யாராவது, ‘ உங்களுக்கு யார் எழுத்துச் சொல்லிக்கொடுத்தார்கள் ?’ என்று கேட்டால், குழந்தைகள் வியப்புடன், ‘எமக்குச் சொல்லிக் கொடுத்தார்களா ! யாரும் எமக்குச் சொல்லிக் கொடுக்கவில்லையே !’ என்று விடையளித்தன.

அதே நேரத்தில் நாலரை ஐந்து வயது குழந்தைகள் எழுதப் படிக்கத் தெரிந்துகொண்டன என்பது மாயமாகத்தான் இருந்தது. பாடம் கற்பிக்கப்படுகிறோம் என்ற உணர்ச்சி தோன்றாமலே கற்றுக்கொண்டது அற்புதந்தான்.

‘ தானாகப் பெற்ற பண்பாடு ’ என்று செய்தி மலர்கள் விளம்பரம் செய்யத் தொடங்கின. மற்றக் குழந்தைகளைவிட இந்தக் குழந்தைகள் சிறந்தனவா என்று உளவியலார் வியந்தனர். நாங்களும் இதைப் பற்றிப் பல நாள் மனத்தைக் குழப்பிக்கொண்டிந்தோம். எல்லாக் குழந்தைகளுக்கும் இவ்வாறு பண்பாட்டை உட்கவரக் கூடிய சத்தி உண்டு என்ற உண்மையைப் பலமுறை செய்த பரிசோதனைகளுக்குப் பின் முடிவு கட்டினோம். இது உண்மையென்றால்—முயற்சி இல்லாமலே பண்பாட்டைப் பெற முடியும் என்றால்—மற்றப் பண்பாட்டுச் சாதனங்களையும் ஏன் குழந்தைகளுக்கு அளிக்கக் கூடாது என்று எங்களுக்குள் வாதாடினோம். குழந்தை முன்பு தாவர நூல், உயிர் நூல், கணிதம், தரை நூல் ஆகியவைகளைப் படித்தோம். குழந்தைகள் எழுதுவதையும் படிப்பதையும்விட அதிகமாகவே இவற்றைத் தம்முள் கவர்ந்துகொண்டன; அதே அளவு எளிதிலும், பிறர் தூண்டுதல் இல்லாமலும், சலிப்படையாமலும் கவர்ந்துகொண்டன எனலாம்.

கல்வி என்பது எதையோ ஆசிரியர் புகட்டுவது அன்று. அது மனித உள்ளத்தில் தானாக வளரக் கூடிய ஒரு போக்கு என்னும் உண்மையை நாங்கள் கண்டுகொண்டோம். சொற்கள் சொல்லக் கேட்பதால் அந்த அறிவைப் பெறுவதில்லை. சூழ்நிலையில் உள்ளவற்றின்மேல் குழந்தை நடத்திய வினைகளால் ஏற்படும் அனுபவங்களினடியாக அந்த ஞானம் பெறப்படுகின்றது. ஆசிரியரது வேலை பேசுவதன்று. குழந்தைக்கென்று ஏற்படுத்தப்பட்ட தனிப்பட்ட ஒரு சூழ்நிலையில் பண்பாடு வளர்வதற்குத் தூண்டுகோலாகச் சிலவற்றைத் தொடர்பாக அமைத்துத் தரவேண்டுவதே ஆசிரியர் பொறுப்பாகும்.

நான் நடத்திக்கொண்டு வந்த பரிசோதனைகள் பல நாடுகளிலும் கடந்த நாற்பது ஆண்டுகளாய்ப் பரவி வந்திருக்கின்றன. குழந்தைகள் வளர்ந்த பிறகு இதே முறையை வயது வந்த குழந்தைகளுக்கும் அனுசரிக்க வேண்டும் என்று பெற்றோர்கள் என்னை வேண்டிக் கொண்டார்கள். அவனவனுகைச் செய்கின்ற வினையாலேதான் வளர்ச்சிக்கு வேண்டிய ஊக்கமளிக்க இயலும் என்ற உண்மையை நாங்கள் கண்டறிந்தோம்; ஐந்தாண்டுக் குழந்தைகளுக்கு இது எவ்வளவு பொருந்துமோ, அவ்வளவிற்கு ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளுக்கும், நடுத்தரப்பள்ளிக் குழந்தைகளுக்கும், உயர்தரப் பள்ளிக் குழந்தைகளுக்கும் பொருந்தும் என்பதையும் உணர்ந்தோம்.

## புது மனிதர்கள்

எங்கள் கண்களுக்குக் காட்சியளிக்க ஒரு புது உருவம் தோன்றிற்று. அது வெறும்பள்ளிக்கூடம் அன்று; ஒரு கல்வி முறையும் அன்று. ஆனுல், மனிதனே தோன்றிவிட்டான். தடங்கல் இல்லாமல் தானே வளரக்கூடிய உண்மையின் தன்மையைப் பெற்றுள்ள மனிதன் தோன்றிவிட்டான். வெளியாரிடமிருந்து மன அடக்கு முறைகளை அவன்மேல் பயன்படுத்தி, அவனுடைய அந்தரங்கச் செயலாற்றுதலைக் கட்டுப்படுத்தி, அவனுடைய உள்ளக் கிளர்ச்சியைக் குறைப்பதை நிறுத்தும் பொழுது, அவனுடைய பெருந்தன்மை தோற்றம் அளித்தது.

ஆதலால், எந்தக் **கல்வி முன்னேற்றமும் மனிதனுடைய ஆளுமையை அடிப்படையாகக் கொண்டதாய் இருத்தல் வேண்டும்** என்பது என் நம்பிக்கை. கல்வியின்மையும் மனிதனுகவே இருக்க வேண்டும். **பல்கலைக் கழகத்தில்தான் மனிதன் பக்குவமடைகிறுன் என்ற நம்பிக்கை நம்மிடமிருந்து அகல வேண்டும்.** மனவளர்ச்சி பிறப்பிலிருந்தே தொடங்குகிறது. இது, முதல் மூன்றுண்டுகளில் தீவிரமாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. மற்றப் பருவங்களைவிட இந்தப் பருவத்தில் நாம் நமது முக்கியக் கவனத்தைச் செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றேம். இந்த உண்மைகளைப் பின் பற்றிஞேமானுல், குழந்தை நமக்கு ஒரு பளுவாய்த் தோன்ருது; இதற்குப் பதிலாக, இயற்கையின் அற்புதங்களில் மிகவும் உயர்ந்ததும் ஆறுதல் அளிக்கக் கூடியதுமாகத் தோன்றும். கையாலாகாததென்றே, நம்முடைய மெய் அறிவை நிறைக்க வேண்டிய ஒரு காலிப் பாண்டமென்றே, நாம் குழந்தையை இனிமேல் எண்ணுவதற்கில்லை. நம்முடைய மனத்தை ஆக்குவிப்பதும் குழந்தைதான் என்று எவ்வளவுக்கெவ்வளவு நம்பி நடத்தையில் காட்டிக்கொள்கின்றேமோ, அவ்வளவுக்கவ்வளவு

குழந்தையின் தன்மானமும் உயர்கிறது. அந்தரங்கத்தில் குடி கொண்டுள்ள ஓர் ஆசிரியரால் வழிகாட்டப்பட்டு, இன்ப துன்பங்களில் இடைவிடாது குழந்தை உழைக்கின்றது; நுட்பமான ஒரு கால அட்டவணையைப் பின்பற்றி நடக்கிறது. உலகத்தில் மிகவும் அற்புத மான மனிதப் பிறவியை ஆக்கும் தொழிலில் குழந்தை ஈடுபடுகிறது என்றெல்லாம் நாம் உணர்கிறோம். எஜமானனுக்கு எப்படி வேலைக் காரர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்களோ, அப்படி ஆசிரியர்களாகிய நாம் ஏற்கெனவே நடைபெற்றுக்கொண்டிருக்கிற வேலைக்கு உதவி புரியலாம். நாம் மனித ஆன்மா வளர்வதைக் காண்கின்ற சாட்சிகள் ஆகின்றோம்; புது மனிதன் தோற்றமளிப்பதைக் காண்கின்றோம். அவன் சம்பவங்களுக்கு அடிமையாகாத மனிதனாகின்றான்; தனக் கிருக்கும் தெளிவான நோக்கத்தால் மனித சமுதாயத்தின் எதிர் காலத்தையே திருத்தியமைக்க வல்லவனாகின்றான்.

## 2. வாழ்க்கைக்கான கல்வி

குழந்தையின் பிறப்பிலிருந்து வாழ்க்கைக்கான கல்வி ஆரம்பிக்க வேண்டுமென்கிறோம். இந்தக் கருத்தை முதலிலேயே விளக்க வேண்டுமானால், ஒவ்வொன்றாக ஆழ்ந்து கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. உலகத்தில் மாபெருந்தேசியத் தொண்டராகிய மகாத்துமா காந்தி அண்மையில் கல்வியானது வாழ்க்கையுடன் ஒட்டியதாய் இருக்க வேண்டுமென்று கூறினார். இது மட்டுமன்று; வாழ்க்கையைக் காப்பதே கல்வியின் மையமாய் இருக்க வேண்டுமென்றும் அவர் கூறினார். சமூகச் சீர்திருத்தத்திலும் மத விஷயங்களிலும் ஈடுபட்ட ஒரு பெரிய தலைவர் எவரும் இதைப் போல அவருக்கு முன் எடுத்துக்கூறியதில்லை. விஞ்ஞானம் இன்றியமையாதது என்று எடுத்துக்காட்டுவதுடன் வாழ்க்கைப் பருவம் முழுமைக்கும் கல்வி பரவலாம் என்பதும், நடைமுறையில் வெற்றிபெறச் செய்யலாம் என்பதும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து வற்புறுத்தப்பட்டிருக்கின்றன. ஆயினும், எந்தக் கல்வி மந்திரியும் இக்கருத்தை இன்னும் நடைமுறையில் கொண்டுவரவில்லை.

இக்காலக் கல்வியானது முறைகளிலும், நோக்கங்களிலும், சமூகக் குறிக்கோள்களிலும் வேண்டுமட்டும் நிறைவு பெற்றிருக்கிறது எனினும், வாழ்க்கையைப் பற்றி அவ்வளவாகக் கருத்தைச் செலுத்துவதில்லை என்பதை நாம் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. பல நாடுகளில் அங்கீகாரம் பெற்ற பல கல்வி முறைகள் பழக்கத்தில் இருந்து வருகின்றன. அவற்றுள் ஒன்றாவது குழந்தையைப் பிறப்பிலிருந்தே காத்து அதன் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருப்பதாகத் தெரியவில்லை. இன்று கல்வியென்று கருதப்படுவதெல்லாம் ஜீவ வாழ்க்கைக்கும் சமூக வாழ்க்கைக்கும் சம்பந்தப்படாத நிலையில் இருக்கிறது. கல்வியுலகத்தில் இறங்குவோரெல்லாரும் சமூக வாழ்க்கையுடன் தொடர்பு அற்றவர் ஆகிவிடுகின்றனர். கல்லூரி மாணவர்கள் அவரவர் கல்லூரியின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து தீரவேண்டும். அதிகாரிகளால் வகுக்கப்பட்ட பாடத்திட்டத்தை எல்

லாரும் ஒன்ருகப் பின் பற்ற வேண்டும். மாணவர்களுடைய சமூக வாழ்க்கையைப் பற்றியோ, உடல் நிலையைப் பற்றியோ, அண்மை வரை பல்கலைக் கழகங்கள் சிறிதும் அக்கறை கொள்ளவில்லை எனலாம். ஒருவனுக்குப் போதிய உணவு இல்லாது அரை வயிற்றுடன் இருந்தாலோ, கேட்பதில் மந்தமாய் இருந்தாலோ, அவனுக்குக் குறைவான மதிப்பெண் தரப்படுகிறது. இப்பொழுது உடல் சம்பந்தப்பட்ட குறைகளைப் பற்றிக் கவனம் செலுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வருகிருர்கள் என்பது உண்மையே. ஆனால், அவை சுகாதார சம்பந்தம் உடையனவே. குறைபாடுள்ள பொருத்தமற்ற கல்வி முறைகளால் மாணவர்களுடைய மனம் அச்சுறுத்தப்பட்டோ, அல்லது பாழாக்கப்பட்டோ இருக்குமோ என்று எவரும் ஐயப்பட வேண்டுவதில்லை.

கிளெப்பாரீடு (Claparede) என்பவர் முதன்மையாய் நின்று தொடங்கி வைத்த புதுமைக் கல்வி இயக்கம் மாணவர் பாடத் திட்டத்தில் உள்ள பாடங்களின் எண்ணிக்கையைப் பற்றி ஆராய்ந்து, மனச்சோர்வைக் குறைப்பதற்கு இவற்றை ஒருவாறு குறைத்தது. சலித்துப் போகாமல் பண்பாட்டின் செல்வங்களை எல்லாம் ஒரு மாணவன் பெறுவது எங்ஙனம் என்ற பிரச்சினையை இந்த இயக்கம் தொடுவதில்லை. அரசினர் ஆட்சிக்குட்பட்ட எல்லாக் கல்வி முறைகளிலும் பாடத்திட்டம் எப்படியோ நிறைவேற்றப்பட வேண்டும் என்பதே முக்கியம். கல்லூரி மாணவன் ஒருவனது மனமானது சமூகக் கொடுமையிலோ அல்லது எல்லோரையும் பாதிக்கக்கூடிய தேசியப் பிரச்சினையிலோ ஈடுபட்டால், கல்லூரி '**அதிகாரப் பாம்பு**' படமெடுக்கிறது ; 'இளைஞர் தேசிய விஷயங்களில் தலையிடாமல் படிப்பில் கருத்தைச் செலுத்த வேண்டும்,' என்கிறது. அப்பொழுது என்னுகிறது? இளைஞர் பல்கலைக் கழகத்தை விடும்பொழுது அவர்களுடைய மனம் சிக்குப்படுத்தப்பட்டு, பலியாக்கப்பட்டிருக்கிறதென்று கருதலாம். தாங்களே எதையும் கருதும் தன்மையை இழந்து விடுகின்ருர்கள். இவர்கள் வாழ்கின்ற இக்காலத்தின் பிரச்சினைகளை மதிப்பிடும் சத்தியற்றவர்களாகிவிடுகின்ருர்கள்.

கல்வித்துறை ஏற்பாடுகள் எல்லாம் சமூக வாழ்வு சம்பந்தமற்றனவாகக் கருதப்படுவதால், இத்தகைய பிரச்சினைகளெல்லாம் கல்விக் கழகங்களுக்குப் புறம்பானவையென்று எண்ணப்படுகின்றன. கல்வி உலகம் ஒரு தீவு போன்றது. வெளியுலகத்திற்கும் அதற்கும் ஒரு தொடர்பும் இல்லை. அது வெளியுலகத்தை ஒதுக்கி வைத்துவிட்டு வாழ்க்கைக்காக ஆய்த்தமாக்கும் இடம் போலிருக்கிறது. ஒரு பல்கலைக்கழக மாணவன் எலும்புருக்கி நோயால் பீடிக்கப்பட்டு இறக்கிருன் என்று வைத்துக்கொள்வோம். அது விந்தையானதும்

வருந்தத்தக்கதுமான நிகழ்ச்சியல்லவா ? சமூக வாழ்க்கையில் கலந்திருந்த அவனை நோயுற்ற காலத்தில் கவனிப்பதை மறந்து, இறந்த பிறகு திடீரென்று மயானத்தில் பல்கலைக் கழகத்தின் சார்பில் அனுதாபம் தெரிவிக்கத் தோன்றுவது ஒரு விந்தையன்றோ ? கல்லூரிப் படிப்பில் தேர்வு பெற்று வெளியுலகத்தில் அடியெடுத்து வைக்கும் மாணவர்களுள் சிலர் தம் நண்பர்களுக்கும் குடும்பத்தாருக்கும் தாம் ஒரு சுமைதான் என்று அஞ்சுகின்றனர். ஆயினும், பல்கலைக்கழக அலுவலாளர் இதைப் பற்றிக் கவனிக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுவதில்லை. சட்டப்படி இந்த அதிகாரக்குழு இதிலெல்லாம் தலையிட்டுக்கொள்வதில்லை ; உளவியல் குறைவுள்ள மாணவர்களைப் பற்றி எவ்வித அக்கறையும் காட்டுவதில்லை. இந்தக்குழு, பாடத்திட்டத்தை அமைக்கிறது ; தேர்வுகளை நடத்துகிறது ; அவ்வளவுதான். தேர்வில் வெற்றி பெற்றவர்களுக்குக் கலைச் சான்றுகள் வழங்குகின்றனர். ஒரு கல்விக் கழகம் இக்காலத்தில் பெறக்கூடிய உந்துநிலை இதுவேயாகும். இதே சமயத்தில் சமூகப் பிரச்சினைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து வருவோர் என்ன கூறுகின்றனர் ? பல்கலைக் கழகப் பட்டதாரிகளும், உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களும் வாழ்க்கைக்குத் தகுதியற்றவர்களாய் இருப்பதோடல்லாமல், சமுதாயத் தொழில்களில் பயன்தரும் முறையில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளக் கூடிய சத்தியற்றவர்களாயும் இருக்கிறார்கள். புள்ளி விவரம் எதை எடுத்துக் காட்டுகின்றது ? நாளுக்குநாள் பைத்தியக்காரர்களும், கொலையாளிகளும், அண்டை வீட்டாரால் ' இவனொரு விசித்திரப் பேர்வழி,' என்று கருதப்படுவோனும் அதிகரித்துக்கொண்டே போகிறார்கள். சமூகச் சீர்திருத்த வாதிகள் இந்தத் தீமைகளையெல்லாம் பள்ளிக்கூடங்கள் விலக்க வேண்டும் என்கிறார்கள். ஆனால், பள்ளிக்கூடமே ஒரு தனியுலகம். இத்தகைய பிரச்சினைகளைப் பற்றிக் கவனம் செலுத்தாத ஒரு தனியுலகம்; பள்ளிக்கூடம் என்ற அமைப்பு வழிவழியாய் வந்தது. அந்தரங்கத்திலிருந்து அதன் போக்கை மாற்றியமைப்பதென்பது அரிது. வெளியிலிருந்து தோன்றும் ஒரு சத்தியே அதை மாற்றிப் புதுப்பித்து அமைக்க இயலும். ஒவ்வொரு பருவத்திலும் கல்வியைப் பாதிக்கக் கூடியவைகளுக்குத் தக்க வழிகளைத் தேட இயலும். அந்தக் குறைபாடுகளால் பாதிக்கப்படுகின்ற மாணவர்களின் வாழ்க்கை மிகவும் அல்லற்படுகிறது.

## ஐந்தாறு வயது (The Pre-School Age)

பிறப்பிலிருந்து ஐந்தாறு வயதுவரை நடைபெறுவதென்ன ? இந்தப்பருவத்தைப் பற்றிப் பள்ளிக்கூடம் அக்கறை கொள்வதில்லை. ஆதலால், இதை முன் பள்ளிக்கூடப் பருவம் என்று கருதுகின்றனர் ;

அதிகார பூர்வமான வகையில் பாடம் கற்பிக்கும் பருவத்துக்குள் அடங்காததென்று கருதுகின்றனர். சின்னஞ்சிறு குழந்தைகள் பள்ளிக்கூடத்தில் என்னதான் செய்ய இயலும்? எங்கெங்கு முன் பள்ளிக்கூடப் பருவத்துக்கென்று நிலையங்கள் தோன்றியிருக்கின்றனவோ, அங்கங்கெல்லாம் மத்தியக் கல்வி அதிகாரத்தை எதிர் பார்க்கவில்லை. அவை அதிகாரத் தொடர்பு அற்றவர்களால் நடத்தப்படுகின்றன; அல்லது தரும சிந்தனையுடன் தனிப்பட்டவர்களின் பாதுகாப்பால் நடைபெறுகின்றன. குழந்தைகளின் உளவாழ்வைக் காப்பாற்றவேண்டும் என்ற அக்கறை ஒரு சமூகப்பிரச்சினையன்று. மேலும் சின்னஞ்சிறு குழந்தைகள் வீடுகளில் வளரவேண்டுவனவே ஒழிய, அவற்றின் வளர்ச்சி நாட்டின் பொறுப்பன்று என்று சமூகம் கருதுகிறது.

இப்பொழுது குழந்தையின் முதல் ஆண்டிற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகிறது. நடைமுறையில் அனுசரிக்கப்பட வேண்டிய சீர்திருத்தங்கள் இன்னவை என்பது இன்னும் எடுத்துக் கூறப் படவில்லை. வீட்டு வாழ்க்கை ஓரளவிற்கு வளர்ச்சியடையலாமென்று கருதப்படுகிறது. தாய்மார் ஆவதற்குத் தக்க பயிற்சியளிக்கப்படவேண்டுமென்று கருதப்படுகிறது. ஆனால், வீடு பள்ளிக்கூடத்தின் ஒரு பகுதி அன்று. அது சமூகத்தைச் சேர்ந்தது. ஆதலால், நடைமுறையில் கவனிக்கும் பொழுது மனித ஆளுமையும், அதன் பாதுகாப்பும் துண்டிக்கப்பட்டுவிடுகின்றன. ஒரு பக்கம் சமூகத்தைச் சேர்ந்த வீடு இருக்கிறது. ஆனால், அது சமூகத்திற்குத் தொடர்பில்லாமல் தனித்து வாழ்கிறது. சமூகம் இதைக் கவனிக்காமல் ஒதுக்கி வைத்துவிடுகிறது. மற்றொரு பக்கம் இருப்பது பள்ளிக்கூடம். இதுவும் சமூக சம்பந்தமற்று நடைபெறுகிறது. இறுதியில் பல்கலைக் கழகமும் அப்படிப்பட்டதே. கருத்துக்கோடலில் (Conception) ஓர் ஒற்றுமை இல்லை. வாழ்க்கைக்காகச் சமூக அக்கறையும் இல்லை. ஒன்றை ஒன்று புறக்கணிக்கும் ஏதோ சில கருத்துகளின் பகுதிகள் அனுசரிக்கப்படுகின்றன. இவற்றின் தொடர்பாகவோ, விட்டு விட்டோ, பள்ளிகளிலும், வீடுகளிலும், பல்கலைக் கழகங்களிலும் அனுசரிக்கப்படுகின்றன. பல்கலைக் கழகமும் கல்வி கற்கவேண்டிய பருவத்தின் இறுதிப்பகுதியைப் பெற்ற ஒரு வகைப் பள்ளிக்கூடமென்றே கருதப்படுகிறது. இவ்வாறு தனிமையாக ஒதுக்கப்படுவதால் ஏற்படும் தீமைகளைப் புதிய சமூக நூல் ஆராயப் புகுந்திருக்கிறது. இந்தச் சமூக நூலும் சமூக உளவியல் நூலும் பள்ளிக்கூடத்திற்கு வெளியேதான் தம் ஆராய்ச்சியை நடத்துகின்றன. ஆதலால், வாழ்க்கையின் வளர்ச்சிக்கு உதவி புரியும் உண்மையான முறை எதுவும் அனுபவத்திலில்லை. இம்மாதிரி உதவி தேவையென்ற கல்விக் கருத்து விஞ்ஞானத்திற்குப் புதியதன்று. ஆனால், சமுதாய அமைப்பில்

இதற்கு இன்னும் தக்க இடம் அளிக்கப்படவில்லை. இதைத்தான் அடுத்தபடியாக நாகரிகம் உடனடியாகக் கவனிக்கவேண்டும். இதற்குத் தேவையான வழி அப்பொழுதே வகுக்கப்பட்டாயிற்று. நம்முடைய இக்கால நிலையைத் திறனாய்வு எளிமையில் குறை கூறுகி... வாழ்க்கையின் பல துறைகளிலும் என்ன சீர்திருத்தங்கள் தே... யென்பதை அறிஞர் பலர் தெளிவுபடுத்திக் காட்டியிருக்கின்ற... ஆதலால், எல்லாம் ஆயத்தமாகிவிட்டன. கட்டடம் ஆரம்... வேண்டுவதுதான் பாக்கி. விஞ்ஞானத் துறையால் பெறப்படும் கருத்துகள் பாறையிலிருந்து வெட்டி எடுத்துக்கொண்டு வரப்பட்ட... களுக்குச் சமமாகும். இந்தக் கற்களும் தககபடி சதுரமாகச் செ... கப்பட்டிருக்கின்றன. கட்டடத்தில் பயன்படுத்த வேண்டுவது பாக்கி. இவற்றை ஒன்றுகக் கூட்டிக் கட்டுவதற்குத் தக்கவ... வேண்டும். நாகரிகத்திற்கு மிகவும் தேவையான புதிய கட்டட... அமைக்கத்தக்கவர் வேண்டும்.

## சமூகமும் கல்வியின் வேலையும்

வளர்கின்ற பேர்வழியை மையமாக வைத்துள்ள கல்வி... பொதுமைக் கருத்து, பழைய எண்ணங்களையெல்லாம் மாற்று... கிறது, பாடத்திட்டத்தையும், கால அட்டவணையையும் எதிர்ப... மல் மனித வாழ்க்கையின் உண்மைகளையே கல்வி பின் பற்ற வே... டும். இந்த நம்பிக்கையை அடிப்படையாக ஏற்கும் பொழுது பி... குழந்தையின் கல்வி எதிர்பாராத அளவில் முதலிடம் பெற்றுவிடுகி... பிறந்த குழந்தையால் ஒன்றுமே செய்துகொள்ள இயலாது என்ப... உண்மையே.

சாதாரண முறையில் அதற்கு நம்மால் ஒன்றும் கற்பிக்க இயலாது. அது கவனிக்கப்பட வேண்டுவதாகத்தான் இருக்க முயலும். அதன் ஜீவாதாரத் தேவைகள் என்ன என்பதைக் கண்டு பிடிப்பதற்காகக் குழந்தையை நாம் கற்கவேண்டியிருக்கிறது. நாங்கள் செய்... கொண்டுவந்த ஆராய்ச்சிகளே இவை. இந்த ஆய்வுக்கு ஒரு நோ... கம் இருக்கிறது. வாழ்க்கையின் சட்டங்கள் என்ன என்பதை அ... வதே இதன் நோக்கம். ஏனென்றால், நாம் வாழ்க்கைக்கு உத... புரிய விரும்புவோமானால், வாழ்க்கையை நடத்திவைக்கும் சட்டங்களைப் புரிந்துகொள்வதே வெற்றிக்கு முதல் துணையாகும். அவற்றைத் தெரிந்துகொள்வதுமட்டும் போதாது. ஏனென்றால், அதனுடன் நின்று விட்டால், உளவியல் அறிவுடன் நாம் அங்கேயே தங்கிவி... வோம்.

சிறு குழந்தையின் மன வளர்ச்சியைப் பற்றிய உண்மை எங்கும் பரப்பப்பட வேண்டும். அப்போதுதான் கல்வி ஒரு புதுக்குரலுடன் பேச இயலும்; உரிமையுடன் உலகத்திற்கு, ''வாழ்க்கையின் சட்டங்கள் இன்னின்னவை; அவற்றை எவரும் புறக்கணிக்க இயலாது; அவற்றுடன் இணங்கியே நீங்கள் நடந்துகொள்ள வேண்டும்; ஏனென்றால், அவை மனிதனுடைய உரிமைகளை விளம்பரப்படுத்துகின்றன. இந்த உரிமைகள் எல்லாருக்கும் பொதுவானவை,'' என்று எடுத்துக் கூற இயலும்.

**கல்வியை எல்லாருக்கும் கட்டாயமாகப் புகட்ட வேண்டுமென்று சமூகம் கருதினால், கல்வியைச் செயல் முறையில் கற்பிக்க வேண்டியிருக்கிறது. கல்வி பிறப்பிலிருந்தே ஆரம்பமாகிறது என்ற உண்மையை நாம் ஒப்புக்கொண்டோமானால், குழந்தை வளர்ச்சியின் சட்டங்கள் என்னென்ன என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. கல்வியானது சமூகத்தால் புறக்கணிக்கப்பட்டு ஒதுங்கி இருத்தலுக்கு மாறாகச் சமூகத்தையே நடத்திவைக்கும் ஆதிக்கத்தைப் பெற்றதாக வேண்டும். வாழ்க்கை காப்பாற்றப்பட வேண்டும் என்ற புதுக் கருத்திற்கு அவசியம் தேவையான முறையில் சமூக ஏற்பாடுகள் மாறுதலடைய வேண்டும். அவ்வாறு உதவி புரிய எல்லாரும் அழைக்கப்படுகின்றனர். தாய் தந்தையர் தமது கடமையைச் செய்து தீரவேண்டும். இதைச் செய்வதற்கு வீடுகளில் வசதி இல்லாவிடினும், இதற்கு வேண்டிய அறிவைப் புகட்டுவதோடு குழந்தை வளர்ப்புக்குத் தேவையான சௌகரியங்களையும் சமூகம் ஏற்படுத்தித் தரவேண்டும். தனிப்பேர்வழியைக் காப்பாற்றுவதே கல்வி என்றால், ஒரு தனிக் குடும்பத்தால் குழந்தையின் வளர்ச்சிக்குத் தக்க ஏற்பாடுகள் செய்ய முடியவில்லை என்றறிந்தால், இவற்றை ஏற்பாடு செய்துகொடுக்க வேண்டிய பொறுப்புச் சமூகத்தினுடையதாகும். ஒரு நாடு குழந்தையை என்றும் புறக்கணிக்கக் கூடாது. சமூகத்திலிருந்து கல்வி தொடர்பற்ற முறையில் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. இனி அது சமூகத்தின்மேல் தன் அதிகாரத்தைச் செலுத்தும் நிலை ஏற்படுகிறது. ஒவ்வொரு தனி மனிதனுடைய நன்மையையும் கருதிச் சமூகம் கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டுவது அவசியமானால், வாழ்க்கைக்குக் கல்வி ஓர் உதவியானதென்றும் கருதப்பட்டால், அப்பொழுது மேலே குறிப்பிட்ட கட்டுப்பாடு ஒரு வரம்புக்குட்பட்டதாகவோ, அடக்கு முறையைக் கொண்டதாகவோ இருக்க இயலாது. அது உடலுக்கும் உளத்திற்கும் உதவி புரிவதாக இருக்க வேண்டும். இதிலிருந்து விளங்குவதென்ன? ஒரு நாடு தன்னுடைய நிதியில் பெரும்பகுதியைக் கல்விக்காக ஒதுக்கி வைக்க வேண்டும்.**

குழந்தையின் முதல் ஆண்டுகளின் தேவை என்னவென்று ஆராய்ச்சிகள் நடந்திருக்கின்றன. அவற்றின் உண்மைகள் வெளியாகியிருக்கின்றன. கல்வியின் பொறுப்பைச் சமூகம் முழுமையுமே தன் கடன் என்று தாஞக ஏற்றுக்கொள்ள வேண்டும். கல்வியின் முன்னேற்றமும் சமூகத்தைத் தாராளமாகச் சீர்திருத்தாமலா போய் விடும்? இவ்வாறு கருதப்படுகின்ற கல்வி இனிமேல் குழந்தைகளுக்கும் பெற்றோர்களுக்கும் மட்டும் உரியதன்று. அது நாட்டுக்கும் பல நாடுகளின் உறவுக்கும் உரியதாகிவிடுகிறது. சமூகத்தின் ஒவ்வோர் அங்கத்துக்கும் அது தூண்டுகோலாகிவிடுகிறது; மிகப் பெரிய சமூகச் சீர்திருத்தங்களுக்கே தூண்டுகோலாகிவிடுகிறது. இக்காலம் இருக்கின்ற கல்வியைவிட இவ்வளவு அசைவற்றதும், தேங்கிக் கிடப்பதும், அசட்டையானதும் வேறு ஏதாவது உண்டா? ஒரு நாட்டில் சிக்கனத்தைக் கையாள வேண்டுமென்று கருதின பொழுது கல்விதான் முதல் பலி. ஒரு தேசியவாதியைப் பார்த்து, 'கல்வியைப் பற்றி உங்கள் கருத்து என்ன?' என்று கேட்டபொழுது அவர், 'அவையெல்லாம் என் பொறுப்பு அல்ல; குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பை என் மனைவிக்கு விட்டுவிட்டேன்," என்றார். அந்த அம்மையாரும் அப்பொறுப்பைப் பள்ளிக்கூடத்திற்கு ஒப்படைத்திருக்கின்றனர். இனி வருங்காலத்தில் இம்மாதிரி விடையை ஒரு தேசியவாதி கூறுவதோ, இவ்வளவு அசட்டையாய் இருப்பதோ நடவாத காரியம்.

## மனிதர்களை ஆக்குவன குழந்தைகளே

குழந்தைகளின் முதற்பருவத்திலிருந்து அவற்றின் போக்கைப் பற்றி உளவியலார் ஆராய்ச்சி செய்து தாம் கண்ட உண்மைகளை வெளியாக்கியுள்ளனர். இந்த அறிக்கைகளிலிருந்து நாம் என்ன தீர்மானிக்கவேண்டியிருக்கிறது? நல்ல பாதுகாப்பும் உதவியும் இருந்தால், இன்னும் அதிகமான சத்தியை வளர்ப்பதற்கும், நல்ல மன அமைதியைப் பெறுவதற்கும், இன்னும் சத்திவாய்ந்த ஒழுக்கத்தைப் பெறுவதற்கும் குழந்தையின் உள்ளத்தில் சத்தியிருக்கிறது என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்கின்றனர். ஏதோ தாஞக வளரட்டுமென்று விட்டுவிடாமல், விஞ்ஞான முறையில் அதன் வளர்ச்சிக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும். இது நடைபெற வேண்டுமாஞல், உடல் சம்பந்தப்பட்ட வெறுஞ்சுகாதாரம் மட்டும் போதாது. குழந்தை உடலுக்கு ஏற்படக்கூடிய நோய் நொடிகளை எப்படி உடல் நலவியல் தடுக்க வல்லதோ, அப்படியே குழந்தையின் மனத்தையும் ஆன்மாவையும் கெடுதல்களிலிருந்து காப்பதற்கு மன நலவியல் தேவைப்படுகிறது.

குழந்தையின் முதல் நாள்களைப் பற்றி விஞ்ஞானம் வேறு சில உண்மைகளைக் கண்டுபிடித்திருக்கிறது. கைக்குழந்தையிடம் பொது மக்களின் கற்பனைக்கு மீறின அளவிற்கு மனச்சத்திகள் நிறைந்திருக்கின்றன. பிறக்கும் பொழுது, உளவியல் முறையில் கூற வேண்டுமானல், அது ஒன்றுமில்லாதது என்றே கொள்ள வேண்டும். அதனுடைய மனம் மட்டுமன்று; அதன் அங்கங்களை இணைத்து இயங்கி, அதனுல் ஒன்றும் சாதிக்க இயலாது. பெரும்பாலும் பயனற்ற உறுப்புகளை வைத்துக்கொண்டு குழந்தையால் ஒன்றுமே செய்ய இயலாது. தன்னைச் சுற்றிலும் நடைபெறுவதைப் பார்த்து ஏதாவது பேசவாவது இயலுமா? அதுவும் இயலாது. எனினும், காலம் போகப் போகக் குழந்தை நடக்கிறது; பேசுகிறது; ஒரு செயல் வெற்றியிலிருந்து மற்ருெரு செயல் வெற்றிக்குச் செல்கிறது. இறுதியில் மனத்திலும் உடலிலும் உயர்ந்த சிறப்புத் திறன்களுடன் ஒரு மனிதன் தோன்றுகிருன். இதனுல், அவசியமான ஓர் உண்மை வெளியாகிறது. **குழந்தை நம்மால் நிறைக்கப்பட வேண்டிய ஒரு காலிப் பாண்டம் அன்று;** ஓர் அசைவற்ற பொருள் அன்று. அது எதையெதைச் செய்கிறதோ, அத்தனையும் நம்மாலேதான் என்றும் கருதக்கூடாது. **மனிதனை ஆக்குவது குழந்தையே.** குழந்தையால் ஆக்கப்படாத மனிதனே இல்லை. இந்த மனிதனும் குழந்தையாகத்தான் ஒரு காலத்தில் இருந்தான். **இன்று மனிதன், அன்று குழந்தை.**

குழந்தையின் மாபெரிய ஆக்கும் சத்திகளைப்பற்றி வேண்டிய மட்டும் இதுவரை சொல்லிவந்திருக்கிருேம். இவற்றை விஞ்ஞானிகள் ஆராயத் தூண்டப்படுகிருர்கள், இவைகளெல்லாம் இது வரை தாய்மையைப் பற்றித் தொடங்கப்பட்டிருந்த பல கருத்துகளாய் மறைந்து கிடந்தன, தாய்தான் குழந்தையை உருவாக்கினுள் என்று நாம் சொல்லி வந்தோம். ஏனென்ருல், குழந்தைக்கு நடக்கவும் பேசவும் தாய்தான் கற்றுக்கொடுக்கிருள். ஆனுல், உண்மையில் இவைகளில் ஒன்ருவது தாயால் செய்யப்படுவதில்லை. இவையெல்லாம் குழந்தையினுடைய சாதனையே. தாயார் பிறப்பிப்பது குழந்தை. **மனிதனை உருவாக்குவது குழந்தையே!** தாய் இறந்துவிட்ட போதிலும் குழந்தை வளர்ந்து மனிதனை உருவாக்கும் பணியைச் சாதித்தே தீர்கிறது. இந்தியக் குழந்தையை அமெரிக்காவுக்குக் கொண்டு போய் அமெரிக்கருடைய பாதுகாப்பில் விட்டுவைத்தோமானுல், அக்குழந்தை ஆங்கிலந்தான் பேசுமே ஒழிய, இந்தி பேசுவதில்லை. ஆதலால், குழந்தையின் மொழி தாயிடமிருந்து பிறப்பதில்லை. மொழியைக் குழந்தையே தனக்குள் அமைத்துக்கொள்கிறது. அதே போலக் குழந்தை எந்தக் குழுவினருடன் வாழ்கின்றதோ, அவர்களுடைய பழக்க வழக்கங்களையே தனக்குள் அமைத்துக்கொள்கிறது. இவ்வாறு பெறப்படும் திறமைகளில் வழிவழியாக வருவது என்பது

எதுவும் இல்லை. தன்னைச் சூழ்ந்துள்ள உலகத்தில் காணப்படும் விஷயங்களைக் குழந்தை உட்கவர்ந்துகொள்கிறது ; பிறகு அவற்றைக் கொண்டு வருங்கால மனிதனைத் தன்னை உருவாக்கிக்கொள் கிறது.

குழந்தையின் இந்த மாபெரும்பணியை அங்கீகரிப்பதால் பெற்றோருடைய ஆட்சி அதிகாரம் குறைந்துவிடுகிறதென்பது பொருளன்று. தாங்களே குழந்தைகளை உருவாக்குவதில்லையென்று தங்களையே நம்பும்படி செய்துகொண்டார்களானால், இந்த உருவாக்கும் பணியில் சகாயமாக இருக்கும் துணையாளர்களென்று கருதினார் களானால், அவர்களுடைய உண்மையான கடமைகளைச் செய்வதற்கு முன்னிலும் உயர்ந்த திறமைகளைப் பெறுகின்றார்கள். பரந்த நோக்கத் தின் அடிப்படையில் அவர்கள் அளிக்கும் உதவி உண்மையில் மதிப்புள்ளதாகிவிடுகிறது. தக்க முறையில் இந்த உதவி அளிக்கப் பட்டால்தான் குழந்தையை நன்றாக உருவாக்க இயலும். எனவே, பெற்றோருடைய ஆட்சி அதிகாரமானது ஏதோ உயர்நிலை, அல்லது மதிப்பு (Dignity) என்ற அடிப்படையில் பிறப்பதில்லை. தங் களுடைய குழந்தைகளுக்கு உதவி புரிய வேண்டுமென்பதன் அடி யாகவே பிறப்பிக்கப்படுகிறது. பெற்றோரின் உண்மையான மிகப் பெரிய ஆட்சி அதிகாரமும் மதிப்பும் இதைப் பொறுத்தே இருக் கின்றன.

எனவே, சமூகத்தில் குழந்தையின் இருப்பிடம் என்ன என்பதை வேறொரு கோணத்தில் கவனிப்போம் :

மார்க்ஸின் தத்துவப்படி உருவகப்படுத்தப்பட்ட தொழிலாளி, இக்காலக் கருத்துகளில் ஒன்றிவிட்டான். சுக வாழ்விற்கும் செல் வத்திற்கும் தொழிலாளியே காரணபுருஷனாகக் கருதப்படுகிறான் ; நாகரிக வாழ்க்கைக்கு இன்றியமையாதவனென நம்பப்படுகிறான். தொழிலாளியின் நெறிமுறையையும், அவனே யாவருக்கும் பயனளிப் பவனென்பதையும், சமுகம் அங்கீகரித்துவிட்டது. அவனுடைய பணி களை ஆற்றுவிப்பதற்குத் தேவையான சாதனங்களை அவனுக்குள்ள உரிமைப்படி அளித்து வரவேண்டும் என்பதையும் சமூகம் ஒப்புக் கொண்டிருக்கிறது.

இதே கருத்தைக் குழந்தைக்கும் வைத்துப் பார்ப்போம். குழந் தையும் ஒரு தொழிலாளிதான். இதனுடைய குறிக்கோள் மனிதனை உருவாக்குவதாகும். குழந்தையின் வாழ்க்கைக்கும் ஆக்கச் செயல் களுக்கும் இன்றியமையாத தேவைகளைப் பெற்றோர் அளித்து வரு கிறார்களென்பதை எவரும் மறுக்க இயலாது. இவற்றைவிடக் குழந்

தையின் சமூகப் பிரச்சினைகள் இன்னும் முக்கியமானவை.ஏனென்ருல், குழந்தையின் தொழிலால் பெறப்படும் பலன்கள் சாதாரணமான விஷயங்கள் என்று எண்ணுவதற்கில்லை.

குழந்தையே மனித சமூகத்தை உருவாக்கிக்கொண்டிருக்கிறது; குறிப்பிட்ட இனமோ, சாதியோ, அல்லது ஒரு சமூகக் குழுவோ அன்று. மனித சமுதாயம் முழுமையுமே உருவாக்கப்படுகிறது. இந்த உண்மையைக்கொண்டு நோக்கினேமானல், அப்பொழுது சமூகம் குழந்தையைப் பொருட்படுத்தித்தான் ஆகவேண்டும். அதனுடைய உரிமைகளை அங்கீகரித்து அதற்குத் தேவையானவைகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்ற முடிவை மறுக்க இயலாது. வாழ்க்கையைப்பற்றி ஆராய்வதில் நாம் கவனத்தைச் செலுத்தத் தொடங்கினேமானல், அது மனித சமூகத்தின் இரகசியத்தையே தொடுவதுபோலாகிவிடுகிறது. அப்பொழுது மனித சமூகம் எவ்வாறு ஆளப்படவேண்டுமென்றும், எவ்வாறு உதவி செய்யப்படவேண்டுமென்ற அறிவும் நம் கைக்குள் வந்து அமையும். இப்பொழுது நாம் கல்வியைப் பற்றிப் பேசினேமானல், ஒரு புரட்சியை விளம்பரமாக்குகிருேம். இப்பொழுது நமக்குத் தெரிந்தவைகள் எல்லாம் புதுமையாக மாற்றப்படும். இதை இறுதியான புரட்சியென்று நான் எண்ணுகிறேன். நான் வற்புறுத்தலான புரட்சியைக் குறிப்பிடவில்லை. இரத்தப் பெருக்கைப் பற்றிக் கேட்கவேண்டா. இது வற்புறுத்தல் அடியோடு நீக்கப்பட்ட புரட்சியாகும். வற்புறுத்தலின் சிறு சாயல் இருந்தாலும், சிறு குழந்தையும் உளச் செயலாக்கம் தலை தூக்காமல் மடிந்துபோகிறது.

மனிதனின் இயல் நிலையை உருவாக்குவதையே நாம் காப்பாற்றவேண்டும். குழந்தையின் வளர்ப்புப் பாதையில் காணப்படும் இடையூறுகளை அகற்றுவதிலேதானே நம்முடைய முயற்சிகளையெல்லாம் செலுத்தி வந்திருக்கிருேம்? குழந்தை வாழ்க்கையை எந்தெந்த ஆபத்துகளும் தப்பு அபிப்பிராயங்களும் அச்சுறுத்துகின்றனவோ, அவற்றை விளக்குவதில்தானே நம் சிந்தனையைச் செலுத்தி வந்திருக்கிருேம்?

வாழ்க்கைக்கு உதவி புரிகின்ற கல்வி இதுதான். பிறப்பிலிருந்து ஆரம்பமாகும் இக்கல்வி, அமைதியான புரட்சிக்கு உயிர் அளிக்கிறது; பொதுக் குறிக்கோளில் எல்லாரையும் ஈடுபடுத்துகிறது; ஒரு தனி மையத்திற்கு எல்லாரையும் ஈர்க்கிறது. தாய் தந்தையர், தேசியத் தொண்டர்கள் ஆகிய எல்லாரும் இந்த முயற்சியில் ஒன்று கூட வேண்டும். இந்த மென்மையான ஆக்கும் தொழிலில் எல்லாரும்

உதவி புரியவேண்டும். சின்னஞ்சிறு குழந்தை தனது ஆழமான உள்ளத்தில் தோன்றும் மாயா சத்தியாலும், அந்தரங்கத்திலிருந்து தூண்டி வழி காக்கும் சத்தியாலும் இவ்வாறு உருவாக்கிக்கொண்டிருக்கிறது. இதுவே மனித குலத்திற்குத் தோன்றும் ஒளி பொருந்திய எதிர்கால நம்பிக்கையாகும்; திருத்தியமைப்பதன்று. ஆனால், மனித ஆன்மா செய்ய வேண்டுமென்று ஏற்றுக்கொண்டிருக்கும் ஆக்கத் தொழிலுக்கு நாம் உதவி புரிய வேண்டும். அது பலன் பெறும் அளவிற்கு உதவி புரியவேண்டும். மனிதனுடைய மக்களாகிய **குழந்தைகளிடம் அளவு கடந்த மறைந்த சத்திகள் நிறைந்திருக்கின்றன.** குழந்தையின் ஆக்கும் தொழிலில் இச்சத்திகள் வெளியாகின்றன.

# 3. வளர்ச்சிப் பருவங்கள்

குழந்தையின் வளர்ச்சியைப் பிறப்பிலிருந்து கல்லூரி வரை உள வியலார் ஆராய்ந்திருக்கின்றனர் ; இதைத் தெளிவான பல தனித்தனி பருவங்களாகப் பிரிக்கலாம் என்று கூறுகின்றனர். '**ஹேவ்லக்கு எல்லிஸ்**' (Havelock Ellis) என்பவரையும் அண்மையில், '**டபிள்யூ ஸ்டெர்ன்**' (W. Stern) என்பவரையும் பின்பற்றி இந்தக் கருத்தைப் பலர் அனுசரிக்கப் புகுந்திருக்கின்றனர். இதில் குறிப்பிடத் தகுந்த வர், '**சார்லோ புஹ்லர்**' அம்மையாரும் (Charlotte Buhler) அந்த அம்மையாருடைய தோழரும் ஆவர். வேறு ஒரு கோணத் தில் இதே கருத்துகள் '**ஃப்ருடியன் ஸ்கூல்**' (Freudian School) என்ற கொள்கையில் மிகைபடக் காணலாம். இதற்கு முன் பரவி யிருந்த கருத்துகளுக்கு இது மிகவும் மாறுபட்டிருக்கிறது. சின்னஞ் சிறு குழந்தையின் இளம்பருவத்தை இவர்கள் பெரிதாகக் கருதவில்லை; அது வளர்ச்சியில் பெருகிற்று என்று எண்ணி வந்தார்கள். இவர் களுடைய நம்பிக்கையின்படி பார்த்தால், சிறு குழந்தை மிகச் சிறியதி லிருந்து வளர்ந்துகொண்டே போகும் என்பதும், அந்த வளர்ச்சியும் நிதானமானதென்பதும், ஆனால், ஒரே உருவத்தை நிலை நாட்டி வந்த தென்பதும் விளக்கமாகின்றன. இன்று இந்தப் பழைய கருத்துகளை விட்டுவிட்டு, வளர்ச்சியின் ஒவ்வொரு பருவத்திற்கும் வெவ்வேறு மனநிலை இருக்கிறதென்பதை உளவியல் ஒப்புக்கொண்டிருக்கிறது. இந்தப் பகுதிகள் ஒன்றுக்கொன்று வேறுபட்டவை, இவை உடல் வளர்ச்சிப் பருவங்களுக்கு. ஒத்திருப்பதும் நம் சிந்தனையைக் கவரும் அளவு பொருத்தமாயிருக்கிறது. இந்த மாறுதல்கள் மிகத் தெளிவான வரம்புகளைப் பெற்றவை. "**வளர்ச்சி என்பது மறு பிறப்புகளின் தொடர்,**" என்று மிகைபட உளவியல் வர்ணனையால் கூறுவதும் உண்டு. ஓர் உளவியல் ஆளுமை முடிந்து மற்றொன்று தொடங்கும் காலம் இருக்கிறது. இப்பருவங்களில் முதலாவது பருவம், பிறப்பி லிருந்து ஆறு வயது வரை நீடிக்கிறது. இந்தப் பருவத்தில் மனப் போக்கு (Mentality) ஒரே நிலையிலேதான் இருந்து வருகிறது. இதற்கு அடுத்தபடியாக வரப்போகும் பருவங்களைவிடப் பல வழி

களில் இது வேறுபடுகிறது. இந்தப் பருவம் இரு கிளைப் பருவங்களாகக் காட்சி அளிக்கிறது: ஒன்று, **பிறப்பிலிருந்து மூன்று வயது வரையிலும்; மற்றொன்று, மூன்று வயதிலிருந்து ஆறு வயது வரை**யிலும் ஆகும். முதற்பருவத்தில் குழந்தையின் மனப்போக்கைப் பெரியவர்கள் நெருங்க இயலாது. அதாவது, நேரடியாக நம்முடைய செல்வாக்கால் அதை ஒன்றும் செய்ய வைக்க இயலாது. அந்த வயது குழந்தைகளுக்கு என்று தனிப் பள்ளிக்கூடமே இல்லை. இதற்கு அடுத்ததாகிய மூன்றுமாண்டிலிருந்து ஆறுமாண்டுவரையுள்ள பருவத்தில் குழந்தையின் மனப்போக்கு அப்படியே இருக்கிறது; ஆனால், ஓர் அளவுக்குக் குழந்தை பெரியவர்களின் செல்வாக்குக்கு வசப்பட இடம் தருகிறது. இந்தப் பருவத்தில் குழந்தையின் ஆளுமை பெரிய மாறுதல்களை அடைகிறது. பிறந்த குழந்தையை ஆறுண்டுக் குழந்தையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இது விளங்குகிறது. இந்த மாறுதல்கள் எவ்வாறு தோன்றின என்பதைப்பற்றிப் பிறகு பார்த்துக்கொள்வோம். ஆறுண்டுக் குழந்தை "இப்பொழுது பள்ளிக்கூடத்திற்குப் போகலாம்," என்ற அளவிற்கு நுண்ணறிவைப் பெற்றுவிட்டது.

அடுத்த பருவம் **ஆறுண்டிலிருந்து பன்னிராண்டுவரை நீடிக்கிறது.** மற்ற மாறுதல் எதுவும் இல்லாத ஒரு வளர்ச்சிப்பருவம் இது. குழந்தை மனவமைதியுடனும், ஆனந்தமாகவும் இருக்கிறது; மனத்தைப் பொறுத்தமட்டில் ஆரோக்கியமாகவும், பலமாகவும், நிலையாகவும் இருக்கிறது. இந்தப் பருவத்தில் குழந்தையின் உடலும் உளமும் ஒரு நிலையில் இருப்பதைக் கண்ட 'ராஸ்' (Ross) என்ற அறிஞர், "உள்ளத்திலும் உடலிலும் தோன்றும் உறுதியான நிலையானது, குழந்தையின் இனிமேல் தோன்றும் பருவத்தின் மிகவும் எடுப்பான சிறப்பியல்பாகும். மனித குலத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாத பேர்வழி ஒருவர் வேறொரு கிரகத்திலிருந்து இந்தப் பூமிக்கு வந்தாரானால், நம்முள் வயது வந்தவரை இது வரை பாராமல் இருந்தால், இந்தப் பத்தாண்டுக் குழந்தைகளைப் பெரியவர்கள் என்றே அவர் எளிதில் எண்ணிவிடுவார்," என்று கூறுகிறார்.

உடல் வளர்ச்சியைப் பொறுத்தமட்டில், இது சில குறிப்புகளால் இந்த இரு உளவியல் பருவங்களுக்கிடையே இருக்கும் எல்லையை ஒருவாறு நிலை நிறுத்துவது போலத் தோன்றுகிறது. மாறுதல்கள் மிகவும் தெளிவானவை. எடுத்துக்காட்டாக, இந்தப் பருவத்தில் குழந்தை பாற்பற்களை இழந்துவிட்டு நிரந்தரமான பற்களைப் பெற ஆரம்பிக்கிறது.

மூன்றாவது பருவம் **பன்னிரண்டாமாண்டிலிருந்து பதினெட்டாம் ஆண்டு வரை நீடிக்கிறது.** இந்தப் பருவத்திலும் முதற்பருவத்

தைப்போலப் பல மாறுதல்கள் நடைபெறுகின்றன. இந்தப் பருவத்தையும் இரு கிளைப் பருவங்களாகப் பிரிக்கலாம். அவை பன்னிரண்டிலிருந்து பதினைந்துவரை ஒன்றும், பதினைந்திலிருந்து பதினெட்டுவரை மற்றொன்றுமாகும். உடல் மாறுதல்களும் இப்பருவத்தில் நடைபெறுகின்றன. உடல் முழு வளர்ச்சிப் பருவம் அடைகிறது. பதினெட்டு ஆண்டுகளுக்குப் பிறகு மனிதன் முழு வளர்ச்சி பெற்றுவிடுகின்றான். இனி விசேஷமான மாறுதல்கள் இவனிடம் காணப்படுவதில்லை; வயதிலேதான் வளர்கிறான்.

இந்த உளவியல் பருவங்களை எப்படியோ அலுவல் கல்வித்துறை ஏற்றுக்கொண்டிருப்பதும் வேடிக்கைதான். இப்பருவங்களைப்பற்றி ஒரு மங்கலான உள்ளுணர்வைக் கல்வித்துறை எப்படியோ பெற்றிருக்கிறது. பிறப்பிலிருந்து ஆறாண்டு வரையுள்ள பருவம் கட்டாயக் கல்விக்குப் புறம்பானபடியால், தெளிவாக அறிய இயலும். ஆறும் ஆண்டில் ஒரு மாறுதல் அடைகிறதும் தெளிவாகத் தெரிகிறது. குழந்தையும் பள்ளிக்கூடம் போகத்தகுந்த பக்குவம் அடைகிறது. எனவே, ஆறாண்டுக்குள் குழந்தைக்குப் பல விஷயங்கள் தெரியும் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. குழந்தைகளுக்கு வழி தெரியவில்லை என்றாலும், நடக்க முடியாவிட்டாலும், ஆசிரியர் சொல்வது விளங்காவிட்டாலும், அவை கூட்டுறவு வாழ்க்கைக்கு ஆயத்தமாய் இல்லை என்று கருதப்படவேண்டும்.

இந்த மாறுதலை நடைமுறையில் அறிஞர் ஒப்புக்கொண்டிருக்கின்றனர் என்று கூறலாம். குழந்தை பள்ளிக்கூடம் போகிறது; போவதற்கு வழியைத் தானே தெரிந்துகொள்கிறது; தனக்கு அறிவிக்கப்படுகின்ற கருத்துகளை விளங்கிக்கொள்கிறது. இவைகளெல்லாம் நடைபெறுகின்றன என்றால், குழந்தையினுடைய மனம் பெறு மாறுதல்களை அடைந்திருக்கிறது என்பது தெரிகிறது. பிறந்த பொழுது குழந்தை இவற்றில் எதையும் சாதிக்க இயலாத நிலையில் இருந்தது. இவற்றை எல்லாம் கல்விக் கொள்கையாளர் மிகவும் நிதானமாகவே புரிந்துகொள்கின்றனர்.

இதைப்போலவே இரண்டாவது பருவத்தையும் நனவில்லாமல் ஏற்றுக்கொள்கின்றனர். ஏனென்றால், பல நாடுகளின் தொடக்கப் பள்ளியைக் குழந்தைகள் தங்கள் பன்னிரண்டாம் ஆண்டில் விட்டு விட்டு உயர்தரப் பள்ளிக்குச் செல்கின்றன. ஆறு முதல், பன்னிரண்டு வயதிற்குட்பட்ட பருவம் அடிப்படைப் பண்பாட்டில் கருத்துகளைப் போதிப்பதற்குத் தக்க பருவம் என்று ஏன் கருதப்படுகிறது? இது உலகத்திலுள்ள எல்லா நாடுகளிலும் நடைபெற்று வருகிறது. இது ஏதோ அப்போது தோன்றின உள்ளுணர்ச்சியால் தோன்றிய

தென்று சொல்லிவிட இயலாது. எல்லாக் குழந்தைகளுக்கும் பொதுவான ஓர் உளவியல் அடிப்படையில் இம்மாதிரியான பள்ளிக்கூட ஏற்பாட்டைத் தூண்டியிருக்க இயலும். அனுபவத்தால் பெறப்பட்ட முடிவுகளைக்கொண்டு சந்தேகமில்லாமல் இந்தப் பள்ளி அமைப்பு நடைபெற்று வருகிறது. இந்தப் பருவத்தில் பள்ளிக்கூடம் எதிர்பார்க்கும் மன உழைப்புக்குத் தன்னை உட்படுத்திக்கொள்ளக் குழந்தையால் முடியும் என்பது அனுபவம் காட்டுகிறது. ஆசிரியர் மனத்தில் உள்ளதைக் குழந்தையால் புரிந்துகொள்ள இயல்கிறது. கவனிக்கத் தெரிந்துகொள்ளும் பொறுமையை அது பெற்றிருக்கிறது; இந்தப் பருவம் முழுவதிலும் **உழைப்பில் மாருத நிலையையும், உடலில் நல் வாழ்வையும்** பெற்றிருக்கிறது. ஆதலால், பண்பாட்டைப் பெறுவதற்கு இந்தப் பருவமே சிறந்ததாகக் கொள்ளப்படுகிறது.

பன்னிரண்டாம் ஆண்டுக்குப் பிறகு உயர்தரக் கல்வி தொடங்குகிறது. தனிப் பேர்வழி இன்னும் ஒரு புது உள இயல் வாழ்வைத் தொடங்குகிருன் என்பதைக் கல்வி இலாக்கா ஒப்புக்கொள்கிறது என்பது விளங்குகிறது. இதிலும் இரண்டு கிளைப்பகுதிகள் இருக்கின்றன. உயர்தரப்பள்ளியில் இரு பகுதிகள் இருப்பதும் இதை ஒட்டியே; **கீழ் உயர்தரப்பள்ளி** என்றும், **மேல் உயர்தரப்பள்ளி** என்றும் இரண்டு உள்ளன. கீழ்ப்பகுதி மூன்று ஆண்டுகள் நீடிக்கும். மேற்பகுதி சில சமயங்களில் நான்கு ஆண்டுகள் நீடிக்கும். போதனைக்காலம் எத்தனை ஆண்டுகளாகப் பிரிக்கப்பட்டாலும், அதைப்பற்றிக் கவலையில்லை. நம் கருத்தைக் கவர்வது என்னவென்ருல், உயர்தரக் கல்வியிலும் இந்த ஆருண்டுக்காலம் இரு பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றது என்பதே. மொத்தத்தில் இந்தப் பருவம் இதற்கு முந்தின பருவத்தைவிடக் குறைந்த அமைதியைப் பெற்றுளது. இது அவ்வளவு சுலபமான பருவம் அன்று. காளைப்பருவ உளவியலை ஆராய்ந்துவரும் உளவியலார் இந்தப் பருவத்தை நிறைந்த உளவியல் மாற்றங்களைப் பெற்ற பருவமாகக் கருதுகின்றனர். பிறப்பிலிருந்து ஆருண்டு வரையுள்ள பருவத்திற்கு இதை ஒப்பிடுகின்றனர். இந்தப் பருவத்தில் குண இயல் ஒரே நிலையில் இருப்பதில்லை. ஒழுங்கை மீறுதலும் புரட்சியும் இப்பருவத்தில் தலைதூக்கும். முன் பருவத்தைவிட இப்பொழுது உடல் நிலையும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஆனல், இவற்றைப்பற்றியெல்லாம் பள்ளிக்கூடங்கள் சிந்திப்பதே இல்லை. கால அட்டவணை ஒன்று வகுக்கப்பட்டுள்ளது. அதை மாணவர்கள் எப்படியோ பின் பற்றித் தீரவேண்டும். நீண்ட காலம் அவர்கள் உட்கார்ந்து பாடத்தைக் கவனித்துக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டும். அவர்கள் கீழ்ப்படிந்தாக வேண்டும். பல விஷயங்களை மனப்பாடம் செய்வதில் மணிக்கணக்காகச் செலவழிக்க வேண்டும்.

இத்தனை ஆண்டுகள் பள்ளியில் கழிந்ததற்கு மகுடமாகப் பல்கலைக் கழகம் தொடங்குகிறது. இதற்கு முன்பு இருந்த பள்ளிக்கூடத்தை விடப் பல்கலைக்கழகம் தான் அனுசரிக்கும் முறைகளுள் ஒன்றும் அவ்வளவாக வேறுபடுகிறதில்லை. ஒரு வேளை அதிகமான உழைப் பிருக்கலாம். அவ்வளவுதான். அங்கும் பேராசிரியர்கள் பேசு கின்றார்கள். மாணவர்கள் காது கொடுத்துக் கேட்கின்றார்கள். எனது இளமைப் பருவத்தில் கல்லூரி மாணவர்கள் முகக்ஷவரம் செய்துகொள்ளவில்லை. பெரிய கூட்டங்களில் அவர்கள் நீண்ட தாடி களுடன் கூடியிருப்பது வேடிக்கையாய் இருக்கும். அவர்கள் வைத்த மீசைகளோ, வகை வகையானவை! இம்மாதிரி மீசையும் தாடியு மானவர்களைச் சிறு குழந்தைகளைப்போலவே நடத்தினர் ஆசிரியர். அவர்கள் அமைதியாக உட்கார்ந்து சொல்வதைக் கவனித்து வர வேண்டும்; பேராசிரியர்கள் சொற்படி நடக்கவேண்டும். அவர்கள் சிகரெட்டுகளுக்கும், டிராம் வண்டிச் செலவுக்கும் தந்தையாரின் தயவை எதிர்பார்த்திருக்க வேண்டும். தந்தைமாரும் அவர்கள் தேர்வுகளில் வெற்றி பெருதபொழுது திட்டுவதற்கும் தயாராய் இருந் தார்கள். அவர்கள் முதிர்ச்சி அடைந்தவர்கள். உலகத்தின் நட வடிக்கைகளைச் சரிவர நடத்துவதற்கு எதிர்காலத்தில் அவர் களுடைய நுண்ணறிவும் அனுபவமும் தேவையாய் இருக்கும். உயர்ந்த வேலைகளில் அவர்களின் உழைப்புக்கு வேண்டிய கருவி மனமே ஆகும். அவர்களே வருங்கால மருத்துவர்கள்; வழக்கறி ஞர்கள்; பொறி இயலார்கள் ஆவார்கள்.

இன்னும் எத்தனையோ சேர்த்துக்கொள்ளலாம். பட்டம் ஒன்று பெற்றுவிட்டாலே இக்காலத்துக்குப் போதுமா? வயிற்றுப் பிழைப் புக்காவது நிச்சயமாக அது வழி வகுக்குமா? இப்பொழுது பட்டம் பெற்ற மருத்துவரிடம் யார் போவார்கள்? ஒரு தொழிற்சாலையின் கட்டட வேலையை அனுபவமில்லாத இளைஞரான பொறி இயலாரிடம் யார் ஒப்படைப்பார்கள்? அல்லது இப்பொழுதுதான் தொழில் ஆரம் பித்திருக்கும் வழக்கறிஞரை யார் வழக்காடக் கூப்பிடுவார்கள்? ஏன் என்ருல், அந்த இளைஞர்கள் பல வருடங்கள் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருப்பதிலேயே காலங் கழித்துவிட்டார்கள். கேள்வி மட்டும் ஒரு மனிதனை ஆக்கிவிட இயலாது. கைத்தொழிலும் அனு பவமுமே இளைஞரை முதிர்ச்சி அடையச் செய்யும். ஆதலாலேதான் இளைஞரான மருத்துவர் பல ஆண்டுகள் மருத்துவ மனையில் தொழில் புரிய வேண்டியிருக்கிறது. இளைஞரான வழக்கறிஞர் திறமை வாய்ந்த வழக்கறிஞருடன் பல ஆண்டுகள் பழக வேண்டியிருக்கிறது. அப் படியே, பொறி இயலாரும் தாமே தனியாகச் செயலாற்றுவதற்கு முன் நல்ல பயிற்சி பெறவேண்டும். இது மட்டுமன்று. இவ்வாறு பயிற்சி பெறுவதற்குச் சிபாரிசுகளுக்காக அலையவேண்டியிருக்கிறது. இன்

னும் எத்தனையோ இடையூறுகளையும் கடந்தாலொழிய இந்தப் பயிற்சிகளுக்கு நுழைவு கிடைப்பது அரிது. இந்தக் கொடுமை எல்லா நாடுகளிலும் நடைபெற்று வருகிறது. இதற்கு எடுத்துக்காட்டாக நியூயார்க்கு நகரில் ஒரு சம்பவம் நடந்தது. நூற்றுக்கணக்கான பட்டதாரிகள் ஒன்று கூடி ஓர் ஊர்வலம் நடத்தினர்கள். அவர்கள் வேலை இல்லாது திண்டாடின பட்டதாரிகள் ; " எங்களுக்கு வேலை இல்லை. நாங்கள் பட்டினி கிடக்கிறோம். நாங்கள் என்ன செய்வது ?" என்ற பிரசார அட்டைகளை எடுத்துக்கொண்டு ஊர்வலம் சென்றார்கள். இந்தக் கேள்விகளுக்கு எவராலும் விடையளிக்க இயலவில்லை. கல்வியானது கட்டுக்கு மீறிவிட்டது. அதற்கு வழங்கப்பட்ட போக்கை மாற்ற இயலாது. கல்வி இது வரை என்ன செய்திருக்கிறது ? தனி ஒருவனுடைய வாழ்க்கையில் பல பருவங்களில் வெவ்வேறு வளர்ச்சிகள் இருக்கின்றன என்பதைக் கல்வி ஒப்புக்கொண்டிருக்கிறது.

## ஆக்கப் பருவம் (The Creative Period)

இரண்டு ஆண்டு முதல் ஆறுண்டு வரையுள்ள குழந்தையைப் பற்றி நான் சிறியவளாய் இருந்த பொழுது எவரும் கவலைப்பட்டதே இல்லை. இந்தக் காலத்தில் மூன்றுண்டு முதல் ஆறுண்டு வரையுள்ள குழந்தைகளை ஏற்றுக்கொள்ளக்கூடிய எத்தனையோ வகையான பாலர் பள்ளிகள் இருக்கின்றன. முன்பு போலவே இன்றும் பல்கலைக் கழகம் மிகவும் மதிப்புக்குரியதாகவே கருதப்படுகிறது. ஏனென்றால், மனிதனுடைய சிறப்பான இயலாகிய நுண்ணறிவை முழுமையாக வளர்த்துக்கொண்டு பல்கலைக் கழகத்திலிருந்து ஒருவன் வெளியேறுகிறன். இப்பொழுது உள இயலார், வாழ்க்கையையே ஆராய்ச்சி செய்யத் தொடங்கியிருக்கின்றனர். ஆதலால், இது வரை அனுசரித்து வந்ததற்கு எதிரிடையாகச் செய்யும் போக்கு ஆரம்பித்து வருகிறது. **வாழ்க்கையில் மிகவும் முக்கியமான பருவம் பல்கலைக் கழகப் படிப்புப் பருவமன்று. பிறப்பிலிருந்து ஆறு ஆண்டு வரை நிறைந்த முதல் பருவமேயாகும்.** என்னைப்போலப் பலர் இக்கருத்தை ஏற்றுக்கொள்கின்றனர். மனிதனது உயர்ந்த கருவி அவனது நுண்ணறிவு. இந்த நுண்ணறிவு அந்தப் பருவத்திலேதான் உருவாகிறது. உருவாவது நுண்ணறிவுமட்டும் அன்று; அவனுடைய உளவியல் சத்திகள் முழுமையும் ஆக்கப்படுகின்றன. உளவியல் வாழ்க்கையில் கருத்தைச் செலுத்துபவர்களை இவ்வுண்மை மெதுவாகக் கவர்ந்திருக்கிறது. பிறந்த குழந்தையைப்பற்றிப் பலர் ஆயத்தொடங்கியிருக்கின்றனர். முதிர்ச்சி அடைந்தவர்களின் ஆளுமையை ஆக்குவதாகிய முதல் ஆண்டுக் குழந்தையைப்பற்றி ஆராய்ச்சி செய்யத் தொடங்கியிருக்கின்றனர்.

இந்த அற்புதங்களைப்பற்றிக் கவனம் செலுத்தும் பொழுது ஆராய்ச்சி மாணவன் உள்ளத்தில் ஒரு துடிப்புத் தூண்டிவிடப்படு கிறது. முன் காலத்தில் எல்லாம், "இறப்புக்குக் காரணம் என்ன ? இறப்புக்குப் பிறகு என்ன ?" என்றெல்லாம் சிந்திப்பதுண்டு. அப் பொழுது உள்ளெழும் துடிப்பைவிட இது ஒன்றிலும் குறைந்ததன்று. இறப்புக்குப் பிறகு நேர்வது என்ன ? மனித இருதயத்தை இளக்க வைப்பதற்கு இதைவிட வேறு எந்தக் கேள்விக்கும் அவ்வளவு சத்தி இல்லை. இப்பொழுதெல்லாம் மனிதன் உலகத்தில் அடி எடுத்து வைப்பதே மனக் கற்பனையைக் கவர்கிறது. ஏனென்றால், பிறந்த குழந்தையிடம் நம்முடைய மறைந்த தன்மையைக் காண்கின்றோம்.

மனிதனுக்கு எதற்காக அவ்வளவு நீண்ட காலம் சலியாது உழைக்கின்ற பாலப்பருவம் இருக்கவேண்டும் ? எந்த விலங்குக்கும் இம்மாதிரிக் கடினமான குழந்தைப்பருவம் இல்லை. இந்தப் பருவத் தில் என்ன நடைபெறுகிறது ? ஒரு வகையான ஆக்கும் தொழில் நடைபெறுகிறது என்பதற்கு ஐயமில்லை. முதலில் ஒன்றுமே இல்லை. ஓர் ஆண்டுக்குள் குழந்தை எல்லாம் தெரிந்துகொள்கிறது. குழந்தை பிறக்கும் பொழுதே ஒரு சிறிதளவு அறிவுடனும் பிறப்பதில்லை. சிறி தளவு ஞாபகசத்தியோ, மனவுறுதியோ, குழந்தையுடனே பிறந்து அவை நாள் ஆக ஆக வளர்ச்சியில் பெருகுகிறதென்று எண்ண இயலாது. பூனைக்குட்டி பிறந்தவுடன் ஓரளவு தாயைப்போல 'மியா மியா' என்று கத்தும். முட்டையிலிருந்து வெளிவந்த பறவைக் குஞ்சு பெரிய பறவையானால் எப்படிக் கூவுமோ, அப்படிக் கூவுகிறது. கன்றுக்குட்டியும் அப்படியே வளர்ந்து, பெரிய மாடானால் எப்படிக் கத்துமோ, அப்படியே கன்றாய் இருக்கும் பொழுதும் கத்துகிறது. ஆனால், மனிதக் குழந்தைமட்டும் பிறக்கும்பொழுது ஊமையாகவே இருக்கிறது. தனது அழுகையினால்தான் சிறு குழந்தை தன் மனத் தில் உள்ளதைத் தெரிவிக்க இயலும். எனவே, மனிதன் விஷயத்தில் இனி வளர்ச்சி அடைய வேண்டுவது என்ற எதைப்பற்றியும் நாம் ஆராயப்போவதில்லை. ஆக்கப்படுவதையே நாம் கவனிக்கிறோம். ஆரம்பத்தில் சூனியமாய் இருந்து, இது வரை இல்லாத ஒன்றை ஆக் கத் தொடங்க வேண்டியிருக்கிறது. **ஒன்றுமில்லாததிலிருந்து தொடங்கிச் சில விஷயங்களைத் தானே சாதிப்பது என்பதே குழந் தையின் அடிகோலுதலாகும்.** இந்தச் சித்திரப்பேச்சைப் புரிந்து கொள்வதற்கு நம் மனம் பெரும்பாடு படுகிறது.

இதைப் புரிந்துகொள்வதற்கு நமக்கிருப்பதைவிட வேறு வகை யான மனம் தேவைப்படுகிறது. நமக்கு இருப்பதைவிட வேறு சத்தி களைக் குழந்தை பெற்றிருக்கிறது. அது சாதிக்கின்ற ஆக்கங்கள் சாமானியமானவை அல்ல ; ஒன்றல்ல, பல. தன் மொழியை

ஆக்கிக்கொள்வது மட்டுமன்றி, சொற்களை உண்டாக்கும் உறுப்பு களையும் அது உருவாக்கிக்கொள்கிறது. இயக்கத்துக்குத் தேவை யான ஸ்தூல அடிப்படையை அமைத்துக்கொள்ள வேண்டியிருக் கிறது. நமது நுண்ணறிவின் பல பகுதிகளை அமைக்க வேண்டியிருக் கிறது. பொதுவாக மனிதனுக்குக் கொடுத்து வைக்கப்பட்டுள்ள எல்லாவற்றையுமே குழந்தை ஆக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த அற்புதமான தொழில்கள் எல்லாம் வேண்டுமென்று நனவுடன் செய்யப்படுபவை அல்ல. பெரியவர்களாகிய நமக்கு என்னென்ன வேண்டுமென்பது தெரியும். ஏதாவது ஒன்றைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று நாம் விரும்பினால், நாம் நம் நனவுடன் அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து வருகிறோம். ஆனால், மனவுறுதி (will) என்பது குழந்தையிடம் இல்லை. **அறிவும் மனவுறுதியும் இனிமேலேதான் குழந்தையிடம் ஆக்கப்பட வேண்டும்.**

வயது வந்தவர்களாகிய நம் மனத்தை நனவுள்ளது (Conscious) என்றால், குழந்தையின் மனத்தை நனவில்லாதது என்று வழங்க வேண்டும். நனவில்லாதது என்றால், தாழ்ந்தது என்று கருதக்கூடாது. நனவில்லா மனம் மிகவும் சிறந்த நுண்ணறிவைப் பெற்றிருக்கலாம். இதை எல்லாச் சீவராசிகளிலும் பார்க்கிறோம். பூச்சிகளிலும் இது காணப்படுகிறது. பூச்சிகளிடம் ஆயும் சத்தி இருப்பது போலத் தோன்றினாலும், நனவுள்ள நுண்ணறிவு அவற்றுக்கு இல்லை. இதைப் போன்ற ஒரு வகையான **நனவில்லா நுண்ணறிவைக் குழந்தை பெற்றிருக்கிறது.** இதுதான் குழந்தையின் மாபெருமுன்னேற்றங் களைச் சாதிக்க வைக்கிறது.

இது குழந்தையின் சூழ்நிலையைப் பற்றிய அறிவுடன் தொடங்கு கிறது. தன் சூழ்நிலையைக் குழந்தை எவ்வாறு தன்னுள் ஏற்றுக் கொள்கிறது? குழந்தையிடம் இருப்பதாக நாம் இப்பொழுது அறியும் சத்திகளுள் ஒன்றின் உதவியால் குழந்தை இதைச் சாதிக்கிறது. இது ஒரு தனிப்பட்ட தீவிரமான உணர்ச்சியாகும். குழந்தையைச் சூழ்ந்துள்ள பொருள்கள் குழந்தையிடம் எவ்வளவோ ஊக்கத்தையும் அக்கறையையும் தூண்டிவிடுகின்றன. இவை குழந்தையின் தன்மை யிலேயே பதிந்துவிடுகின்றன. இந்தப் பதிவுகளைக் குழந்தை தன் மனத்தினால் அன்றித் தன் முழு வாழ்வினால் உட்கவர்ந்துகொள்கிறது.

மொழியானது இதற்குத் தெளிவான எடுத்துக்காட்டாகிறது. குழந்தை எவ்வாறு பேசக் கற்றுக்கொள்கிறது? மனிதனுடைய குரலைக் கேட்கும் சத்தி குழந்தைக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்கிறோம் நாம். இது உண்மையானாலும், குழந்தையைச் சுற்றிலும் ஒலிக்கப்படுகின்ற ஆயிரக்கணக்கான சத்தங்களிலும் ஒலிகளிலும்

மனிதனுடைய குரல் ஒன்றையே கேட்கவும் பிரதிபலிக்கவும் வல்லதாக எவ்வாறு இருக்க இயலுமென்பதை ஆய வேண்டியிருக்கிறது. குழந்தை கேட்பது உண்மையானாலும், மனிதர்களுடைய மொழியையே அது கற்றுக்கொள்கிறது என்பதும் உண்மையானால், மற்ற எந்த ஒலியைக்காட்டிலும் மனிதனது பேச்சு, குழந்தையின் உள்ளத்தில் ஆழமாகப் பதிவாக வேண்டும். இந்தப் பதிவுகள் வன்மையானவையாய்க் குழந்தையிடம் ஆழ்ந்த உணர்ச்சிகளைத் தூண்டவல்லனவாய் இருக்க வேண்டும். இவற்றால் ஏற்படும் ஊக்கத்தால் கண்ணுக்குத் தெரியாத உடல் நார்கள் தூண்டப்படுகின்றன. இந்த நார்கள் அந்த ஒலிகளைப் பிரதிபலிக்கின்ற முயற்சியில் துடிக்க ஆரம்பிக்கின்றன.

எடுத்துக்காட்டாக, ஓர் இசை விழாவில் என்ன நடைபெறுகிறதென்று பார்ப்போம். இசையைக் கேட்டுக்கொண்டிருப்பவருடைய முகத்தில் பரவசமான தோற்றமிருக்கிறது. தலையும் கையும் சேர்ந்து ஆடத் தொடங்குகின்றன. இசைக்கு உள்ளம் இயங்குவதைத் தவிர வேறு என்ன எவ்வாறு செய்ய இயலும்? இதைப் போல ஒன்று குழந்தையின் நனவில்லா மனத்தில் நடந்துகொண்டிருக்க வேண்டும். இசைக்கு நாம் துலங்குவதைவிட எவ்வளவோ மடங்கு உயர்ந்த நிலையில் மனிதக்குரல் குழந்தையின் உள்ளத்தை ஆழமாகத் தொட்டுவிடுகிறது. குழந்தையின் நாத் துடிப்பையும் ஓரளவிற்கு நாம் பார்க்க இயலும். அப்படியே அதனுடைய கன்னங்களும், சின்னஞ்சிறு குரல் நார்களும் துடிக்கின்றன; எல்லாம் இயங்கிக்கொண்டிருக்கின்றன. குழந்தையின் நனவில்லா மனப்பகுதியில் ஒலிகள் புதிய குழப்பத்தைக் கிளப்பியிருக்கின்றன. அந்த ஒலிகளைப் பிரதிபலிப்பதற்காகக் குழந்தை மௌனமாகவே முயற்சிகள் செய்து வருகிறது. ஒரு மொழியின் எல்லாச் சிக்கல்களையும் குழந்தை எவ்வாறு கற்றுக்கொள்கிறது? பிழையொன்றுமில்லாமலும், மாற்ற முடியாமலும் கற்றுக்கொண்டு தனது உள்ள ஆளுமையின் (Psychic Personality) பாகமாகச் செய்துகொள்வது எப்படி நடைபெறுகிறது? குழந்தைப் பருவத்தில் கற்றுக்கொள்ளும் மொழி தாய்மொழி எனப்படுகிறது. வயது வந்த பிறகு கற்றுக்கொள்ளகூடிய வேறு மொழிகளுக்கும் இந்தத் தாய் மொழிக்கும் தெளிவான வேற்றுமைகள் நிரம்ப உள்ளன. போலிப் பற்களுக்கும் இயற்கையான பற்களுக்கும் வேற்றுமை இல்லையா? அவற்றைப் போல்வது இவ்வேற்றுமை எனலாம்.

இந்த ஒலிகளெல்லாம் முதலில் பொருளற்றவை போலத் தோன்றினாலும், திடீரென்று இவை குழந்தையின் மனத்தில் கருத்துகளையும் எண்ணங்களையும் புரிந்துகொள்ளும் சத்தியையும் எவ்வாறு தோற்றுவிக்கின்றன? சொற்களையும் அவற்றின் பொருள்களையும்

உட்கவர்ந்துகொள்வதோடல்லாமல், குழந்தை வாக்கியங்களையும், அவற்றின் அமைப்புகளையும் தன்னுள் ஆக்கிக்கொண்டிருக்கிறது. வாக்கியங்களின் அமைப்பைப் புரிந்துகொள்ளாமல் அந்த மொழியைப் புரிந்துகொள்ள இயலாது. 'ஒரு கோப்பை அந்த மேசையின்மேல் இருக்கிறது,' என்ற வாக்கியத்தின் பொருள், நாம் எந்தெந்தச் சொலை எதெதெற்குப் பிறகு சொல்லுகிறோமோ, அதனால் ஏற்படுகிறது. இதற்குப் பதிலாக, 'ஒரு அந்த இருக்கிறது கோப்பைமேல் மேசை' என்று சொன்னோமானால் பொருள் விளங்காது. வார்த்தைகளின் கோவை ஒழுங்கிலிருந்தே நாம் பொருளை அறிந்துகொள்கிறோம். இதைக் குழந்தை தன் உள்ளத்திற்குள் உட்கவர்ந்துகொள்ளலாம்.

## உட்கவரும் மனம்

இவையெல்லாம் எப்படி நடக்கின்றன? 'குழந்தை எல்லாவற்றையும் நினைவில் வைத்துக்கொள்கிறது,' என்கிறோம். ஆனால், எதையும் நினைவில் (Memory) வைத்துக்கொள்வதற்கு நினைவிருக்கவேண்டும். குழந்தையிடம் இது இல்லை. இதற்குப் பதிலாக **இனிமேல்தான் குழந்தை இந்த நினைவு என்பதைத் தன்னுள் ஆக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது.** ஒரு வாக்கியத்தில் சொற்கள் எந்தக் கோவையில் இருந்தால் அதன் பொருள் எப்படியெப்படி மாறுமென்பதைப் புரிந்துகொள்வதற்கு முன் பகுத்தறிவாற்றல் வேண்டும். இந்த ஆற்றலையும் குழந்தை இனிமேலேதான் உருவாக்க வேண்டும்.

குழந்தையின் மனம் செய்வதை நம்மால் நம் மனம் இருக்கும் நிலையில் செய்ய இயலாது. ஒன்றுமில்லாததிலிருந்து ஒரு மொழியை உருவாக்குவதற்கு வேறு வகையான மனம் தேவைப்படுகிறது. குழந்தையிடம் இது இருக்கிறது. குழந்தையின் நுண்ணறிவு நம்முடையதைப் போன்றதன்று.

நம்முடைய மனத்தைப் பயன்படுத்தி நாம் அறிவைப் பெறுகிறோம் என்று சொல்கிறார்கள். ஆனால், குழந்தை அறிவைத் தன் உள் வாழ்க்கைக்குள் நேராக உட்கவர்ந்துகொள்கிறது. குழந்தை தன் வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்துவதில் தனது சொந்த மொழியைக் கற்றுக்கொள்கிறது. **குழந்தையின் உள்ளத்தில் ஒரு வகையான மன இரசாயனம் நடைபெறுகிறது.** குழந்தையுடன் ஒப்பிட்டுப் பார்ப்போமானால், நாம் பெறுவோர் (Recipients) ஆவோம். நமக்குள் உள்ளப் பதிவுகள் (Impressions) பொழிகின்

றன. அவற்றை நாம் நம் மனத்தில் சேர்த்து வைக்கின்றோம். ஆனால், நம்மைப் பொறுத்தமட்டில் அந்தப் பதிவுகளுக்குச் சம்பந்தப் படாமல் நாம் விலகியிருக்கிறோம். ஒரு சாடியில் (தாழி) தண்ணீர் இருக்கிறது. அங்கு எப்படித் தனக்குள் இருக்கும் தண்ணீருடன் சாடி ஒன்றுமல் தனியாய் இருக்கிறதோ, அதைப்போல நமது மனமும் விலகியிருக்கிறது. ஆனால், ஓர் உருமாற்றம் அடைகிறது. உள்ளப் பதிவுகள் குழந்தையின் மனத்துக்குள் நுழைவது மட்டுமன்றி, மனத்தையே உருவாக்குகின்றன. அவை அங்குப் புத்துருப் பெறு கின்றன. குழந்தை தன்னுடைய 'மனத்துத்தசைகளை'த் தானே அமைத்துக்கொள்கிறது; இவ்வாறு அமைத்துக்கொள்வதற்குத் தன்னைச் சுற்றிலும் உள்ளவைகளைப் பயன்படுத்திக்கொள்கிறது. இவ்வகையான மனப்போக்குக்கு **'உட்கவரும் மனம்'** என்று நாங்கள் பெயர் சூட்டியிருக்கிறோம்.

குழந்தையின் மனச் சத்தியை இன்னது என்று எண்ணுவது எளிதன்று. ஆனால், அந்த மனம் எவ்வளவுக்குக் கொடுத்து வைத்தது என்பதற்கு ஐயமில்லை. நாம் குழந்தைகளாய் இருந்த போது ஆனந்தமாய்க் கூத்தாடினோம்; குதித்து விளையாடினோம். அதே சமயத்தில் புது மொழி ஒன்றை அதன் சிக்கல்களுடனும் கற்றுக்கொண்டோம். அந்தப் பருவத்தில் நமக்கு இருந்த மிகப் பெரிய சத்திகள் இப்பொழுதும் நமக்குக் கிட்டினால் எப்படி இருக்கும்? எல்லா அறிவும் ஒரு விதத் தொல்லையுமில்லாமல் நம் வாழ்வின் பயனாகவே நம் மனத்திற்குள் வந்துவிட்டால் எவ்வளவு அற்புதமாக இருக்கும்! உண்பதும், மூச்சு விடுவதும் எப்படிச் சிரமம் இல்லாமல் நடைபெறுகின்றனவோ, அப்படியே அறிவும் நமக்குக் கிட்டினால் எப்படி இருக்கும்! முதலில் ஒரு விசேஷ மாறுதலையும் நாம் கவனி யாமல் இருக்கலாம்—திடீரென்று நாம் கற்றுக்கொண்டவைகள் எல்லாம் ஒளிவிடும் விண் மீன்கள்போல நம் மனத்தில் தோன்றும். அப்பொழுது அவை அங்கு இருக்கின்றன என்பதை நாம் உணர ஆரம்பிப்போம். நம்மை அறியாமல் நமக்குச் சொந்தமான கருத்து களை நனவுபடுத்திக்கொள்வோம்.

பள்ளிக்கூடங்களும், ஆசிரியர்களும் இல்லாத ஓர் உலகம் இருக்கிறது என்று நினைத்துக்கொள்வோம். அங்குப் படிப்பு என்பதே இல்லை. அங்கு வாழ்வோர் ஒரு வேலையும் செய்யாமல் வாழ்ந்து நடமாடி வருகிறார்கள். எல்லா விஷயங்களையும் அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய படிப்பையெல்லாம் மனத் தில் வைத்திருக்கின்றார்கள். இப்படியே நான் சொல்லிக்கொண்டு போனேனானால், நான் கற்பனை உலகத்தில் உலாவுகிறேன் என்று தானே நீங்கள் நினைப்பீர்கள்? கற்பனை உலகத்தில் தோன்றிய

இவை எங்கும் நடைபெறுதவை என்று நினைக்கச் சொல்லும். ஆனால், இவை கற்பனையல்ல; உண்மையானவை. இம்மாதிரியே குழந்தை கற்றுக்கொள்கிறது. குழந்தை பின்பற்றுவது இந்த வழியே—கற்றுக் கொள்கிறோம் என்று உணராமலே அது எல்லாம் கற்றுக்கொள்கிறது. அவ்வாறு செய்யும் பொழுது நனவில்லா நிலையிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக நனவு நிலைக்கு வருகிறது. அன்பும் ஆனந்தமும் நிறைந்த வழியையே குழந்தை பின் பற்றுகிறது.

மனிதனுக்குச் சொந்தமான மனத்தைப் பெறுவதும், அறிவைப் பற்றித் தெரிந்துகொள்வதும், மனிதன் கற்றுக்கொள்வதும், நமக்கு ஒரு பெரிய காரியமாகத் தோன்றுகிறது. இவற்றைப் பெறுவதற்கு நாம் உழைத்தாக வேண்டும். நனவு ஏற்பட்டவுடன் அறிவின் எந்தப் பகுதியைப் பெறுவதென்றாலும் அதற்காகக் கடின உழைப்பும் முயற்சியும் தேவைப்படுகின்றன.

**குழந்தையின் பெரிய சாதனைகளுள் ஒன்று இயங்குதல்.** குழந்தை பிறப்பிலிருந்து பல மாதங்கள் வரை தொட்டிலிலோ, தன் கட்டிலிலோ கிடக்கிறது; நெடுநாள்களுக்குப் பிறகு பார்த்தால் அது நடக்கிறது; தன் உலகத்தில் இங்குமங்கும் நடமாடிக்கொண்டு செயல்களைச் செய்துகொண்டிருக்கிறது; இதையும், அதையும் செய்து கொண்டு இன்புற்றிருக்கிறது. அன்றைக்கே அது வாழ்கிறது. ஒவ்வொரு நாளும் அது இன்னும் சிறிது அதிகமாக இயங்கக் கற்றுக் கொள்கிறது. மொழியின் எல்லாச் சிக்கல்களையும் சொந்தமாக்கிக் கொள்கிறது. அதனுடன் அதற்குத் தேவையான இடத்திற்குச் செல்லக்கூடிய சக்தியையும் பெற்றுவிடுகிறது. ஆனால், இது மட்டு மன்று. ஆச்சரியமான வேகத்துடன் இன்னும் பலவற்றை அது தெரிந்துகொள்ளுகிறது. தன்னைச் சுற்றிலும் உள்ளவை முழுமையும் தன் உள்ளத்தில் ஈர்க்கப்படுகின்றன. பழக்கவழக்கங்கள் மதம் ஆகியவையெல்லாம் குழந்தையின் மனத்தில் உறுதியாகப் பதிந்து விடுகின்றன.

குழந்தை பெறுகின்ற இயக்கங்களெல்லாம் ஏதோ 'கன்னாபின்னா' என்று தேர்ந்தெடுக்கப்பட்டவையல்ல. அவற்றுள் ஒவ்வொன்றும் குறிப்பிட்ட ஒரு வளர்ச்சிப் பருவத்தை அனுசரித்துத் தோன்றியது. ஆதலால், அவை நிலையுள்ளவை. குழந்தை நடமாடத் தொடங்கும் பொழுது அதனுடைய மனம் உட்கவரும் சக்தி பெற்றிருப்பதால், சூழ்நிலையை அப்படியே தன்க்குள் பதிவு செய்துகொள்ளுகிறது. குழந்தை நடமாடத் தொடங்குவதற்கு முன்பு அதனிடம் நனவில் லாத முறையில் ஓர் உளவளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. குழந்தை முதலில் இயங்கத் தொடங்கும் பொழுது இந்த நனவில்லா வளர்ச்சி

நனவுள்ளதாய் மாறிவிடுகிறது. மூன்றுண்டுக் குழந்தையைக் கவனித்தால், அது ஏதோ ஒன்றை வைத்துக்கொண்டு எப்பொழுதும் விளையாடிக்கொண்டிருப்பது தெரியும். குழந்தையின் உள்ளத்தில் இதற்கு முன்பு நனவில்லா நிலையில் எதை உட்கவர்ந்துகொண்டிருக்கிறதோ, அதை இப்பொழுது நனவாக்க இவ்வாறு விளையாட்டில் ஈடுபடுத்திக் கொண்டிருப்பது விளங்கும். விளையாட்டு என்னும் பெயரால் நிகழும் இந்த வெளிப்படையான அனுபவங்களால் நனவில்லா நிலையில் தான் இதற்குமுன் ஏற்றுக்கொண்டவைகளையும், அவற்றின் பதிவுகளைப்பற்றியும் பரிசோதனை செய்து பார்க்கிறது. அதனுடைய தொழில்களால் முழு நனவு நிலையையும் பெற்று, வருங்கால மனிதனை உருவாக்குகிறது. ஒரு மாயா சத்தி—மிகப் பெரிய அற்புதச் சத்தி—இக் குழந்தைக்கு வழி காட்டுகிறது. குழந்தை சிறிது சிறிதாகச் சத்திகளைத் தன்னுள் பெறுகிறது; இப்படியே தன்னை மனிதன் ஆக்கிக் கொள்கிறது; இதைத் தன் கைகளால் சாதிக்கிறது; முதலில் விளையாட்டின் மூலம் பெற்ற அனுபவங்களாலும், பிறகு தொழிலின் மூலமாகவும் இதைச் சாதிக்கிறது. **மனிதனது நுண்ணறிவைக் காட்டுகின்ற கருவிகளே கைகள்,** இந்தப் பரிசோதனைகளின் பயனுகக் குழந்தையின் ஆளுமை தனிப்பட்ட பேர்வழியை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது; ஆதலால், உருவமும் வரம்பும் பெற்றதாகி விடுகிறது. நனவில்லா உலகமும், நனவடி உலகமும் (Sub Conscious) போல அல்லாமல், அறிவு என்பது எப்பொழுதும் ஒரு வரம்பிற்கு உட்பட்டதுதானே ?

குழந்தை தன் வாழ்க்கைப் பாதையில் இறங்குகிறது ; தன் அற்புத மாயா சத்தித் தொழிலைத் தொடங்குகிறது ; ஒருவனது நாட்டுக்கும் அவன் வாழ்கின்ற காலத்திற்கும் பொருத்தமான முறையில் தன் அற்புதச் சத்திகளைப் படிப்படியாக அமைத்துக் கொள்கிறது ; மனத்தைப் படிப்படியாக உருவாக்கி நினைவைப் பெறுகிறது. அந்த நினைவினுல் புரிந்துகொள்ளும் திறமையும், நினைக்கின்ற சத்தியும் குழந்தைக்குக் கிட்டுகின்றன. இப்படியே இது இறுதியில் ஆரும் ஆண்டு வாழ்க்கையை அடைகிறது. இது திடீரென்று கல்வி புகட்டுவோராகிய நம் எல்லோருக்கும் ஒரு புதுத் தெளிவு நம் கண் முன் தோற்றம் அளிப்பது போல இருக்கிறது. " புரிந்துகொள்ளக்கூடிய ஒரு பேர்வழி நம் முன் தோன்றுகிறதே ! இது நாம் பேசும் பொழுது பொறுமையாகக் கேட்கக்கூடியதாய் இருக்கிறதே ! இதற்கு முந்தின பருவத்தில் நம்மால் இதனிடம் எதையும் நேர் முகமாகத் தெரிவித்துக்கொள்ள இயலவில்லையே ! இது நம் உலகத்துக்கு மாறுன ஓர் உலகத்தில் இது வரை வாழ்ந்து வந்ததே !'' என்றெல்லாம் நம்மைச் சிந்திக்கச் செய்கிறது.

இந்த முதற்பருவத்தைப் பற்றியே இந்த நூல் ஆராய்கிறது. குழந்தையின் ஆரம்ப வயதின் உளவியலை ஆராயும் பொழுது அருமையான அற்புதங்கள் நமக்குக் காட்சியளிக்கின்றன. அன்புடனும் அனுதாபத்துடனும் பார்க்கின்றவர்களின் உள்ளம் குழையாமல் இராது. பெரியவர்கள் என்ற முறையில் பாடம் கற்பிப்பது நம்முடைய வேலை அன்று. குழந்தையின் வளர்ச்சியில் சின்னஞ்சிறு குழந்தையின் மனத்துக்கு உதவி புரிவதே நம் பணியாகும். நாம் குழந்தையின் அருகில் ஆயத்தமாய் நின்றுகொண்டு, அதை நுண்ணறிவுடன் நடத்தி வந்து, அதற்கு முக்கியமான தேவைகளைப் புரிந்துகொண்டு, உட்கவரும் சத்தியுள்ள பருவத்தை இன்னும் நீடிக்கச் செய்தோமானால், எவ்வளவு அற்புதமாக இருக்கும்! சலிப்பில்லாமல் அறிவை மனிதன் பெறுமாறு உதவி புரிந்தோமானால், மனித குலத்திற்கே எவ்வளவு பணி செய்தவர்களாவோம்! ஏதோ மாயச் சத்தியால் அடைந்தது போல எப்படிக் கிட்டின என்பதை அறியாமல் மக்கள் பல செய்திகளைத் தங்களுக்குள் நிறைத்துக் கொள்ள இயலுமானால் எவ்வளவு அற்புதமாக இருக்கும்! உண்மையாயிருந்த போதிலும், இயற்கையின் எல்லாச் சாதனைகளும், மாயமாகவும் அற்புதமாகவும் தோன்றுகின்றன.

குழந்தைக்குத் தானே உட்கவர்ந்துகொள்ளக்கூடிய மனம் ஒன்றுண்டு என்பதை உணருவது கல்வித் துறையில் பெரிய புரட்சியை உண்டாக்குகிறது. குணத்தை உருவாக்கும் முதற்பருவம் மனித வளர்ச்சிப் பருவங்களுள் மிகவும் முக்கியமானது என்பதை நம்மால் இப்பொழுது எளிதில் புரிந்துகொள்ள இயலும். வேறு எந்த வயதிலும் இதைப்போன்ற நுண்ணறிவுடன் கூடிய உதவி குழந்தைக்குத் தேவைப்படுவதில்லை. அதன் ஆக்குந் தொழிலுக்குக் குறுக்கிடுவது எதுவானாலும், அது குழந்தையின் நிறைவு பெறும் முயற்சியைக் குறைத்துவிடுகிறது. 'குழந்தை சிறியது ; சத்தியற்றது ; ஆதலால், நாம் அதற்கு உதவி செய்ய வேண்டும்,' என்று இனி நாம் முன் வருதல் கூடாது. குழந்தைக்கு மிகப்பெரிய ஆக்கச் சத்திகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. இயற்கையாகவே இந்தச் சத்திகள் மிகவும் மென்மையானவை. இவற்றை அன்புடனும் நுண்ணறிவுடனும் காப்பாற்ற வேண்டும். இந்தச் சத்திகளுக்கு நாம் உதவி புரிய வேண்டும்—குழந்தைக்கு அன்று ; அதன் மெலிவுக்கும் அன்று. இந்தச் சத்திகளெல்லாம் நனவில்லா மனத்தைச் சேர்ந்தவை. வேலையினாலும் உலகத்தில் வாழ்க்கையால் பெறப்படும் அனுபவங்களாலும் நனவில்லா நிலையிலிருந்து நனவுள்ள நிலைக்கு மாறவேண்டியிருக்கிறது. இதைப் புரிந்துகொண்டால், பாலப் பருவத்தில் உள்ள குழந்தையின் மனம் நம்முடைய மனத்தைப்போல அல்லாமல் வேறுபடுகிறது என்பது விளங்கும். நம்முடைய வாய்ச்சொல்லால்

குழந்தையின் மனத்தை நெருங்க இயலாது. மனிதச் சத்தியை உருவாக்கிக்கொள்வதற்காக நனவில்லா நிலையிலிருந்து நனவுள்ள நிலைக்கு மாற்றிக்கொள்ளும் பொழுதும் நேரடியாக அதைத் தடுக்க இயலுமா? இவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்ளும் பொழுது நம் கல்வி பற்றிய கருத்துகளெல்லாம் அடிப்படையில் மாற்றம் பெறுகின்றன. மனிதனை உளவியலில் உருவாக்குவதற்காகக் குழந்தையின் வாழ்க்கையில் நாம் உதவி புரியவேண்டும் என்பது பெறப்படுகிறது. நம்முடைய சொற்களையும் கருத்துகளையும் வெறுங் கட்டாயத்தால் அடக்கிக்கொள்ள வேண்டும் என்ற வேலை இனி இல்லை. கல்வி முன்னேறுதற்குரிய புதுப்பாதை இதுவே. மனத்தின் வளர்ச்சிப் போக்கில் அதற்கு உதவி புரிவதும், மனத்தின் சத்திகளுக்கு உதவி புரிந்து அதனுடைய பல சத்திகளை வலுவாக்குவதுமே கல்வியின் புதுப்பணியாகும்.

# 4. புது வழி

இக்கால உயிர்நூல், புது வழிகளில் திரும்பிக்கொண்டிருக்கிறது. ஒரு காலத்தில் எல்லா ஆராய்ச்சிகளும் முதிர்ச்சியடைந்தவர்களைப் பற்றியே இருந்தன. அறிவியலறிஞர்கள் விலங்குகளையோ, தாவரங்களையோ, ஆராய்ச்சிக்கு ஏற்றுக்கொண்ட பொழுது, முதிர்ச்சி அடைந்தவைகளையே உதாரணமாக ஏற்றுக்கொண்டார்கள். மனிதக் குலத்தை ஆராயப் புகுந்த பொழுதும் இதே முறை அனுசரிக்கப் பட்டது. மனிதனுடைய நெறிகளைப் பற்றியானாலும், அல்லது அவனுடைய சமூகத்தின் உருவத்தைப் பற்றியானாலும் ஆராய்ச்சி நடத்தும் பொழுது முதியோர்களே அதில் கவனிக்கப்பட்டு வந்தார்கள். அடிக்கடி ஆராய்ச்சிக்கு வரக்கூடிய விஷயம் சாக்காட்டைக் குறித்ததாகும். இதைக்கண்டு ஆச்சரியப்பட வேண்டுவதில்லை. ஏனென்றால், முதியோர் தம் வாழ்க்கையை நடத்திக்கொண்டே சாவை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றனர். நன்னெறியென்ப தெல்லாம் சட்டத்தைப் பொறுத்திருக்கிறது; அல்லது முதியோர் குழுவில் ஒருவரோடு ஒருவரிடையே ஏற்பட்ட சம்பந்தத்தைப் பொறுத்திருக்கிறது. ஆனால், விஞ்ஞானம் இப்பொழுது இதற்கு எதிரிடையான வழியைப் பின் பற்றத் தொடங்கியிருக்கிறது. பார்வைக்கு அது பின் நோக்கிச் செல்வது போல இருக்கிறது. இந்த ஆராய்ச்சிகள் மனிதனைப்பற்றியவையானாலும் சரி, சீவராசிகளில் வேறு எதைப்பற்றியானாலும் சரி, இவற்றைப் பற்றியும், இவற்றின் தோற்றத்தைப் பற்றியுமே முக்கியமாகத் தம் அக்கறையைச் செலுத்தி ஆராய்ந்தனர். கரு வளர்ச்சி இயலும், உயிரணு இயலும் (Cytology) இப்பொழுது முன்னணிக்கு வந்திருக்கின்றன. இந்தத் தாழ்ந்த நிலையில் உள்ளவைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்தது காரணமாக, ஒரு புது மெய்யறிநூல் (Philosophy) தோன்றி வருகிறது. இந்த மெய்யறிநூல் முழுமையும் வெறுங்கொள்முறை மட்டும் அன்று. இதற்கு முன் கூறப்பட்ட முடிவுகள் எல்லாம் கருத்தியல் ஆய்வால் பெறப்பட்டவைகளே. இவைகளோ என்றால், உற்று நோக்குவதால் தோன்றியவை. ஆதலால், இவற்றுக்கு முன் இருந்த கருத்துகளைவிட

இவை விஞ்ஞான முறையைச் சேர்ந்தனவென்று கூறலாம். இந்த மெய்யறிநூல் வெளியாவதற்கு முன் ஆய்வுச்சாலையில் படிப்படியாக உண்மைகள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன.

உண்மையிற்கவனித்தால், கரு வளர்ச்சி இயல் முதியோர்களின் ஆரம்பத்தைப் பற்றியே நமக்கு எடுத்துக் காட்டுகிறது. முதிர்ச்சிப் பருவத்தில் தோன்ருத பல விஷயங்கள் அந்த ஆரம்பப் பருவத்தில் தோன்றுகின்றன. அவ்வாறு ஒரு வேலை தோன்றினாலும், இவற்றின் போக்கு முழுமையும் வேறுபட்டது. முன் தோன்றிய அறிஞர்கள் கண்டறியாத ஒரு வகை வாழ்க்கையை விஞ்ஞானம் விரித்துக்காட்டுகிறது. குழந்தையின் ஆளுமையைப் பற்றி இது புதுப்புதுக் கருத்துகளை வெளிப்படுத்துகிறது.

தெளிவான ஓர் ஆய்வுச் சிந்தனையில் ஆரம்பிப்போம். பெரியவர்களைப் போலச் சிறு குழந்தை தனது சாவைத் தேடிக்கொண்டு போவதில்லை. அது தன் வாழ்க்கைப்பாதையில் அடி எடுத்து வைத்திருக்கிறது. **முழு வலிமை பெற்ற ஒரு மனிதனை உருவாக்குவதே சிறு குழந்தையின் வேலையாகும்.** முதியோன் உருவாவதற்கு முன் குழந்தை மறைந்துவிட்டது. பரிபூரண நிலைக்கும், இன்னும் மேலான நிறைவுக்கும் பாடு படுவதே குழந்தையின் முழு வாழ்க்கை. தன்னை நிறைவாக்கிக்கொள்வதற்குத் தேவையானவைகளைச் செய்வதில் குழந்தை இன்புறுகிறது என்பதை இதிலிருந்து நாம் யூகித்துக்கொள்ளலாம். ஒருவருடைய கடமையைச் செய்வதில் இன்பமும் ஆனந்தமும் பெறுகின்ற முறையில் குழந்தை தன் வாழ்க்கையை நடத்துகிறது. பெரியவர்களுக்குத் தினந்தோறும் செய்யவேண்டிய தங்கள் கடமைகள் மனத்தளர்ச்சி தருவனவாய் இருக்கின்றன.

குழந்தையின் வாழ்க்கைப் போக்கு அதன்நிலைமையை உயர்த்தி மேன்மேலும் விரிவடையச் செய்வதாகும். குழந்தை வயது வளர வளர இன்னும் வலிமை பெற்று நுண்ணறிவிலும் உயர்வடைகிறது. அதன் வேலையும் இயக்கங்களும் இந்த வலிவையும் நுண்ணறிவையும் பெற உதவி புரிகின்றன. ஆனல், பெரியவர்களிடம் வயது வளர வளர இதற்கு நேர் விரோதமான பலனையே காண்கிறோம். மேலும், **குழந்தைப் பருவத்தில் போட்டி இல்லை.** ஏனென்றல், அது உருவாக்கிக் கொண்டிருக்கின்ற மனிதனை வேறு எவராலும் உருவாக்க இயலாது; அதற்காக எவராலும் வளர இயலாது.

குழந்தை பிறப்பதற்கு முன் உள்ள பருவத்தைப்பற்றிச் சிறிது சிந்தித்துப் பார்ப்போம்; அப்பொழுது குழந்தை பெரியவர்களின் தொடர்பைப் பெற்றிருக்கிறது. இந்த இளஞ்சூல் நிலை தாயின் கருப்

பையில் கழிக்கப்படுகிறது. இதற்கு முன் முதல் உயிரணு இருந்தது. பெரியவர் இருவரிடமிருந்து தோன்றிய இரு உயிரணுக்களின் சேர்க்கையால் இந்தக் கரு அணுத்தோன்றிற்று. மனித வாழ்க்கையின் தொடக்கத்துக்குப் போனாலும், வளர்ச்சியில் குழந்தை ஆற்றும் பணியைக் கவனித்தாலும், பெரியவர்களும் அண்மையிலே இருப்பதை நாம் எப்பொழுதும் பார்க்கிறோம்.

குழந்தையின் வாழ்க்கையை இரண்டு முதியோர் பரம்பரைகளை இணைக்கும் ஒரு கோட்டுக்கு ஒப்பிடலாம். குழந்தையின் வாழ்வு உருவாகிறது - உருவாக்கப்படுகிறது.. இது ஒரு முதியோரிடம் தொடங்கி மற்றொரு முதியோரிடம் முடிகிறது. குழந்தை ஒரு குறுகிய தெரு வழியாகப் போவதாகக் கற்பனை செய்துகொள்வோம்; முதியோர்களின் வாழ்க்கையைத் தொட்டுக்கொண்டே போவதாகவும், கற்பனை செய்துகொள்வோம். இதைப்பற்றி ஆராயப் புகுந்தால், புது வெகுமதிகளும் தெளிவும் பெறுகின்றோம்.

## இரண்டு வாழ்வுகள்

எப்பொழுதும் குழந்தை காப்பாற்றப்படும்படி இயற்கை அன்னை கவனித்துக்கொள்கிறாள். குழந்தை அன்பினால் உருவாகிறது. அன்புதான் குழந்தையின் இயற்கையான தொடக்கம். பிறந்த பிறகு தாய் தந்தையரின் அன்பை அது பெறுகிறது. ஆதலால், அது திக்கில்லாமல் பிறப்பதில்லை என்பது வெளியாகின்றது. உலகத்தில் அதற்குக் கிட்டும் முதல் தற்காப்பு இந்தப் பெற்றோர் அன்பே. தாம் பெற்ற குழந்தையிடம் பெற்றோருக்கு அன்பு தோன்றும்படி இயற்கை அன்னை தூண்டுகிறாள். இந்த அன்பு ஏதோ செயற்கை அன்பு அன்று; நியாயம் கற்பித்து அதனால் தோன்றின அன்பும் அன்று. மனிதக் குலத்தை ஒன்றாக இணைக்கவேண்டும் என்று அறிஞர் சிலர் 'சகோதரத்துவம்' என்று பறை சாற்றுகிறார்களே, அதைப்போன்றது அன்று இந்த அன்பு. குழந்தைப் பருவத்தில் காணப்படும் அன்புதான் முதியோர் உலகத்திலும் ஆதிக்கம் பெறவேண்டும். இயற்கையாகவே தியாகத்தைத் தூண்டக்கூடிய அன்பு, ஒருவனுடைய தன் முனைப்பைப் (Ego) பிறருடைய தன் முனைப்புக்குப் படைத்துவிடுதல்; பிறருடைய சேவைக்காகத் தன்னையே உரிமையாக்குதல். இப்படிப்பட்டது இந்த அன்பு. பெற்றோர்கள் அன்பின் அடிப்படையில் தங்களுடைய குழந்தைகளுக்காகத் தங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்துவிடுகின்றார்கள். இந்த அன்பு அவர்களுக்கு இயற்கையானது. இது அவர்களுக்கு இன்பம் அளிக்கிறது; தியாகமாகத் தோன்றுவதில்லை. ''அந்த அபாக்கியசாலியைப் பாருங்கள்; இரண்டு

குழந்தைகளைப் பெற்றிருக்கிறான்!'' என்று எவரும் சொல்லு வதில்லை; அதற்குப் பதிலாக, அவன் பாக்கியசாலி என்றே கருது கின்றனர். குழந்தைகளுக்காகச் செய்யப்படுகின்ற முயற்சிகள் எல்லாம் பெற்றோர்க்கு இன்பம் அளிக்கின்றன. இது பெற்றோர் வாழ்க்கையிலே ஒரு பகுதியாகும். முதியோர் எவை குறிக்கோள் என்று கருதுகின்றனரோ, அவற்றைக் குழந்தை தூண்டிவிடுகிறது. துறவு, தன்னலம் கருதாமை போன்றவை குடும்பத்துக்கு வெளியே பெற இயலாதவை. இவற்றைக் குழந்தை தூண்டிவிடுகிறது. நல்ல பதவியில் உள்ள ஒரு வியாபாரி தனக்குத் தேவையான சொத்தை வாங்கப் போகும்பொழுது தன்னுடன் போட்டி இடுபவரைப் பார்த்து, 'நீங்கள் அதை வைத்துக்கொள்ளுங்கள். நான் உங்களுக்காக விட்டுக் கொடுக்கிறேன்,' என்று சொல்வானா? ஆனால், பட்டினி கிடக்கும் பெற்றோரிடம் உணவு போதிய அளவு இல்லாவிட்டால், அவர்கள் குழந்தைகளைப் பட்டினி போடுவதைத் தடுக்கத் தாங்கள் தங்களிடம் உள்ள ஒரு வாய் உணவையும் உண்ணமாட்டார்கள்.

எனவே, இரண்டு வகையான வாழ்வை நாம் பார்க்கிறோம். இரண்டிலும் முதியோர் தமக்குப் பங்குடைய பேறு பெற்றிருக் கின்றனர். ஒன்று பெற்றோர் என்ற முறையிலும், மற்றொன்று சமூகத்தின் அங்கத்தினர் என்ற முறையிலும் அமைகின்றன. இவ்விரண்டிலும் மேலானது குழந்தைகளின் தொடர்பு பெற்றது. ஏனென்றால், அவற்றுடன் நெருங்கியிருக்கும் பொழுது நம்முடைய உயர்ந்த பண்புகள் வெளியாகின்றன.

இந்த இருவகையான வாழ்வுகள் விலங்குகளிடமும் தெளிவாகக் காணப்படுகின்றன. குட்டிகளுடன் இருக்கும் பொழுது மிகவும் கொடிய விலங்கும் சாலச் சாதுவாகிவிடுகிறது. சிங்கமும் புலியும் தம் குட்டிகளுடன் எவ்வளவு அன்பான சாதுகளாகிவிடுகின்றன! அச்சம் நிறைந்த பெண் மான், தன் ஆணைக்காப்பதற்கு எவ்வளவு கொடிதாகிவிடுகிறது! தம் குட்டிகளின் சூழ்நிலையில் இயற்கையான உணர்வூக்கங்கள் எல்லாம் எதிரிடையாக மாறிவிடுவது எல்லா விலங்குகளுக்கும் பொதுவாகக் காணப்படுகிறது போலும்! சாதாரண வாழ்க்கையில் காணப்படும் தன்மைகள் குட்டியின் உறவுடன் அடியோடு மாறிவிடுகின்றன. மனிதர்களைவிட அஞ்சுகின்ற விலங்குகள் தங்களைக் காத்துக்கொள்கின்ற உணர்வூக்கங்களைப் பெற்றிருக்கின் றன. ஆனால், குட்டிகளைக் காப்பாற்ற வேண்டிய நிலைமை ஏற்படும் பொழுது தற்காப்பு உணர்வூக்கங்கள் மாறித் தாக்குதல் உணர் வூக்கங்களாகிவிடுகின்றன.

பறவைகளும் அப்படியே. அபாயம் வந்த காலத்தில் பறந்து போவதே அவற்றின் இயற்கையான இயல்பு. ஆனால், குஞ்சுகள்

இருக்கும் பொழுது அவற்றைப் பொரித்த கூட்டை விட்டுப் பறந்து போவதில்லை. அவை அசையாமல் இருக்கின்றன; கண்ணுக்கு நன்ருகப் புலனுகும் வெள்ளை முட்டைகளைத் தம் சிறகுகளால் மூடிக் கொள்கின்றன. சில பறவைகள் அடிபட்டவை போலப் பாசாங்கு செய்கின்றன; தம்மைத் துரத்திவத்த நாயின் வாய்க்குத் தம் குஞ்சுகள் சிக்காமல் காப்பாற்றுவதற்கே இந்த வேஷம் போடுகின்றன. குஞ்சுகளை நாய் பார்க்காமல் சென்றுவிடுகிறது. எண்ணற்ற விலங்குகளிடம் இதையே பார்க்கிருேம். இதிலிருந்து இரண்டு வகை இயற்கை உணர்வுகள் இருப்பது தெளிவாகின்றன. ஒன்று, **தற்காப்பு உணர்வூக்கம்**; மற்ருென்று, **குழந்தைகளைக் காக்கும் உணர்வூக்கம்**. ஃபேப்ரே (J. H. Fabre) என்ற பெரிய உயிர்நூல் வல்லுனர் இவற்றுக்குப் பல அற்புதமான எடுத்துக்காட்டுகளைத் தருகிருர். ஒரு **விலங்கினம் அழியாது வாழ்வதற்குக் காரணம் தாய் அன்பு** என்று அவருடைய நூலின் இறுதியில் முடிவு கட்டுகிருர். அவர் கூறுவது உண்மையே. ஏனென்ருல், வாழ்க்கைப் போராட்டத்தில் பெறப்பட்ட உறுப்புகளின் வளர்ச்சியாலேயே ஒரு விலங்கின் இனம் காப்பாற்றப்படுகிறது என்பது உண்மையானுல், அந்த உறுப்புகளே இன்னும் வளராத சிறு குட்டிகள் எப்படித் தம்மைக் காத்துக்கொள்ள முடியும்? புலிக்குட்டிகளுக்கு இன்னும் பல் இல்லை அல்லவா? பறவைக் குஞ்சுகளுக்கு இன்னும் சிறகு முளைக்கவில்லை அல்லவா? வாழ்க்கை நிலையுறுத்தப்பட வேண்டுமானுல், இன்னும் தம்மைக் காத்துக்கொள்ளச் சத்தி அற்றவைகளாய் இருக்கும் குட்டிகளையும் குஞ்சுகளையும் காக்கவேண்டிய அவசியம் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் முதலில் ஏற்படுகிறது.

பலசாலியின் வெற்றியாலே அழியாமையைக் காக்க இயலும் என்ருல், விலங்கினம் கட்டாயம் மறைந்து போகும். வாழ்க்கைப் போரில் வெற்றி பெற்று இனம் வாழ்வதற்கு உண்மையான காரணம் குழந்தைகளிடம் முதியோர் கொண்ட அன்பு ஒன்றே என்று உறுதியாகக் கூறலாம்.

நுண்ணறிவின் அறிகுறியைத் தேடுவது இயற்கை நூலின் அற்புதமான பகுதிகளுள் ஒன்ருகும். மிகவும் தாழ்ந்த விலங்குகளிலும் இதைக் காணலாம். இந்த விலங்குகளுள் ஒவ்வொன்றும் பல விதமான தற்காப்பு உணர்வூக்கங்களைப் பெற்றிருக்கின்றது; மற்றும் ஒவ்வொன்றுக்கும் தனிப்பட்ட நுண்ணறிவும் வழங்கப்பட்டிருக்கிறது. இந்த நுண்ணறிவு பெரும்பாலும் குட்டிகளைக் காப்பாற்றுவதற்கே பயன்படுத்தப்படுகிறது. மேலும், தற்காப்பு உணர்வூக்கங்களில் அவ்வளவு மாறுதல்கள் இல்லை. அவை மிகவும் குறைந்த அளவு நுண்ணறிவையே தொடர்பாகப் பெற்றிருக்கின்றன. அவை அவ்

வளவு நுட்பான வளர்ச்சியைப் பெற்றவைகளும் அல்ல. எனினும், அவற்றைக்கொண்டு ஃபேப்ரே என்பவர் தம்முடைய பதினறு தொகுதிகளடங்கிய நூலில் '**பூச்சிகளில் தாய் தந்தையின் நடத்தை**' என்று வருணித்திருக்கிருர்.

எனவே, வாழ்க்கையின் பல உருவங்களை ஆராயும் பொழுது இரண்டு வகையான உணர்வூக்கங்களின் தேவையைப் பார்க்கிறேம். மனித வாழ்க்கையிலும் இதே கருத்தை உறுதியாக்கிளுேமாளுல், சமூக வாழ்வைப் பொறுத்த மட்டிலாவது குழந்தைகளைப்பற்றி நாம் ஆராய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. ஏனென்ருல், சிறு குழந்தைகள் வயது வந்தவர்களைப் பாதித்து மாற்றுகின்ற நிலையில் இருக்கின்றன. ஆதலால், மனித வாழ்வைச் சரிவர ஆராய வேண்டுமாளுல், மனித வாழ்வின் ஆரம்பத்திலிருந்து நாம் தொடங்க வேண்டும்.

# 5. படைப்பின் அற்புதம்

முதலில் உருவமே இல்லாத ஒன்று ஆணுகவோ பெண்ணுகவோ மாறி, தாணுகவே எண்ணவும், தன் சொந்தக் கருத்துகளைப் பெறவும் செய்கிறது. இந்த அற்புதமான செயலைக் கண்டு ஒவ்வொரு காலத்திலும் பேரறிவாளர் வியந்திருக்கின்றனர்.

இது எவ்வாறு நடைபெறுகிறது? இவ்வளவு அற்புதமான சிக்கல்களை உடைய உறுப்புகள் எல்லாம் எவ்வாறு உருவாகின்றன? கண்களையும், பேசுகின்ற நாக்கையும், மூளையையும் மனிதனை ஆக்கும் எண்ணில்லாத பாகங்களையும் உருவாக்குவது எது? பதினெட்டாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் தோன்றிய விஞ்ஞானிகள் அல்லது தத்துவஞானிகள் ஏதோ ஒன்று முன் கூட்டியே உருவாயிருப்பதாக நம்பினுர்கள். கரு உயிரணுவில் ஆணின் உருவமோ, பெண்ணின் உருவமோ நுண்ணிய வடிவில் இருக்க வேண்டும் என்று எண்ணினுர்கள். காண்பதற்கு அது மிகவும் நுண்மையானது என்பது உண்மையே. எனினும், அவ்வுருவம் கட்டாயம் இருந்தே தீரவேண்டும் என்றும், அது வளர்ந்தே தீரவேண்டும் என்றும் எண்ணினுர்கள். இக்கருத்து எல்லாப் பாலூட்டிகளுக்கும் பொது என்று எண்ணப்பட்டு வந்தது. ஆனுல், இக்கருத்தில் இரு சாரார் வேற்றுமையுடையவராய் இருந்தனர். ஒரு சாரார் **நுண்விலங்குக் கொள்கையர்** (Animalculists) என்றும், மற்றவர் **அண்டக் கொள்கையர்** (Ovists) என்றும் பெயர் பெற்றனர். ஆரம்பத்தில் உருவாய் இருக்கும் ஒன்று மனிதனுடைய கரு மூலத்தில் இருக்கிறதா என்னும் கருத்து வேற்றுமை கொண்டனர். இதை ஒட்டி அறிஞர் பலர் வாதாடினர்.

**டாக்டர் 'உல்ஃப்'** (G. F. Wolff) என்ற வைத்தியர், அப்பொழுதுதான் கண்டுபிடிக்கப்பட்ட சூட்சுமதரிசனியை உபயோகித்தார்; படைப்பின் போக்கில் உண்மையாக நடைபெறுவது என்ன என்பதைத் தாமே கண்டறியத் தீர்மானித்தார். கருத்தரித்த கோழிக் குஞ்சியின் உயிரணுக்களை அவர் தம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டார்; அந்த முயற்சிகளால் அம்மாதிரி ஓர் உருவம்

தொடக்கத்தில் இல்லை என்ற அதிசயமான முடிவுக்கு வந்தார்.[1] ஒன்று தானாகவே உருவாகிக்கொள்கிறது. அதை அவர் கண்ட மாதிரியே வருணித்திருக்கிறார். தொடக்கத்தில் ஒரு கரு உயிரணு இருக்கிறது. இது இரண்டு பகுதிகளாகப் பிரிகின்றது. அவ்



1. படம். உயிரணுக்களின் இனப்பெருக்கம்

விரண்டும் நான்காகப் பிரிகின்றன. இத்தகைய பெருக்கத்தால் புதுப் பேர்வழி உருவாகிறது.

ஏற்கெனவே ஓர் உருவம் இருப்பதாக வாதாடிவந்த பேரறிஞர் சிலர் அவர் மேல் பாய்ந்தனர். "என்ன அறியாமை! என்ன துணிவு! இவையெல்லாம் பரபக்ஷம்! இவை சமயத்தையே வேர் அறுக்கும்!" என்றனர். பாவம்! உல்ஃபின் நிலை மோசம் ஆயிற்று. அவர் அயல் நாட்டுக்கு ஓட வேண்டுவதாயிற்று. **இக்கால உபயோகத்திலுள்ள கரு வளர்ச்சி இயலைத் தோற்றுவித்த தந்தையார் தம் நாடு விட்டு அயல் நாட்டில் வாழ்ந்து இறக்க வேண்டியதாயிற்று.**

சூட்சுமதரிசனிகள் எவ்வளவோ பெருகினபொழுதும் இந்த உண்மையை ஆராய்வதற்கு எந்த விஞ்ஞானியும் சுமார் ஐம்பது வருஷ காலம் முன் வரவில்லை. எனினும், இந்த முன்னோடியின் வற்புறுத்தலால் முன்னேற்றம் அடையவில்லை. மற்றொரு விஞ்ஞானியாரான **கே. ஈ. ஃபான் பேயர்** (K. E. Von Baer) என்பவர் உல்ஃபின் பரிசோதனைகளை மறுபடியும் செய்து பார்த்த பொழுது அவை உண்மை என்பதை நிலை நிறுத்தினார். இதை எல்லாரும் ஒப்புக்கொண்டனர். ஒரு புதிய விஞ்ஞானத்துறை தோன்றலாயிற்று. **'கரு வளர்ச்சி நூல்'** என்பதே அது. அது மிகவும் விநோதமான நூல்.

---

1. Theoria Generationis, by G. F. Wolff.

கரு வளர்ச்சி இயல் என்பது மிகவும் அற்புதமான விஞ்ஞானம் என்பதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. உடற்கூற்றிலக்கணத்தைப் போல அது முதிர்ச்சி அடைந்த ஒருவரின் உறுப்புகளைப் பற்றி ஆய்வ தில்லை. அல்லது உடலியலைப் போல அந்த உறுப்புகள் எவ்வாறு வினை ஆற்றுகின்றன என்றும் ஆய்வதில்லை. அல்லது நோய் நூல் போல நோய்களைப் பற்றியும் ஆய்வதில்லை. ஆனல், இந்தக் கரு வளர்ச்சியியல் படைப்பின் போக்கை வெளியாக்குவதே இதனுடைய முதன்மையான நோக்கம். இதற்கு முன் உருவமே பெற்றிராது, இப் பொழுது பெற்ற உருவம் எவ்வாறு வாழ்க்கை உலகத்தில் தானே உருவெடுக்கிறது என்பதைப் பற்றி இந்நூல் ஆராய்கிறது.

ஒவ்வொரு விலங்கும், பாலூட்டியும்—மிகவும் வியக்கத்தக்க முறையில் தோன்றிய சிவராசியாகிய மனிதன் உட்பட—ஒரு தனி உயிரணுவிலிருந்தே தோன்றியது. தோற்றம் எல்லா உயிரணுக்களுக் கும் முதலில் தோன்றிய உயிரணுவைப் போல வேறுபாடுகளை அடை யாததாயும் வட்டவடிவத்தைப் பெற்றதாயும் இருக்கிறது. இந்தக் கருவைப் படைக்கும் உயிரணுக்கள் அவற்றின் மிகு நுண்மை வடி வத்தால் அற்புதமானவை. மனிதனுடையது மில்லி மீட்டரில் பத்தில் ஒரு பங்கைவிடப் பெரிதாய் இராது. இதன் உருவத்தைத் தெளிவாக் கிக்கொள்ள, கூர்மையான ஒரு பென்சிலைக்கொண்டு ஒரு புள்ளியைக் குறியுங்கள். அதனருகே அத்தகைய பத்துப்புள்ளிகளையும் நெருக்க மாகக் குறியுங்கள். எவ்வளவு நுண்மையாகக் குறித்தாலும், அவை எல்லாமம் ஒரு மில்லி மீட்டர் அளவு இடத்துக்குள் அடங்கா. இதி லிருந்து மனிதனை உருவாக்கும் உயிரணு எவ்வளவு நுண்மையான தென்பது விளங்கும். இது இதை உண்டாக்கியவரை விட்டு விலகி வளர்ச்சி அடைகிறது. இது ஒரு வகையான வித்துறை போன்ற அடைப்புக்குள் காப்பாற்றப்படுகிறது. இதற்கு முன்பு இதைத் தாங்கிக்கொண்டிருந்த முதியவரிடமிருந்து பிரிந்தே இவ்வாறு காப் பாற்றப்பட்டு வருகிறது.

இது எல்லா விலங்கினங்களுக்கும் பொருந்தும். இந்த உயிரணு பெற்றோர் உடம்பிலிருந்து தனியாகப் பிரிந்து தன் முயற்சியால் ஒரு தனிப்பேர்வழியை உண்டாக்குகிறது. சிந்தனைக்கு முடிவு காண இயலாத விஷயமன்றோ இது! மக்களுள் உயர்ந்தோர், எந்தத் துறை யிலானுலும் சரி, ஓர் அலெக்ஸாந்தர், ஒரு நெப்போலியன், ஒரு தாந்தே, ஒரு ஷேக்ஸ்பியர், ஒரு காந்தி எவரானுலும் சரி, தங்களுள் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தவர்களைப் போலவே தாம் ஒவ்வொரு வரும் இந்த வெகு நுண்மையான உயிரணுவாலேதான் ஆக்கப் பட்டனர்.

சத்தி வாய்ந்த சூட்சுமதரிசனி மூலமாக இந்தக் கரு அணுவைப் பார்த்தோமானால், இதில் சில ' கார்பஸ்கில்கள் ' (Corpuscles) என்னும் அணுக்களைப் பெற்றிருப்பது விளங்கும். இவற்றை இரசாயன முறைகளால் நிறம் பெறச் செய்ய இயலுமாதலால், இவற்றுக்குக் ' குரோமோசோம்கள் ' (Chromosomes) என்று பெயரிட்டிருக்கின்றனர். (Chromo-நிறம்)

ஒவ்வோர் இனத்துக்கும் இந்தக் குரோமோசோம் எண்ணிக்கை மாறுபடுகிறது. மனிதக்கரு அணுவில் 48 குரோமோசோம்கள் இருக்கின்றன ; சில விலங்குகளுக்கு 15ம், சிலவற்றுக்கு 13ம் இருக்கின்றன. அந்தந்த இனத்தின் குணத்தை இந்தக் குரோமோசோம் எண்ணிக்கை நிருணயிக்கிறது. வழி வழியாக வரக்கூடிய இயல்புகளெல்லாம் குரோமோசோம்களில் பதிந்து கிடப்பதாக



**2. படம்.**

100 ஜீன்ஸ் கொண்ட கோவை, கோடாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இடப்பக்கத்தில் வடிவக் கணித முறையில் காட்டப்பட்டுள்ள 48 குரோமோசோம்களுள் ஒவ்வொன்றுள்ளும் இவை அனைத்தும் அமைந்துள்ளன.

நம்பப்பட்டு வந்தது. அண்மையில் உயர்ந்த சத்தி பெற்ற சூட்சுமதரிசனிகள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுக்கு ' அல்ட்ரா மைக்ராஸ்கோப்பு ' (Ultra Microscope) என்பது பெயர். இவற்றின் உதவியால் குரோமோசோம்களை உற்று நோக்கினால், ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெட்டி போல இருக்கிறது. இதற்குள் மணிகள் கோவையாகக் கோத்தது போல இருக்கின்றன. ஒவ்வொரு கோவையிலும் சுமார் நூறு சிறுமணிகள் இருப்பது போலத் தோற்றம்

அளிக்கின்றன. குரோமோசோம்கள் பிளக்கின்றன ; உள்ளிருக்கும் சிறுமணிகள் விடுதலை பெறுகின்றன. இப்பொழுது உயிரணுவுக்குள் சுமார் 4000 அணுக்கள் சிதறிக்கிடக்கின்றன. இந்த அணுக் களுக்கு (Corpuscles) ஜீன்ஸ் (genes) என்பது பெயர். ஜீன் என்ற ஆங்கிலப் பதம் பரம்பரை (generation) என்ற கருத்தைக் குறிக்கும். பொதுவாக எல்லாரும், ஒவ்வொரு ஜீனும் ஒவ்வொரு தனிப்பட்ட மரபு நிலையைத்தாங்கி இருக்கலாம் என்பதை ஒப்புக் கொண்டிருக்கின்றனர். எடுத்துக்காட்டாக, மூக்கின் அழகு கேசத்தின் நிறம் முதலியவற்றைக் கூறலாம்.

இந்த உண்மையின் விஞ்ஞானத் தெளிவு சூட்சுமதரிசனியின் உதவியால் மட்டும் ஏற்பட்டுவிடவில்லை. மனிதனது மனமும் கிரியா சத்தி உடையது என்பதை நாம் மறந்துவிடலாகாது. மனமானது தனக்குள் பதிக்கப்படுகின்ற உள்ளப்பதிவுகளை அல்லது உட்பாடுகளை ஏதோ பல போட்டோப் பதிவுகளைப்போல ஏற்றுக்கொள்வதில்லை. ஆனால், இவை கற்பனைச் சத்திக்குத் தூண்டல்கள் ஆகின்றன. என்னென்ன நடக்கிறது என்பதை மனிதன் ஊகிக்கிறான். இது எவ்வாறு நடை பெறுகிறது? மனிதனுடைய நுண்ணறிவினாலும், கற்பனையாலும் புலன்களுக்குள் மறைந்து கிடப்பதை அறிய இயல் கிறது. இத்தகைய மனிதனுடைய மனத்தின் சத்திகளால் எல்லா விஞ்ஞானமும் எல்லாப் புதுமை காண்டலும் தூண்டப் பெற்று நீடிக்கின்றன. மேற்கூறியவற்றைப் பற்றிச் சிந்திப்போமானால், விஞ்ஞானம் எடுத்துக் கூறும் உண்மை விளம்பரங்களில் எவ்வளவு உள்ளுணர்வுக் கொள்கை (Mysticism) நிறைந்திருக்கிறதென் பதை நாம் காணாமல் இருக்க இயலாது. இந்தக் கரு உயிரணு எவ்வளவு நுண்மையானது! கண்களுக்கே தெரியாதது! கடந்த பல்கோடி ஆண்டுகளின் மரபெல்லாம் இந்தக் கரு உயிரணுவுக்குள் ஒன்று சேர்ந்திருக்கிறது. **இந்தச் சின்னஞ்சிறு அணுவுக்குள் மனித இனத்தை ஆக்கியதன் கதையும், மனித குலத்தின் முழு அனுபவமும் புதைந்து கிடக்கின்றன.**

ஆரம்ப உயிரணுவில் உரு மாற்றம் எதுவும் புலப்படுவதற்கு முன்னும், இந்த உயிரணு பல கூறுகளாகப் பிரியத் தொடங்குவதற்கு முன்னும், ஜீன்கள் எல்லாம் ஒன்று கூடித் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கின்றன. அவற்றுக்குள் ஒரு வகையான போராட்டப்போட்டி நடைபெறுகிறது. புதுப் பேர்வழியை உண்டாக்கு வதற்கு ஒரு குறிப்பிட்ட உயிரணுவில் எல்லாப் பகுதியும் பங்கு எடுத்துக்கொள்ள இயலாது. அது இந்தப் போட்டியில் வெற்றி பெற்ற ஜீன்களாலேதான் இயலும். முக்கியச் சிறப்பியல்புகளை இவை தாங்கிச் செல்கின்றன.

மற்றவை மறைந்து கிடக்கின்றன. இவை புதைபண்புகளை எடுத்துச் செல்கின்றன. கரு உயிரணுவின் படைப்புத் தொழிலுக்கு ஆயத்தமாக இந்த அற்புதச் சம்பவம் நடந்து வருகிறது. இதை முதலில் கண்டறிந்தவர் **மெண்டெல்** (Mendel) என்பவர். அவர் இதை ஒரு விஞ்ஞானக் கருதுகோளாக (Scientific Hypothesis) வெளியிட்டார். சிவப்புப் பூவுடைய ஒரு செடியுடன் அதே வகையைச் சேர்ந்த வெள்ளைப் பூவுடைய செடியைச் சேர்த்து உண்டாக்கும் செடியின் குணங்களை அவர் ஆராய்ந்தார். இந்த ஆராய்ச்சி அவருடைய புரட்சிகரமான ஆராய்ச்சி என்றே நிலைத்துவிட்டது. அவர் மேற்கூறப்பட்ட கலப்புச் செடியிலிருந்து தோன்றிய விதைகளை விதைத்தார். அவற்றிலிருந்து சிவப்புப்பூக்கொண்ட மூன்று செடிகளும், வெள்ளைப்பூக் கொண்ட ஒரு செடியும் தோன்றின. நான்கு செடிகளில் ஆளும் சிவப்பு ஜீன்கள் புதையுறு வெள்ளை ஜீன்களை அடக்கிவிட்டன; நான்கு செடிகளுள் மூன்றை இவ்வாறு செய்து விட்டன. எதிரான சிறப்பியல்புகளுக்கிடையே போட்டி ஏற்படும் பொழுது அது **'கணிதத் தொகுத்தல் விதி'**யைக் (Laws of Mathematical Conbination) கட்டாயம் ஒட்டியே இந்த விகிதம் ஏற்படுகிறதென்பதைக் காட்டுவது எளிது.

சாத்தியமான ஜீன்கள் ஒன்று சேரும் வகைகளைக் கணக்கு ஆதாரவிதியை (Mathematical assumptions) அனுசரித்து ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டிருக்கின்றன. இவை மிக மிகச் சிக்கலானவை. எனினும், காணப்படும் முடிவு இது: ஒரு கரு உயிரணுவானது கொடுக்கப்பட்ட நிபந்தனைகளில் ஏறத்தாழ அழகான பேர்வழியாகவோ, அல்லது நிறைந்தோ குறைந்தோ வலிவைப் பெற்றதாகவோ, வளரலாம். ஆனால், இவை எல்லாம் அந்த **ஜீன்களுக்குள் எவை எவை முதலிடம் பெறுகின்றனவோ அவற்றைப் பொறுத்திருக்கின்றன.**

இந்த ஜீன்களின் வெவ்வேறு சேர்க்கைகளின் காரணத்தால் ஒருவரைப் போல மற்றொருவர் இல்லாதிருக்கின்றனர். ஒரு குடும்பத்தில் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளிடையே வெவ்வேறு அழகுகளையும், உடல் வலிமைகளையும், நுண்ணறிவு அடைவுகளையும் (Attainmente) காண்கிறோம்.

எல்லாவற்றிற்கும் மேலான வகை தோன்றுவதற்குத் துணை புரியும் நிலைமைகள் என்னென்ன என்பதை அறியத் தனிப்பட்ட ஆராய்ச்சிகளில் அக்கறை செலுத்தி வருகின்றனர். இதனடியாக **இனமேம்பாட்டியல்** (Eugenics) என்னும் ஒரு புது விஞ்ஞானம் தோன்றியிருக்கிறது.

'ஜீன்களும் அவற்றின் சேர்க்கையும்' என்பது பற்றிய விஞ்ஞான சரித்திரத்தில் இது ஓர் அத்தியாயமான போதிலும், இது பல **புனைவெண்ணங்களுடன்** (Suppositions) சார்பு கொண்டுள்ளது. இந்தச் சேர்க்கை ஏற்பட்ட பிறகு என்ன நடைபெறுகிறது என்னும் ஆராய்ச்சியில் இது ஒரு பங்கும் எடுத்துக்கொள்வதில்லை. உடலைப் படைக்கின்ற உண்மையான உயிர் இயலின் போக்கு இங்கேதான் ஆரம்பிக்கிறது. உயிர் அணு, பல பிரிவுகள் ஆகின்றது. இதைத் தொடர்ந்து பார்ப்பது எளிது; தெளிவு. **உல்ஃப்** (Wolff) என்பவர் முதல் முதலாகச் சூட்சுமதரிசனியின் அடியில் வளரும் கருவை உற்று நோக்கினர்; படிப்படியாக இந்தக் கரு அடைந்த மாறுதல்களை வருணித்தார்.




**3. படம்.**

(மேல் இடப் பக்கம்): பந்து (Morula) ஒரே சுவர் கொண்ட உயிரணுக்கள் (வலம்). கீழ் இடப் பக்கம்): குவியலான, இரட்டைச் சுவருள்ள காஸ்ட்ருலா (gastrula), வலப்பக்கம்: அவைகளுக்கிடையே மூன்ருவது சுவர் தோன்றுகிறது.

ஓர் உயிரணு முதலில் இரு சம பாகங்களாகப் பிரிந்து ஒன்ருேடொன்று இணைந்திருக்கிறது. இவ்விரண்டு நான்காகின்றன; நான்கு எட்டாகவும், எட்டுப் பதினாறுகவும் இப்படியே பெருகிக்கொண்டு போகின்றன. நூற்றுக் கணக்கான உயிரணுக்கள் தோன்றும் வரை

இது ஓயாமல் நடைபெற்று வருகிறது. ஒரு கட்டடம் கட்டுவதற்கு அறிவுடன் செங்கற்களை முன் கூட்டியே சேர்த்து வைப்பதற்கு இது ஒப்பாகும். வரவர இந்த உயிரணுக்கள் மூன்று தனிப்பட்ட அடுக்குகளை அமைத்துக்கொள்கின்றன. செங்கற்கள் சுவர்கள் கட்டுவதற்கு உதவுவது போல இங்கு நடைபெறுகிறது என்று **ஹக்ஸ்லி** (Huxley) என்பவர் ஒப்பிட்டிருக்கிறார். இதற்குப் பின் நடைபெறுவதெல்லாம் எல்லா விலங்குகளுக்கும் பொதுவானது. முதலில் உயிரணுக்கள் எல்லாம் ஒரு ரப்பர்ப் பந்தின் ஓரங்களைப் போன்ற **காலிக்கோள வடிவம்** பெறுகின்றன. பிறகு இந்தக் கோளம் உள்ளே குவிந்து எதிர் எதிராக இரண்டு சுவர்களைப் பெறுகிறது. மற்ற இரண்டு சுவர்களுக்கு இடையில் மூன்றாவது சுவர் ஒன்று புகுத்தப்படுகிறது. இந்த மூன்று சுவர்களை அடிப்படையாகக் கொண்டு இறுதி உருவம் படைக்கப் பெறும்.

இந்த அடுக்குகள் 'முளை இலைகள்' போல்வன. இவை பின் வருமாறுள்ளன. ஒன்று, **புறத்தது**. இதற்குப் **புறத்தோல்** (Ecto-derm) என்பது பெயர். ஒன்று, **இடையில் உள்ளது**. இதற்கு **இடைத்தோல்** (Meso-derm) என்பது பெயர். மூன்றாவது, **அகத்தது**. இது **அகத்தோல்** (Endoderm) என்னும் பெயருடையது. இவை மூன்றும் சேர்ந்து ஒரு குறுகிய நீண்ட உடலைப் பெறுகின்றன. இந்தச் சேர்க்கையில் எல்லா உயிரணுக்களும் ஒரே உருவம் பெற்றுள்ளன. இவை எந்த உயிரணுவிலிருந்து தோன்றினவோ, அதைக் காட்டிலும் சற்று உருவத்தில் குறைந்திருக்கின்றன.

இந்த மூன்று சுவர்களும் தனித்தனியாகச் சிக்கல் நிறைந்த உறுப்புகளைப் படைக்கின்றன. புறத்தோல் அல்லது புறமதில் சருமம் புலனறி உறுப்புகளையும் நரம்பு மண்டலத்தையும் படைக்கிறது. இது எதிர்பார்க்க வேண்டிய உண்மைதானே! ஏனென்றால், இந்த அடுக்கே வெளி உலகத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறது. சருமம் வெளி உலகினின்று காக்கிறது. புலன்களும், நரம்பு மண்டலமும் வெளி உலகத்துடன் இணைக்கின்றன. அகத்தோல் அல்லது அகமதில் உணவூட்டும் உறுப்புகளைப் படைக்கிறது. உதாரணம், இரைப்பை, குடல், ஜீரணக்கிரந்திகள், கல்லீரல், பன்கிரசு (Pancreas), நுரையீரல் போல்வன. மூன்றாவதாக, இடைத்தோல் அல்லது இடைமதில் முழு உடலையும் தசைகளையும் தாங்கக்கூடிய எலும்புக் கூட்டைப் படைக்கிறது. நரம்பு மண்டல சம்பந்தமான உறுப்புகளுக்குத் '**தொடர்புடை உறுப்புகள்**' (Organs of Relationship) என்பது பெயர். ஏனென்றால், அவை வெளி உலகத்துடன் நம் தொடர்பை ஆட்சி புரிகின்றன. செரித்தல் சம்பந்தமான உறுப்புகளும் **சோற்றுடல் உறுப்புகள்** (Vegetative Organs) என்று வழங்கப்படுகின்றன;

ஏனென்ருல், இவை உயிருடையவற்றின் அசைவற்ற பகுதிகளை நடத்தி வைப்பதாலேதான்.

உறுப்புகளுள் ஒவ்வொன்றும் எவ்வாறு வளர்ச்சி பெறுகின்றது என்பதை அண்மையில் நடத்தப்பட்ட ஆராய்ச்சிகள் எடுத்துக்காட்டியிருக்கின்றன. என்ன நடைபெறுகிறதென்ருல், ஒரே மாதிரியாய்




4. படம். உயிரணுக்களின் வகைகள்

உள்ள அடுக்குகளில் சிறு புள்ளிகள் முதலில் தோன்றுகின்றன. திடீரென்று இந்தப் புள்ளிகள் பெரிய உயிர்ப்புச் செயலைக் காட்டுகின்றன. கருக்குழியின் சுவர்களிலிருந்து உயிரணுக்கள் தோன்றுகின்றன ஓர் உறுப்பையோ அல்லது உறுப்பின் சாயலையோ இவை படைக்கத்

தொடங்குகின்றன. இனித் தோன்றவேண்டிய உறுப்பு எதுவானாலும் சரி, மேலே குறிப்பிட்ட முறையே அதன் தொடக்கத்தில் காணப்படுகிறது. வெவ்வேறு உறுப்புகளும் இம்மாதிரியான அதிகப்படியான செயலால் படைக்கப்பட்டனவே. இந்தச் செயல்கள் ஒன்றேடொன்று தொடர்பற்றுத் தனித்தனியாய் இருந்த போதிலும், நடைபெறுவது அதுவே. சிக்காகோப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் **சைல்டு** (Child) என்பவர் இதைக் கண்டுபிடித்தார்; இந்த மையங்களுக்குக் **'கிரேடியென்டுகள்'** (Gradients) என்று பெயரிட்டார்.



ஏறத்தாழ அதே சமயத்தில் இங்கிலாந்தில் மற்றொரு கருவளர்ச்சி இயல் நிபுணர், பேராசிரியர் சைல்டுடன் ஒரு தொடர்பும் இல்லாமல் ஆராய்ச்சி நடத்திவந்தார். அவரும் இதைப்போன்ற உண்மையையே கண்டறிந்தார். ஆனால், அவருடைய ஆராய்ச்சிகள் நரம்பு மண்டல உயிர் அணுக்களைப் பொறுத்தனவாய் இருந்தன. செயல் வேகம் கொண்ட புள்ளிகளுக்கு அவர் **'ஸேங்ளியா'** (Sanglia) என்று பெயரிட்டார்; இவற்றுக்குத் தனிப்பட்ட உணர்ச்சிகள் இருப்பதாகவும் கருதினர்.



ஆரம்பத்தில் எல்லா உயிரணுக்களும் உருவத்தில் ஒரே மாதிரி இருக்கின்றன. உறுப்புகள் தோன்றுவதற்கு முன் இந்த உயிரணுக்கள் தங்களுடைய உருவங்களை மாற்றிக்கொண்டு பிரமாண்டமான வேற்றுமைகளைப் பெறுகின்றன. இந்த உறுப்புகள் என்ன செயல் புரியப்போகின்றனவோ, அவற்றை ஒட்டியே இம்மாறுதல்களும் ஏற்படுகின்றன. **தனித்துறைப் புலமைப்பேறு** (Specialisation) இவ்வாறு நடைபெறுகிறபொழுது எந்தெந்த உறுப்புகளைப் படைக்கின்றனவோ, அவ்வுறுப்புகளுக்குத் தக்க முறையில் அவற்றைப் படைக்கும் உயிரணுக்கள் தம்மில் புது மாற்றங்களைப் பெறுகின்றன. இந்த நுண்மையான தனித்துறைப் புலமைப்பேறு ஒரு தனிப்பட்ட தொழிலுக்காக ஏற்பட்ட போதிலும், அத்தொழில் இன்னும் தொடங்குவதற்கு முன்னதாகவே தோன்றிவிடுகிறது.

நான்காம் படத்தில் இந்த உயிர் அணுக்களின் உருவங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இவற்றைப் பார்த்தால் ஒன்றுக்கொன்றுள்ள பரந்த வேற்றுமைகள் விளங்கும். கல்லீரலின் உயிரணுக்கள் அறுகோண வடிவு பெற்றவை. நடைபாதையில் அகலக் கற்கள் பதிக்கப்பட்டன போல இந்த உயிரணுக்களின் ஓரங்கள் ஒன்றையொன்று தொட்டுக்கொண்டிருக்கும். இவற்றுக்கு இணைக்கும் திசுக்கள் இல்லை. எலும்பு உயிரணுக்களோ என்றால், அவை முட்டை வடிவமாய் இருக்கின்றன. அவை எண்ணிக்கையில் குறைந்தும் ஒன்றேடொன்று நெருங்காமலும் இருக்கின்றன; ஆனால், இலேசான சவ்வு

களால் (Filaments) இணைக்கப்பட்டிருக்கின்றன. எலும்புக்கு முக்கியமாக வேண்டுவன கெட்டியான இணைக்கும் திசுக்களே ஆகும். இவற்றை அந்த உயிரணுக்களே பெருக்குகின்றன. சுவாசக்குழலில் படர்ந்திருக்கும் படலம் நம்மைக் கவரக்கூடியதாய் இருக்கிறது. சிறு சிறு கிண்ணங்கள் பிசின் போன்ற வஸ்துவை ஓயாது கழித்துக் கொண்டே இருக்கின்றன. இவை காற்றில் உள்ள தூசியை இழுத்துக்கொள்கின்றன. இந்தக் கிண்ணம் போன்றவை முக்கோண வடிவ உயிர் அணுக்களுக்கிடையில் சிதறுண்டு கிடக்கின்றன. இவற்றுக்குச் சதா அசைந்துகொண்டிருக்கும் குஞ்சம் போன்ற உரோமங்கள் இருக்கின்றன. இவை சிலேட்டுமப் படலத்தை உடலுக்கு வெளியே உந்திக்கொண்டிருக்கின்றன. சருமத்துக்கு விசேஷமான தட்டையான உயிரணுக்கள் இருக்கின்றன. இவை அடுக்குகளாய் அமைக்கப் பெற்றிருக்கின்றன. வெளி அடுக்கு அழிந்துகொண்டேயிருக்கும். இவற்றுக்கு அடியில் உள்ளவை அழிந்துபோனவைகளுக்குப் பதிலாகத் தோன்றுகின்றன. உடலின் வெளிப்பரப்பை இந்த உயிரணுக்கள் காப்பாற்றுவதைக் காணும் பொழுது இவை தமது நாட்டைக் காக்கத் தம் உயிரையே கொடுக்க ஆயத்தமாயிருக்கும் வீரர்களை நமக்கு நினைவூட்டுகின்றன.

நரம்பு உயிரணுக்கள் மிகவும் விருத்தி அடைந்தவை ; மிகவும் முக்கியமானவையுங்கூட. இவை இருக்கவேண்டிய ஆஞ்ஞாபீடத்தில் இருந்து வருகின்றன. இவற்றின் நீண்ட கொடிகளை நெடுந்தொலைவுக்கு நீட்டிக்கொண்டிருக்கும். இவை ஒரு கண்டத்தையும் மற்றொரு கண்டத்தையும் சேர்க்கும் தந்திக் கம்பிகளை ஒத்திருக்கின்றன.

என்ன ஆச்சரியம் ! இந்த உயிரணுக்களுள் எத்தனை எத்தனை வகைகள் உள்ளன! இவற்றுள் ஒவ்வொன்றும் ஆரம்பத்தில் ஒரேமாதிரி இருந்த உயிரணுக்களிலிருந்தே உற்பத்தியாகியிருக்கின்றது எனினும், எதிர்கால வேலைகளை அனுசரித்து இவற்றுள் ஒவ்வொன்றும் மாற்றம் அடைந்திருக்கின்றது. ஒவ்வொன்றும் இதற்கு முன் செய்யாததைச் செய்யும் வகையில் மாறியிருக்கின்றது. ஒரு முறை இந்த உயிரணுக்கள் மாற்றம் அடைந்தால், அவை மறுபடியும் முன் உருவம் எடுப்பதில்லை. ஒரு கல்லீரலின் உயிரணு ஒரு நரம்பு உயிரணுவாக மாறாது. இந்த உயிரணுக்கள் தத்தம் வேலையைச் செய்வதற்கு வேண்டிய தயாரிப்பைப் பெறவேண்டும் என்று முன்பெல்லாம் நினைத்ததுண்டு. ஆனால், இவை தம் உருவத்தையே மாற்றிக்கொள்கின்றன என்பது தெளிவாக்கப்படுகிறது.

மனித சமூகங்களில் ஏறத்தாழ இதைப் போலவே நடப்பதில்லையா ? உடலில் இருக்கும் உறுப்புகளுக்கு ஒப்பாகச் சில

சிறப்பான இனத்தவரைக் காண்கிறோம். நாகரிகம் அடையாத காலத்தில் ஒவ்வொருவரும் பற்பல தொழில்களைத் தாமே செய்து வந்தனர். ஒருவனே ஒரு கொத்தனாகவோ, தச்சனாகவோ, வைத்தியனாகவோ, வேறு யாராகவோ இருந்திருக்கலாம். சமூகம் வளர வளர, தொழில்கள் தனித்துறைப் புலமைப்பேறு பெற்றுவிடுகின்றன. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான தொழிலைத் தேர்ந்து எடுத்துக் கொள்கின்றனர் ; இவ்வாறு செய்வதால், உளவியல் முறைப்படி வேறு எத்தொழிலுக்கும் தகுதி அற்றவர்களாகிவிடுகின்றனர். ஒரு தொழிலை நடத்துவதென்றால், தொழில் நுட்பத்தை மட்டும் கற்றுக் கொள்வதென்பது பொருளன்று. அந்தத் தொழிலில் கண்ணுங் கருத்துமாய் ஈடுபடும்பொழுது, அது வெற்றிக்கு வேண்டிய உள்ளத்தின் மாறுதல்களை உண்டாக்குகிறது. தொழில் நுட்பத்தைப் பெறுவதைவிடத் தொழிலுக்குத் தேவையான ஆளுமையைப் பெறுவது முக்கியமாகிறது. இது ஒருவருடைய சொந்தக் குறிக்கோளாய் அமைகிறது ; அவருடைய வாழ்க்கையின் இலட்சியம் ஆகிவிடுகிறது.

கருவளர்ச்சியைப்பற்றி மறுபடியும் ஆராய்வோம். ஒவ்வோர் உறுப்பும் தனிப்புலமை பெற்ற உயிரணுக்களால் ஆக்கப்பெற்றிருக்கிறது. அதது செய்ய வேண்டிய தொழில்கள் இருக்கின்றன. மற்ற உறுப்புகளின் தொழிலுக்கும் இதற்கும் வேறுபாடு உண்டு. எனவே, ஒவ்வோர் உறுப்பும் உடலின் முழுமைக்கென்ற பொது நோக்குடன் வாழ்ந்து தன் வேலையைச் செய்து வருகிறது.

வளரும் கருவானது உறுப்புகளை உண்டாக்குவதுடன், அவற்றுக்கு இடையே ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளும் வகையிலும் ஏற்பாடுகளை அமைத்துவிடுகிறது. இது இரண்டு பெரிய மண்டலங்களால் நடைபெறுகிறது. இவை **இரத்தவோட்ட மண்டலமும், நரம்பு மண்டலமும்** ஆகும். இவை இரண்டும் இருப்பனவற்றுள் மிகவும் சிக்கல் வாய்ந்த உறுப்புகளாகும். மேலும், இவை மற்ற உறுப்புகளை இணைப்பதற்கென்றே இருக்கின்றன.

முதலாவது—இரத்தவோட்ட மண்டலம்—ஓர் ஆறு போன்றது. அது உடலின் எல்லாப் பாகங்களுக்கும் பண்டங்களை எடுத்துச் செல்கிறது ; அதனுடன் ‘கலெக்டர்’ போலவும் வசூல் செய்கின்ற பேர்வழி போலவும் நடந்துகொள்கிறது. உண்மையாகப் பார்க்கப்போனால், இரத்தவோட்ட மண்டலமானது போக்கு வரவு சாதன உறுப்பாகி ஒவ்வோர் உயிரணுவுக்கும் உணவுப் பொருளை எடுத்துச் செல்கிறது. இதனுடன் நுரையீரலிலிருந்து பிராணவாயுவையும் எடுத்துக்கொண்டு போய் ஒவ்வோர் உயிரணுவுக்கும் கொடுக்கிறது. நாளமில்லாத சுரப்பிகளால் உண்டாக்கப்படும் சில

பொருள்களையும் இரத்தம் எடுத்துச் செல்கிறது. இவற்றுக்கு 'ஹார் மோன்கள்' (Hormones) என்பது பெயர். இவை உறுப்புகளைப் பாதித்து, அவற்றின் தொழில்களை ஊக்குவித்து, அவற்றை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தி, எல்லாவற்றுக்கும் தேவையான ஒற்றுமையையும் நிலைநாட்டுகின்றன.

ஹார்மோன்கள் உற்பத்தியாகும் இடங்களிலிருந்து தொலைவில் இருக்கும் உறுப்புகளுக்கு இந்த ஹார்மோன்கள் தேவைப்படுகின்றன. இந்த இரத்தவோட்ட மண்டலத்தில் தன் வேலையைச் சாதிப்பதில் ஹார்மோன் என்ன திறமை காட்டுகிறது! ஒவ்வோர் உறுப்பும் ஓர் ஆற்றங்கரையில் இருப்பது போலக் கற்பனை செய்துகொள்ளலாம். இந்த உறுப்புத் தன் வாழ்க்கைக்கு வேண்டியவற்றையெல்லாம் இந்த ஆற்றிலிருந்து பெற்றுக்கொள்கிறது. பிறகு தன் பொருளை அந்த ஆற்றில் கலக்கிவிடுகிறது. இந்தப் பொருள்கள் வேறு இடத்தில் உள்ள உறுப்புகளுக்குத் தேவைப்படுகின்றன.

உடலின் முழு இயக்கங்களையும் ஒன்றுபடுத்துகின்ற பெரிய அமைப்பு நரம்பு மண்டலம் ஆகும். இந்த மண்டலந்தான் எல்லாவற்றையும் நடத்திவைக்கிறது; மூளையில் ஒரு வகையான இயக்குநவற்றின் குழுவை (Directorate) அமைத்திருக்கிறது. இது ஒரு வகையான **கட்டுப்பட்ட அறை** (Control Room) எனக் கருதலாம். இங்கிருந்து உடலின் ஒவ்வொரு பகுதிக்கும் ஆஞ்ஞை எடுத்துச் செல்லப்படுகிறது.

மனித சமூகத்தின் வாழ்க்கையிலுங்கூட ஒரு வகையான சுழற்சி முறை வளர்ந்திருக்கிறது. பல நாட்டு மக்களால் ஆக்கப்பட்ட பண்டங்கள் பல இடங்களுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன. ஒவ்வொன்றும் அதனதன் வாழ்க்கைக்குத் தேவையான பண்டத்தை அதிலிருந்து எடுத்துக்கொள்கின்றது. வியாபாரம் என்கின்ற அந்த ஆறு, மற்றவர்களுக்கும் பிற நாடுகளுக்கும் கிடைக்கும்படி செய்து வருகிறது. வியாபாரிகளும் ஊரூராகத் திரிந்து விற்கும் வியாபாரிகளும் இரத்தத்தில் உள்ள சிவப்பணுக்களுக்கு ஒப்பானவர்களேயல்லவா! மாபெருமனித சமுதாயத்தில் எங்கோ உற்பத்தியாகும் ஒரு பண்டம், அடிக்கடி வேறு எங்கோ உபயோகிக்கப்படுவதை நாம் பார்க்கிறோம் அல்லவா?

ஹார்மோன்கள் செய்யும் வேலைக்கு ஒப்பாகச் சில ஏற்பாடுகள் அண்மையில் வளர்ந்து வருவதையும் நாம் பார்க்கலாம்.

பெரிய பெரிய நாடுகள் சூழ்நிலையைப் பற்றித் திட்டம் வகுக்கின்றன; வியாபாரத்தைக் கட்டுப்படுத்துகின்றன; ஊக்கம் அளிக்

கின்றன ; எல்லா நாடுகளும் செய்துவரும் முயற்சிகளைச் சீராக அமைக்கின்றன. இத்தனையும் எதற்கு ? எல்லாருடைய நன்மைக் காகவும், நிறைந்த ஒற்றுமையைப் பெறுவதற்காகவுமாம். இந்த முயற்சிகளில் சில குறைபாடுகள் தோன்றியிருக்கின்றன. இவை எதைக் குறிக்கின்றன ? சமூகத்தில் பண்டங்கள் சுற்றேட்ட முறைக் காகத் தொடக்கத்தில் வளர்ச்சிகளில் குறைபாடு இருக்கிறது என்பதைத் தெரிவிக்கின்றன. இந்தச் சுற்றேட்டம் ஏதோ ஆரம்ப மாகியிருக்கிறதே ஒழிய, இன்னும் நிறைவுக்கு எவ்வளவோ பாடு படவேண்டியிருக்கிறது.

நரம்பு மண்டலத்திற் காணப்படும் தனித்துறைப்புலமை பெற்ற உயிரணுக்களுக்கு ஒப்பாக மனித சமுதாயத்தில் ஒன்றுமே இல்லை என்பது மிகையாகாது. இப்பொழுது உலகத்தில் பார்ப்பது குழப்பமே. உலகம் தன் தொழிலை நிறைவேற்றுவதற்குத் தேவையானவை என்ன என்பது இன்னும் உருவாகவில்லை என்பது விளங்குகிறது. அது இல்லாத குறைக்கு ஈடாக மனித சமுதாயம் முழுமைக்கும் வழிகாட்டியாகி ஒற்றுமைப்படுத்தும் ஏற்பாடு ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. நாகரிகத்தின் உயர்ந்த முறை அரசு என்பது, மக்கள் ஆட்சி (Democracy) எனக் கருதப்படுகிறது. இதனால், ஒவ்வொரு வருக்கும் தேர்தல் உரிமை (வாக்குரிமை) கிடைக்கிறது. அதைப் பயன்படுத்தி அரசியல் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கலாம். இந்த முறை கருவளர்ச்சியில் நடைபெற்றதென்றால் அதைப்போல முட்டாள் தனமானது வேறொன்றும் இருக்க இயலாது. ஒவ்வோர் உயிரணுவும் தனித்துறைப்புலமை பெற வேண்டுவதாய் இருந்தால், எல்லாத் தொழிலையும் ஆண்டு நடத்தக்கூடிய உயிரணுவானது, இன்னும் உயர்ந்த தனித்துறைப்புலமை பெற்றிருக்க வேண்டும். ஆட்சி புரிவ தென்பது எல்லாத் தொழில்களிலும் மிகவும் கடினமானது. வேறெதை யும்விட இதற்குத் தனித்துறைப்புலமை வேண்டியிருக்கிறது. ஆதலால், இங்கே தேர்தல் என்ற பேச்சே இல்லை. வேலைக்குத் தேவையான முறையில் பழக்கப்படுவதே இங்கு நடைபெறுகிறது. குறிப்பிட்ட ஒரு தொழிலுக்குத் தகுதி பெருதவனால், ஒரு தலைவனுகவோ பிறருக்கு வழி காட்டியாகவோ இருத்தல் இயலாது. **தொழிலையும் தனித் துறைப்புலமையையும் இணைக்கின்ற இந்தக் கொள்கையை நாம் நன்கு சிந்தித்து ஆராயவேண்டியிருக்கிறது.** இயற்கை அன்னை கையாண்டு வரும் முறையாதல் பற்றி இதை நாம் இன்னம் அக்கறையுடன் சிந்திக்கவேண்டியிருக்கிறது. இயற்கை அன்னை இதே முறையைத் தன்னுடைய எல்லாத் தொழில்களிலும் பின் பற்றி வருகிருள்.

எனவே, கரு வளர்ச்சி நூல் நமக்கு வழி காட்டலாம். அது நம்மை ஊக்குவிக்கும் ஊற்ருகிறது. **ஜூலியன் ஹக்ஸ்லி** (Julian Huxley) என்பவர் கருவின் அற்புதங்களைக் கீழ் வரும் வகையில் வருணிக்கிருர்:

**ஒன்றுமில்லாததில் தொடங்கி, முழுமையும் வளர்ந்த ஒரு தனியாளின் சிக்கல்களைப் பெற்ற உடலாக மாறுவது வாழ்க்கையில் காணப்படும் அற்புதங்களுள் ஒன்ருகும்.** இந்த அற்புதத்தின் **பெருமை நம்மை வியக்கச் செய்யவில்லை என்ருல், அதற்கு ஒரே காரணம் இருக்கவேண்டும். அது என்னவென்ருல், நம் கண் முன் தினசரி வாழ்வில் அடிக்கடி நடைபெறுவதாம்.**

நாம் எந்த விலங்கைப்பற்றி ஆராய்ச்சி செய்தாலும் சரி—பறவையோ, முயலோ, எந்த முதுகெலும்பு உள்ள விலங்காலுலும் சரி—ஒவ்வொன்றுக்கும் நிறைந்த சிக்கல்கள் கொண்ட உறுப்புகள் இருக்கின்றன. இவ்வளவு சிக்கல்கள் நிறைந்தவையானுலும், ஒன்ரேடொன்று சம்பந்தப்பட்டவையாயிருப்பது பின்னும் விந்தையாய் இருக்கிறது! இரத்தவோட்ட மண்டலத்தைப்பற்றி நாம் சிந்திக்கும் பொழுது இது ஒரு வகையான நீரோட்டமாயும், நுண்மையானதாயும், பல சிக்கல்களைப் பெற்றதாயும் இருப்பது விளங்கும். மிகவும் நாகரிகம் அடைந்த மனிதன் எவனுலும் இத்தகைய அமைப்பைத் தோற்றுவிக்க இயலாது என்பது விளங்கும். **எண்ணத்துக்குக் கருவியாகிய மனமும் வெளியுலகத்தின் பதிவுகளை ஐம்புலன்களால் சேகரித்துக் கொள்கிறது.** இந்த மனத்தின் அற்புதமான அமைப்புக்கு ஈடாக இக்கால இயந்திரம் எதுவும் சிறிதளவும் தகாது. கண்ணில் அல்லது காதில் மறைந்து கிடக்கும் அமைப்புகளுக்கு நாம் படைத்த எந்த இயந்திரமாவது இணையாக இயலுமா? நமது உடலில் நடைபெறும் இரசாயன மாறுதல்களை நோக்கும்பொழுது நம் உடம்பில் பல ஆய்வுச் சாலைகள் தமக்கு வேண்டிய துணைக் கருவிகளைப் பெற்றவை போலப் பல பொருள்களைப் படைத்து, அவற்றில் கலந்துள்ள தனித்தனி பொருள்களை ஒன்ருய் இணைத்து வைப்பதைப் பார்க்கும்பொழுது, நம்முடைய சிறந்த தொழில் நுட்பங்களெல்லாம் இவன்றின் முன் தலை வணங்க வேண்டுவனவேயாம்.

நரம்பு மண்டல அமைப்பில் செய்திகள் பரவும் அமைப்புடன் நாம் வெற்றிகரமாகப் பெற்ற சாதனைகளாகிய தொலைபேசி, ரேடியோ, டெலிவிஷன், தந்தியில்லாச் செய்தி உள்ளிட்டவற்றை ஒப்பிட்டால், இவை மிகவும் விகாரமாகவும், தகுதியற்றவையாகவும் காட்சி அளிக்கும்.

உலகத்தில் மிகத் திறமையாகத் தேர்ச்சி பெற்ற படையினரைப் பார்த்தால், அவர்கள் தசைகளிற் காணப்படும் கீழ்ப்படிதலைப்போலக் கீழ்ப்படிதலைக் காட்டமாட்டார்கள். தசைகள் எல்லாம் ஒரு தனிச் சேனாதிபதியின் ஆஞ்ஞைக்கு உடனே கீழ்ப்படிந்து நடக்கின்றன. தசைகள் எளிதில் கற்பிக்கப்படும் வேலையாள்கள் போன்றவை ; எப் பொழுதும் ஆயத்தமாய் இருக்கும் ஒரு திறமையைப் பழகிப்பழகிப் பெற்றிருக்கின்றன. அவற்றுக்கு இடப்படும் எந்த ஆஞ்ஞையையும் அவை உடனே நிறைவேற்றிவிடுகின்றன. இந்தச் சிக்கலான உறுப்பு கள், ஒன்றோடொன்று செய்து இணைக்கும் உறுப்புகள், இந்தத் தசை கள், உடம்பின் ஒவ்வொரு நுண்மையான உயிரணுவுடனும் இணைக்கின்ற நரம்புகள் ஆகிய இத்தனையும் ஒரு சிறு உயிரணுவிலிருந்து வந்தவை யல்லவா ! ஆதியில் தோன்றிய வட்டமான கரு உயிரணுவிலிருந்து தோன்றினவையல்லவா என்று நாம் சிந்திக்கும் பொழுது இயற்கை அன்னையின் மகிமையும் அற்புதத்தின் பெருமையும் நம்மை மெய்மறக்கச் செய்கின்றன.

# 6. கரு வளர்ச்சி இயலும் நடத்தையும்.

கரு வளர்ச்சியைப் பற்றி நாம் இதுவரை ஆராய்ந்த ஒவ்வொரு பகுதியும் மனிதன் உட்பட எல்லா உயிர் விலங்குகளுக்கும் பொருந்தும். கீழான விலங்குகளின் கரு வளர்ச்சி முற்றிலும் நிறைவேறுவதில்லை என்பதைத் தவிர, மற்ற விஷயங்களில் வேற்றுமை எதுவும் இல்லை. கரு வளர்ச்சியின் முந்தின பருவங்களிலேயே அந்தத் தாழ்ந்த மிருகங்களில் வளர்ச்சி தடைபட்டு நின்றுவிடுகிறது.

எடுத்துக்காட்டாக '**வால்வாக்ஸ்**' (Volvox) என்னும் நீர் வாழ்பிராணி கோள வடிவத்துடனேயே தன் வளர்ச்சியை நிறுத்திக் கொண்டுவிட்டது. இது காலியான ஒரு சிறு பந்து போலக் கடல் நீரில் உருண்டுகொண்டிருக்கிறது.

இதன் வெளிப்பகுதி ஒரே அடுக்குக்கொண்டது. இது உயிரணுக்களால் அமைந்தது. இவற்றின்மேல் நுண்மையான உரோமம் போன்றவை படர்ந்திருக்கின்றன. இந்த உரோமம் அசைந்துகொண்டேயிருப்பதால், இந்த 'வால்வாக்ஸ்' ஓரிடமிருந்து மற்றோரிடம் இயங்க வல்லதாயிருக்கிறது.

**கோலென்டரேட்ட** (Coelenterates) என்ற விலங்கினம் (பவழமும், ஜெல்லிமீன் போன்றவையும்) இரண்டாவது வகைக்கு எடுத்துக்காட்டு ஆகிறது. இவற்றின் கருவில் இரு சுவர்கள் அடங்கியிருக்கின்றன. இந்தக் காலிக்கோளமானது உட்குவிந்திருக்கிறது. இரு வரிசைகளைக்கொண்ட உயிரணுக்கள் வெளித்தோல் உள்தோல் என்னும் இரண்டையும் ஆக்குகின்றன. இதற்கடுத்தது மூன்று அடுக்குகளைப் பெற்ற கருவாகும். மூன்று அடுக்குகளைப்பெற்ற பிறகு வரக்கூடிய மாறுதல்கள் எல்லாம் பல இனங்களிலும் ஒரே மாதிரி இருக்கும். ஆதலால், ஒரு விலங்கின் கருவைக் கண்டு மற்றொன்றின் கருவென எளிதில் ஏமாந்துபோக நேரும். 5-ஆம் படம் இதைத் தெளிவாக்குகிறது.

பல விலங்கினங்களிலிருந்து எவ்வாறு சீவராசிகள் முன்னேறி யிருக்கின்றன என்பதற்கு இவை தெளிவான சான்றுகளை நிலை நாட்டுகின்றன. மனிதன் வாலில்லாக் குரங்கிலிருந்து தோன்றினன் என்பது கருதப்பட்டு வந்தது. பாலூட்டிகளும் பறவைகளும் பல்லி இனத்திலிருந்து வந்ததாகவும், பல்லி இனம் **நில நீர் வாழ்** மிருகங் களிலிருந்து[1] தோன்றினவென்றும், தவளை, முதலை, ஆமை போன்ற நில நீர் வாழ்வன, மீன்களிலிருந்து தோன்றினவென்றும், அப்படியே அதற்குக் கீழான விலங்குகள் இன்னம் எளிய உடலமைப்புக் கொண் டவைகளிலிருந்து வந்தனவென்றும், இறுதியில் ஒரே உயிரணுக் கொண்ட சீவராசிகள் இருந்தனவென்றும் நம்பப்பட்டு வந்தது. **வழிவருதல்** (Process of inheritance) ஒவ்வொரு கருவும் அதற்கு முன் தோன்றிய விலங்குகளின் கருவைப் போல உருவெடுக்க வேண்டியிருக்கிறது. இந்தக் கருவில் மற்றவற்றின் கருக்கள் ஒரு வகையில் அடங்கியிருத்தல் போல அந்த விலங்கினத்தின் பரிணமம் முழுமையும் நடந்து காட்டியது; இதற்குப் **'புனராக்கக் கொள்கை'** (Recapitulation Theory) என்பது பெயர். தனியாள் வளர்ச்சி (Ontogenesis) இனத்தின் வளர்ச்சியை (Phylogenesis) மறுபடியும் உருவாக்கிக் காட்டிற்று.

இக்காரணம் பற்றிக் கருவளர்ச்சியியல் டார்வின் தத்துவத்தில் இணைக்கப்பட்டது. இந்தத் தத்துவத்துக்கு இது முக்கியச் சான்றாய் இருந்து வந்தது. ஆனால், 'டி வ்ரிஸ்' (De Vries) என்பவர் சில உண்மைகளைக் கண்டுபிடித்த பிறகு சீவராசிகளுக்கு விளக்கம் தர வேண்டுமானால், கரு வளர்ச்சியியல் இன்னும் பரந்த நோக்கத்துடன் இயங்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

பல வகைச்செடிகள் ஒரே வகைச்செடியிலிருந்து தோன்றுவதை டி விரிஸ் கண்டு பிடித்தார். இதற்கு அவர் **திடீர் மாறுதல் கொள்கை** (Mutation Theory) என்று பெயரிட்டார். இவை இவ்வாறு தோன்று வதற்கு வெளி உலகத்திலிருந்து ஒரு விதத் தூண்டுதலும் இவற்றின் மூலம் பிரயோகிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இதைக் கண்ட பொதுமக்கள், வேற்றுமைப்புகள் தாமாகவே தோன்றிவிட்டன என்று பேச ஆரம்பித்தார்கள். இவை தோன்றுவதற்குத் தகுந்த காரணங்கள் சூழ்நிலையில் காணப்படாவிடில், அவை கருவில் அந்தரங்கத்தில் நடை பெறும் இயக்கங்களிலேதான் இருக்க இயலும். ஏனென்றால், அங்கே தான் வேகமான பரிணமம் நடைபெறக்கூடும்.

டார்வின் கொள்கைப்படி நடைபெற்ற முன்னேற்றங்கள் மிகவும் மெதுவாக நடைபெற்றவை ஆகும். இவையல்லாமல், வேறு வகை

---

1. Amphibians

களிலும் மாறுதல்களைப் பெற இயலும் என்ற புதுக்கருத்துகளும் தோன்றலாயின. டார்வின் கொள்கைப்படி நிறைவேறப் பல கோடி வருஷங்கள் தேவைப்பட்டன. இதனால் சிந்தனையாளர்கள் கட்டுப் பாடில்லாமல் வேறு உள்ளுணர்வுகளைக் (Intutions) கையாண்டு இன்னும் புதுச்சிக்கல்களையும் வரவேற்க முன் வந்தார்கள்.

கருவின் வளர்ச்சியைச் சூட்சுமதரிசனி நன்றாக எடுத்துக் காட்டு கிறது. அது காட்டுவனவெல்லாம் இயங்கும் உறுப்புகளைப் பற்றிய வையே. உயிரினங்கள், ஏதோ ஒரு பொது நோக்குடன் பல உறுப்புகள் ஒன்றுகூடி இருக்கின்றன என்று மட்டும் கருதிவிடக் கூடாது. உயர்ந்த விலங்குகளில் உண்மையான அற்புதம் என்ன வென்றால், வளர்ச்சிப்போக்கு ஒரே மாதிரி இருந்த போதிலும், ஒன்று பல்லியாகவும், மற்றொன்று பறவையாகவும், இன்னொன்று பாலூட்டி யாகவும் அல்லது மனிதனாகவும் மாறுவதேயாகும்.

இந்த விலங்குகளினிடையிலே தோன்றும் முக்கிய வேற்றுமை, இவற்றின் உறுப்புகள், உடல், பற்கள் ஆகியவை இறுதியில் என்ன மாறுதல்களைப் பெறுகின்றனவோ, அவற்றை ஒட்டி இருக்கிறது. இந்த இறுதி உருவத்துக்கும், கருவில் முன் தோன்றிய உருவத்துக் கும் ஒரு தொடர்பும் இல்லை. இவை வாழ்கின்ற சூழ்நிலையில் எவ்வாறு நடந்துகொள்கின்றனவோ, அதை ஒட்டியே வேற்றுமைகள் தோன்று கின்றன.

இதைக் கவனிக்கும் பொழுது இயற்கையில் படைப்புத் திட்டம் என்பது ஒன்றேதான் என்று கருதச் செய்கிறது. இது ஒரே வகை யான கட்டடம் மனிதனது கைத்திறமையில் காண்பதைப் போல்வது தான். எளிய கட்டடமானாலும், மாளிகையானாலும், ஆரம்பத்தில் கற்களையும் செங்கற்களையும் சேகரிப்பதில் தொடங்குகிறது. பிறகு இந்தக் கற்களை உபயோகித்துச் சுவர்கள் கட்டப்படுகின்றன. உருவத் திலும் அழகிலும் நம்முடைய கட்டடங்களில் வேற்றுமையை உண் டாக்குவன எவை? அவற்றைக் கட்டுவிக்கும் கல், மண், மரம் என் பவை அல்ல. அவையவை எந்தெந்த வேலைக்கு என்று உருவாக் கப்படுவதாலேயேதான் உருவத்தில் வேற்றுமை காண்கிறோம்.

வெறுந்தர்க்க அளவோடு நின்றுவிடாமல் கரு வளர்ச்சி நூல் முன் னேறியிருக்கிறது. இதுவே மிகவும் முக்கியமான விஷயம். இது புதுக்கருத்துகளுக்கு வழிகாட்டுவதோடு நின்றுவிடவில்லை; ஆராய்ச்சி மூலம் கண்டுபிடிக்கக் கூடிய ஒரு துறையையும் தோற்றுவித்திருக் கிறது. இதை அனுசரித்து வேண்டும் அளவுக்கு முன்னேறிய விஞ் ஞானத்தை நடைமுறையில் செயலாற்றும்படி தோன்றியிருக்கிறது.

கருவைப் பாதிக்கும் அளவுக்குச் சில ஆட்சி முறைகளை அதன் மேல் பிரயோகித்தோமானல், கருவின் வளர்ச்சியில் மாறுதல்கள் ஏற்படலாம். அப்படி என்ருல், **கருவின்மேல் பிரயோகிக்கின்ற சத்திகளால் வாழ்க்கையின் போக்கையே மனிதனுல் மாற்றிவிட இயலும்** என்பது புலனுகின்றது. இது இப்பொழுதே நடைபெற்று வருகிறது.

ஜீன்களையும் அவற்றின் கலப்புகளையும் பயன்படுத்திச் செடி கொடிகளின் மரபு நிலையை மாற்றலாம். அப்படியே விலங்குகளிலும் முதல் தரமான பயன்களைப் பெறும்படி செய்யலாம். பரந்ததும், பல வகை அக்கறைகளைத் தூண்டிவிடக் கூடியதுமான ஒரு புதுத்துறை தோன்றியிருக்கிறது. இது வெற்று ஏட்டுக் கல்வி மட்டும் அன்று; நடைமுறையில் பயன் அளிக்கக் கூடியதுமாகும். இது இப்பொழுது தோன்றியிருக்கிறது. கருவானது அதன் முழு உறுப்புகளை இன்னும் உருவாக்கிக்கொள்ளாதிருப்பது ஒரு முக்கியமான விஷயம். ஆதலால், சுலபமாக அவற்றை மாற்றிவிட இயலும். இந்த இரகசியத்தை மனிதன் இப்போது தெரிந்துகொண்டிருக்கிருன்.

சில ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவில் கரு வளர்ச்சித் துறையில் முதல் **'பேட்டென்டு'** (Patent) ஒன்று அளிக்கப்பட்டது. கொடுக்கு இல்லாத ஒரு புது வகைத் தேனிக்கள் படைக்கப்பட்டன. சாதாரணத் தேனிக்களைவிட இவை அதிகமான அளவு தேன் சேகரிக்கும் திறமை பெற்றிருந்தன. இதைப்போலப் பல வகையான செடிகளும் அதிகமான பழங்களை உண்டாக்கும் திறமையைப் பெற்றன. முன் இல்லாத தண்டுகளை உண்டாக்கியிருக்கின்றனர். நிறைந்த உணவுச் சத்தைப்பெற்ற கிழங்குகளைச் சிலர் தோற்றுவித்திருக்கின்றனர். வேறு சில செடிகள், நிறைந்த உணவைப் பெற்று வந்து, இது வரை தம்மிடம் இருந்து வந்த நச்சுத்தன்மையை அடியோடு இழந்துவிட்டன.

மனிதன் நல்ல மரங்களை உண்டாக்குவதில் உயர்ந்த வெற்றிகளைப் பெற்றிருப்பதைக் காணலாம். மனிதன் குறுக்கிடுவது என்பது, வரண்ட தரைக்கு அப்பாலும், தண்ணீருக்கு அடியில் வாழும் செடிகளிடத்திலும், விலங்கினங்களிடத்திலும் நடைபெற்று வருகிறது. இதைப்பற்றிப் பொதுமக்களுக்கு அவ்வளவாகத் தெரியாது. எனவே, மனிதன் தன் நுண்ணறிவைப் பயன்படுத்தி, பூமியின் அழகையும் வளத்தையும் மேம்படுத்தியிருக்கிருன் என்பது தெளிவு. உயிர் நூல் வல்லுநர்கள் ஆராய்வதுபோல நாமும் உயிர் வாழ்வன எல்லாவற்றையும் ஆராய்ந்து அவற்றின் பல்வேறு உருவங்கள் ஒன்றையொன்று பாதித்துக்கொள்வதையும், அவற்றின் பலனையும் கவனித்தோமானல்,

மனிதன் பூமியின்மேல் தோன்றிய நோக்கங்களுள் ஒன்று வெளியாகிறது. அது என்ன? **அண்டத்தின் பிரமாண்ட சத்தியாக மனிதனே திகழ்வதை நாம் உணர்ந்துகொள்கிறோம்.**

மனிதன் தன் அறிவின் முதிர்ச்சியால் படைப்பைத் தொடர்ந்து நடத்தி வருவதற்கென்று அனுப்பப்பட்டவனாகக் காட்சி அளிக்கிறான். மனிதன் தன் சத்தியைப் பயன்படுத்திப் படைப்பின் வேகத்தையும் ஒழுங்கையும் முன்னேறச் செய்கிறான் என்று **ஹக்ஸ்லி** என்பவர் கூறுகிறார்.

எனவே, கரு வளர்ச்சி இயலைப்பற்றிக் கற்பதெல்லாம் இனி அருவ நிலை பெற்றதாகவோ, பயனற்றதாகவோ கருதுவதற்கில்லை.

மனத்தின் வளர்ச்சியும் இத்தகைய வழிகளைப் பின்பற்றுவதாக நாம் கற்பனைக் கண்களால் நோக்குகிறோம். ஆனால், "இப்பொழுது உயிர் வாழ்வனவற்றில் புதுமையான உயர்ந்த வகைகளைப் படைக்க வல்லவனாய் இருந்து வரும் பொழுது, அவனே மனிதனுடைய மன வளர்ச்சியை ஆக்கிக் கட்டுப்படுத்தவும் வல்லவனாய் இருக்கக் கூடுமல்லவா?" என்று நமக்குத் தோன்றுவது இயற்கைதானே?

**உடல் வளர்ச்சியும் மனவளர்ச்சியும் இரண்டும் இயற்கை அன்னையின் படைப்புத் திட்டத்தை ஒட்டியே இருக்கின்றன.** உடலின் ஆரம்பம், வளர்ச்சி ஏதும் பெறாத ஒரு தனி உயிரணுவாகும். மற்ற உயிரணுக்களைவிட இந்தக் கரு அணு எவ்விதத்திலும் வேறுபட்டதாகத் தோற்றமளிப்பதில்லை. அம்மாதிரியே மனிதனுடைய மனமும் ஒன்றுமில்லாததிலிருந்து தொடங்குகிறது; ஒன்றுமில்லாதது போலத் தோற்றம் அளிப்பதிலிருந்து ஆரம்பிக்கிறதென்று கருதலாம்.

கரு உயிரணுவின் ஆரம்பத்தில் முழு மனிதன் தோன்றிவிடுவதில்லை. அதே போலப் பிறந்த குழந்தையிடம் மனத்தின் ஆளுமை எதுவும் தோன்றுவதில்லை. மன அளவில் நமக்கு முதலில் குழந்தையிடமிருந்து காட்சி அளிப்பது என்னவென்றால், சில பொருள்கள் சேகரிக்கப்பட்டுள்ளதே. உடல் வளர்ச்சியில் உயிரணுக்கள் ஒன்று பலவானதை நாம் பார்த்தோமல்லவா? அதற்கு இதை ஒப்பிடலாம். இந்த நிலையில் அவ்வாறு செய்வதை 'உட்கவரும் மனம்' என்று நான் குறிப்பிடுகிறேன். உணர்ச்சிப் புள்ளிகள் வரிசைக் கிரமமாகத் தோன்றுகின்றன. இவற்றைச் சுற்றிலும் உளவியல் உறுப்புகள் தோன்றுகின்றன. இவைகள் தீவிரமான வேகத்துடன் வேலை செய்கின்றன. முதிர்ச்சி அடைந்தவர்களால் இவற்றை எவ்வாறு இருந்தனவென்று நினைவுபடுத்திக்கொள்ள இயலாது.

குழந்தை எவ்வாறு மொழியில் வெற்றி பெறுகிறது என்பதை ஒருவாறு குறிப்பிட்டிருக்கிறோம். இந்த உணர்ச்சிகள் உருவாக்குவது மனம் அன்று; ஆனால், மனத்தின் உறுப்புகள். இங்கும் ஒவ்வோர் உறுப்பும் மற்றதுடன் தொடர்பு இல்லாமலே வளர்கிறது. எடுத்துக் காட்டாக, மொழி ஒரு பக்கம் வளர்ச்சி அடைந்துகொண்டே வரு கிறது. அதே சமயத்தில் தொலைவை மதிப்பிடுவதும், தன்னைச் சுற்றிலும் வழிதவறிவிடாதிருக்கும் திறமையைப் பெறுவதும், ஆகிய திறமைகள் வெற்றி பெற்று வருகின்றன. அதே போல இரண்டு பாதங்களை ஊன்றிச் சமநிலை பெறுவதும், மற்ற ஒருமைப்பாடுகளும் திறமை பெற்று வருகின்றன.

இந்தச் சத்திகளுள் ஒவ்வொன்றுக்கும் அதனதனுடைய தனி அக்கறை இருந்து வருகிறது. இந்த வகையான உணர்ச்சிகள் மிகவும் உயிர்ப்புடையவை; இவற்றைப் பெற்றுள்ள பேர்வழியைத் தொடர்ந்து சில செயல்களைச் செய்விக்கின்றன. இந்த உணர்ச்சி களுள் எதுவும் வளர்ச்சிப் பருவம் முழுமையிலும் இருந்து வருவதில்லை. உள உறுப்புத் தோன்றும் வரை ஒவ்வொரு சத்தியும் நிலைத்திருக் கிறது. அந்த உறுப்புத் தோன்றியவுடன் உணர்ச்சியும் மறைந்து விடுகிறது. ஆனால், அந்த உணர்ச்சி நிலைத்திருக்கும் பொழுது சத்தியானது மடை திறந்தது போல இருக்கிறது. இது நம்மால் நம்ப இயாதது போல இருக்கிறது. நாம் இந்தப் பருவத்தைத் தாண்டி விட்டோம். ஆதலால், இம்மாதிரி ஒரு பருவத்தை நாம் அடைந்திருந் தோமா என்றுகூட நம்மால் நினைவுபடுத்திக்கொள்ள இயலாது. எல்லா உறுப்புகளும் ஆயத்தமான பிறகு அவை எல்லாம் ஒன்றாய் இணங்குகின்றன. இதையே நாம் ஒரு தனியாரது உள ஒற்றுமை என்கிறோம்.

மேலே குறிப்பிட்டது போலத் தோன்றி மறையும் உணர்ச்சிகளைப் பூச்சி வாழ்க்கையில் கண்டிருக்கின்றனர். திடீர் மாற்றக் கொள்கையை நமக்கு எடுத்துக் காட்டிய அதே டி வ்ரிஸ் என்ற அறஞர், பூச்சி வாழ்க்கையை ஆராய்ந்திருக்கிறார். பூச்சிகளில் இந்த உணர்ச்சிகள் தாற்காலிகமாய்த் தோன்றி, பூச்சிகளின் பிறப்பி லிருந்து மாறிக்கொண்டு போகும் செயல்களில் வழிகாட்டி வருகின்றன. இந்தச் சத்திகளுள் ஒவ்வொன்றும் பூச்சியின் வளர்ச்சிக்கும் வாழ்க்கைக்கும் இன்றியமையாததாய் இருக்கின்றது. டி வ்ரிஸ் கண்டு பிடித்த இந்த இரண்டாவது உண்மை பல உயிர்நூல் ஆராய்ச்சிகளையும், உளவியல் ஆராய்ச்சிகளையும் தூண்டிவிட்டது; பல கருத்துகளைக் கிளப்பிவிட்டது. வெவ்வேறு குழுவினர் விருவிருப் பாகப் பின் பற்றி வாதாடினர். இறுதியில் அமெரிக்க நாட்டு உளவியலாரான **வாட்சன்** (Watson) என்பவர் இந்தக் குழப்பங்கள்

நிறைந்த கொள்கைகளிலிருந்து கரை காணும் முறையில் ஒரு புது வழியை வகுத்தார்.

"நம்மால் விளக்க இயலாதனவற்றை எல்லாம் விட்டுவிடுவோம்; எதை மெய்ப்பிக்க இயலுமோ, அதைப் பற்றிக்கொள்வோம். நிச்சயமாகக் கூறக் கூடியது ஒன்று நமக்குத் தெரியும். அது விலங்கின் நடத்தை ஆகும். ஏனென்றால், அதை நம்மால் கவனிக்க இயலும். ஆதலால், புது முறை ஆராய்ச்சிக்கு இதையே அடிப்படையாக வைத்துக்கொள்வோம்," என்று அவர் கூறினார்.

விலங்குகளின் வெளிப்படையாகக் காணக்கூடிய நடத்தையையே அவர் ஆரம்பமாக எடுத்துக்கொண்டார்; வாழ்க்கையைப் பற்றி இன்னும் ஆழமாக நாம் தெரிந்துகொள்வதற்கு இவை நம்பத் தக்க வழி காட்டியாய் இருக்கும் என நம்பினார்; இந்த நம்பிக்கையுடன் மனிதனுடைய நடத்தையையும், குழந்தையின் உளவியலையும் பற்றி ஆராயத் தொடங்கினார்; இவைகளை நேரடியாகக் கண்டு புரிந்துகொள்ளலாம் என்று நினைத்துவிட்டார். ஆனால், காலதாமதம் இல்லாமல் குழந்தையிடம் முன்னதாகவே நிலைபெற்ற ஒரு நடத்தை இருப்பதாக ஓர் அடையாளத்தையும் அவரால் கண்டுபிடிக்க இயலவில்லை. இயல்பூக்கங்கள் இல்லை என்பதையும், உள மரபு நிலை (Psycholcgical heridity) இல்லாதிருப்பதையும் அவர் ஒப்புக் கொண்டார்; மனிதனுடைய செயல்களுக்குக் காரணம் அவனுடைய **ஆக்க நிலை ஏற்றிய மறிவினை** (Conditioned reflexes) என்று குறிப்பிட்டார்; இவை ஒன்றின்மேல் ஒன்றாக ஒன்றைவிட ஒன்று உயர்ந்த நிலையில் அடுக்கப்பட்டதாகவும் கருதினார். இவ்வாறு அவர் கண்ட '**நடத்தைத் கொள்கை**'(Behaviourism) என்றது தோன்றலாயிற்று. இது அமெரிக்காவில் அங்கீகரிக்கப்பட்டு வந்தது. எனினும், இது இன்னும் பக்குவம் அடையவில்லை என்றும், மேலுக்கு மேலாக உள்ளதென்றும் கருதினவர்கள் இக்கொள்கையைக் குறை கூறித் தீவிரமாக எதிர்த்தார்கள். இவருடைய கருத்துகள் வேறு இரண்டு அமெரிக்க ஆராய்ச்சியாளர்களைத் தூண்டிவிட்டு இதை விளக்கச் செய்தது. அவர்கள் புதியனவாக ஆய்வுச்சாலை முறைகளை அனுசரித்து நடத்தையைப் புது முறையில் சோதனை செய்யப் புகுந்தார்கள்.

அவ்விருவரும் **காக்ஹில்**, (Coghill), **கெஸெல்** (Gesell) என்பவர் ஆவர். நடத்தையைத் தெளிவாக்குவதற்காகக் காக்ஹில் **கரு வளர்ச்சி** இயலை ஆராயப் புகுந்தார். கெஸெல் என்பவர் **குழந்தை வளர்ச்சியை** ஒழுங்காகப் படிப்படியாக ஆராயத் தொடங்கினார்; தம்முடைய புகழ் பெற்ற உளவியல் ஆய்வுச் சாலையை நிறுவினார். உலகம் முழுவதும் இதை அக்கறையுடன் கவனித்து வருகிறது.

காக்ஹில் என்பவர் ஃபிலடெல்ஃபியாவில் ஒரு வகையான விலங்கின் கருவளர்ச்சியை ஆய்ந்து வந்தார். இது 'ஆம்பிளியோஸ்டோமா' எனும் (Amblyostoma) நில நீர் வாழ் விலங்குகளைவிடச் சற்றுத்தாழ்ந்த அளவு விருத்தி அடைந்ததாகும். இதைத் தேர்ந்தெடுப்பதற்குக் காரணம், இதனுடைய எளிய உடலமைப்பே ஆகும். அக்காரணத்தால் இது ஆராய்ச்சி செய்வதற்கு வசதி உள்ளதாயும் தெளிவானதாயும் இருந்தது. காக்ஹில் கண்ட உண்மைகளை




5. படம்.

கருவளர்ச்சி நிலை வடிவங்கள்

(பக்கம் 58 பார்க்க)

1929-ஆம் ஆண்டு வரை விளம்பரப்படுத்தவில்லை. இத்தனை ஆண்டுகள் செலவழிக்கக் காரணம் என்ன? அவர் கவனித்து வந்த உண்மைகள், உளநூல் வல்லுநர் இது வரை கண்டறிந்த உண்மைகளுக்கு அடிப்படையில் பொருத்தமற்றவையாய் இருந்தன. அவர் தம்முடைய பரிசோதனைகளைப் பல முறைகள் செய்து பார்த்தார். ஒவ்வொரு முறையும் முன் செய்ததைவிட நுட்பமாகக் கவனித்து வந்த போதிலும், அவர் அடிக்கடி கண்ட உண்மை இதுவே ;

**மூளையில் உள்ள நரம்பு மையங்கள், அவை எந்தெந்த அங்கங்களை ஆட்சி** புரிய வேண்டுமோ, அவைகள் தோன்றுவதற்கு முன்னதாகவே தோன்றிவிடுகின்றன. எடுத்துக்காட்டாக, பார்வை மையம் எப்பொழுதும் ஒளி நரம்பு தோன்றுவதற்கு முன்னதாகவே தோன்றிவிடுகிறது. மரபு முறையைக் கருவானது பின் பற்றுகிற தென்று வைத்துக்கொள்வோம். அந்த விலங்கினங்களின் வளர்ச்சிச் சரித்திரத்தில் பின்னடியாகத் தோன்றும் உறுப்புகளும், கருவிலும் பின்னடியாகத்தான் வளர வேண்டும். அப்பொழுது நமக்கு முதலில் காட்சி அளிப்பன உறுப்புகளாய் இருக்க வேண்டும். பிறகு அவ்வுறுப்புகளின் செயலால் மையங்கள் தோன்ற வேண்டும். **கண்கள் படைக்கப்படுவதற்கு முன்னும், கண்களுடன் இணைக்கப் படும் நரம்புகள் தோன்றுவற்கு முன்னும் இந்தப் பார்வை மையங்கள் எவ்வாறு தோன்ற இயலும் ?**

காக்ஹில்லின் ஆராய்ச்சிகள் விலங்குகளின் நடத்தையைப் பற்றிய உண்மைகளை ஆராய்வதற்கான பெரிய ஊக்கம் அளித்திருக் கின்றன. இது மட்டும் அன்று. அவை ஆச்சரியகரமான ஒரு கருத்தையும் வெளியாக்கியிருக்கின்றன. அதாவது, மையங்கள் தோன்றின பிறகே உறுப்புகள் தோன்றுவதென்றிருந்தால், சூழ் நிலையில் அவை பணியாற்ற வேண்டுவதற்கு ஒத்த முறையில் உருவைப் பெறவேண்டும் என்பது தெரிகிறது. இதிலிருந்து **நடத்தை என்பது இயல்பூக்கத்தினடியாக மரபாகப் பெறப்படு கிறது** என்பது தெரிகிறது. மேலும், இந்தப் புதுக்கருத்தும் வெளியா கிறது. அதாவது, **சூழ்நிலையில் விலங்கு எவ்வாறு தன் செயல் வட்டத்தை நிகழ்த்துகிறதோ, அதற்குத் தக்கவாறு உறுப்புகளும் தத்தம் உருவங்களை அடைகின்றன** என்பது.

உண்மையாகப் பார்க்கப்போனால், இயற்கையில் அற்புதமான உதாரணங்களை நாம் அடிக்கடி சந்திக்கிறோம். உறுப்புகளின் உருவங்களுக்கும், அவை ஆற்ற வேண்டிய பணிக்கும் சம்பந்தம் இருப்பதற்குப் பல எடுத்துக்காட்டுகளைக் காண்கிறோம். இவற்றால் விலங்குக்கு ஒரு விதப் பயனும் அளியாத பொழுதும் இந்த ஒற்றுமை யைக்காண்கிறோம். எடுத்துக்காட்டு ஒன்று இதைத் தெளிவாக்கும். ஒரு வகையான மலரில் தேன் குடிக்கும் பூச்சியின் உறிஞ்சும் குழலானது அந்த மலரின் அல்லி வட்டத்தின் நீளத்தை ஒட்டியே வளர்ச்சி அடைகிறது. மேலும், இப்பூச்சிகள் தம் உடலின்மேல் ஒரு வகைப் போர்வையையும் பெறுகின்றன. இப்போர்வையால், பூச்சிக்கு ஒரு பயனும் இல்லாதபோதிலும், அவை மகரந்தத்தைச் சேகரிப்பதற்கும், பிறகு தேடி அடையும் மற்ற மலர்களுக்கு மகரந்தச்சேர்க்கை அளித் துக் கருத்தரிக்கச் செய்வதற்கும் பயன்படுகின்றன. எறும்புண்ணி (Ant eater) என்ற விலங்குக்கு மிகவும் குறுகிய வாய் இருக்கிறது.

அதனுடைய நாக்குப் புழுப்போல நீண்டிருக்கும். வாயிலிருந்து அந்த நாக்கு நீளும். அந்த நாக்கின்மேல் பசை உள்ள பொருள் ஒன்று படிந்து இருக்கும். அப்பசை எறும்புண்ணி எறும்பு முதலிய வற்றைப் பற்றித் தின்ன உதவும்.

விலங்கின் நடத்தை ஏன் இவ்வாறு கட்டுப்படுத்தப்படவேண்டும்? ஏன் ஒரு விலங்கு ஊர்கிறது? ஒன்று குதிக்கிறது? மற்றென்று ஏன் குறிப்பிட்ட ஒரு மலரைக் கருத்தரிக்கும்படி தன் உடலை அமைத்துக்கொள்கிறது? சில விலங்குகள் உயிருள்ளவற்றை ஏன் தின்ன வேண்டும்? வேறு சில அழுகின மாமிசத்தை ஏன் தின்னவேண்டும்? புல்லையே தின்று வாழ்வனவும் இருக்கின்றன. மரத்தைத் தவிர வேறெதையும் தின்னுமல் நன்ருக வாழ்வனவும் இருக்கின்றன. வேறு சில, மண்ணில் உள்ள சத்துகளைத் தம் உடம்பு வழியாகச் செல்ல விடுவதிலேயே காலங் கழிக்கின்றன. எண்ணற்ற விலங்கினங்கள் எல்லாம் தோன்றுவது எதனுல்? ஏன் ஒவ்வொன்றும் தனிப்பட்ட நடத்தையைப் பெற்றிருக்கவேண்டும்? இந்த நடத்தை ஒன்றுக்கு உள்ளதைப்போல மற்றென்றுக்கு இல்லாததற்குக் காரணம் என்ன? சிலவற்றின் இயல்பு ஊக்கங்கள் கொடுமையாகவும் தாக்கும் தன்மையைப் பெற்றவையாகவும் இருக்கின்றன. வேறு சில விலங்குகள் அஞ்சி வெட்கப்படுகின்றன. இவ்வுலகில் படைக்கப்பட்டுள்ள விலங்குகளின் நோக்கம் எல்லாம் தாம் வாழ்வதற்கென்று மட்டும் இராது. வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெறுவதற்குத் தம்முடைய சூழ்நிலையில் கிடைப்பதைத் தமக்கு எவ்வளவு பயன்படுத்திக்கொள்ள இயலுமோ அவ்வளவையும் செய்துகொள்ள வேண்டுமென்று, 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டி இடுவதுதானு விலங்குகளின் குறிக்கோளாய் இருக்கும்? டார்வின் என்பவர் பரிணுமத்திற்குக் காரணம் இவைகளாகத்தான் இருக்கும் என்று விளக்கம் கூறி வந்தார். உருவங்களைப் படிப்படியாக மேம்படுத்துவது என்பதில் உயர்ந்த நிறைவைப் பெறுவதற்கு வாழ்க்கை ஊற்றம் (Elan Vital) என்பது நேரடியாக முயற்சி செய்வதாகத் தோன்றுவதில்லை. நிறைவைக் காண்பது என்பதே வாழ்க்கையின் லட்சியமாகத் தோன்றவில்லை.

எனவே, நம்முடைய கருத்துகளில் புதிய உயர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இந்தப் புதுக் கருத்தின் நோக்குடன் கவனிக்கும் பொழுது சூழ்நிலைக்குத் தேவையானவைகளைச் செய்வதே வாழ்க்கையின் நோக்கமென்பது தோன்றுகிறது. உயிர் வாழ்வன எல்லாம் படைப்பின் காரகர் (ஏஜெண்டுகள்) போலவும், ஒரு பெரிய வீட்டில் உள்ள வேலையாள்களைப் போலவும், பெரிய அலுவலகத்தின் பல தொழிலாளிகளைப் போலவும், அவரவர்க்கென்று ஒதுக்கப்பட்ட தனித்தனி தொழிலைப் பெற்றவை போலவும் இருக்கின்றன.

பூமியின்மேல் வாழ்கின்ற எண்ணற்ற சீவராசிகள் தங்கள் தனிக் கடமைகளைச் செய்து வருவதால், இயற்கையில் ஓர் ஒருமைப்பாடு நிலவுகிறது. நாம் கவனித்து வரும் பல வித நடத்தைகளுக்கும் ஒரு நோக்கம் இருக்கவேண்டும். ஒவ்வொன்றுக்கும் முக்கியமான தேவைகளைப் பெறுவதோடு நின்றுவிடாமல் இதற்கு அப்பாற்பட்டதொன்றும் இருந்து தீர வேண்டும்.

இது உண்மையானால், இத்தனை ஆண்டுகளாக விஞ்ஞான உலகத்தில் முதன்மை பெற்று வந்த பரிணமக்கொள்கைகள் என்னாவது ? அவை அழிய வேண்டுவதுதானா ? இல்லை இல்லை ! அவை இன்னும் விரிவு செய்யப்படுகின்றன. பழைய முறையில் பரிணமக் கொள்கையைப் படிப்படியாக நிருணயிக்க இயலாத ஒரு நிறைவுக்காக முன்னேறி வருகிறது என்பதை இனி நாம் ஏற்றுக்கொள்ள இயலாது. இன்று பரிணமத்தைப் பற்றிய கருத்துகள் விரிவடைந்திருக்கின்றன. அவை பல துறைகளில் விரிவடைந்திருக்கின்றன. அவற்றில் பல செயல் சார் தொடர்புகள் அடங்கியிருக்கின்றன. அவை அண்மையிலும் சேய்மையிலும் உள்ளவை ; பல வகையான சீவராசிகளின் வாழ்க்கைச் செயல்களை இணைக்கின்றன.

இந்த இணைப்புகளை ஏதோ ஒன்றுக்கொன்று உதவி புரிந்துகொள்வதற்குரிய எடுத்துக்காட்டுகள் என்று கருதிவிடலாகாது. அதற்கு மாறாக, இவை விசுவத்தின் நோக்கத்துடன் தொடர்புகொண்டு உலகத்தின் முழுச் சூழ்நிலையையும் இணைப்பதாகக் கருதப்படவேண்டும். இது இயற்கையின் ஒருமையைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதனடியாகப் பெறப்படும் ஒழுங்கிலிருந்து ஒவ்வொரு சீவராசியும் தன் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைப் பெறுகின்றது.

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த நில உட்கூற்றியல் வல்லுநர் (Geologists), வாழும் விலங்குகளுக்கும் பூமிக்கும் சம்பந்தம் இருக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொண்டிருக்கின்றனர். டார்வின் காலத்தில் லையெல் (Lyell) என்ற நில உட்கூற்றியலார் ஒருவர் இருந்தார். பூமியின்வளர்ச்சிக் காலத்தில் பல பருவங்களில் எவ்வாறு வெவ்வேறு விலங்கினங்கள் தோன்றியிருக்கின்றன என்பதை லையெல் விளக்கியிருக்கிறார் ; பூமியின் பல அடுக்குகளில் புதைந்து கிடந்த பல்வேறு விலங்குகளின் புதை உடற்பதிவுகளை (Fossils) ஆராய்ந்து, பூமியின் மேல்சீவராசிகள் தோன்றியது இன்றன்று; நேற்றன்று; அக்காலம் மிக மிகப் பழைமையானது என்பதை நிறுவியிருக்கிறார். ஆனால், அவருக்குப் பிறகு நில உட்கூற்றியலார் வேறு சிலர், விலங்குகளின் நடத்தை பூமியின் பரப்பு வளர்வதில் என்ன பங்குகொண்டிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டியிருக்கின்றனர். ஜெர்மனி நாட்டு ஃபிரீட்ரிக்கு ரட்ஜல்

(Friedrich Ratzel) என்ற நில உட்கூற்றியலார் 'பூமியும் வாழ்வும்' என்னும் ஒரு நூலை எழுதியிருக்கிறார். இந்த நூற்றாண்டின் தொடக்கம் எனது தாயகமான இத்தாலி நாட்டில் மிகவும் சிறப்படைந்தது. பல புதுக் கருத்துகளையும் உண்மைகளையும் கொண்ட வேறு நூல்களும் தோன்றியிருக்கின்றன.

இமயமலை, ஆல்ப்ஸ் மலை போன்ற அவ்வளவு உயரத்தில் உள்ள பாறைகளில் கடல் வாழ் விலங்குகளின் உடற்சின்னங்கள் காணப் பட்டன. இதை முதலில் கேட்டவர் எல்லாரும் வியப்படைந்தனர். மலைச்சிகரங்களிலிருந்து தண்ணீரால் அரித்துக்கொண்டு செல்லப்பட் டுச் சேர்க்கப்பட்ட புதைந்த மண்ணிலும் அந்த உடற்சின்னங்கள் காணப்பட்டன. தரையைப் படைப்பதில் இவ்விலங்குகள் பங்கு கொண்டன என்பதற்குச் சிறுதும் ஐயமில்லை. இவை இக்காலத்திலும் பல பவழத் தீவுகளைத் தோற்றுவிப்பதில் உதவி புரிவதை நாம் காண லாம். கடலின் பரந்த கழிவுப் பகுதியில் பூக்கள்போல இவ்விலங்கு கள் காட்சி அளிப்பதைக் காணலாம். நமக்கு இன்னார் என்று தெரி யாத **சிற்பிப் படையினரின் 'கை எழுத்துகளே' இந்த உடற்சின் னங்கள் ஆகும்.** அழிந்துபோய்க்கொண்டிருந்த உலகத்தை இவை புதுப்பித்தன.

இதைப்பற்றி ஆராய்ச்சிச் சான்றுகள் தொடர்ந்து குவிந்து கொண்டேயிருக்கின்றன. பூமியின் பரப்பின் உருவத்துக்குக் கார ணம் காற்றும் மழையுமே என்று கூறிவிட இயலாது. விலங்குகளும், தாவரங்களும், மனிதனும் இத்தோற்றத்துக்குக் காரணமாக மேற் கொண்டுள்ள பங்கையும் சேர்த்துக்கொள்ள வேண்டியிருக்கின்றது. இத்தாலி நாட்டைச் சேர்ந்த **அந்தோனியோ ஸ்டோப்பானி** (Antonio Stoppani) என்ற நில உட்கூற்றியலார், **பூமியின் நிலைமை கள் சீவராசிகளின் வாழ்க்கையைப் பொறுத்திருக்கின்றன** என் பதைக் காட்டியிருக்கிறார். அவர் மேலும், 'எல்லா விலங்குகளும் நன்கு கப் பழக்கப்பட்ட ஒழுங்கான படை. அவை, இயற்கையின் இசைவை (Harmony) நிலை நாட்டப் போரிடுகின்றன,' என்று கூறுகிறார்.

எனவே, இக்காலத்தில் தனிச் சான்றுகளையோ, அரைகுறை யாகக் கவனித்த உண்மைகளையோ எடுத்துக்காட்டத் தேவை இல்லை. ஏனென்றால், **பரப்பியல்** (Ecology) என்ற ஒரு தனி விஞ்ஞானமே தோன்றியிருக்கிறது. இந்த விஞ்ஞானம், உயிர் வாழ்வனவற்றுள் ஒன்றுக்கொன்றுள்ள தொடர்பை ஆராய்கிறது. ஓர் இனம் மற்றோர் இனத்தின் வாழ்க்கையை எவ்வாறு பாதிக்கிறது என்னும் விஷயத்தில் சீவராசிகளின் நடத்தையின் ஒவ்வொரு பகுதியையும் இந்த விஞ் ஞான முறையால் அறிய இயல்கிறது. இயற்கையுடன் பொருள் இயல்

எவ்வாறு தொடர்பு கொண்டிருக்கிறதோ, அவ்வாறே இந்தப் பரப்பியலும் தொடர்பு கொண்டுள்ளது. இதன் உதவியால் நாட்டுப்புறங்களில் தோன்றும் சில நடைமுறைச் சிக்கல்களுக்கு வழி தேட இயலும். விஞ்ஞானமுறைப்படி செய்யும் விவசாயத்தில் பயன் காண்பது போல இங்கும் பயன் காணலாம். ஓர் உதாரணத்தைக் கவனிப்போம் : சில சமயங்களில் அயல் நாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்ட செடி கொடிகள் கட்டுக்கு மீறிப் பெருகி ஒரு குறிப்பிட்ட எல்லையையே விழுங்கும்படியான நிலையில் இருக்கும் பொழுது மனிதன் ஒன்றும் செய்ய இயலாத நிலையில் இருக்கிறான். அப்பொழுது பரப்பியலின் துணையைத் தேடவேண்டியிருக்கிறது. அப்பொழுது எந்தப் பூச்சிகளை வேறு நாடுகளிலிருந்து கொண்டுவந்தால் இந்தப் பரவும் செடி கொடிகளை அழித்துவிட இயலும் என்றும் பழைய சமநிலையைப் பெற இயலும் என்றும் பரப்பியல் எடுத்துக் காட்டும். சிறப்பாக, ஆஸ்திரேலியாவில் இதற்குச் சான்றுகள் நடைபெற்றிருக்கின்றன.

பரப்பியலை நடைமுறை உயிர் நூல் எனலாம். இது ஒவ்வோர் இனத்தின் இயல்பையும் தனித்தனியாக ஆராய்வதற்கு மாறாக, ஓர் இனத்துக்கும் மற்றோர் இனத்துக்கும் உள்ள இயல்புத் தொடர்பை ஆராய்கிறது.

இக்கால அறிவின் மிகவும் பயனுடையனவும், தெளிவு பெற்றனவுமான பகுதிகள் செயல் முறையைச் சேர்ந்தவையாகும். ஏனென்றால், சூழ்நிலையின்மேல் உயிர் வாழ்வன ஆற்றும் செயல்களால் பரிணமத்தின் நோக்கம் நிறைவு பெற்றுவிடுகிறது. இதனால், உண்மையின் ஒற்றுமையை நாம் நெருங்குகிறோம். இம்மாதிரி அவை செயல் புரிவது, மிகவும் பதிவு செய்யக்கூடியதாகவும், முடிவு கட்டக்கூடியதாகவும் தோற்றம் அளிக்கிறது. இந்த உலகத்தில் உயிர் வாழ்வன தோன்றியிருப்பது எதற்காக ? அதனதன் வாழ்க்கையை நிலையுறுத்துவதற்கு மட்டுமன்று ; எல்லாச் சீவராசிகளுக்கும் மிகவும் முக்கியமான ஒரு போக்கை நடத்தி வைப்பதற்காகவே வாழ்கின்றன. இது எல்லாச் சீவராசிகளுக்கும் மிகவும் முக்கியமானது; ஆதலால், உயிர் பெற்று வாழ்கின்ற ஒவ்வொரு சீவராசிக்கும் இன்றியமையாததாகும்.

## ஒரு திட்டம், ஒரு முறை

விஞ்ஞான முறைப்படி இக்காலத்தில் பெறப்படும் வெற்றிகள் அடியாகக் கண்டு பிடிக்கப்பட்ட புது உண்மைகளும் கோட்பாடுகளும் வாழ்க்கையின் அற்புதத்தை விளக்க இயலாது. ஆனால், அந்த விஞ்ஞான முயற்சிகளால் வெளியாகும் ஒவ்வொரு புது உண்மையும் வாழ்க்கையைப் பற்றி நாம் ஓரளவு புரிந்துகொள்வதற்குத் துணை புரிகிறதெனலாம்.

முழு விவரங்களையும் கவனிக்கும்படியான வெளிப்படை மெய்ந் நிகழ்ச்சிகள் நடைமுறையில் வழி காட்டுகின்றன. இவற்றைப் பின் பற்றுவது பயனளிக்க வல்லது. நம்மைப் போல எவரெவர் கல்வியின் மூலமாக வாழ்க்கைக்கு உதவி புரிய வேண்டும் என்று நினைக்கிறார் களோ, அவர்கள் குழந்தைகளை எவ்வாறு கருத வேண்டியிருக்கிற தென்றால், வளர்ச்சிப் பாதையில் மற்றச் சீவராசிகளைப் போலவே கருத வேண்டியிருக்கிறது. இவ்வாறு கருதுவது சீவராசிகள் நிறைந்த உலகில், உயிர் நூலில் மனிதக் குழந்தையின் இடம் எது என்று வியக்கச் செய்கிறது. பரிணமம் படிப்படியாக முன்னேறுகிறது என்ற கருத்துப்படி சூழ்நிலைக்குத் தக்கவாறு உடலை அமைத்துக்கொள்வ தாலும், மரபினாலும், தன்னை முன்னிலும் உயர்ந்த நிலைக்கு மேம்படுத் திக்கொள்ள வேண்டுமென்ற உள்துடிப்பினாலும் நடைபெறுகிறது என்ற விளக்கம் இனிமேல் போதாது. இதல்லாமல் வேறொரு சக்தி இருக் கிறது. இன்மே அழியாதிருப்பதற்கான உள்துடிப்பு மட்டும் அன்று ; ஒருமைப்படுத்தும் சக்தியாகும் **பொது நன்மையே முக்கியக் குறிக் கோளாக வைத்துக்கொண்டு எல்லாச் சக்திகளையும் ஒருமைப் படுத்தும் ஒரு தனிச் சக்தி ஆகும்.**

எனவே, குழந்தையின் உள்ளத்தில் தன்னைத்தானே படைத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்த உள்துடிப்பு ஒன்று இருந்து வருகிறது. இது குழந்தையை மேன்மேலும் நிறைவுபெற உந்துகிறது. இதுவன்றி வேறொரு குறிக்கோளும் இருக்க வேண்டும். இசைவுடன் (ஒருமைப் பாட்டில்) நிறைவேற்றக்கூடிய ஒரு கடமை இருக்கிறது. ஒரு மைப்பாடு பெற்ற ஒரு முழுமையில் குழந்தை செய்ய வேண்டிய சேவை ஒன்று இருக்கிறது.

'அப்படியானால், குழந்தையின் உண்மையான நோக்கம் என்ன ?' என்று அப்பொழுதே கேட்க ஆரம்பித்திருப்பீர்கள். இந்த வினாவுக்கு விடை அளிக்காமல் விஞ்ஞான முறைக் கல்வியின்மேல் அதிக நம்பிக்கை வைத்திருக்க இயலாது.

குழந்தைக்கு இரட்டைக் கடமைகள் இருக்கின்றன. வளர்கின்ற கடமை என்ற ஒன்றை மட்டும் நாம் கவனித்தோம். ஆனால், அத னுடைய உயர்ந்த சக்திகள் ஒடுக்கப்படுகின்ற அச்சம் இருந்து வரு கிறது. குழந்தை பிறக்கும் பொழுது தனக்குள் தானே படைத்துக் கொள்ளும் சக்தி இருந்து வருகிறதென்றும், அந்தச் சக்தி சூழ்நிலை யில் செயலாற்றும் பொழுது மலர்கிறதென்றும் எண்ணுவது நியா மானது என்பதை நாம் ஏற்கெனவே உணர்ந்திருக்கிறோம்.

குழந்தை வெறுமையிலிருந்து தோன்றுகிறது. அதாவது, உளப் பண்பு எதுவும் இல்லை என்ற பொருளில் வெறுமை. ஆனால், அத னுடைய அத்தரங்கத்தில் மறைந்த சக்திகள் இருக்கின்றன. இவை

அதனுடைய வளர்ச்சியை நிருணயிக்கின்றன. தன்னைச் சூழ்ந்துள்ள உலகத்திலிருந்து அது தன் சிறப்பு இயல்புகளைப் பெற்றுக்கொள்ளும்.

பிறந்த குழந்தையின் ' வெறுமை 'யைக் கருவுயிரணுவில் காணப்படும் ' வெறுமை 'யுடன் ஒப்பிடலாம்.

இது ஒப்புக்கொள்வதற்கு எளிய கருத்தன்றுதான். உல்ஃபு என்பவர், அவர் காலத்தில் பெரிய அற்புதத்தை வெளியாக்கினர். வாழ்கின்ற உடல் தன்னைத்தானே படைத்துக்கொள்கிறதென்பதையும், அதற்கு முன் வேறு எதுவும் அவர் காலத்து ' மெய்யறிஞர் ' (Philosophers) கருதி வந்தது போலக் குழந்தை உள்ளத்தில் உருவாக்கப்படவில்லை என்பதையும் அவர் எடுத்துக் காட்டினர்.

**குழந்தை பிறக்கும் பொழுது தன்னுடன் தன் குடும்பத்தின் சாதனைகளையோ, தன் இனத்தாரின் சாதனைகளையோ கொண்டு வருவதில்லை.** இது எவ்வளவு திகைக்கச் செய்யும் உண்மையாய் இருக்கிறது ! இது எங்கும் நடைபெறுகிறது. நாகரிகமடைந்த மக்களிடம் நடைபெறுவது போலவே, பல இடங்களில் பரந்து வாழும் நாகரிகமற்ற பழங்குடி மக்களிடத்திலும் இது நடைபெறுவதைக் காணலாம். எல்லாக் கைக்குழந்தைகளும் ஒரே உருவத்தைப் பெற்றிருக்கின்றன. அது அசைவற்றது; வெறுமையானது (Empty); முக்கியமற்றது.

அவ்வாறு இருப்பினும், இந்த அசைவற்ற பேர்வழியினுள் ஒரு மாபெருஞ்சத்தி இருக்கிறது. அதை மனிதனைப் படைக்கும் சத்தி (Human Creative Essence) எனலாம். குழந்தை வாழ்கின்ற காலத்து மனிதன், அதனுடைய நாகரிக மனிதனைப் படைத்துக்கொள்ளும் சத்தியைப் பெற்றிருக்கிறது. குழந்தை பெற்றிருக்கின்ற உட்கவரும் சத்தியால் மனித இனத்துக்கே பொதுவான வளர்ச்சித் திட்டத்தைப் பின் பற்றுகிறது.

இப்பொழுது முன்னேறிக்கொண்டிருக்கின்ற நாகரிகத்தைப் பெறுகின்ற கடமை குழந்தையிடம் இருக்கிறது. இக்காலத்துச் சமூகம், கடந்த பல்கோடி நூற்றுண்டுகளிலிருந்து பிறந்திருக்கிறது ; அதைப் போலவே பல்கோடி நூறுயிரம் ஆண்டுகளை எதிர்காலமாகவும் பெற்றிருக்கிறது. இக்காலத்தில் குழந்தை அடைய வேண்டிய நிலை, கடந்த காலத்திலும் எதிர்காலத்திலும் ஒப்பிட இயலாதது; எப்பொழுதும் ஒரு நிலையில்லாது மாறிக்கொண்டே இருக்கக் கூடியது.

இந்த ஒப்பற்ற சாதனை ஒரு முன்னேற்றத்தைக் குறிக்கிறது. இந்த முன்னேற்றம் மரபின் மூலமாகச் சால்புகளைப் பெற ஓர் உதவியும் பெறுவதில்லை.

இன்றென்றுமிருக்கிறது. அது குழந்தையின் பொதுத் தன்மை. குழந்தை தன்னைச் சுற்றிலும் காண்பனவற்றைக்கொண்டு தன் பண்புகளாகப் புனைந்துகொள்வதில் **சீவ அசட்டுத்தனத்தைப்** (Biological Indifference) பெற்றிருக்கின்றது. மனித இனத்தில் ஒற்றுமை இருக்கிறது என்பதற்கு இது உண்மையான சான்று என்பது நமக்குத் தோற்றுகிறது.

இந்த அற்புதமான உண்மையை உணர்ந்த பிறகு, அதிலும் கடந்த சில ஆண்டுகளில் பிற்பட்ட குழுவினரைப் பற்றி, ஆராய்ச்சிகள் தூண்டப்பெற்றிருக்கின்றன. மேலே கண்ட உண்மைகளுக்கு இன்னும் சான்றுகள் கிடைக்கும் என எதிர்பார்க்கப்பட்டது.

ரூத்து பெனிடிக்டு (Dr. Ruth Benedict), என்பவர் அண்மையில் (New York 1948) வெளியிட்ட **பண்பாட்டின் மாதிரிகள்** (Patterns of Culture) என்ற நூலில் இவ்வாறு கூறினர்: ஒரு பிரெஞ்சு பாதிரி குழுவினர் **இன்றைய மனிதவின இயலை** (Modern Ethnological) ஆராய வேண்டிப் பெட்டகோனியாவுக்குச் சென்றனர். உலகத்தில் மிகவும் பழங்குடி மக்கள் எனக் கருதப்படுகின்ற இனத்தார் இன்றும் அங்கு வாழ்ந்து வருகின்றனர். அவர்களுடைய நிலையும் சமூகப்பழக்க வழக்கங்களும் கற்காலத்தைச் (Stone Age) சார்ந்தனவாய் இருக்கும். வெள்ளையரைக் கண்டவுடனே அவர்கள் அஞ்சி ஓடினர்கள். இவ்வாறு ஓடுகின்ற ஆத்திரத்தில் சிலர் ஒரு பெண் குழந்தையை அங்கேயே விட்டுவிட்டு ஓடி மறைந்தனர். பாதிரியாரால் அக்குழந்தை காப்பாற்றப்பட்டது. இன்று அவள் நுண்ணறிவு பெற்ற யுவதியாய் விளங்குகிருள்; இரண்டு ஐரோப்பிய மொழிகளைப் பேசுகிருள்; மேல் நாட்டார் பழக்க வழக்கங்களைப் பெற்றிருக்கிருள்; கத்தோலிக்கக் கிறித்தவ மதத்தைத் தழுவியிருக்கிருள்; பல்கலைக் கழகத்தில் உயிர்நூல் கற்று வருகிருள்; **இந்தப் பதினெட்டு ஆண்டுகளுக்குள் கற்காலத்திலிருந்து அணு யுகம் வரை உள்ள முன்னேற்றத்தை உண்மையாகப் பெற்றுவிட்டாள்.**

இதிலிருந்து நமக்கு என்ன தெரிகிறது? ஒருவன் தன் வாழ்க்கையின் தொடக்கத்தில் முயற்சி இல்லாமலும் தன்னை அறியாமலும் பல அற்புதங்களையும் சாதிக்க இயலும் என்பது விளங்குகிறது.

வெளி உலகத்திலிருந்து சிறப்பியல்புகளை உட்கவர்ந்துகொள்ளும் திறமை ஒரு சீவாதார நிகழ்ச்சி ஆகும். விலங்குகளில் காணப்படும் போலிப்பகர்ப்பை (Mimicry) நமக்கு நினைவூட்டுகிறது. இது அடிக்கடி காணப்படுவதன்று; அதிசயமானதுதான்; முன்னெல்லாம் கருதப்பட்டு வந்தது போல அவ்வளவு காணக்கிட்டாதது அன்று.

இதற்குச் சான்றுகளும் மேன்மேலும் கிடைத்துக்கொண்டு வருகின்றன. பெர்லினில் உள்ள உயிர் நூல் கண்காட்சியின் ஒரு பகுதியானது நிறைந்த போலிப் பகர்ப்புச் சான்றுகளுக்கென ஒதுக்கப்பட்டிருக்கிறது. போலிப் பகர்ப்பு என்பது தற்காப்புக்கென ஏற்பட்ட ஓர் ஏற்பாடாகும். இதில் நடைபெறுவதென்ன? ஒரு விலங்கின் சூழ்நிலையின் தோற்றத்தை அதன் உடலுக்குள் உட்கவர்ந்துகொள்வதாகும். இதற்கு எடுத்துக்காட்டுகளாவன, வடதுருவக் கரடியின் உரோமம், இலை போன்ற வடிவம் பெற்ற சில வண்ணத்துப் பூச்சிகள், குச்சி போன்ற சில பூச்சிகள், பச்சைச் காம்புகளைப் போன்ற சில பூச்சிகள், தட்டையான மீன்கள், மண் போன்ற ஒரு வகை மீன்.

சூழ்நிலையின் தோற்றங்களை மீண்டுமுண்டாக்கல் என்பதற்கும் அந்தத் தோற்றங்களின் சரித்திரத்துக்கும் ஒரு தொடர்பும் இல்லை. இந்தத் தோற்றங்களை நினைந்து உணர்ந்திருக்க வேண்டும் என்பதும் இல்லை. பல விலங்குகள் அவற்றின் சூழ்நிலை இயல்களைப் பார்க்கின்றதுடன் நின்றுவிடுகின்றன; சில, சூழ்நிலையை உட்கவர்ந்துகொள்கின்றன.

மற்றச் சீவராசிகளிலிருந்து இந்த எடுத்துக்காட்டு முற்றிலும் தன் இயலில் வேறுபட்டிருந்த போதிலும், குழந்தைமையில் நடைபெறுகின்ற உளவியல் நிகழ்ச்சிகளைப் புரிந்துகொள்வதற்கு உதவி புரிகின்றது.

# 7. தெய்விகக் கரு

## (Spiritual Embryo)

பிறந்த குழந்தை தானே உருவாக்கும் தொழிலைச் செய்ய வேண்டியிருக்கிறது. தூல உடற்பகுதியில் கருவானது உருவாக்குந் தொழிலை இது வரை செய்து வந்திருக்கிறது. இதைப் போலவே உள வியற்பகுதியிலும் நடைபெற வேண்டியிருக்கிறது. சிறு குழந்தை கருப்பையில் நடத்தி வந்த வாழ்க்கைக்கு முற்றிலும் மாருன ஒரு பருவம் காத்துக்கொண்டிருக்கிறது. இந்த வாழ்க்கை இது இனிமேல் ஆகப்போகும் மனிதனுக்கு வேருனதாயும் இருக்கிறது. இந்தப் **பிறந்த பின் தொழில்** (Post–natal Work) என்பது ஒரு படைப்புத் தொழில் ஆகும். இது **வளரும் பருவத்தில்** (Formative Period) நடைபெறுகிறது. இந்தத் தொழில் குழந்தையை ஒரு **தெய்விகக் கரு** ஆக்குகிறது.

மனிதனுக்கு இரண்டு கருப்பருவங்கள் இருப்பது போலத் தோன்றுகிறது. ஒன்று, மற்ற விலங்குகளில் இருப்பது போலக் '**கருவின் முற்பருவம்**' (Pre-natal); மற்றது. '**கருவின் பிற்பருவம்**' (Ante-natal). இந்த இரண்டாம் பருவம் மனிதனில் மட்டும் காணப்படுகிறது. நீண்ட குழந்தைப் பருவத்தால் மனிதனை மற்ற விலங்குகளிலிருந்து முற்றிலும் வேறுபடுத்த வேண்டியிருக்கிறது. இந்த நீண்ட குழந்தைப் பருவத்துக்கு நாம் கொடுக்க வேண்டிய பொருள் இதுவாகத்தான் இருக்கும். இந்தப் பருவம் பெரிய அரண் போல இருக்கிறது ; அல்லது பெரிய வேலி என்று கூறலாம். இதனுல் மனிதன் மற்ற விலங்குகளிலிருந்து வேருய்க் காணப்படுகிருன். அவனுடைய சத்திகளெல்லாம் விலங்குகளி லிருந்து நேரடியாக வந்தனவும் அல்ல ; தொடர்ந்து வந்தனவுமல்ல. அவன் பூமியில் தோன்றியது வாழ்க்கையில் ஒரு பெரிய தாண்டுதல் ஆகும். புதிய விதிகளுக்கு (Destinies) இவை தொடக்கப் புள்ளி யாய் இருக்கலாம்.

ஓர் இனத்திலிருந்து மற்ரேர் இனத்தை நாம் தெரிந்துகொள்வதற்கு நமக்கு உதவி புரிவது யாது ? அது அவற்றுக்கு இடையே உள்ள வேற்றுமையே ஆகும்; என்றும் ஒற்றுமை அன்று. ஒரு தனி இனத்தைத் தோற்றுவிப்பது எப்பொழுதும் ஏதோ ஒன்று புதுமையாய்த் தோன்றி இருப்பதே. அது வெறும்பழமையிலிருந்து வந்ததன்று. அது ஒரு புதுப் பாங்குடைமையைக் (Originality) காட்டுகிறது. இதற்கு முன் இல்லாத சிறப்பியல்புகளை அது பெறுகிறது. சீவராசி உலகில் ஒரு புதுத் தூண்டுதல் தோன்றியிருக்கிறது.

பாலூட்டிகளும் பறவைகளும் உலகில் தோன்றிய போது அப்படித்தான் இருந்தன. அவை புதுமைகளைப் பெற்றன. அவை வெற்று 'நகல்கள்' அல்ல; அல்லது ஒருவாறு அமைத்துக்கொண்டவையும் அல்ல; முன் சென்ற விலங்குகளின் தொடர்ச்சியும் அல்ல. டினேசார்ஸ்[1] இனம் அழிந்த போது புதுமை இயல்கள் பறவை இனத்தில் தோற்றம் அளித்தன. முட்டைகளை உயிரைக் கொடுத்துக் காக்கும் பண்பும், **கூடு கட்டும் திறமையும் குஞ்சுகளை அஞ்சாதபடி பாதுகாப்பதும்** ஆகிய இவை இது வரை இல்லாதவை; புதியனவாகத் தோன்றினவை. அறிவற்ற பல்லி இனம் இதற்கு நேர் எதிர்மறையாய் எப்பொழுதும் தன் முட்டைகளைப் பாதுகாவாமல் விட்டுச் சென்றது. பாலூட்டிகள் தம் இனத்தைப் காப்பதில் பறவைகளையும் மிஞ்சிவிட்டன. பாலூட்டிகள் கூடுகளைக் கட்டவில்லை; தங்கள் **குட்டிகளைத் தங்கள் வயிற்றுக்குள்ளேயே வளரவிட்டுத் தங்கள் இரத்தத்தால் ஊட்டி வந்தன.**

இவை இது வரை காணப்பெருத உயிர் இனச் சிறப்புக் கூறுகள் (features) ஆகும்.

பிறகு ஒரு புதிய சிறப்பியல் தோன்றிற்று. அதுதான் மனிதன். மனித இனத்துக்கு இரட்டைக்கரு வாழ்க்கை உண்டு. அது ஒரு புதுத் திட்டத்துக்குப் படைக்கப்பட்டிருக்கிறது; மற்ற விலங்குகளை விடப் புதிய குறிக்கோளைப் பெற்றிருக்கிறது.

இந்த இடத்தில் நாம் சற்றுச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. குழந்தை வளர்ச்சியைப் பற்றியும், மனித உளவியற்பகுதியைப் பற்றியும் நம்முடைய ஆராய்ச்சிகள் இனிப் புதியனவாகத் தொடங்க வேண்டியிருக்கின்றன. உலகில் மனிதன் வேலையானது அவனது சத்தியுடன் (Spirit) தொடர்பு கொண்டதாயின், ஆக்குகின்ற தனது நுண்ணறிவுடன் சம்பந்தப்பட்டதாயின், அவனது சத்தியும் நுண்ணறிவும் அவனது வாழ்வுக்கும் உடலின் எல்லா நடத்தைகளுக்கும்

---

1. Dinosaurs

ஆதாரம் போல ஆகின்றன. இந்த ஆதாரத்தைச் சுற்றிலும் அவனுடைய நடத்தையும் உடல் நிருவாகமும் ஒழுங்குபடுத்தப்படுகின்றன. முழு மனிதன் ஒரு வகையான தெய்விகப் பரிவேடத்துள் (Halo) வளர்கிருன்.

இன்று இக்கருத்தை மேனுட்டுக் கொள்கையாரும் ஏற்றுக்கொள்ள ஆயத்தமாய் இருக்கின்றனர். இந்தக் கருத்துகள் இந்திய மெய்யறி நூலில் (Philosophy) முக்கியத்துவம் பெற்று வந்திருக்கிறது. உளவியல் நிலைமைகளால் ,உடற்குழப்பங்கள் நடைபெறுகின்றன என்னும் உண்மை நம்முடைய அனுபவத்திலிருந்து கவனிக்க வேண்டியிருக்கிறது; சத்தியால் தக்க கட்டுப்பாடுகளை அனுசரிக்க முடியாத நிலையில் இருக்கிறது.

மனிதனுடைய இயல் தெய்விகப் பரிவேடத்தால் ஆளப்படுகிறதென்றும், அவனை மலரச் செய்கிறதென்றும், இதையே எதிர் பார்த்து அவனுடைய நடத்தைகளை எல்லாம் இதனிடமிருந்தே பெறுகிருன் என்றும் நாம் ஒப்புக்கொண்டால், பிறந்த குழந்தைக்கு நாம் அளிக்கவேண்டிய முதற்பாதுகாப்பு யாது? மற்றவை எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் குழந்தையின் மன வாழ்க்கையின்மேல் நாம் கவலை செலுத்த வேண்டும். இன்று எல்லாரும் பழக்கத்தில் செய்வது போலக் குழந்தையின் உடல் வாழ்வை மட்டும் கவனித்துக் கொள்ளுதல் போதாது.

வளரும் குழந்தை, மனிதனது பெற்றி (Faculty) அல்லது மன வன்மை, உடல் வலிமை, நுண்ணறிவு, மொழி ஆகியவற்றைப் பெறுகின்றது; அக்காலத்திலேதான் இனிமேல் படைத்துக்கொள்ளப் போகும் பேர்வழியைத் தன்னைச் சூழ்ந்துள்ள சூழ்நிலைக்குத் தக்கவாறு அமைத்துக்கொள்கிறது. குழந்தையின் இந்த உளவியல், தன்மையால் சிறப்படைகிறது. வயது வந்தவர்களுடைய உளவியற் போக்கே வேறு வகையானது. நமக்குச் சூழ்நிலையிடத்தில் இருக்கும் தொடர்புக்கும் குழந்தை கொண்டிருக்கும் தொடபுக்கும் வேற்றுமை உண்டு. குழந்தை அதை அப்படியே உட்கவர்ந்துகொள்கிறது. ஆனல், பெரியவர்கள் சூழ்நிலையைக் கண்டு வியக்கின்ருர்கள். அதை நினைவுபடுத்திக்கொள்ளவும் அவர்களால் இயலும். குழந்தை தான் பார்க்கின்ற பொருள்களை நினைவுபடுத்திக்கொள்வது மட்டும் அன்றி, அதை அப்படியே உட்கவர்ந்துகொள்ளவும் செய்கிறது. குழந்தை காண்பதெல்லாம் தன் மனத்தில் இருப்பது மட்டும் அன்று; தன் ஆன்மாவின் ஒரு பகுதியாயும் ஒன்றிவிடுகிறது. அது தன்னுடைய செவிகளால் கேட்கப்படுவனவற்றையும், கண்களால் காணப்படுவனவற்றையும், சூழ்நிலை முழுதுமே தன் உள்ளத்தில்

பதித்துக்கொள்கிறது. அதே பொருள்கள் நம்மிடத்தில் ஒரு மாறு தலையும் தோற்றுவிப்பதில்லை. ஆனால், குழந்தையோ என்றால், அவற்றால் உரு மாற்றப்படுகிறது. இது உயிர்ப்புடைய ஒரு நினைவு. இது நனவால் நினைப்பதில்லை ; தனிப் பேர்வழியின் உள்ளக்கிடை யில் உட்கவர்ந்துகொள்ளப்படுகிறது. சர். பெர்சி நன் என்பவர் இத்தகைய நினைவுக்கு 'நீம்' அல்லது 'நெமி'(Mneme) என்னும் தனிப் பெயர் இட்டிருக்கிறார்.

நாம் ஏற்கெனவே ஆராய்ந்தது போல இதற்கு ஓர் எடுத்துக் காட்டாக மொழியைக் கூறலாம். குழந்தை ஒலியை நினைவுபடுத்திக் கொள்ளவில்லை. அப்படியே தன் உள்ளத்தில் பதித்துக்கொள்கிறது. மறுபடியும் பிழைபடாமல் திருப்பி ஒலிக்கச் செய்ய இயலும். குழந்தை யின் மொழியில் காணப்படும் சிக்கலான விதிகளுடன் பேச இயல் கிறது. எல்லா விதி விலக்குகளையும் அது தெரிந்துகொண்டிருக் கிறது. இந்தச் சாதனை அந்த மொழியைப் படித்ததனாலோ, அல்லது நினைவுபடுத்திக்கொள்வதனாலோ பெறப்படவில்லை. ஒரு வேளை அதன் நனவால் மொழியை இருத்திக்கொள்வதில்லை போலும்! எனினும், அதன் மொழியானது அதனுடைய உள வாழ்வையும் தன்னையுமே ஆக்குவதற்கு ஓரளவு பங்கு எடுத்துக்கொள்கிறது. வெற்று நெமிச் செயலின் (Mnemonic activity) மாறுபட்ட ஒரு தோற்ற நிலையைப்பற்றி நாம் ஆராய்ந்து வருகிறோம் என்பதற்கு ஐயம் இல்லை. குழந்தையின் மிக அற்புதமான மனப் பகுதியைப்பற்றி நாம் கவனித்து வருகிறோம். குழந்தையிடம் ஒரு தனிப்பட்ட உணர்ச்சி இருந்து வருகிறது. அதனால், தன்னைச் சூழ்ந்துள்ளவை அனைத்தையும் அது உட்கவர்ந்துகொள்கிறது. இம்மாதிரி கவனிப்பதும் உட்கவர்ந்துகொள்வதுமே குழந்தையை வாழ்க்கைக்குத் தக்க முறையில் அமைத்துக்கொள்ள உதவி புரிகிறது. நனவில்லாத நிலையில் தன்னுள் காணப்படும் ஒரு வகையான சத்தி யால் குழந்தை இதை எல்லாம் சாதிக்க வல்லதாய் இருக்கிறது. இது குழந்தைமையிலேதான் இருக்கிறது.

குழந்தை வாழ்க்கையின் முதற்பருவம் தழுவல் (adaption) ஆகும். இந்தப்பொருளில் தழுவல் என்பது என்ன என்பதை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. வயது வந்தோர் கையாளும் தழுவல் வேறு, இது வேறு என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. குழந்தையின் தனித்தழுவல் திறமை, தான் பிறந்து வளர்ந்த நாட்டில்தான் என்றும் வாழவேண்டும் என்ற ஆவலை ஊட்டுவித்துவிடுகிறது. இதைப்போலவே பிழையின்றிப் பேசக்கூடிய ஒரே மொழி தன் தாய் மொழியைத் தவிர வேறு எதுவும் இல்லை. வெளி நாட்டில் வாழ்கின்ற வயது வந்த ஒருவரின்

வாழ்க்கையில் இந்த வகையிலோ, இந்த அளவிலோ தழுவலைக் காண இயலுவதில்லை. கிறித்தவப் பாதிரிமார்களைப் பாருங்கள். அவர்கள் தங்கள் சொந்த விருப்பத்தால் கடல் கடந்த நாடுகளுக்குச் சென்று தங்கள் தொழிலைச் செய்து வருகிருர்கள் ; அவர்களைக் கேட்டால், 'இங்கு வாழ்ந்து எங்கள் வாழ்க்கையையே தியாகம் செய்கிறேம்,' என்கின்றுர்கள். பெரியவர்களின் தழுவல் திறமையில் காணப்படும் ஓர் இயற்கைக் குறைபாடு இங்கு ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆனல், சிறு குழந்தையைப் பாருங்கள். குழந்தை எந்த ஊரில் பிறக்கிறதோ—அது எதுவானுலும் சரி—அந்த ஊரைக் காதலிக்கத் தொடங்கிவிடுகிறது. அந்த இடத்தில் வாழ்க்கைக் குறைபாடுகள் எத்தனை இருந்த போதிலும், அதில் காணப்படும் இன்பத்தை வேறு எந்த ஊரிலும் அது காண்கிறதில்லை. ஒருவன், ஃபின்லந்து நாட்டுப் பனி வெளியை விரும்புகிருன் ; மற்றெருவன், ஹாலந்து மணல் வெளியை விரும்புகிருன். ஒவ்வொருவனும் இந்த **நாட்டுப்பற்றைக் குழந்தைப் பருவத்திலிருந்தே தழுவிக்கொண்டிருக்கிருன்.**

குழந்தைதான் இதை நடைபெறச் செய்திருக்கிறது. பெரியவன் தன்னிடம் இந்தத் திறமை இருப்பதாக உணர்கின்ருன் ; தான் இந்த நாட்டைச் சேர்ந்தவன் என்று உணர்கின்ருன். அவனுக்கு நாட்டின் மேல் பற்று ஏற்பட்டுவிடுகிறது. அவன் நாட்டின் மேன்மையை உணர் கிருன். வேறு எங்கும் இந்த அளவில் அமைதியும் இன்பமும் அவனுல் காண இயலுவதில்லை.

முன் காலத்தில் இத்தாலி நாட்டுக் கிராமத்தில் பிறந்தவர்கள் அங்கேயே வளர்ந்து காலமானுர்கள். வேறு எந்தத் தொலைவான ஊருக்கும் அவர்கள் போனதில்லை ; இத்தாலி ஆட்சி உரிமை பெற்ற ஒரு நாடான பிறகு, திருமணத்திற்காகவும், தொழிலுக்காகவும், வேறு பல காரணங்களுக்காகவும் தங்களுடைய பிறந்த ஊரை விட்டு வெளியூர்களுக்குச் சென்ருர்கள். பிறகு அவர்களுடைய முதுமைப் பருவத்தில் பல அதிசயமான நோய்களால் அவர்கள் துன்புற்ருர்கள். வற்றுதல், மனத்தளர்ச்சி, உடல் தளர்ச்சி, இரத்தம் இன்மை போன்ற பல நோய்களால் அவர்கள் வருந்திஞர்கள் ; பல விதச் சிகிச்சைகளை அனுசரித்துப் பார்த்தார்கள். ஒன்றும் பயனளியாத தால் வைத்தியர்கள் கடைசியாக நோயுற்றவர்களை அவரவர் பிறந்து வளர்ந்த ஊருக்கே போய் அங்குள்ள காற்றைச்சுவாசித்தால் எல்லாம் சரியாகிவிடும் என்று சொன்னுர்கள். எல்லாரும் இந்த முறையை அனுசரித்ததால், பெரும்பாலும் குணமடைந்தார்கள். நோயுற்றவர்கள் தங்களுடைய பழைய நிறத்தையும் உடல் நலத்தையும் பெற்ருர்கள்.

ஒருவன் இதுவரை இருந்த சூழ்நிலைத் தட்பவெப்பம் நன்ருய் இருந்தும், தன் பழைய ஊர்க்காற்று மோசமாய் இருந்த போதிலும் அதுவே நோயாளியைக் குணமடையச் செய்யவல்லது என்று பொதுவாக எல்லோரும் எண்ணிவந்தார்கள். இந்த நோயாளிகளுக்கு உண்மையில் வேண்டுவது என்னவென்ருல், குழந்தைப் பருவத்தில் வாழ்ந்த ஆடம்பரம் அற்ற இடங்களிலிருந்து அடிமனம் பெறக்கூடிய அமைதியே ஆகும்.

இந்த உட்கவரும் மனத்தைப்போல நமக்கு முக்கியமானது வேருென்றும் இல்லை. இந்த உட்கவரும் மனமே வயது வந்தவர்களை உருவாக்கி, எத்தகைய சமூக வாழ்க்கைக்கும், சிநேகத்துக்கும், நாட்டுக்கும் தக்கவாறு வாழும் திறமையை உண்டாக்கிவிடுகிறது. நம்முடைய ஆராய்ச்சி எல்லாம் இதைப் பொறுத்திருக்கிறது. ''நான் என் நாட்டின்மேல் பற்றுடையேன்,'' என்று ஒருவன் கூறினுல், அது ஆழமற்ற பேச்சன்று ; செயற்கைச் சொல்லும் அன்று. அது அவனுடைய அடிப்படை வாழ்வையும் அவனையும் ஒருவாறு வெளியாக்குகிறது. இத்தருணத்தில் அது சிந்தனைக்குரியது.

குழந்தையிடம் ஒரு விசேஷமான உளவியல் தன்மை இருக்கிறது. அது வாழ்கின்ற நாட்டின் பழக்க வழக்கங்களை உட்கவர்ந்துகொள்கிறது ; அவ்வாறு செய்வதால் அந்த நாட்டுக்கும் அந்தக் காலத்துக்கும் தகுந்த பேர்வழியை உருவாக்கிவிடுகிறது. இதெல்லாம் நடைபெறுவதைப் புரிந்துகொண்டு குழந்தையின் உளவியலுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிருேம். உள்ளூர் நடையுடை பாவனை என்பதும் ஓர் அதிசயப் படைப்பாகும், இதுவும் குழந்தையின் இளமைப்பருவத்தில் ஆக்கப்படுகிறது. ஒரு மாவட்டத்தின் பழக்க வழக்கங்களும் அதன் தனி மனப்போக்கும் இயற்கையாய் வந்தவையும் அல்ல; பிறவியிலேயே தோன்றியவையும் அல்ல. எனவே, குழந்தையின் செயல்களின் முழுச் சித்திரத்தை ஒருவாறு நாம் புரிந்துகொள்ளத் தொடங்கியிருக்கிருேம். குழந்தை வாழ்ந்து வரும் காலத்துக்கும் மாநிலத்துக்கும் பொருத்தமான முறையில் தன் நடத்தையை வளர்த்துக்கொள்வதுடன் அந்த மாநிலத்தார் மனப்போக்கையும் தன்னுள் படைத்துக்கொள்கிறது. எடுத்துக்காட்டாக, இந்தியாவில் வாழ்க்கையில் காட்டப்படும் அன்பு விலங்குகளிடமும் காட்டச் சொல்கிறது. இந்த விலங்கினங்களின்மேல் உள்ள கருணை போற்றுதலாக மாறிவிடுகிறது. இது மக்களுடைய நெஞ்சில் வேரூன்றிக் கிடக்கிறது. இத்தகைய ஆழ்ந்த பற்றுதலை வயது முதிர்ந்தோர்களால் ஒரு நாளும் பெற இயலாது. 'சீவகாருண்யம் வேண்டும்,' என்று சொன்ன மாத்திரத்தில் அந்த உணர்ச்சி நம்முடையது ஆகிவிடுவதில்லை. இந்தியர்கள் எண்ணுவது உண்மையே என்று நான் நினைக்க

லாம். நானும் சீவராசிகளிடம் கருணை காட்டவேண்டும் என்றும் நினைக்கலாம். ஆனால், இதெல்லாம் என்னுள், ''ஆம்; இது நியாய மானதே,'' என்ற அளவோடு நின்றுவிடும் ; என் மனவெழுச்சியைத் தூண்டி விடுவதில்லை. உதாரணமாக, இந்தியர்களுக்குப் பசுவின் மீதுள்ள பாசத்தை என்னைப்போன்ற ஐரோப்பியர்களால் என்றும் உணர இயலாது. அதே போல எவ்வளவு தனக்குள்ளே வாதாடினாலும், இந்தப் பாசத்தைத் தன் உள்ளத்திலிருந்து ஓர் இந்தியனால் அகற்ற இயலாது. **இந்த மனச்சிறப்பியல்கள் வழிவழியாக வருவன போலத் தோன்றுகின்றன; ஆனால், குழந்தையின் சூழ் நிலையிலிருந்து குழந்தைப்பருவத்தில் படைக்கப்பெற்றவை.** ஒரு நாள் ஒரு மாண்டிசோரி பள்ளியைச் சேர்ந்த தோட்டத்தில் சுமார் ஈராண்டு வயதுள்ள இந்து குழந்தையைப் பார்த்தோம். அது தரையை உற்று நோக்கிக்கொண்டு தன் விரலால் ஒரு கோட்டை வரைந்து கொண்டிருந்தது. அங்கு இரண்டு கால்களை இழந்த ஓர் எறும்பு நடக்க இயலாமல் தள்ளாடிக்கொண்டிருந்தது. குழந்தை எறும்பின் திண்டாட்டத்தைக் கவனித்தது. அதற்கு உதவி புரிய வேண்டும் என்ற நோக்கத்தால் தன் விரலால் ஒரு வழி அமைத்துக்கொண்டிருந்தது. அந்த இந்தியக் குழந்தை இத்தகைய விலங்கின்மேல் பற்றை வழி வழியாகப் பெற்றிருக்கவேண்டும் என்று எவரும் தீர்மானித்திருப்பார்கள்.

வேறொரு குழந்தை இதே சம்பவங்களைக் கண்டு அருகில் நெருங்கிற்று ; எறும்பைப் பார்த்தது ; அதைத் தன் காலால் மிதித்து நசுக்கி விட்டது. இந்த இரண்டாவது குழந்தை ஒரு முஸ்லிம் குழந்தை. ஒரு கிறித்தவக் குழந்தையும் ஒரு வேளை இதையே செய்திருக்கும் ; அல்லது இதைக் கவனியாததுபோல அப்பால் சென்றிருக்கும். 'நாம் வேறு ; விலங்குகள் வேறு,' என்னும் ஓர் உணர்ச்சி நம்மைத் தனியாக்கி, 'அன்பும் மரியாதையும் மக்களுக்கே உரியன, விலங்கினங்களுக்கு இல்லை,' என்று நினைக்கச் செய்கிறது. மனத்திலே தோன்றக்கூடிய பாரம்பரியத்துக்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

உலகத்தின் வெவ்வேறு நாடுகள் வெவ்வேறு மதங்களைத் தழுவுகின்றன. ஒரு மதத்தின் பழைய கொள்கைகளை மறுக்க மக்கள் மனம் ஒப்புக்கொண்டாலும், நெஞ்சம் அவ்வாறு செய்வதைக் குறித்துக் கலவரப்படுகிறது. இந்த நம்பிக்கைகளும் உணர்ச்சிகளும் நம் உள்ளத்துடன் ஒன்றிவிட்டவை. ஐரோப்பியர் கூறுவது போல, ''எங்கள் இரத்தத்துடன் கலந்துவிட்டது,'' எனலாம். **சமூகக் கொள்கைகளும் நன்னெறிக் கொள்கைகளும் ஒருவனுடைய ஆளுமையை உருவாக்குகின்றன.** சாதிப்பற்று, இன்னும் ஓர் இந்தியனாகவோ, இத்தாலியனாகவோ, ஆங்கிலேயனாகவோ செய்வன எல்லாம் குழந்

தைப் பருவத்திலேயே செய்யப்படுகின்றன. இவையெல்லாம் உளவியலார் கூறுகின்ற அந்த 'நெமி' (Mneme) என்ற மாயமான மனச்சத்தியால் நடைபெறுகின்றன.

மக்கள் நடையிலே ஓர் எடுப்பும், சாயலும், அசைவும் ஒரு சாதி மக்களை மற்றொரு சாதி மக்களிலிருந்து பிரித்துக்காட்டுகின்றன. இதற்கு மேலே கண்ட உண்மை பொருந்தும். கொடிய விலங்குகளோடு போரிடும் திறமை பெற்ற ஆப்பிரிக்க மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் இதற்குத் தக்க உடற்கட்டமைப்பைப் பெற்றிருக்கின்றார்கள். வேறு சிலர் தம் நடத்தையில் திண்மை உண்டாவதற்கு இயற்கையாகவே தங்களுடைய செவியில் ஒலிப்பதிவு சரியாக அமையத்தக்க பொருத்தமான உடற்பயிற்சிகளை இயற்கையாகவே செய்து வருகின்றார்கள். இவ்வாறு செவியின் நுண்மை குறிப்பிட்ட குழுவினரைக் குறித்துக் காட்டிவிடுகிறது. **தனக்கென்று ஏற்பட்ட நடத்தையெல்லாம் குழந்தைப் பருவத்தில் உட்கவரப்படுகிறது.** இது என்றும் அழியாத நிலையில் பதிந்துவிடுகிறது. நியாயம் அநியாயம் என்ற தர்க்க வாதங்களால் இவை பிற்காலத்தில் ஒதுக்கப்பட நேர்ந்தாலும், இவற்றில் ஒரு பகுதி அடி மனத்தில் நிலைத்துவிடுகிறது. ஏனெனில், குழந்தைப் பருவத்தில் எது உருவாயிருக்கின்றதோ, அதை அடியோடு அழித்துவிட முடியாது. **'நெமி'. என்பதைச் சிறந்த நினைவு என்று கொள்வோம்.** இந்த **'நெமி' ஒரு தனியாளின் தனிப்பட்ட சிறப்பியல்களை உருவாக்குவதுடன், அவற்றை உயிர்ப்புடன் இருக்கும்படியும் செய்கிறது.** குழந்தை உட்கவர்ந்துகொண்டது அதன் ஆளுமையின் இறுதிப்பங்காய் நின்றுவிடுகிறது. அப்படியே குழந்தையின் உறுப்புகள் விஷயத்திலும் நடைபெறுகிறது. வயது வந்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு தனித்தன்மையைப் பெற்றவராய் இருக்கின்றனர். இந்த அடையாளம் குழந்தைப் பருவ வாழ்க்கையில் முத்திரை வைத்தது போலப் பதிந்துவிட்டிருக்கிறது.

ஆதலால், வயது வந்தவர்களைத் திருத்துவது என்பது வீணாகும். ''இந்த மனிதனுக்கு நல்ல பழக்கம் இல்லை,'' என்கிறோம். ''இவன் நடை என்ன மந்தமாய் இருக்கிறது ?'' என்று நாம் கூறும் பொழுது எளிதில் அவர்களைப் புண்படும்படி செய்துவிடலாம் ; அவர்களுடைய குறைபாடுகளை உணரும்படியும் செய்துவிடலாம். எனினும், குறைகள் நீங்கினபாடில்லை. ஏனென்றால், அவை ஆழத்தில் பதிந்து கிடக்கின்றன ; மாற்ற இயலாதன.

மனிதன் பல சரித்திர யுகங்களுக்குத் தக்கவாறு **தழுவல்களைப்** (Adaptations) பெறுகிறான். இங்கும், இதே கருத்து விளக்கம் தருகிறது. பழங்கால மனிதன் இக்காலத்தில் வாழ இயலாது. ஆனால்,

குழந்தை பிறக்கும்பொழுது நாகரிகம் எந்த அளவுக்கு முன்னேறி இருக்கிறதோ, அந்த அளவுக்குக் குழந்தையும் தன்னை அனுசரித்துக்கொள்கிறது. அந்த நாகரிக நிலை எதுவானாலும் சரி, அந்த நாகரிகத்தை அனுசரித்து வாழக்கூடிய பழக்க வழக்கமுடைய மனிதனைப் படைப்பதில் குழந்தை வெற்றி பெற்றுவிடுகிறது. **தனி ஆள் வளர்ச்சியில்** (Ontogenesis) குழந்தையின் உண்மையான பணி என்னவென்றால், தழுவலே. குழந்தை நடத்தையின் ஒரு மாதிரியைப் படைப்பித்துத் தன்னைச் சூழ்ந்துள்ள உலகத்தில் சுதந்தரத்துடன் நடந்துகொள்ளவும், சூழ்நிலையைப் பாதிக்கவும் செய்கிறது.

எனவே, இன்றைய குழந்தை பல்வேறு சரித்திர யுகங்களையும், வெவ்வேறு நாகரிக நிலைகளையும் ஒன்றுபடுத்தும் ஒரு சங்கிலி என்று கருதப்பட வேண்டும். குழந்தைப் பருவம் மிகவும் முக்கியமானது. ஏனென்றால், புதுக்கருத்துகளை மக்களிடையே புகுத்த வேண்டுமானாலும், மக்களுடைய பழக்க வழக்கங்களில் மாற்றமோ சீர்திருத்தமோ செய்ய வேண்டுமானாலும், தேசிய நடவடிக்கைகளில் புது உணர்ச்சியைத் துடிக்கச் செய்ய வேண்டுமானாலும், குழந்தையை நாம் துணையாக உபயோகிக்க வேண்டும். ஏனெனில், வயது வந்தவர்களைக் கொண்டு ஒன்றும் சாதிக்க இயலாது. பொதுவாகச் சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென்று நாம் உண்மையாக விரும்பினோமானால், குறிப்பிட்ட மக்களிடையே நாகரிகத்தின் முன்னேற்றச் சாதனைகளைப் பரவச் செய்யவேண்டுமானால், இவற்றைச் சாதிப்பதற்கு நாம் குழந்தைகளிடம் முயற்சி செய்ய வேண்டும்.

பிரிட்டிஷார் இந்தியாவில் ஆட்சி புரிந்த இறுதிக்காலத்தில் பிரிட்டிஷ் தூதருடைய குடும்பத்தார் தம் இரண்டு குழந்தைகளையும் ஓர் ஆயாள் மூலம் ஓர் இந்திய உணவு விடுதிக்கு அனுப்பி உணவு அருந்திவரச் சொல்வது வழக்கமாய் இருந்தது. அங்கே ஆயாள் தரைமேல் உட்கார்ந்துகொண்டு இந்தியர்களைப்போலக் கையால் உணவு அருந்தும் பழக்கத்தைக் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுத்தாள். இவ்வாறு செய்ததன் நோக்கம் யாது ? இத்தகைய இந்தியர் பழக்கம் பொதுவாக ஐரோப்பியர்களால் வெறுக்கப்படுகின்றது. ஆனால், அந்தக் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகும் பொழுது அத்தகைய வெறுப்பு அவர்களிடம் தோன்றாதிருக்குமாறு இவ்வாறு பழக்கி வந்தாள். அவ்வாறே இக்காலப் பழக்கத்தில் இருப்பவை மிகத் தாழ்ந்தவை எனக் கருதப்பட்டு, பண்டைப் பழக்கங்களை நடைமுறையில் கொண்டு வரவேண்டுமென்றால், குழந்தைகளால் அல்லாமல் வேறு யாரும் அவற்றைச் சாதிக்க இயலாது.

சமூகத்தைச் சீர்திருத்த வேண்டுமென்றால், குழந்தைகளிடம் நம் கவனத்தைச் செலுத்தவேண்டும். இதிலிருந்து நர்சரிப் பள்ளிக்கூடங்

களின் முக்கியத்துவம் வெளியாகிறது. ஏனென்றால், மனித இனத்தைப் படைத்துக்கொண்டிருப்பவர்கள் சின்னஞ்சிறு குழந்தைகள் ஆவார்கள். அவர்களும் நாம் கொடுக்கக்கூடிய பொருள்களை வைத்துக் கொண்டுதானே செயலாற்ற இயலும் ? குழந்தைகளின் மூலமாகக் கல்வி புகுத்தக்கூடிய நிறைந்த செல்வாக்கானது அதன் சூழ்நிலையில் இருக்கிறது. ஏனெனில், குழந்தை தன் சூழ்நிலையை உட்கவர்ந்து கொள்கிறது; சூழ்நிலையில் தோன்றுவனவற்றை எல்லாம் தன்னுள் எடுத்துக்கொண்டு தன்மயம் ஆக்கிக்கொள்கிறது. குழந்தைக்கு இது தான் செய்ய இயலும் என்ற வரம்பு இல்லை. குழந்தை மனித சமூகத்தையே அடியோடு மாற்றும் கருவியாகிவிடலாம். மனித சமூகத்தைப் படைப்பது போலப் புதுப்பிக்கவும் குழந்தையால் இயலும். மனித சமுதாயத்தை உயர்ந்த செல்வாக்கில் வாழவும், ஒருவரோடொருவர் அன்புடனும் ஆதரவுடனும் வாழவும், உயர்ந்த தெய்விக நிலையை அடையவும் ஆசிரியர்களாகிய நாம் எவ்வளவோ உதவி புரியக் கூடும்.

## கருவின் உளவியல் வாழ்வு

பிறப்பிலிருந்து குழந்தைக்கு முக்கியமான ஓர் உள வாழ்வு இருப்பதாக எண்ணி நாமும் அதற்குத்தக்கவாறு நடத்தவேண்டும். இப்பொழுதெல்லாம் அன்று பிறந்த குழந்தையின் மன வாழ்வைப் பற்றி மிகுந்த கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. உள இயலார்க்கு இந்த ஆராய்ச்சி மிகவும் அக்கறையை உண்டாக்கிவிட்டிருக்கிறது. குழந்தையின் உடல் வளர்ச்சியைப் பொறுத்த மட்டில் உடல் நல இயலும், குழந்தை நோய் இயலும் (Pediatrics) தோன்றி இருப்பதை நம் கண் முன்னால் காண்கிறோம். அதே போலக் குழந்தையின் மன வாழ்வைப் பற்றியும் ஒரு புது விஞ்ஞானம் தோன்றலாம்.

எனவே, பிறந்த குழந்தையிடம் மனவாழ்வு ஒன்று இருப்பதானால், அது ஏற்கெனவே பிறப்பதற்கு முன்னும் இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால், அது எப்படிப் புதிதாக வந்திருக்க இயலும் ? அது கருவிலேயே இருந்திருக்க வேண்டும் என்பதற்கு ஐயம் இல்லை. இந்தக் கருத்தை முதலில் ஒப்புக்கொள்ள ஆரம்பித்த பொழுது, கரு வாழ்வில் எப்பொழுது மன வாழ்வு தொடங்கிற்று என்ற கேள்வியும் கூடவே பிறந்தது. சில சமயங்களில் குழந்தைகள் பத்து மாதத்தில் பிறப்பதற்குப் பதிலாக ஏழுமாதங்களிலும் பிறப்பதை நாம் பார்த்திருக்கிறோம். ஏழு மாதங்களில் குழந்தை உயிருடன் வாழக்கூடிய அளவுக்கு உடல் வளர்ச்சி பெற்றிருக்கிறது. அதே போல, ஒன்பது மாதக் குழந்தையின் மனம் போல இந்த ஏழு மாதக் குழந்தையின் மனமும் செயல் புரிய வேண்டும். இந்த எடுத்துக் காட்டைப் பற்றி நான் அதிகம் விளக்க வேண்டுவதில்லை. எல்லா

உயிரினத்துக்கும் மனவாழ்வு உண்டு என்று நான் கூறுவதன் பொருள் விளங்கும். ஒவ்வொரு சீவராசியும் ஓரளவுக்கு உளச் சத்தி பெற்றதாய் இருக்கிறது. அந்தச் சீவராசி எவ்வளவு விருத்தி அடையாததாய் இருந்தாலும் சரி; அதனிடத்திலும் இந்தச் சத்தியைப் பார்க்கலாம். ஓருயிரணு விலங்குகளைக் கவனித்தோமானால், அவைகளும் உணர்வு பெற்றவை போலக் காட்சி அளிக்கின்றன; அபாயத்தைக் கண்டு விலகிக்கொள்கின்றன; உணவை நாடுகின்றன. இன்னும் பல வழிகளில் நடந்துகொள்கின்றன.

குழந்தையைப் பொறுத்த மட்டில் அண்மை வரைக்கும் அதற்கு ஒரு மனவாழ்வு இருப்பதாகவே கருதப்படவில்லை. இது வரை கவனத்துக்கு வாராத சில மனப்போக்குகள் குழந்தையினிடம் காணப்படுவதை விஞ்ஞான உலகம் ஏற்றுக்கொண்டிருக்கிறது.

சில உண்மைகள் ஒளிபெறத் தொடங்கிவிட்டன. இவை வயது வந்தவர்களுடைய அந்தக்கரணத்தில்-மனச்சாட்சியில்(Conscience)-புதிய ஒளி தரும் இடங்களாய் இருக்கின்றன. இவை நம்மிடம் இருக்கும் பொறுப்புகளைச் சுட்டிக்காட்டுகின்றன. பிறத்தலே திடீரென்று மக்களுடைய கற்பனையைத் தூண்டிவிட்டிருக்கிறது. அதனுடைய பலனை உளவியல் சிகிச்சைகளில் மட்டும் அன்றி, இலக்கியத்திலும் நாம் காண்கிறோம்.

'பிறப்பின் துணிவுச் செயலில் காணப்படும் கஷ்டங்கள்' என்று உளவியலார் பேசத் தொடங்கியிருக்கின்றனர். இது தாயைக் குறித்ததன்று; குழந்தையைக் குறித்தது. மறுப்புக்கூற இயலாத நிலையில் குழந்தை துன்பப்படுகிறது. அது தன்னுடைய வேதனைகளெல்லாம் முடிந்த பிறகே அழத் தொடங்குகிறது.

இது வரை குழந்தை வாழ்ந்து வந்த சூழ்நிலைக்கு முற்றிலும் மாறுபட்ட நிலையில் அனுசரித்து வாழ வேண்டும் என்ற நிலை திடீரென்று ஏற்பட்டிருக்கிறது. இது வரை செய்து வாராத செயல்களைப் பிறந்த போதே செய்ய வேண்டியிருக்கிறது. பிறந்தவுடன் அது அளவுக்கு மீறிச் சலிப்படைந்திருக்கிறது. அந்த நிலையில் இவற்றைச் சாதிப்பதென்றால், மனிதனது முழு வாழ்வில் இது மிகவும் கடினமானதும், மிகமிக விசித்திரமானதுமான சோதனை ஆகும். இக்கால உளவியலார் '**பிறப்பு அச்சம்**' (Birth terror) என்ற ஒரு சொற்றொடரை உருவாக்கியிருக்கின்றனர். குழந்தையின் மன வாழ்வில் இந்த முடிவு காணும் வகை ஆபத்தான தருணத்தைக் குறிக்கிறது.

கனவுடன் உள்ள அச்சத்தைப் பற்றி நாம் கவனிக்கிறோமில்லை. ஆனால், குழந்தையின் மனம் பேசக்கூடிய நிலையில் இருந்தால், அது பட்ட வேதனைகளை இவ்வாறு எடுத்துக்கூறும் : '' இந்தப் பாழான உலகில் என்னை ஏன் தள்ளிவிட்டாய் ? நான் என்ன செய்வது ? இந்தப் புது முறையில் நான் எவ்வாறு வாழ்வேன் ? இந்தப் பயங்கர ஒலிகளை எல்லாம் நான் எவ்வாறு பொறுப்பேன் ? நான் ஒரு முணு முணுத்தல் ஒலியையும் இது வரை கேட்டறியாதவனாயிற்றே ? அம்மா ! இது வரை நீ எனக்காகச் செய்து வந்த இக்கடினச் செயல்களை எல்லாம் நான் எவ்வாறு செய்ய வல்லேன் ? நான் எப்படி உண்டு செரிப்பேன் ? எவ்வாறு மூச்சு விடுவேன் ? இந்த மூர்க்கமான தட்பவெப்ப மாறுதல்களை எவ்வாறு நான் பொறுப்பேன் ? தாயே ! உன் வயிற்றுள் மாருத சமநிலைச் சீதோஷ்ணத்தில் இது வரை நான் களித்தவனாயிற்றே !'' என்றெல்லாம் முறையிடுவது போன்றிருக்கும்.

என்ன நடைபெற்றிருக்கிறது என்பது குழந்தைக்குத் தெரியாது, பிறப்பின் வேதனையைத் தான் அனுபவித்ததாக அதனால் அறிய இயலாது. ஆயினும், அந்த வேதனையானது நனவு நிலையில் இல்லா விட்டாலும், அதன் ஆன்மாவில் பதிந்துதான் இருந்திருக்கும். அதனுடைய **மறைவு நனவு** (Sub-conscious mind) மனத்தில் இந்த ' இன்னல்கள் ' என்று நான் மேலே குறிப்பிட்டனவற்றை உணர்ந்து தன் அழுகையால் வெளிப்படுத்துகிறது.

குழந்தை பிறந்தவுடன் இந்த உலகத்தோடு ஒட்டி வாழ்வதற்குத் தக்க வழிகளைத்தேடி உதவி புரியவேண்டும் என்று இந்தத் துறையில் பணியாற்றி வருபவர்கள் கருதுவது இயற்கையே. பச்சைக் குழந்தையும் அச்சத்தை அனுபவிக்கக்கூடும் என்பதை மறந்து விடலாகாது. குழந்தை பிறந்த சில மணி நேரங்களில் அதை வேகமாகக் குளிப்பாட்டும் தொட்டிக்குள் திடீரென்று தாழ்த்தினே மானால், அது 'கீழே விழுந்துவிடுவோமோ!' என்று அஞ்சுவதற்கு அறிகுறியாக இறுகப் பிடித்துக்கொண்டு அசைவதை நாம் அடிக்கடி பார்க்கிறோம். இது அச்சத்திற்குச் சரியான எதிர்மறை ஆகும். பிறந்த குழந்தைக்கு இயற்கை அன்னை எவ்வாறு உதவி புரிகிருள்? சில ஏற்பாடுகளைச் செய்கிருள் ; எடுத்துக்காட்டாகக் குழந்தையைத் தன் மார்போடு கட்டி அணைத்துக்கொள்ளும் ஓர் இயல்பூக்கத்தைத் தாய்க்கு அளிக்கிருள். இவ்வாறு செய்வதால், குழந்தை வெளிச்சத்தி லிருந்து காக்கப்படுகிறது. தாயும் சிறிது காலம் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் இருக்கிருள். தன்னுடைய நன்மைக்காக அசைவற்று இருக்கின்ற நிலையில் தன்னுடைய அமைதி குழந்தைக்கும் தேவைப் படுவதால் தாய் அதை அளிக்கத்தக்கவளாய் இருக்கிருள். தன் குழந்தைக்கு விளைந்த நாசங்களை எல்லாம் தாய் மறைவு நனவில்

அறிந்தவள் போல எல்லாம் நடைபெற்று வருகின்றன. குழந்தையை மார்புடன் இறுக அணைத்துக்கொண்டு தாய் தன் வெப்பத்தைக் குழந்தைக்குக் கொடுத்துப் பல புலனுணர்ச்சிகளிலிருந்தும் (Sensations) அதைக் காப்பாற்றுகிறுள்.

மனிதத் தாய்மார்களுள் இந்தத் தற்காப்பு முறைகளெல்லாம் விலங்கினங்களின் தாய்கள் அனுசரிக்கின்ற அளவு தீவிரமாகக் கடைப்பிடிக்கப்படுவதில்லை. தாய்ப்பூனை தன் குட்டிகளை இருண்ட மூலைகளில் மறைத்து வைப்பதைப் பார்க்கிறோம். அருகில் எவரேனும் வந்துவிட்டால், பூனை மனவமைதி அற்றதாகிவிடுகிறது. மனிதத் தாயின் இயல்பூக்கம் அவ்வளவு வலுப்பெற்றதன்று. ஆதலால், எளிமையில் அது மறைந்துவிடுகிறது. குழந்தை பிறந்தவுடனே எவரோ ஒருவர் குழந்தையை எடுத்துக்கொண்டு போகிறுர்; குளிப்பாட்டுகின்றுர்; ஆடை அணிவிக்கின்றுர்; அதனுடைய விழிகளைப் பார்ப்பதற்காக நல்ல வெளிச்சத்திற்குக் கொண்டு போகிறுர். உயிருடன் வாழ்கின்றது என்ற நினைவே இல்லாமல் ஏதோ உயிரற்ற பொருளை நடத்துவதைப் போலப் பெரியோர் நடந்துகொள்கின்றனர். இயற்கை அன்னை இப்பொழுது எதையும் நடத்தி வைப்பதில்லை. மனிதனுடைய பகுத்தறிவே தொழில் புரிகிறது. இது பெரும்பிழையைச் செய்துவிடுகிறது. ஏனென்றுல், போதிய அளவு தெளிவு பெறவில்லை. மேலும், குழந்தைக்கு மன வாழ்க்கை ஒன்று இல்லை என்று எண்ணி எண்ணி அதே பழக்கம் ஆகிவிட்டதும் மற்றொரு காரணம் ஆகும்.

இந்தக் குறுகிய காலத்தை—இந்தப் பிறப்பின் தருணத்தைத்— தனியாக நாம் ஆராய வேண்டும் என்பது தெளிவாகிறது.

குழந்தையின் உள வாழ்வில் அது பொதுவாக அக்கறை கொள்வதில்லை. அது ஏதோ ஒரு சம்பவம் என்றும், குழந்தை வெளி உலகத்துடன் முதல் முதலில் நடத்தும் எதிர்முட்டு என்றும், கருதப்படுகிறது. விலங்கியலை ஆராய்ந்தோமானுல், பாலூட்டிகளில் இந்தப் பருவத்துக்கு இயற்கை அன்னை என்ன அறிவுடன் ஏற்பாடுகள் செய்திருக்கிறுள் என்பது விளங்கும். குட்டிகளை ஈனுவதற்கு முன் விலங்கினத்தின் தாய் தன்னுடைய மந்தையை விட்டுத் தனியாகப் பிரிந்து போய்விடுகிறது; குட்டிகளை ஈன்ற பிறகும் தனியாகவே சில காலம் வாழ்கிறது. பெரிய மந்தைகளாக வாழக்கூடிய குதிரைகள், காட்டுப் பசுக்கள், யானைகள், ஓநாய்கள், மான்கள் போன்ற விலங்குகளிடம் இதைத் தெளிவாகக் காணலாம். இவை எல்லாம் ஒரே மாதிரி நடந்துகொள்கின்றன. தனியாக வாழ்கின்ற பருவத்தில் குட்டிகள் சூழ்நிலைக்குத் தக்கபடி தங்களை அமைத்துக்கொள்வதற்கு அவற்

றுக்கு அவகாசம் ஏற்படுகிறது. அவை தங்களுள் தாயுடன் தனியாய் வாழ்கின்றன. தாயும் தன் அன்பால் அணைத்துக்கொண்டு அவற்றைக் கவனித்துப் பாதுகாத்து வருகிறது. இந்தப் பருவத்தில் சிறு குட்டிகள் படிப்படியாகத் தம் இனத்தைப்போல நடந்துகொள்ளப் பழகுகின்றன. இந்தக் குறுகிய தனிமை வாழ்க்கைக் காலத்தில் அல்லது '**கரந்துறைவில்**' சூழ்நிலையானது இடைவிடாமல் குட்டிகளின் உள்ளத்தைத் தூண்டிக்கொண்டேயிருக்கிறது. இந்த விலங்கினத்துக்கு எது பொருத்தமோ, அம்மாதிரியே குட்டிகளின் நடத்தையும் இருக்கிறது. விலங்கின் தாய் குட்டிகளுடன் மந்தையில் கலந்துகொள்ளும்பொழுது குட்டிகளும் தயாராகிவிடுகின்றன; மந்தையில் கலந்து ஒன்றி வாழும் திறமை பெற்றுவிடுகின்றன. இது உடல் திறமையைப் பொறுத்த மட்டில் அன்றி, உள்ளத் திறமையிலுங் கூடத்தான். குட்டிகளின் நடத்தையைப் பார்த்தால், ஒரு சின்னக் குதிரை போலவோ, அல்லது சின்ன ஓநாய் போலவோ, அல்லது சிறு கன்று போலவோ, காட்சி அளிக்கும்.

காட்டு விலங்கு பழக்கப்பட்டு மனிதனுடன் வாழக் கற்றுக்கொண்ட பிறகும் பாலூட்டிகள் இந்த விஷயத்தில் பழைய இயல்பூக்கங்களை விட்டுவிடாமல் பிடித்துக்கொண்டிருக்கின்றன. நம் வீடுகளில் நாயும் பூனையும் தத்தம் குட்டிகளைத் தமது உடலால் மறைத்துக் கொள்வதைப் பார்க்கிறோமல்லவா? **பழைய காட்டுப் பழக்கத்தை விடாமல் இம்மாதிரி இன்றும் செய்து வருகின்றன.** தாய்க்கும் குட்டிக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுவிடுகிறது. தாயை விட்டுக் குட்டி விலகுவதில்லை. பாலூட்டும் குட்டி தாயின் கர்ப்பத்தை விட்டு வெளியே வந்துவிட்ட போதிலும், இன்னும் தாயின் உடலுடன் ஒட்டிக்கொண்டுதான் இருக்கிறது. வாழ்க்கையின் முதற்பகுதியிலிருந்து இரண்டாவது பகுதியை அடைவதற்கு நடைமுறையில் இதைத் தவிர வேறு எந்த வழியில் உதவி புரிய இயலும்!

இந்த முக்கியமான பகுதிக்குக் கீழ் வருமாறு விளக்கம் தர வேண்டியிருக்கிறது; விலங்கினத்தின் இயல்பூக்கங்கள் வாழ்க்கையின் தொடக்க நாள்களில் விழிப்புப் பெறுகின்றன.

கஷ்டமான சூழ்நிலைகள் மட்டும் இயல்பூக்கத் தூண்டுதல்களைக் கிளப்பி அவற்றுக்குத் தக்கபடியும், வரம்புக்குட்பட்டும், நடந்து கொள்ளச் செய்கின்றன என்று கொள்ளலாகாது. நமக்குக் காட்சி அளிக்கின்ற செயல்களே ஆக்கத் திட்டத்தின் ஒரு பகுதி ஆகின்றன,

மேற்கூறியவை விலங்குகளிடையே நடைபெறுவதானால், இதைப் போன்ற ஒன்று மனிதரிடமும் நடைபெற வேண்டும். நாம் ஆராய்ந்து வருவது கஷ்டமான நிலை அன்று. இது ஒரு தீர்மானமான

நிலையாகும். இது எதிர்காலம் முழுமைக்கும் பாதிக்கக்கூடிய தீர்மான நிலை. இப்பொழுது நடைபெறுவது என்னவென்றால், இது வரை மறைந்து கிடக்கின்ற சத்திகளைத் தட்டி எழுப்புவது போன்ற தாகும். குழந்தை ஒரு 'தெய்விகக் கரு' என்று கருதவேண்டும். இந்தக் குழந்தை பெரிய ஆக்கத் தொழிலில் ஈடுபடப் போகிறது. அதற்கு இந்தச் சத்திகள் வழி காட்டிகளாக அமையவேண்டியிருக் கின்றன. குழந்தையின் முக்கிய உள வாழ்வுப் பகுதியின் மாற்றம் தோன்ற ஆரம்பிக்கும்பொழுது இயற்கை அன்னையும் உடல் வளர்ச்சி யில் குறிப்பிட்ட மாறுதல்களைத் தோற்றுவிக்கிருள். ஆதலால், இது வரை குழந்தையைத் தாயுடன் இணைத்து வைத்திருந்த கொப்பூழ்க் கொடியானது குழந்தை பிறந்த சில நாள்களில் விழுந்துவிடுகிறது. இந்த முதற்பருவம் மிக மிக முக்கியமானது. ஏனென்ருல், இந்தப் பருவத்திலேதான் மாயச் சத்திகள் ஆக்கப்பட்டு வருகின்றன.

குழந்தை பிறக்கும்பொழுது ஏற்பட்ட காயமட்டுமன்றி, அதனடி யாகப் பிறக்கின்ற பல செய்வினைகளும் நடைபெறக் கூடும்! அவற் றைப் பற்றியும், நாம் நினைவுகொள்ள வேண்டியிருக்கிறது. விலங்கு களில் குட்டிகள் இப்படி இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும் என்பது முன்கூட்டியே நிருணயிக்கப்பட்டிருக்கிறது. அதே போல, மனிதக் குழந்தையிடம் எதுவும் நிருணயிக்கப்பட்டிருப்பதில்லை. ஆயி னும், அது தானே ஒரு நடத்தையை ஆக்கிக்கொள்ளும் சத்தியைப் பெற்றிருக்க வேண்டும். பழைய நினைவு எதுவும் குழந்தையிடம் இருந்து வழி காட்டப்போவதில்லை. எனினும், குழந்தை உள்ளத் தில் உருவம் பெருத ஏதோ மங்கலான சில உளத்துடிப்புகள் இருந்து வருவதை ஒருவாறு உணருகிறது. இந்தத் துடிப்புகளில் மறைந்து கிடக்கும் சத்திகள் நிறைந்திருக்கின்றன. குழந்தையின் சூழ்நிலை யில் காணப்படும் மனிதப் போக்கை உள்ளே அமைத்துக்கொள்ளு மாறு இந்தச் சத்திகள் வழிகாட்டக் கடமைப்பட்டிருக்கின்றன. இந்த உருவமற்ற தூண்டுதலுக்குத் 'தாராகணம்' (Nebulae) என்பது பெயர். ஒரு விலங்கு பிறக்கும் பொழுது அதற்கு மரபுநிலைப் பண்பும் உடனமைந்திருக்கிறது. இயற்கையாகவே அதற்குத்தக்க இயக்கங் களும், அவற்றுக்குத் தேவையான கட்டுப்பாடுகளும், உடலுக்குத் தேவையான உணவைத் தேர்ந்தெடுக்கும் திறமையும், எதிர்ப்பு களுக்குத் தக்க பாதுகாப்புகளும் பெற்றிருக்கின்றன.

ஆனால், மனிதனுேவென்ருல், இவற்றை எல்லாம் அவனுடைய சமூக வாழ்வில் மலர்ச்சி அடைவது வாயிலாகத் தானே உருவாக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆதலால், குழந்தை பிறந்தவுடன் அதன் சூழ்நிலையில் காணப்படும் சமூகக் குழுக்களின் பழக்கவழக்கங் களைத் தன்னுடைய பழக்கத்தில் அமைத்துக்கொள்ள வேண்டியிருக்

கிறது. பிறக்கும் பொழுதே இவற்றுடன் பிறக்காமல் குழந்தை தனக்கு வெளியிலிருந்து இவற்றை உட்கவர்ந்துகொள்ள வேண்டியிருக்கிறது. குழந்தைப் பருவத்தின் முக்கியத் தொழிலானது இந்தத் தழுவலே (Adaptation) ஆகும். **விலங்குகளின் கருவில் காணப்படும் 'நடத்தைக் கோலங்களுக்கு'** (Behaviour patterns) **பதிலாக இந்தத் தழுவல் பணியாற்றுகிறது.**

## பிறப்பும் வளர்ச்சியும்

குழந்தை ஆற்றி வரும் தனித்தொழிலை நம் மனத்தில் இருத்திக் கொண்டு குழந்தையை மனித வாழ்வில் வளர்ச்சி பெறுகின்ற ஒரு **'பொதுவான பொறி நுட்பம்'** (General Mechanism) என இப்பொழுது ஆராய்வோம். இது மிகவும் கவர்ச்சிகரமானதாயிருக்கும்.

குழந்தை பிறக்கும் பொழுது உடல் வளர்ச்சியிலும் இன்னும் முழுமையைப் பெறாத நிலையில் இருக்கிறது. அது இந்த நிலையிலிருந்து மிகவும் சிக்கல் நிறைந்த மனித உருவத்தை அடையும் வரை எல்லாம் தானே அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. விலங்குகளின் குட்டிகள் பிறந்த பொழுது அவை உலகத்துடன் முதலில் தொடர்பு கொண்டதும், அந்த விலங்கினங்களின் **'மரபைத்தட்டி எழுப்புதல்'** (Awakening of instincts) என்னும் ஒன்று காணப்படுகிறது. மனிதக் குழந்தையிடம் அத்தகையது ஏதும் இல்லை. குழந்தை பிறந்துவிட்ட போதிலும், அது கருவளர்ச்சியை இன்னும் தொடர்ந்தே நடத்தி வருகிறது. இவ்வாறு செய்வதால், **'மனித மரபுகளின் ஒரு தொகை'** என்பது போன்றதைக் குழந்தை ஆக்கிக்கொள்கிறது.

இந்த விஷயத்தில் குழந்தைக்கு முன் கூட்டியே எதுவும் நிருணயிக்கப்படாத காரணத்தால், மனிதனுடைய முழு மன வாழ்க்கையையும், தன்னை வெளிப்படுத்திக்கொள்ளப் பயனுகும் எல்லா இயக்கப் பொறி நுட்பங்களையும், குழைந்தையே தனக்குள் ஆக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

பச்சைக் குழந்தை ஓர் இயங்காப் பேர்வழி; தன் தலையைத் தானே உயர்த்தி நிறுத்தி வைத்துக்கொள்ளும் சத்தி பெறாத பேர்வழி. ஆனாலும், ஏசுநாதர் பிழைப்பித்த குழந்தை போல இது நடந்து கொள்ளப் போகிறது. முதலில் அந்தக் குழந்தை எழுந்து உட்கார்ந்ததாகவும், பிறகு எழுந்து நின்றதாகவும், பிறகு குழந்தையை ஏசுநாதர் அதன் தாயிடம் திரும்பக் கொடுத்ததாகவும் கூறப்படுகிறது. இதே போல இது வரை அசைவற்றுக் கிடக்கும் குழந்தை இறுதியில்

மனிதக் குலத்துக்கே ஒப்படைக்கப்படும். மனிதக் குலம் பூமியில் அதனுடைய வாழ்க்கைச் செயல்களில் ஈடுபடும்.

குழந்தையின் தசைகளின் அசையாத்தன்மையானது **காக்ஹில்** (Coghill) என்றவர் கண்டுபிடித்த உண்மையை நமக்கு நினைவூட்டு கிறது. அது யாது? **நரம்பு மையங்கள் தோன்றின பிறகே உறுப்புகள் தம் வேலையைச் செய்வதற்கு உருவெடுக்கின்றன.** அதே போலக் குழந்தையிடத்திலும் அது நடமாடுவதற்கு முன் உள வியல் நடத்தைக் கோலங்களை நிலை நாட்ட வேண்டியிருக்கிறது. ஆதலால், **குழந்தைப் பருவத்தில் முதலில் அசைய வேண்டுவது உடல் இயக்கமன்று. ஆனால், மன இயக்கமே முதலது ஆகும்.**

மனித வளர்ச்சியில் மிகவும் முக்கியமான பகுதியானது மனப் பகுதி ஆகும். ஏனென்றால், மனிதனுடைய இயக்கங்கள் எல்லாம் அவனுடைய மனவாழ்வின் ஆஞ்ஞையை ஒட்டியே ஒழுங்குபடுத்த வேண்டியிருக்கிறது. மிருகங்களிலிருந்து மனிதனை உயர்வுபடுத்துவது அவனுடைய நுண்ணறிவே ஆகும். **முதலில் நடைபெற வேண்டுவது அவனது நுண்ணறிவை ஆக்குவிப்பதாகும். மற்றவை எல்லாம் இதற்காகக் காத்திருக்கின்றன.**

குழந்தை பிறக்கும் பொழுது அதனுடைய அவயவங்களே இன்னும் நிறைவு பெறவில்லை; எலும்புக்கூடு முழுமையாக உறுதி அடையவில்லை; சலன நரம்புகளுக்கு இன்னும் அவற்றின் மேற்கவசமான '**மயிலினின்**' (Myelinin) என்பது இன்னும் படரவில்லை. அது படர்ந்திருந்தால்தான் அந்நரம்புகள் ஒன்றோடொன்று சேராமல் மூளையின் ஆஞ்ஞைகளை எடுத்துச் செல்லும் சக்தி பெற்றவையாய் இருக்கும். ஆதலால், உடலானது சலனமற்றிருக்கிறது. இது உடலின் ஒரு மாதிரிச் சித்திரம் போல, சுமாராக அமைக்கப்பட்டது எனத் தோற்றம் அளிக்கிறது.

எனவே, மனிதன் இளம்பருவத்தின் தொடக்கத்தில் நுண்ணறிவில் வளர்ச்சி அடைகிறான். மற்ற வளர்ச்சிகள் எல்லாம் அவனுடைய மனவாழ்க்கை காரணமாகவே பொருத்தமான உருவத்தையும் வினையாற்றும் முறையையும் பெறுகின்றன.

முதல் ஆண்டின் முக்கியத்தை இதைப் போல வேறு எதுவும் காட்டுவதில்லை. மனிதக் குழந்தைகளின் வளர்ச்சியில் நுண்ணறிவின் மலர்ச்சி எவ்வளவு சிறப்புடையதென்பது நன்கு விளங்குகிறது.

இப்பொழுது குழந்தையின் வளர்ச்சி பல பகுதிகளைப் பெற்றது. அப்பகுதிகளெல்லாம் குறிப்பிட்ட ஒழுங்கைப் பின்பற்றுகின்றன. ஏனென்றால், அவை எல்லாம் ஒரு பொது விதிக்குக் கீழ்ப்படிகின்றன.

தாயின் வயிற்றிலிருந்து பிறந்த குழந்தையின் வளர்ச்சியைத் தொடர்ந்து பார்த்தால், மண்டை ஓடு எப்பொழுது வளர்ச்சியை முடித்துக்கொள்கிறது என்பதும், தலையில் காணப்படும் இது வரை கூடாத உச்சியானது அதனுடைய முருந்துத்திசுக்களால் எப்பொழுது மெதுவாக ஒன்றாய் இணைந்துகொள்கிறதென்பதும், நெற்றிப்பகுதி போன்றவைகளில் எப்பொழுது தையல் போன்ற அமைப்புகள் மறைவு பெறுகின்றன என்பதும், எவ்வாறு உடலின் வெவ்வேறு பகுதிகள் உருவ விகிதத்தில் மாறுபடுகின்றன என்பதும், இறுதியாகக் கைகால்களும் பாதங்களும் எவ்வாறு எலும்பு வளர்ச்சியைப் பெறுகின்றன என்பதும், இவை போல்வன பலவும் நமக்கு விளங்குகின்றன. அதே போலத் தண்டுவடமும் அதன் நரம்புகளும் அவைகளைச் சுற்றி '**மயிலினின்**' என்ற மேந்தோலைப் பெறுகிறதையும், பிறக்கும் பொழுது மிகச் சிறிய தாய் இருந்து, இயக்கத்தின் சமநிலைக்குக் காரணமாயுள்ள சிறு மூளையானது படிப்படியாகத் தன் வளர்ச்சி வேகத்தை அதிகப்படுத்திக்கொண்டு, கபாலத்துக்குள் நிறைந்திருக்க வேண்டிய விகிதத்தில் வளர்ந்துவிடுவதையும் நாம் காண்கிறோம். கடைசியாக நாளமில் சுரப்பிகளின் வளர்ச்சியும், சிரண சம்பந்தமான உறுப்புகளும் எவ்வாறெல்லாம் மாறுதல் அடைகின்றன என்பதையும் பார்க்கிறோம்.

இந்த உண்மைகள் எல்லாம் பல ஆண்டுகளாக நமக்குத் தெரிந்தவைகளே. இவை உடல் வளர்ச்சியில் படிப்படியாக முதிர்ச்சி பெறுவதைக் காட்டுகின்றன. நரம்பு மண்டலத்திலும் இதே சமயத்தில் பொருத்தமான மாறுதல்களும் நடந்து வருகின்றன. எடுத்துக்காட்டாக, நரம்புகளும் சிறு மூளையும் பொருத்தமான முதிர்ச்சியைப் பெறுவிட்டால், குழந்தையின் இயக்கத்தில் சமநிலை காண இயலாது. ஆதலால், குழந்தையால் உட்காரவோ, நிற்கவோ இயலாது.

கல்வியாலும் உடற்பயிற்சியாலும் இதனுடைய சாதனைகளுக்கு வரம்பு கட்ட இயலாது. முதிர்ச்சி அடைந்தவுடன் இயங்கும் உறுப்புகள் சிறிது சிறிதாக மனத்தின் ஆஞ்ஞைக்குக் கீழ்ப்படியத் தம்மை ஒப்படைக்கின்றன. இறுதியாகக் குழந்தையின் மன உறுதியானது இவற்றை வேண்டும்படி உபயோகித்துக்கொள்ள இயலும்.

விலங்குகள் பிறக்கும் பொழுது ஒருமைப்பாடு பெற்ற அவயவங்களுடன் பிறக்கின்றன. ஆனால், மனிதனோ, அவ்வாறு பிறப்பதில்லை. இனிமேலேதான் மனிதன் தன் இயக்கங்களை உருவாக்கி ஒருமைப்படுத்த வேண்டும். **குழந்தைக்கு முன் கூட்டியே தீர்மானிக்கப்பட்ட குறிக்கோள் இருப்பதாகவும் இல்லை.** இதுவும் இனிமேல் தானே கண்டுபிடித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. விலங்குகளின்

குட்டிகளுக்கும் மனிதக் குழந்தைக்கும் எவ்வளவு வேற்றுமை பாருங்கள்! அவை பிறந்ததும் இனத்துக்குத் தக்கபடி நடக்கின்றன; ஓடுகின்றன; குதிக்கின்றன. அநேகமாகப் பிறந்த சிறிது நேரத்துக்குள் மிகவும் சிக்கலான செயல்களை அவை சாதிக்க இயல்கிறது. உதாரணமாக, அவற்றின் மரபுத்தேவை மரம் தொற்றுவதென்றால் அதைச் சாதித்துவிடும்; தடங்கல்களைத் தாவிச் செல்ல வேண்டுமா? அப்படியே செல்லும்; அல்லது பறந்து போக வேண்டுமா? அதுவும் செய்யும்.

இவற்றைப் போல மனிதன் உலகத்தில் தோன்றும் பொழுது அத்தகைய சத்தி எதையும் தன்னுடன் கொண்டு வருவதில்லை. எனினும், இயக்கங்களைக் கற்றுக்கொள்வதில் மனிதனுக்கு இணை எவருமே இல்லை எனலாம். திறமை வாய்ந்த தனிப்பட்ட இயக்கங்களில் மிகவும் சிக்கலானதையும் மனிதன் கற்றுக்கொள்கிறான். ஒரு தொழிலாளியின் வேலைகளையும், சர்க்கஸ்காரனுடைய வித்தைகளையும், நாட்டியக்காரனுடைய நடனங்களையும், இசை வாணனின் சங்கிதத்தையும், ஓட்டப்பந்தயங்கள் பலவற்றில் முதன்மையையும் பெற்றுவிடுகிறான். இவற்றுள் எதுவும் இயக்க உறுப்புகளின் முதிர்ச்சியாலேயே தோன்றிவிடவில்லை. செயலில் அனுபவத்தாலும், பல முறை செய் பயிற்சியாலுமே இவை எப்பொழுதும் தோன்றுகின்றன. எல்லாம் கல்வியால் பெறப்பட்டவை என்று கூறிவிடலாம். ஒருவனுடைய திறமை வாய்ந்த செயலுக்கு அவனேதான் கர்த்தா ஆகிறான். எனினும், ஒவ்வொருவனும் தொடங்கும் பொழுது ஒரே விதமான உடற்கூறுகளைக்கொண்டே ஆரம்பித்திருக்கிறான். மனிதனே தன்னுடைய பரிபூரண நிலையை ஏற்படுத்திக்கொள்கிறான்.

குழந்தைகளைப் பற்றிச் சிறிது நமது கவனத்தைத் திருப்புவோம். அவற்றுள் பல பகுதிகள் இருப்பதையும் அவற்றுள் இருக்கும் வேற்றுமைகளையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டுவது முக்கியமானது.

இது சம்பந்தமாக நாம் அறிந்துகொள்வதற்கு முன் இந்த உண்மையை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதாவது, குழந்தைகள் நடமாடுவதற்குத் தக்க ஆதரவை உடல் அளிக்க இயலும் பொழுது அது நடமாட முயன்றாலும், ஓரளவுக்கு மன நிலைமை அவற்றைப் பொறுத்தில்லை என்பது தெளிவு. ஏனென்றால், நாம் ஏற்கெனவே கண்டது போல, மனப்பகுதி முதலில் வளர்ச்சி பெற்றுவிடுகிறது. இந்த வளர்ச்சி பெறட்டும் என்று எவ்வளவு காலம் தேவையோ அவ்வளவு காலம்வரை உறுப்புகள் காத்துக்கொண்டிருக்கின்றன. பிறகு மனம் அவற்றைப் பயன்படுத்திக்கொள்கிறது. உறுப்புகள் இயங்கத் தொடங்கினவுடன் மனத்தின் வளர்ச்சி இன்னும் மேம்பட்டு வருகிறது. சூழ்நிலையில் இயங்கி அவை காரணமாகப்

பெற்ற அனுபவங்களை ஒட்டியே அந்த மன வளர்ச்சி எப்பொழுதும் முன்னேறுகிறது. எனவே, ஒரு குழந்தையின் இயங்கக்கூடிய சத்திகள் ஆயத்தமானவுடனே அவற்றை இயங்க விடாமல் தடுத்தோமானால், குழந்தையின் மன வளர்ச்சி தடைபடுகிறது. மனவளர்ச்சிக்கு வரம்பு இல்லாவிட்டாலும், அதனுடைய இயக்கங்களின் கருவிகளை உபயோகிப்பதையே பெருப்பாலும் எதிர்பார்க்கிறது. இது வரை அது இயங்காமல் கிடந்த நிலையை ஒருவாறு திருத்திக் கொள்ள முயல்கிறது. ஆனால், இவ்வளவு வளர்ச்சியும் எப்பொழுதும் தன் முயற்சியாலேயே சாதிக்கப்படுகின்றது.

மனவளர்ச்சி என்பது ஒரு தனிப்பட்ட மாயச்சத்தியுடன் தொடர்பு கொண்டுள்ளது ; அதனுடைய எதிர்கால விதியின் மறைந்த இரகசியத்தைப் பொறுத்திருக்கிறது. நிறைவாக்குவதற்கு ஒவ்வொரு வருக்கும் வெவ்வேறு சத்திகள் இருக்கின்றன. இவை என்ன என்பதைக் குழந்தை உள்க்கருப் பருவத்தில் இருக்கும் பொழுது ஆராய்ச்சி செய்ய இயலாது.

உலகெங்கும் இந்தப் பருவத்தில் உள்ள குழந்தைகள் எல்லாம் ஒரே உருவம் பெற்றிருப்பது விந்தையிலும் விந்தையாகும். பிறக்கும் பொழுது எல்லாக் குழந்தைகளும் ஒரே மாதிரி இருக்கின்றன என்று சொல்லலாம். ஒரே விதிப்படி அவை ஒரே விதத்தில் மலர்ச்சி பெறுகின்றன என்றும் கூறலாம். கரு உடம்பில் நடைபெறுவது போல அவற்றின் மனத்திலும் நடைபெறுகின்றன. இங்கு உயிரணுக்கள் ஒன்று பலவாக மாறுவதும் படிப்படியாக அதே முறையிலேதான் நடைபெறுகிறது. இதில் மாறுதலே இல்லை. ஒரு கருவிலிருந்து மற்ற உருவை எவ்வகையிலும் கண்டறிய இயலாதபடி நடைபெறுகிறது. உயிரணுக்கள் ஒன்று பலவாக மாறும்பொழுது வெவ்வேறு வகையான சீவராசிகளைப் பிறப்பிக்கப் போகின்றன. பல்லியாகவோ, பறவையாகவோ, அல்லது முயலாகவோ இருக்கலாம். ஒவ்வொன்றும் ஆரம்பத்தில் ஒரே விதத்திலேதான் தன்னை அமைத்துக்கொள்கின்றது ; ஆனால், வரவரக் கட்டுக்கடங்காத வேற்றுமைகளைப் பிறகு பெற்றுவிடுகின்றது.

இதைப் போலவேதான் தெய்விகக் கருவிலும் நடைபெறுகிறது. இந்தக் கருவிலிருந்து வருங்காலத்தில் ஓர் ஓவிய மேதை, பொதுமக்களின் தலைவன், ஒரு துறவி, அல்லது சாதாரணப் பேர்வழி ஆகிய இவர்களுள் எவராகவேனும் தோன்றலாம். இந்தச் சாதாரணப் பேர் வழிகளுக்கு வெவ்வேறு விருப்பங்கள் இருக்கலாம். இந்த விருப்பங்கள் இவர்களைச் சமூக வாழ்க்கையில் வெவ்வேறு நிலைகளுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும். இவர்கள் எல்லாம் ஒரே தொழிலைச் செய்வதற்கென்றே பிறந்தவர்கள் அல்ல. கீழான விலங்குகளில்

காண்கிறோமே, அங்கு மரபினால் அவற்றின் செய்வினைகள் கட்டுப் படுத்தப்படுகின்றன. அம்மாதிரியல்லன் மனிதன். அவனுடைய செய்வினைகளுக்குக் கட்டுப்பாடு மரபு வழியாய் இல்லை.

பிற்காலத்தில் தோன்றக்கூடிய இந்த வளர்ச்சிகளைப் பற்றியும் வெவ்வேறு குறிக்கோள்களைப் பற்றியும், நம்மால் ஜோசியம் கூற இய லாது. பிறந்தவுடன் தோன்றும் பருவத்தில் மனிதன் உருவாக்கப்படு கின்றான். அந்தப் பருவத்தில் இவை நடைபெறும் என்றும் நாம் கூற இயலாது.

இந்தப் பருவத்தில் நம்மால் செய்வது ஒன்றுமில்லை. குழந்தை யின் வாழ்க்கை மலர்வதற்கு நாம் உதவி புரிய வேண்டுவது ஒன்றைத் தவிர, வேறொன்றும் இல்லை. இது எல்லார்க்கும் ஒரே மாதிரிதான் நடந்து வருகிறது. எல்லோர்க்கும் வாழ்க்கையின் துணிவுச் செயல் களுக்குத் தூண்டுகோலாய் இருப்பது மனப்பகுதியே. மனித வாழ்க் கைக்குத் தேவையான இந்தப் பருவம் எவ்வளவுக்கெவ்வளவு உதவி பெற்று வருகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஒவ்வொருவரும் பயன் அடைவர். பிற்காலத்தில் அவருடைய தனிப்பட்ட சத்திகளை இன் னும் நல்ல முறையில் வளர்த்துக்கொள்ள இயலும்.

எனவே, சின்னஞ்சிறு சிசுவைக் கற்பித்தும் நடத்தியும் வரு வதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்க இயலும். **பிறப்பிலிருந்தே கல்வி தொடங்க வேண்டுமானால் அந்தச் சமயத்துக்கு ஒரே ஒரு கல்விதான் இருக்க இயலும்.** சின்னஞ்சிறு சிசுக்களுக்கு வெவ் வேறு முறைகளை அனுசரிக்க வேண்டும் என்பது அறிவுடைய கருத் தாதல் இயலாது. அவை சீனக் குழந்தைகளாகட்டும், ஐரோப்பியக் குழந்தைகள் ஆகட்டும், அல்லது வெவ்வேறு சமூக நிலையில் தோன் றிய குழந்தைகள் ஆகட்டும் எல்லோர்க்கும் இது பொருந்தும். நாம் ஒரே ஒரு முறையைப் பற்றித்தான் கூற இயலும். மனிதனை இயற்கை யாக மலர்விக்கும் வழிகளைப் பின்பற்றுவதைத்தான் நாம் குறிப்பிட இயலும். **எல்லாக் குழந்தைகளுக்கும் ஒரே விதமான உளவியல் தேவைகளே இருக்கின்றன.** மனிதப் பக்குவத்தை அடைவதற்கு இவை எல்லாம் ஒரே படிப்படியான செயல்களைப் பின்பற்றுகின்றன. நாம் ஒவ்வொருவரும் ஒரே மாதிரியான வளர்ச்சிப் பருவங்களைக் கடந்தே வந்திருக்கிறோம்.

இது கருத்து வேற்றுமைக்கு அப்பாற்பட்டது. இந்த முறையோ, அந்த முறையோ அனுசரிக்க வேண்டும் என்று எடுத்துக் கூற ஒரு தத்துவஞானியோ, பெருஞ்சிந்தனையாளரோ, அல்லது ஆய்வுச்சாலை சோதனையாளரோ தேவையில்லை.

மனித வளர்ச்சியில் இன்னின்னது தேவை என்றும், அதற்குத் தகுந்த விதிகள் இவை என்றும், இயற்கை அன்னைதான் நிர்ணயித்திருக்கிருள். எந்தக் கல்வி முறையைப் பின்பற்ற வேண்டுமென்பது இயற்கை அன்னையால் மட்டுமே கூற இயலும். இது அதன் குறிக்கோளைப் பொறுத்திருக்கிறது. வாழ்க்கையின் தேவைகளையும் அதன் விதிகளையும் திருத்தி செய்ய இயலும்.

இந்த விதிகளும், இந்தத் தேவைகளும் என்ன என்று குழந்தை பிறர் தூண்டுதல் இல்லாமல் தானுகவே செய்கின்ற செயல்களாலும், முன்னேற்றங்களாலும் எடுத்துக்காட்ட வேண்டும். அதனுடைய அமைதியும், ஆனந்தமும், அதன் முயற்சித் தீவிரமும், தானுகவே தேர்ந்தெடுக்கும் உணர்ச்சிகளில் மாருமையும், மேற் கூறியவைகளுக்குச் சான்ருகின்றன.

நம்முடைய ஒரே கடமை என்ன? அது குழந்தையிடமிருந்து அதே இடத்தில் தெரிந்துகொண்டு நம்மால் இயன்ற வரை குழந்தைக்குச் சேவை செய்வதே ஆகும்.

## பிறக்கும் வேளை

பிறக்கும் வேளை என்றும், அதற்குப்பிறகு வளர்கின்ற பருவம் என்றும், மருத்துவ உளவியல் இரு கூறுகளாக இப்போது எடுத்துக் காட்டுகிறது; பிறக்கும் வேளை குறுகிய கால வரம்புடையதென்றும், இதுதான் என்று உறுதிப்படுத்தும் பருவம் என்றும் எடுத்துக் காட்டுகிறது. இப்பொழுது இவை எடுத்துக் கூறும் விளக்கங்கள் எல்லாம் **ஃபிராய்டியன் கருத்தைப்** (Freudian view) பின் பற்றியவை என்றும், அவை உண்மையான விவரங்களையும் மதிப்புள்ள வேற்றுமைகளையும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. **'பின்னேக்கத்தின் அறிகுறிகள்'** (Regression) என்பவை ஒரு வகை. இவை பிறப்பின் அதிர்ச்சியுடன் நேரான தொடர்புடையவை. மற்றெரு வகை, **'ஒடுக்குதல்'** (Repression) **என்பதன் அறிகுறிகள்** ஆகும். இவை பிறந்த பிறகுள்ள வளர்ச்சிப் பருவங்களுடன் சம்பந்தப்பட்டவை ஆகும். பின்னேக்கம் என்பது ஒடுக்குதல் ஆகாது; இப்பொழுதுதான் பிறந்த குழந்தையின் நனவிலா நிலையில் ஏற்பட்ட தீர்மானத்தைக் குறிக்கும். வளர்ச்சிப் பாதையில் முன்னேறுவதற்குப் பதிலாகப் பின் செல்ல வேண்டும் என்ற ஒரு முடிவைக் குறிக்கிறது பின்னேக்கம்.

குழந்தையின் பிறப்பு அதிர்ச்சி, குழந்தை அழுகையையும் மறியல்களையும்விட, இன்னும் மோசமான நிலைகளை உண்டாக்கி விடுகின்றது என்பது இப்பொழுது உணரப்பட்டு வருகிறது. இது,

குழந்தை இயல்பு கடந்த (Abnormal) வழிகளில் வளர்ச்சி பெறக் காரணமாய் இருக்கிறது. இதன் பலன் ஓர் உளவியல் மாறுதல் ஆகிறது. **அல்லது உளவியல்** சத்திகள் தம் வழி விட்டு வேறு வழியில் திருப்பம் பெறுகின்றன எனலாம். இயல்பான வழி என்று நாம் கருதுவதை விட்டுக் குழந்தையின் வளர்ச்சியானது அனுகூல மற்ற திசைகளில் திருப்பப்படுகின்றது.

பிறக்கும் பொழுது ஏற்பட்ட அதிர்ச்சியால் பாதிக்கப்பட்டு, எதிர் மறை வினைகளால் வருந்துகின்ற குழந்தைகள் பிறப்பதற்கு முன் இருந்த நிலையிலேயே இன்னும் ஒட்டிக்கொண்டிருப்பதாக நம்மை நம்பச் செய்கின்றன. பின்னேக்கிய பல அறிகுறிகள் இருக்கின்றன. ஆனல், எல்லாவற்றுக்கும் பொதுவாக ஒன்று உண்டு. அது வருந்து கின்ற பேர் வழி. இந்த வேளையை ஆய்ந்து தீர்மானித்திருக்கிறதாகத் தெரிகிறது; **'நான் எங்கிருந்து வந்தேனே, அங்கே திரும்பிப் போய்விடுகிறேன்,'** என்று சொல்வது போல இருக்கிறது. பல மணி நேரம் உறங்குவது சிசுவின் இயல்பு என்று கருதப்படுகிறது. ஆயினும், நெடுநேரம் உறங்குவது அதன் இயல்பாகாது. இது பிறந்த குழந்தைக்கும் பொருந்தும். இது குழந்தை தன்னை ஒரு வகையில் தஞ்சம் புகும்படி செய்துகொள்வது போலும்! இந்த நீண்ட உறக்கம் இருப்பதாக, ஃபிராய்டு என்பவர் கருதுகிருர். மேலும், வாழ்க்கை யிடத்திலும், உலகத்திடத்திலும் குழந்தைக்குத் தோன்றும் பின்னேக்கை இந்த நெடுந்துயில் வெளியாக்குகிறது என்றும் அவர் கருதுகிருர்.

நனவில்லா உலகை உறக்கத்தில் காண்கிருேமல்லவா? நம்மைப் பெருந்துன்பம் வாட்டும் பொழுது உறக்கத்தைத் தேடுகிருேம். ஏனென்ருல், உறக்கத்தில் கனவுகள் தோன்றுகின்றன. அவை உண்மை நினைவுகள் அல்ல. உறக்கத்தில் கவலைப்படத் தேவை யில்லாத வாழ்க்கையை அனுபவிக்கிருேம். உலகத்திலிருந்து ஒதுங்கித் தனிமையாக இருக்கவேண்டுமானல், அதற்குப் பொருத்த மான இடம் உறக்கமே ஆகும். உறங்கும் பொழுது உடலின் நிலை எப்படி இருக்கிறது என்பதும் குறிப்பிடத்தக்கது. பிறந்த குழந்தையின் இயல்பான உடல் நிலையானது குழந்தையின் கைகள் அதன் முகத்தின் அருகிலும், கால்கள் மேலே வளைந்தும் அமைந்திருப்பதே ஆகும். வயது வந்தவர்களிலும் சில சமயங்களில் இம்மாதிரியான உடல் நிலை நிலைத்து வருவதைக் காண்கிருேம். இது கர்ப்பப் பையில் சிசு இருந்த நிலைக்குத் திரும்பவும் போவதை நினைவூட்டுகிறது. **குழந்தை தன் தூக்கத்திலிருந்து எழுந்திருக்கும் பொழுதே அழுகை யுடன் எழுந்திருப்பது குழந்தையின் பின்னேக்குக்கு அடையாள மாகும்.** 'மறுபடியும் இந்தப் பாழான உலகத்தில் வாழவேண்டி

இருக்கிறதே!' என்று குழந்தை அஞ்சுகிறது போலும்! சிறு குழந்தைகள் தூக்கத்தில் மிரண்டு அழுவதுண்டு. வாழ்க்கையின்மேல் அவற்றுக்கு ஏற்கெனவே இருந்து வரும் வெறுப்புக்கு இவை இன்னும் தூபம் போட்டது போல ஆகின்றன.

குழந்தை வளர்ந்த பிறகு இந்தப் பின்னேக்கு மற்றவர்களுடன் எப்பொழுதும் விடாமல் ஒட்டிக்கொள்ளும் தன்மையதாய்க் காட்டுகிறது. குழந்தை தனியாக இருப்பதைப் பொறுக்க இயலாமல் அஞ்சுகிறது. பெரியவர்களிடம் இவ்வாறு ஒட்டிக்கொள்வது அவர்கள்மேல் உள்ள அன்பைக் காட்டுவதில்லை; ஆனல், வாழ்க்கைமேலுள்ள அச்சத்தையே காட்டுகிறது. குழந்தை வெட்கப்படுகிறது; ஆதலால், கூடிய வரை யாரேனும் ஒருவர் தன் அருகில் இருக்க விரும்புகிறது; இயலுமானல் தாயுடன் இருக்க ஆவல் கொள்கின்றது. அதற்கு வெளியே போகவேண்டும் என்ற விருப்பம் இல்லை; உலகத்துடன் கலவாமல் தனியே வீட்டில் இருப்பதையே நாடுகிறது. எதெது உலகத்தில் அதற்கு இன்பமூட்ட வல்லதோ, அதெல்லாம் அதனுள் அச்சத்தை நிறைக்கிறது. புதுப் பரிசோதனைகள் என்ற எண்ணத்தைக் கண்டாலே குழந்தை வெறுக்கிறது. வளரும் பேர்வழிக்குச் சூழ்நிலையானது கவர்ச்சிகரமான தோற்றம் அளிப்பதற்குப் பதிலாகக் குழந்தைக் கண்களுக்கு வெறுப்பாகத் தோன்றுகின்றது. இளமையிலிருந்தே அதனுடைய வளர்ச்சிக்குத் துணை புரியக் கூடிய சூழ்நிலையைக் கசப்பாக வெறுத்தால், அப்படிப்பட்ட குழந்தை இயல்பாக வளர்ச்சி அடைவது எங்ஙனம்? இத்தகைய குழந்தை வெற்றி பெற வேண்டும் என்றும் தன்னுள் கருதாது. தன்னைச் சுற்றிலும் உள்ள உலகத்தை இது ஒருநாளும் உட்கவர்ந்துகொண்டு தன்மயம் ஆக்கப் போவதும் இல்லை. இம்மாதிரிக் குழந்தைக்கு உட்கவர்தல் என்பது கடினமாகவே இருக்கும். அது என்றும் நிறைவும் பெருது. ''துன்பம் அடையவே மனிதன் பிறக்கிருன்,'' என்ற மூதுரைக்கு இந்தக் குழந்தை எடுத்துக்காட்டாய் இருக்கிறது போலும்! எல்லாம் அதைக் களைப்புறச் செய்துவிடுகின்றன. மூச்சுவிடுவதற்கும் முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. இது எது செய்தாலும் தன் இயல்பான விருப்பத்துக்கு விரோதமாகவே செய்ய வேண்டியிருக்கிறது. இத்தகைய குழந்தைகளுக்கு இன்னும் அதிகமான உறக்கமும் ஓய்வும் தேவைப்படுகின்றன. இவற்றின் சீரணச் சத்தியும் பெருப்பாலும் மோசமாகவே இருக்கும். இத்தகைய குழந்தைகளின் வருங்காலம் எத்தன்மையது என்பதை எளிதில் கற்பனை செய்துவிட இயலும். இந்தக் குணங்களெல்லாம் தோன்றி மறைபவை அல்ல; வாழ்நாள் முழுதும் துணையாகவே இருக்கக்கூடியவை. இம்மாதிரிக் குழந்தை எதற்கெடுத்தாலும் அழும்; 'துணை வேண்டும்;

உதவி வேண்டும்,' என்று வாதாடும்; சோம்பலாகவும், வருத்தமாகவும், மனக்கவலையுடனும் இருக்கும். இவ்வகையான சிறுவர்கள் பெரியவர்களாகும் பொழுது, உலகத்தைக் கண்டாலே வெறுப்பார்கள்; புதியவர்களைச் சந்திப்பதற்குத் தயங்குவார்கள்; அடிப்படையிலேயே வெட்கப்படுகின்றவர்கள் ஆவார்கள், வாழ்க்கைப் போராட்டத்தில் மட்டமானவர்களை இந்த வகையில் காண்கிறோம். சமூக வாழ்க்கையில், இன்பத்திலும், அஞ்சாமையிலும், ஆனந்தத்திலும் இவர்கள் குறையுள்ளவர்களாய் இருக்கின்றார்கள்.

நனவில்லாத உளவாழ்வின் கொடிய பழிக்குப் பழியாகும் இது. நாம் நனவுள்ள ஞாபகத்தால் மறந்துவிடுகிறோம். ஆனால், நனவில்லா நிலையில் இது ஒன்றையும் உணராதது போலவும் நினைவுபடுத்திக் கொள்ளாதது போலவும் தோற்றமளித்தாலும், இன்னும் மோசமானது ஒன்றைச் செய்துவிடுகிறது. இந்த நிலையில் பதிவான கருத்துகளும் அனுபவங்களும் 'நெமி' என்றதற்கு ஒப்படைத்து விடுகின்றன; ஆளுமையிலே ஆழ்ந்து பதிந்துவிடுகின்றன.

மனித சமூகத்துக்கே இது பேராபத்தானது. **இயல்பான வளர்ச்சிகளில் பாதுகாக்கப்படாத குழந்தை, சமூகத்தின்மேல் தன் பழியைத் தீர்த்துக்கொள்ளும்;** தானே உருவாக்கப்போகும் முதிர்ச்சி அடைந்தவர்களைக்கொண்டே அந்தப் பழியைத் தீர்த்துக்கொள்ளும்; நம்முடைய அறியாமையால் வயது வந்தவர்களிடம் காணப்படுவது போல ஒரு புரட்சியைத் தோற்றுவிப்பதில்லை. ஆனால், தான் இருக்க வேண்டிய நிலையைவிட வலுவுற்ற ஒரு மனிதக் கூட்டத்தை இது உண்டாக்கிவிடுகின்றது.

அது அந்தரங்கத்தில் மாறுதல்களைத் தோற்றுவிக்கிறது. இம் மாறுதல்கள் தனிப்பட்டோர் வாழ்க்கையையும் ஆளுமையையும் பாதித்து, உலக முன்னேற்றத்துக்கே முட்டுக்கட்டைகள் ஆகிவிடுகின்றன.

## 'நெபுலே' (Nebulae) அல்லது தாராகணம்

பிறக்கும் வேளையில் மனிதனுடைய உளவாழ்வு எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதை இதுவரை நாம் வற்புறுத்தி வந்ததையே இப்பொழுது மனவளர்ச்சி வல்லுனரும் எடுத்துரைக்கின்றனர். இதுவரை நாம் குறிப்பிட்டு வந்ததெல்லாம் என்ன? பின்னோக்குதல் சம்பந்தமான அபாயங்களைப் பொறுத்த முதல் ஆராய்ச்சி அனுபவங்களையே குறிப்பிட்டிருக்கிறோம். இவற்றுடன் எல்லாப் பாலூட்டிகளும் தங்களுடைய குட்டிகளைப் பாதுகாக்க அனுசரிக்கின்ற முறைகளையும்

ஆராய்வோம். பாலூட்டிகளின் பிறப்பில் முதல் சில நாள்கள் தாயின் பாதுகாப்பானது மிகவும் நுட்பமானதாயும், ஓர் அமிசத்தையும் விடாமல் உள்ள இயல்பு பெற்றதாயும் இருந்து வருகிறது. பிறந்த குட்டியினிடம் அந்த இனத்தின் பொது இயல்பூக்கங்களைத் தட்டி எழுப்பிவிடுகின்றன. இவற்றைக் கவனிக்கும் பொழுது சிறு குழந்தையின் உளவியலை அடிப்படையாகப் புரிந்துகொள்வதில் நல்ல பயன் பெறலாம்.

குழந்தை இந்த உலகத்துடன் ஒட்டி வாழவேண்டியிருக்கிறது. அதனுடன் குழந்தை பிறக்கும் பொழுது ஓர் அதிர்ச்சி அடைந்திருக்கிறது என்பதும் நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. தாயைப்போலக் குழந்தையும் சிகிச்சை பெறுதற்குரியது என்பதையும் நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வாறு குழந்தை விஷயத்தில் இரண்டு வித முக்கியத்துவமும் கொடுக்க வேண்டும் என்கிற அவசியத்தை நாம் உணர்கிறோம். தாயும் சேயும் வெவ்வேறு விபத்துகளுக்கு ஆளாகியிருக்கின்றனர். அதனால், இருவரும் பெரிய துன்பங்களுக்கு ஆளாகியிருக்கின்றனர். குழந்தையைப் பொறுத்த மட்டில் அதன் உடல் வாழ்க்கை பெரிய விபத்திலிருந்து தப்பியது என்றாலும், மன வாழ்க்கையில் அது அடைந்துள்ள அபாயம் சிறிதன்று. பிறப்பதிர்ச்சியே பின்னேக்குக் குணங்களுக்குக் காரணமாயிருந்தால், எல்லாக் குழந்தைகளும் இந்தக் குணங்களைக் காட்டியிருக்கும். ஆதலாலேதான் நாங்கள் இன்னும் பரந்த கருதுகோளைப் (Hypothesis) பின்பற்ற விரும்புகிறோம்; விலங்குகளுக்கும் மனிதனுக்கும் பொருந்தும் கருதுகோளை அனுசரிக்க விரும்புகிறோம். பிறந்த முதல் சில நாள்களில் மிக மிக முக்கியமானவை நடைபெறுகின்றன என்பது தெளிவு. விலங்குகளில் மரபு குணங்கள் விழிப்புப் பெறுகின்றன. நாம் மேலே கூறியது போல, இதைப்போலக் குழந்தையிடத்திலும் ஒரு மாறுதல் நடைபெற வேண்டும். குழந்தையிடத்தில் இப்படி இப்படிதான் நடந்துகொள்ளவேண்டும் என்று மரபு வழியாக எதுவும் பெறப்படாவிடினும், இக்குழந்தையினுடைய வளர்ச்சியைத் தோற்றுவிக்கக்கூடிய மறைந்த சத்திகள் இதனுள் இருக்கின்றன. வெளி உலகத்தைப் பயன்படுத்தி இவையும் அவற்றைச் சாதிக்கின்றன.

இந்த அடிப்படையில் நாம் தாராகணம் 'Nebulae' என்ற கருத்தை உருவாக்கியிருக்கிறோம். சூழ்நிலையிலிருந்து உட்கவர்ந்துகொள்ளுமாறு எவ்வாறு ஆக்கச் சத்திகள் குழந்தைக்கு வழிகாட்டுமோ, அவ்வாறே இவைகளும் செயலாற்றும். வானில் தாரகைக்கூட்டங்கள் முதலில் ஒன்று கூடி, அவற்றிலிருந்து வானவெளிக் கிரகங்கள் தோன்றினதாகக் கருதப்படுகிறது. வானவெளியில் காணப்படும் தாராகணத்

தில் உள்ள புள்ளி போன்ற சிறு பகுதிகள் ஒன்றுக்கொன்று நெடுந் தொலைவில் இருப்பதால், தாராகணத்துக்குத் திடமான உருவம் ஒன்று இருப்பதாகத் தெரிவதில்லை. எனினும், அவை கண்ணுக்கு எட்டாத தொலைவிலிருந்தும் நட்சத்திரக் கூட்டமாய் நம் கண்களுக்குப் புலனு கின்றன. இந்தத் தாராகணமும் காலப்போக்கில் தெளிவான உருவம் பெற்றுவிடுகிறதுபோல, **தெளிவான உருவம் பெருத மரபுப் போக்கி லிருந்து குழந்தை உள்ளத்தில் மரபு அல்லாதது ஒன்று மெதுவா கத் தோன்றுவதை நாம் கற்பனை செய்துகொள்ளலாம்.** எடுத்துக் காட்டாக, **மொழித் தாராகணத்திலிருந்து** (Nebula of Language) குழந்தையினிடம் தன் தாய்மொழி பிறப்பதற்குப் பொருத்தமான வழி காட்டித் தூண்டுதல்கள் ஏற்படுகின்றன. இந்தத் தாய்மொழி என்பது குழந்தையுடன் பிறந்ததன்று. வெளியே உள்ள சூழ்நிலையில் காணப் படுவதைக் குழந்தை மாருத சில விதிகளின்படி உட்கவர்ந்துகொள் கிறது. மொழித் தாராகணச் சத்திக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். அந்தச் சத்தியால் குழந்தையின் செவியில் தாக் கும் பல வகை ஒலிகளும் கலந்து கிடப்பதிலிருந்து மனிதனுல் பேசப் படும் மொழியை மட்டும் பிரித்து உணர்ந்துகொள்கிறது. குறிப்பிட்ட மனித இனத்துக்கே சிறப்பான அந்த மொழியைக் குழந்தை அப் படியே கேட்டது கேட்டது போலப் பேசும் திறமையைப் பெற்றுவிடு கிறது. இதற்கும் காரணமான அந்த **மொழித் தாராகணத்தை** மறக்க இயலாது. அம்மாதிரியே குழந்தை பழக்கவழக்கங்களையும், அந் தந்த நாட்டு மக்களுக்கே உரிய போக்குகளையும், தன் உள்ளத்தில் பதியச் செய்துவிடுகிறது.

குழந்தை இன்னமொழியைத்தான் பேசப்போகிறதென்று மொழித் தாராகணம் முன் கூட்டியே எதையும் தன்னுள் பெற்றிருப்பதில்லை. ஆனால், அது இதைக்கொண்டே சூழ்நிலையில் பேசப்படும் ஒவ்வொரு மொழியையும் தன்னுள் உருவாக்கிக்கொள்ள இயலும். ஒவ்வொன் றும் ஒரே கால வரம்புக்குள் வளர்ச்சி பெறுகிறது. உலகத்தில் உள்ள எல்லா நாட்டுக் குழந்தைகளிடமும் இதே முறைதான் அனுசரிக்கப் பட்டு வருகிறது.

மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள ஓர் அடிப்படையான வேற் றுமையை இங்கு நாம் காண்கிறோம். விலங்கின் குட்டியோ, கன்றோ, பிறந்தவுடன் தன் இனத்திற்குரிய தனிக்குரலை எழுப்ப இயல்கிறது. இது இப்படிதான் இருக்கவேண்டும் என்று மரபு தீர்மானித்துவிடு கிறது. ஆனால், பிறந்த குழந்தையோ, நீண்ட காலம் ஊமையாகவே இருக்கின்றது. அதற்குப் பிறகு தன்னைச் சுற்றிலும் பேசப்படுகின்ற மொழியைப் பேசுகிறது. டச்சு நாட்டுக் குழந்தை இத்தாலி நாட்டில் பிறந்து வளர்ந்து வந்தால், அக்குழந்தையின் பெற்றோர் நெடுங்கால

மாக டச்சுமொழி பேசிவந்த போதிலும், அது இத்தாலி மொழியையே பேசும்.

எனவே, குழந்தையானது தன் மொழியின் நகலை முன் கூட்டியே மரபாகப் பெறுவதில்லை. நனவில்லாமல் உட்கவரும் செயல்களால் மொழியைப் படைத்துக்கொள்ளும் சத்தியையே குழந்தை மரபாகப் பெறுகிறது. கருவின் உயிரணுவில் உள்ள 'ஜீன்கள்' (Genes) வளர்கின்ற திசுக்களை இன்ன இன்ன உறுப்புகளாக வளரவேண்டும் என்று கட்டுப்படுத்துவது போலக் குழந்தையினிடம் காணப்படும் இந்த மறைந்த சத்தியையும் கருதலாம். இதற்கு நாம் '**மொழித்தாராகணம்**' என்று பெயரிட்டிருக்கிறோம்.

இதே போலச் சூழ்நிலைக்குத் தக்கபடி தன்னை அமைத்துக்கொள்ளும் குழந்தையின் சத்தியும், பிறந்த சூழ்நிலையில் காணப்படும் சமூகப் பழக்க வழக்கங்களுக்குத் தக்கவாறு தன்னை அமைத்துக்கொள்ளும் சத்தியும், மனித சமுதாயம் பண்டைக்காலந் தொடங்கி இது வரை படிப்படியாக அமைத்துக்கொண்டுவந்த பழக்க வழக்கங்களை எல்லாம் மறுபடியும் நடத்திக்காட்டச் செய்கின்றன. அல்லது இப்போது இருக்கும் சமூகத்தின் பழக்க வழக்கங்களை மட்டும் தன்னுள் ஆக்கிக் கொள்ளும் சத்தியைக் குழந்தை பிறந்தவுடன் பெறுகிறது. குழந்தை தன் மனத்தில் பெறக்கூடிய திறமைகளுக்கும் இதே உண்மை பொருந்தும். கேரல் (Carrel) என்பவர், விஞ்ஞானியார் ஒருவருடைய மகன் தன் தந்தையாரின் அறிவில் எதையும் மரபு வழியாகப் பெற மாட்டான் என்றும், தனிப் பாலைவனத் தீவில் விட்டுவிட்டால், கற்கால மனிதனுக்கும் அவனுக்கும் ஒரு வேற்றுமையும் தோன்றாதென்றும் கூறியிருக்கிறார்.

இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவாக்கிய பிறகு முன்னே செல்கிறேன். நாம் தாராகணம் என்று கூறும்பொழுது நம் மனத்தில் ஏதோ வெவ்வேறு மரபு சத்திகளைக் குறிப்பிடுவதாகவும் ஒவ்வொன்றுக்கும் தனிப்பட்ட நிலை ஒன்று இருப்பதாகவும் வாசகர் மனத்தில் ஓர் ஐயம் தோன்றலாம். இவ்வாறு இருப்பின், மனத்தின் முக்கிய ஒற்றுமையை இது மறைக்குமே என்றும் வாதாடலாம். தாராகண உதாரணமானது இங்கு வருணனைக்கு உதவியாக இருக்கவேண்டும் என்ற கருத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது; மனத்தில் தனித்தனி அணுக்கள் நிறைந்திருக்கின்றன என்ற கருத்தைத் தழுவுவதாக இல்லை. எங்களுடைய கருத்தின்படி **மனம் என்பது சத்தி வாய்ந்த முழுமையான ஓர் அமைப்பாகும். சூழ்நிலையின்மேல் ஆற்றப்படும் செயல்களின் உயிர்ப்புடைய அனுபவங்களால் அது தன்னை மாற்றி அமைத்துக்கொள்கிறது. இவ்வாறு நடந்துகொள்வதற்கு வழி**

காட்டியான ஒரு சத்திக்கு 'ஹார்மே' (Horme)[1] என்று பெயரிடப்பட்டிருக்கிறது. தாராகணங்கள் என்பவை இந்த ஹார்மேவினுடைய வெவ்வேறு விசேஷ நிலைகள் ஆகும்.

மொழித்தாராகாரணம் பணி ஆற்றவில்லை என்று வைத்துக்கொள்வோம். அல்லது, நமக்குத் தெரியாத சில காரணங்களாலே இது வெளிக் காட்டிக்கொள்ளாமலே இருந்ததென்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது மொழி வளராது. இது இயல்பன்று எனினும், நடைபெறுமலும் இல்லை. இது ஒரு வகையான ஊமைக்குழந்தையைத் தோற்றுவிக்கிறது. இத்தகைய குழந்தைகளுடைய பேச்சு உறுப்புகளும், கேள்வி உறுப்புகளும், மூளையும் இயல்பாகவே இருக்கின்றன. இம்மாதிரிக் குறையுள்ள அனேகம் குழந்தைகளை நான் பார்த்திருக்கிறேன். அவற்றைச் சோதனை செய்து செவி, நரம்பு முதலியவற்றை ஆராய்வதில் தேர்ந்த வல்லுனர்கள் திகைத்துப்போய், இது ஓர் இயற்கையின் புதிர் என்பதை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். இத்தகைய பேர்வழிகளைப் பரீட்சை செய்வது பயன் தரக்கூடியதாக இருக்கும். இந்த அபாக்கியசாலிகளின் வாழ்க்கைத் தொடக்கத்தில் என்ன நடந்ததால் இவ்வாறு ஆகியிருக்கலாம் என்று ஆராய்ச்சி செய்தல் விரும்பத்தக்கதாகும்.

மற்றத் துறைகளில் எடுத்துக்காட்டாகச் சமூகத்துடன் ஒட்டி வாழ்கின்றவைகளைப் போன்ற விஷயங்களைப்பற்றி இந்தக் கருத்துகள் விளக்கம் தரும். பிறப்பதிர்ச்சியால் விளைந்த பலன்களை எடுத்துக் காட்டுவதைவிட, இன்னும் நடைமுறையில் மேலான விஞ்ஞான உண்மைகளை எடுத்துக்காட்டலாம். குழந்தை சமூகத்துடன் ஒட்டி வாழ்வதற்கு வேண்டிய உயிர்ப்புள்ள ஊக்கம் பெறுதிருப்பதே பல பின்னேக்குக் குணங்களுக்குக் காரணமாயிருக்கின்றது என நான் கருதுகிறேன். இத்தகைய குழந்தைகளிடம் தக்க உணர்ச்சிகள் இல்லாத குறையினால் சூழ்நிலையிலிருந்து எதையும் இவை உட்கவர்வதில்லை ; அல்லது அறைகுறையாக உட்கவர்ந்துகொள்கின்றன என்று கொள்ளலாம். சூழ்நிலையில் கவர்ச்சிக்குப்பதிலாகப் பின் வாங்குதல் நடைபெறுகிறது. ஆதலால், குழந்தைக்கும் **'சூழ்நிலையின் மேல் அன்பு'** என்பது ஏற்படுவதில்லை. சூழ்நிலையைப் படிப்படியான வெற்றிகளால் குழந்தை தானே பெறவேண்டிய சுதந்தரத்தைப் பெற இயலாமற்போகிறது.

---

1. இது பிரிட்டிஷ் உளவியலார் பயன்படுத்திய சொல். மனிதனிடம் ஒரு சத்தி இருக்கிறது. தனிப்பட்ட குறிக்கோள்களைக் கொண்ட இயல்பூக்கங்கள் வழியாக இந்தச் சத்தி நிறைவெய்துகிறது. மனிதனுடைய நடத்தையெல்லாம் இந்தக் குறிக்கோள் கொண்ட சத்தியாலும் நடைபெறுகிறது. இச்சத்தியே ஹார்மே.

பிறகு மனித இனத்தின் குறிப்பிட்ட சிறப்பியல்புகளும், பழக்க வழக்கங்களும், மதக்கோட்பாடுகளும், பிறவும் இயல்பான முறைப் படி குழந்தை உட்கவராது போகிறது. இதன் பயன் என்ன? இயல் பிலே உண்மையான எதிர்மறைத்தோற்றம். சமூகத்துக்கே பொருந் தாத பேர்வழி, மேலே குறிப்பிட்ட பின்னுக்குக் குணங்களுள் பல வற்றைப் பெற்ற சாதிக்கட்டை மீறியவனுகிருன். மனிதனிடத்தில் **ஆக்கும் உணர்ச்சிகள்** (Creative Sensitivities) மரபு நடத்தையின் மாதிரிகளுக்குப் பதிலாக இருக்கின்றன. சூழ்நிலைக்குத் தக்கபடி நடந்துகொள்கிற திறமை இவற்ருலேயே நடைபெறுகின்றதென்ருல், ஒரு தனிப் பேர்வழியின் முழு உள வாழ்வும் குழந்தைப் பருவத்தின் ஆரம்பத்தில் நிலைநாட்டப்படுகின்ற அடி ஆதாரத்தைப் பொறுத்திருக் கின்றது என்பது தெளிவாகின்றது. இந்த ஆக்கும் உணர்ச்சிகள் காலங்கடந்து விழிப்பூட்டுவதற்கோ, அல்லது தோன்ருமலே இருப் பதற்கோ ஏதாவது காரணத்தை நம்மால் எடுத்துக்காட்ட இயலுமா என்று நம்மையே நாம் கேட்டுக்கொள்ளவேண்டியிருக்கிறது. இந்த வினுவிற்கு எந்த விடையும் அளிக்க இயலாது. இந்த அபாக்கிய சாலிகளின் வாழ்க்கையிலேயே ஒவ்வொருவரும் தேடிப் பார்க்கவேண் டும். இவர்களைப்பற்றி விஞ்ஞானம் தன் அறியாமையை ஒப்புக் கொண்டு புதிர்களால் பேசுகின்றது.

நான் பரிசோதனைக்குகந்த உதாரணம் ஒன்றை இந்தச் சமயத் தில் அறிவேன். அந்த மனிதர் கட்டுப்பாட்டு ஒழுங்குக்கு உட்பட இயலாதவர்; படிப்பில் கவனம் செலுத்தாதவர்; 'கெட்ட இயல்பு களைப் பெற்ற கெட்ட பையன்' என்று பெயர் வாங்கியவர்; 'நல் வழிப் படாதவன்' என்று தனியே இருக்கும்படி வைக்கப்பட்டவர்; பார்வைக்கு அழகானவர்; உடல் நலம் பெற்றவர்; நுண்ணறிவு படைத்தவருங்கூட. அவர் பிறந்த பதினைந்து நாள்களுக்குச் சத்துள்ள ஆகாரம் இல்லாமல் துன்பப்பட்டவர். அதனுல், உடல் வற்றிப் போய் எடையும் குறைந்து, 'என்பு தோல் போர்த்த உடம்பு' என்பது போலானுர். முக்கியமாக அவருடைய முகம் மிகவும் வாட்டமுற்றது. அவருக்குப் பாலூட்ட வரவழைக்கப்பட்ட செவிலித் தாயும் அவரைக் கண்டு அருவருப்படைந்தாள்; 'வெறுந்தோல்' என்று ஏளனமாகவும் குறிப்பிட்டாள். முதல் இரண்டு வாரங்களுக்குப் பிறகும் வாழ்க்கை முழுவதிலும் அவர் இயல்பாகவே வளர்ந்துவந்தார். நல்ல உடல் வன்மை பெற்ற குழந்தையாகவே வளர்ந்தார். அல்லா விட்டால் பிழைத்திருக்க இயலுமா? ஆனுல், இளைஞுய் வளர்ந்த வுடன் குற்றங்கள் செய்வதில் முனைந்தார்.

நிரூபிக்கப்பட வேண்டிய கருதுகோள்கள் (Hypothesis) இன்னும் பல உள. **உணர்ச்சித் தாராகணங்கள்** பிறந்த குழந்தையின்

மனவளர்ச்சியை நடத்தி வைக்கின்றன. கருத்தரிக்கப்பட்ட உயிரணுவை உடல் வளர்ச்சியைப் பொறுத்த மட்டில் 'ஜீன்கள்' பாதிக்கின்றதோடு இதை ஒப்பிடலாம். உயரினத்து விலங்குகள் தம் குட்டிகள் பிறந்த சில நாள்களுக்கு எவ்வாறு தனிப்பாதுகாப்பு அளித்து அந்த இனத்தின் வளச் சிறப்பியல்புகள் விழிப்படைவதற்கு உதவி புரிகின்றனவோ, அவ்வாறே நாமும் அன்று பிறந்த பச்சிளங் குழந்தைக்குத் தேவைப்படும் பாதுகாப்பும் ஆதரவும் அளிப்போமாக. இவ்வாறு கூறும் பொழுது ஏதோ குழந்தையின் முதல் ஆண்டு அல்லது முதல் மாதங்களின் வாழ்க்கையைப்பற்றி நாம் குறிப்பிட வில்லை; குழந்தையின் உடல் நலத்தையே குறிப்பிடுகிறோம் என்றும் எண்ணிவிடக்கூடாது. நுண்ணறிவு படைத்த தாய்மார்களுக் கும் பொதுவாக நம் மனைகளுக்கும் முக்கியமாக நடந்துகொள்ள வேண்டிய ஒரு முறையைக் காட்டுவதே நம் நோக்கமாகும். புதுமை யான நடத்தை விதிகள் தோன்ற வேண்டும். பிறந்த குழந்தையிடம் பிறந்தவுடனும் அதற்குச் சில தினங்களுக்குப் பிறகும் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்குத் தெளிவாக அனுசரிக்கப்பட வேண்டிய விதிகள் தோற்றுவிக்கப்பட வேண்டும்.

# 8. குழந்தையின் சுதந்தர வெற்றி

குழந்தையின் இயல்பு என்ன? நேர்முகமாகவும் சத்தியுடனும் செயல்சார் சுதந்தரத்தைப் பெறுவதே அதன் நோக்கம் ஆகும். ஆனால், அதனிடத்தில் பின்னேக்குச் சத்திகள் இருக்கும் போது இந்த இயல்பைக் காண இயலாது. வரவர இன்னும் விரிந்த சுதந்தரத்தைப் பெறவேண்டும் என்ற உந்துதல் வடிவில் வளர்ச்சி உருவெடுக்கிறது. இதை வில்லிலிருந்து விடப்பட்ட ஓர் அம்பு எப்படி நேராகவும் வேகமாகவும் குறி தவருமலும் பாய்கிறதோ, அப்படி என்று கருதலாம். குழந்தையானது முதலில் உலகத்துக்குத் தன்னை அறிமுகப்படுத்தும் பொழுது அதனுடைய முதல் சுதந்தர வெற்றி தொடங்குகிறது. அது வளரும் பொழுது அதன் பாதையில் காணப்படும் ஒவ்வோர் இடையூற்றையும் தானே கடக்க வேண்டும் என்று விரும்புகிறது. குழந்தைக்குள் ஒரு சீவசத்தி செயல் ஆற்றி வருகிறது. அதன் முயற்சிகளின் எல்லையை அடைவதற்கு இந்தச் சீவசத்தி வழி காட்டுகிறது. இந்தச் சத்தியை, சர். பெர்ஸி நன் (Sir Percy Nunn) என்பவர் 'ஹார்மே' (Horme)[1] என்று வழங்கினர்.

நனவு வாழ்க்கையில் இந்த உயிர் ஆற்றலுக்கு நேரான ஒன்றைத் தேடினேமானல், மனவுறுதி ஒருவாறு நேராக இருக்கும். ஆனால், இது மோசமான உதாரணமாகும். மனவுறுதி என்பது மிகுந்த கட்டுக்குள் அடங்கியது; தனி ஒருவருடைய உணர்வுடன் (awareness) நெருங்கிக் கலந்தது. 'ஹார்மே' என்பது வாழ்வு முழுமைக்குமே அமைந்தது. இதைத் **தெய்விகத் தூண்டுதல்** என்று

---

1. இந்தப் பதம் பெர்க்ஸன் (Bergson) என்பவர் உபயோகித்த உயிர் ஆற்றல் (Elan Vital) என்றதையும், ஃபிராய்டு (Freud) உபயோகித்த லிபிடோ (Libido) அல்லது **நிலை உந்தல்** என்றதையும் போல இருந்தாலும், முதலில் நன் என்பவரே இப்பதத்தை உபயோகித்தார். பிறகு வில்லியம் மேக்டௌகால் இதை அமைத்துக்கொண்டார்.

குறிப்பிடலாம். எல்லாப் பரிணுமங்களுக்கும் மூலம் இதுவே ஆகும். இந்த உயிர்ப்புடைச் சத்தி அல்லது சீவசத்தி குழந்தையின் வளர்ச்சிக்காகப் பல செயல்களைச் செய்யுமாறு அதைத் தூண்டி விடுகிறது. இயல்பான வழியில் அது வளருவதற்குக் குறுக்கே இடைஞ்சல்கள் இல்லாமல் இருந்தால், 'வாழ்க்கை இன்பத்தை' அது பெறுவதாகக் காட்டிக்கொள்கிறது. இத்தகைய குழந்தை எப்பொழுதும் உற்சாகத்துடனும் ஆனந்தமாகவும் இருக்கும்.

குழந்தையின் சுதந்தர வெற்றிகளே அதன் இயற்கையான வளர்ச்சியின் அடிப்படைப் படிகள் ஆகும். இயற்கையான வளர்ச்சியை நாம் கூர்ந்து கவனித்தோமானுல், அது படிப்படியான சுதந்தரங்களில் வெற்றி பெறுவதாகும். அது மனத்துறையில் மட்டும் அன்று; உடல் துறையிலும் அமையும். ஏனெனில், உடலிலும் வளர்ச்சி பெறவேண்டும் என்ற போக்கைப் பெற்றிருக்கிறது. அதனிடம் காணப்படும் இயற்கை உணர்வுகளும் உந்து சத்திகளும் சாவு ஒன்ருலேதான் தடுக்கப்படும்.

எனவே, இந்தப் பாதையையும் பல பகுதிகளையும் நாம் ஆராய்வோம். பிறக்கும் பொழுது குழந்தைஒரு சிறையிலிருந்து விடுதலையாகி வருகிறது; தாயின் கர்ப்பப் பையிலிருந்து விடுதலையாகிறது; இதனுல், தாயுடன் இனி ஒட்டி இருக்க வேண்டுவதல்லாத ஒரு சுதந்தரத்தைப் பெற்றுவிடுகிறது; வெளியுலகத்துடன் வாழவும், அதைத் தனக்குள் கவர்ந்துகொள்ளவும் வேண்டிய தூண்டுதலைப் பெறுகிறது. உலக வெற்றியைப் பெறும் உள்ளத்துடன் குழந்தை பிறக்கிறதென்று சொல்லலாம். **தன்னைச் சுற்றிலும் காணப்படுவதைத் தனக்குள் கவர்ந்துகொள்வதால் குழந்தை தன் ஆளுமையைத் தானே உருவாக்கிக்கொள்கிறது.**

குழந்தை இவ்வுலகத்தில் தோன்றியதும் முதற்பருவத்தின் அடையாளம் இதுவே. சூழ்நிலையில் வெற்றி பெறவேண்டும் என்ற ஒரு தூண்டுதலைக் குழந்தை பெற்ருல், அந்தச் சூழ்நிலையில் ஒரு கவர்ச்சி இருக்க வேண்டும் என்பதும் வெளியாகிறது. குழந்தை இந்த உலகத்தின்மேல் காதல்கொண்டிருக்கிறது என்று கொள்வோம். (இங்குக் காதல் என்பது பரந்த நோக்குடன் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. காட்ஸ் (Katz) என்பவர் கூறுவது போல '**இந்த உலகம் குழந்தையின் முன் மன எழுச்சி ஊட்டும் தோற்றத்துடன் காட்சி அளிக்கிறது,**' என்னலாம்.

முதலில் செயல் புரிகின்ற குழந்தையின் உறுப்புகள் அதனுடைய புலன்களே ஆகும். இந்தப் புலன்கள் எவை? உள்ளே இழுத்துக் கொள்ளுவதற்கு ஏற்பட்ட உறுப்புகள்தாமே? பிறகு வேறென்ன?

நமக்குள் பதியக்கூடிய உணர்ச்சிகளை ஏற்றுக்கொள்ளக்கூடிய கருவிகளே இவை. இந்தப் பதிவுகளெல்லாம் குழந்தை விஷயத்தில் ஆழமாக நிலைத்து அதனுடைய ஆளுமையுடன் ஒன்றிவிட வேண்டியிருக்கிறது.

நம்மைச் சுற்றிலும் நோக்கும்பொழுது நாம் என்ன காண்கிறோம்? கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் காண்கிறோம். நாம் கவனித்தோமானால், என்ன கேட்கிறோம்? காதில் விழும் எல்லா ஒலிகளையும் கேட்கிறோம். நாம் உள்ளிழுத்துக்கொள்ளக்கூடிய துறை மிகப் பரந்ததாகக் காணப்படுகிறது. இது உலகம் முழுவதுமே அடங்கியது போலும்! இது இயற்கையின் இயல். முதலில் இந்த ஒலி, பிறகு அந்த ஒலி என்று நாம் நம் வயப்படுத்திக்கொள்வதில்லை; அல்லது வெவ்வேறு சத்தங்களை ஒவ்வொன்றாகக் கேட்பதும் இல்லை. ஆனால், அவை அனைத்தையும் முழுமையாக உட்கவரத் தொடங்குகிறோம். ஒன்றுக்கும், மற்றொன்றுக்கும், ஒரு சத்தத்துக்கும் ஓர் ஓசைக்கும், அல்லது ஒரு ஸ்வரத்துக்கும் மற்றொரு ஸ்வரத்துக்கும், உள்ள வேற்றுமைகள் எல்லாம் இந்தப் பிரமாண்டமான சேர்க்கைகளிலிருந்து பிறகு வெளியாவது போலத் தோன்றுகின்றன. கெஸ்டால்ட் உளவியலுடன் (Gestalt Pyschology)[1] எவ்வளவு நன்றாக இது ஒத்து வருகிறது!

**இயல்பான குழந்தையின் உளப்படம் இதுவே.** அது முதலில் **உலகமுழுமையும் தனக்குள் இழுத்துக்கொள்கிறது; பிறகு பாகுபடுத்திக்கொள்கிறது.**

தன் சூழ்நிலையில் இம்மாதிரி அடக்க இயலாத கவர்ச்சியைக் காணாத மற்றொரு வகையான குழந்தை இருக்கிறது என்று நாம் கற்பனை செய்துகொள்வோம். இந்தக் குழந்தையிடத்தில் அந்தச் சூழ்நிலை அன்பு குறுக்கிட்டு அதற்குப் பதிலாக அச்சத்தைத் தோற்றுவித்திருக்கிறது. சூழ்நிலையைக் கண்டாலே குழந்தைக்கு அச்சமாய் இருக்கிறது.

---

1. கெஸ்டால்ட் ஒரு ஜெர்மன் உளவியலார். மனச்செயல் முறையும் (Mental process) நடத்தையும் (Behaviour) மிச்சம் விடாமல் தனித்தனி கூறுகளாகப் பிரிக்க இயலாதவை. ஏனென்றால், தொடக்கத்திலிருந்தே இவை அடிப்படையில் முழுமையும் முறைசெயப்படுத்தலும் கொண்டவை. நடத்தைக் கொள்கை (Behaviourism) அகக்காட்சிக்கொள்கை (Atomic psychology) ஆகிய உளவியல் (Introspectionism) கருத்துகளை எதிர்க்கும் முறையில் தோன்றியது. ஆக்கியோர் பெயரே இந்த இயலுக்கு நிலைத்து நின்று கெஸ்டார்ட் உளவியலென்றாயிற்று.

முதல் வகைக் குழந்தையின் வளர்ச்சி நிச்சயமாக இரண்டாம் வகைக் குழந்தையின் வளர்ச்சியிலிருந்து மாறுபடும். சில மாறுதல்கள் குழந்தையின் ஆரும் மாதத்துக்குள் நடைபெற்ருல், அத்தகைய குழந்தை இயல்பான குழந்தை என்று குழந்தை வளர்ச்சி ஆராய்ச்சிகள் எடுத்துக் கூறுகின்றன. இம்மாறுதல்களுள் சில, உடலைப் பொறுத்தவை. அவை இருக்கின்றனவா என்று ஆராய் வதற்குச் சோதனைகள் தேவைப்படும். இதற்கு எடுத்துக்காட்டு, சீரணத்துக்குத் தேவைப்படும் ஹைட்ரோகுளோரிக்கு அமிலத்தை (Hydrochloric Acid) இரைப்பை சுரக்கச் செய்வதாகும். முதலில் பல் தோன்றுகிறது. எனவே, சில குறிப்பிட்ட வளர்ச்சிகளால் உடல் படிப்படியாக முழுமை அடைகிறது. இதன் பலன் என்ன? ஆறு மாதங்களுக்குப் பிறகு தாயின் பாலில்லாமல் குழந்தை வாழ் வதற்கு ஆற்றல் பெற்றுவிடுகிறது; அல்லது, தாய்ப்பாலுடன் மற்ற வகையான உணவுகளையும் சேர்த்துக்கொள்ளும் சத்தியைப் பெற்றுவிடுகிறது. இதற்கு முந்தின பருவத்தில் வேறு எவ்வகை உணவையும் குழந்தையால் சீரணிக்க முடியாத கஷ்டத் தால் குழந்தை தன் தாய்ப்பாலையே நம்பியிருக்க வேண்டியிருந் தது. இதை நாம் நினைவுபடுத்திக்கொண்டோமானுல், குழந்தை இப்பொழுது எவ்வளவு அற்புதமான சுதந்தரத்தைப் பெற்றுவிடு கிறது என்பது விளங்கும். ஆரும் மாதத்தில் குழந்தை, "இனிமேல் என் வாழ்க்கைக்குத் தாய் எனக்குத் தேவையில்லை. நான் முழுமை யாய் வளர்ந்திருக்கிறேன்; நானே சாப்பிடுவேன்," என்று சொல்வது போல இருக்கிறது. இதைப் போலக் காளைப்பருவத்திலும் நடைபெறு கிறது. மக்கள் வீட்டிலிருந்து தங்கள் வாழ்க்கைக்கு வேண்டுவதைப் பெறுவது குறைவென்று கருதுகின்ருர்கள்; தாங்களே சம்பாதித்துத் தங்கள் செலவுக்காகக் குடும்பத்துக்குக் கொடுக்கவும் விரும்பு கின்ருர்கள்.

இந்தச் சமயம்—அதாவது ஆரும் மாதம்—குழந்தையின் முக்கிய மான பருவம் என்று நாம் கருதுகிரேம். இப்பொழுதுதான் குழந்தை யின் முதல் 'பிதற்றல்' ஆரம்பமாகிறது. குழந்தை இனிக் கட்டப் போகும் மொழியாகிய கோபுரத்தின் முதற்கற்கள் இவைகளேயாகும். இது குழந்தையின் சுதந்தர வெற்றியிற் பெரிய அடி எடுத்து வைப்ப தாகும். ஒரு தரம் பேச வந்துவிட்டால், குழந்தை தனக்குள் இருப்ப தைப் பிறர்க்கு எடுத்துக்கூற இயலும். இதன் தேவை இதுவாக இருக்குமோ என்று இனிமேலும் பிறர் யூகிக்கத் தேவையில்லை. மனித சமூகத்துடன் குழந்தை இனித் தொடர்பு கொள்கிறது. ஒருவரோ டொருவர் கருத்துகளைப் பரிமாறிக்கொள்வது மொழியினுல்தானே?

எனவே, பேசத் தெரிந்துகொள்வதும், அது காரணமாக நுண்ணறிவு நிறைவுடன் மற்றவர்களுடன் உரையாடக் கூடிய

சத்தியைப் பெறுவதும், குழந்தையின் சுதந்தரப் பாதையில் இன்னும் முக்கியமான கட்டமாகும். குழந்தை ஆரம்பத்தில் பார்த்தால், செவிடு போலவும் ஊமை போலவும் இருக்கிறது. அதனுல் ஒன்றுமே பிறர்க்குத் தெரிவித்துக்கொள்ளவும் இயலாது ; பிறர் கூறுவதையும் அதனுல் புரிந்துகொள்ள இயலாது. இப்படிப்பட்ட குழந்தை ஒரே சமயத்தில் கேட்கவும் சொற்களை உபயோகிக்கவும் சத்தியையும் பெறுகிறது.

அடுத்தபடியாகச் சீக்கிரத்தில் ஒரு வயதில் குழந்தை நடக்கத் தொடங்குகிறது. இது இன்னும் ஒரு சிறை வாசத்திலிருந்து குழந்தையை விடுவிக்கிறது. இப்பொழுது அதனுல் ஓட இயலும். அருகில் பிடிக்கச் சென்ருல், அது தப்பி ஓடி ஒளிந்துகொள்ளும். தனக்கு வேண்டிய இடத்துக்குத் தன் கால்கள் தன்னை எடுத்துக் செல்லும் என்ற எண்ணத்தில் அது நம்பிக்கை கொண்டிருக்கிறது. எனவே, மனிதன் படிப்படியாக வளர்ச்சியடைகிருன். விடுதலை பெறப் படிப்படியாக மேற்கொள்கின்ற முயற்சியால் குழந்தை இன்ப மாக அனுபவிக்கின்ற சுதந்தரம் பிறக்கிறது. இது ஏதோ தன்னை விடுதலை செய்துகொள்ள வேண்டும் என்று தீர்மானித்துக்கொள்வ தன்று ; அல்லது சுதந்தரம் பெற வேண்டும் என்று அது வீண் ஆசைப்படுவதும் அன்று. அதன் சுதந்தரம் என்பது ஓர் உடல் இயல் நிலையாகும். இந்த மாறுதல் வளர்ச்சிப் போக்கில் தோன்று வதாகும். வளர்வதற்கு வேண்டிய அவகாசத்தை அளிப்பவள் இயற்கை அன்னைதான் என்பது மறுக்க இயலாத உண்மையாகும். அதற்குச் சுதந்தரம் அளிப்பவளும் இயற்கை அன்னைதான். அந்தச் சுதந்தரத்தை வெற்றியுடன் அடைவதற்கு வழி காட்டியாய் இருப் பவளும் இயற்கை அன்னையே.

நடக்கத் தெரிந்துகொள்வது மிகமிக முக்கியமான செயல் ஆகும். இது மிகவும் சிக்கலான செயல் என்பது மட்டுமன்று. இது முதல் ஆண்டிலேயே சாதிக்கப்படுகிறது. மொழியை உருவாக்கிக்கொள்ளு கின்ற அதே சமயத்தில் இங்கும் அங்கும் நடந்து தன் வழியைத் தானே கண்டுபிடிக்கும் திறமையும் பெறுவது ஒரு பெரிய சாதனை தானே ? குழந்தை நடப்பது என்பது உடல் வளர்ச்சியில் ஒரு முக்கிய மான சம்பவமாகும். வேறு எந்த விலங்கும் நடக்கப் பழக வேண்டு வதில்லை. அவ்வாறு நடப்பதைச் சாதிப்பதற்கு மனிதன் ஒருவனே நீண்ட நுண்மையான வளர்ச்சிப் பகுதியைக் கடக்க வேண்டியிருக் கிறது. நடப்பது ஒரு புறம் இருக்கட்டும். குழந்தை நேராக நிற் பதற்குமுன் மூன்று தெளிவான உடல் இயல் வெற்றிகளைப் பெற வேண்டியிருக்கிறது. கன்றுகளும் மற்ற விலங்குகளுமோ என்ருல், அவை பிறந்தவுடனே நடக்க ஆரம்பிக்கின்றன. அந்த விலங்குகள்

உருவத்தில் நம்மைவிடப் பெரியனவாயினும், நம்மில் எத்தனையோ மடங்கு தாழ்ந்தவைகளே. நாம் பிறக்கும்பொழுது திக்கற்றவர்கள் போலப் பிறந்திருக்கிறோம். ஏன்? நம் உடல் அமைப்பு மிகவும் சிக்கலானது. இந்தச் சத்திகளைப் பெறுவதற்கு நெடுங்காலம் ஆகிறது.

நேராக நின்று இரண்டு கால்களாலேயே நடப்பதற்குப் பல பகுதிகளைக் கொண்ட மிகவும் விரிவான நரம்பமைப்புத் தேவைப்படுகிறது. இவற்றுள் ஒன்று, சிறு மூளை. இது மூளையின் அடியிலேயே அமைந்துள்ளது.



**6.படம். மூளையின் அடிப்பாகத்திலுள்ள சிறுமூளை.**

சரியாக ஆரும் மாதத்தில் சிறு மூளை வேகமாக வளர்வதற்கு ஆரம்பிக்கிறது. இப்படியே பதினான்கு அல்லது பதினைந்தாம் மாதம் வரை தொடர்ந்து வளர்ந்துகொண்டே போகிறது. அதற்குப் பிறகு இதன் வேகம் குறைகிறது; ஆனால், இதனுடன் நின்றுவிடமால் நான்கு அல்லது நாலரை வயது வரையும் வளர்ந்துகொண்டே போகிறது. நேராக நிற்பதும், நடப்பதும் இதன் வளர்ச்சியைப் பொறுத்திருக்கின்றன. குழந்தையின் வளர்ச்சியில் இதைப் பின் தொடர்ந்து கவனிப்பது எளிது. உண்மையில் ஒன்றை ஒன்று தொடரும் இரண்டு வளர்ச்சிகள் இருக்கின்றன. குழந்தை ஆரும் மாதத்தில் உட்காரத் தொடங்குகிறது; ஒன்பதாம் மாதத்தில் தவழ்வதற்கு ஆரப்பிக்கிறது; அதாவது, காலாலும் கையாலும் தவழ்ந்து கொண்டே போகப் பார்க்கிறது; பத்தாம் மாதம் நிற்கிறது; பன்னிரண்டு அல்லது பதின்மூன்றும் மாதத்தில் நடக்கிறது; பதினைந்தாம் மாதத்துக்குள் நடையில் தடுமாற்றம் இராது.

இந்தச் சிக்கலான வளர்ச்சியில் மற்றொரு பகுதி, சில நரம்புகள் நிறைவு பெறுதலாகும். தண்டு வடம் காலின் தசைகளுக்கு ஆஞ்ஞையை எடுத்துச் செல்கின்றது. இந்தத் தண்டு வடம் பூர்த்தி

அடையாவிட்டால் இந்த ஆஞ்ஞை அங்குப் போய்ச் சேர இயலாது. இந்தப் பருவத்தில் இந்த நரம்புகள் பூர்த்தி அடைகின்றன. அந்தத் தசைகளை அடக்கி ஆளுவதற்கு இந்த நரம்புகள் வேண்டியிருக்கின்றன. நடப்பதைச் சாதிக்க வேண்டுமானால், இவ்வாறு பல சிக்கல் வாய்ந்த வளர்ச்சிகளின் பல கூறுகளையும் ஒருமைப்படுத்த வேண்டியிருக்கின்றது. மூன்றாவது பகுதி, எலும்பு மண்டலத்தின் வளர்ச்சியாகும். நாம் ஏற்கெனவே, பார்த்தது போல, பிறந்த குழந்தையின் கால்களின் எலும்புகள் இன்னும் உறுதி பெறவில்லை. அவை முருந்துத் தசையால் ஓரளவுக்கு ஆனவை. ஆதலால், இன்னும் அவை மென்மையாகவே இருக்கின்றன. அந்த நிலைமையில் அந்தக் கால்கள் குழந்தையின் பளுவை எவ்வாறு தாங்க இயலும்? குழந்தை நடக்க ஆரம்பிப்பதற்குள் எலும்புகள் உறுதி பெற வேண்டியிருக்கின்றன. இன்னும் ஒரு விஷயம் குறிப்பிடத் தகுந்தது: குழந்தையின் மண்டை எலும்புகள் பிறக்கும்பொழுது ஒன்றாக இணைக்கப்படவில்லை. இப்பொழுது அவை ஒன்றாய் வளர்ந்து இணைந்துகொண்டிருக்கின்றன. குழந்தை நடை தவறிக் கீழே விழுந்தாலும் அதனுடைய மூளைக்கு எந்த பேராபத்தும் நேராத நிலையையும் இப்பொழுது பெற்றுவிட்டது.

போதிக்கின்ற முறையில் இந்தப் பருவத்துக்கு முன்பு குழந்தையை நடக்கப் பழக்க வேண்டுமென்று நாம் எவ்வளவு முயன்றாலும் நம்மால் அதைச் சாதிக்க இயலாது. ஏனென்றால், ஒரே சமயத்தில் நடைபெற வேண்டிய தொடர்ந்த பல உடல் வளர்ச்சிகள் நிறைவு பெற வேண்டியிருக்கின்றன. அங்கு முதிர்ச்சி அடைந்த நிலைகள் முதலில் ஏற்பாடாக வேண்டும். குழந்தையின் இயற்கையான வளர்ச்சியைத் திணிப்பதால் கெடுதலே விளையும். எல்லாம் நடத்தி வைப்பவள் இயற்கை அன்னையே. ஆதலால், எல்லாம் அவளைப் பொறுத்திருக்கின்றன. அவளுடைய சரியான ஆஞ்ஞைக்குக் கீழ்ப் படிந்து தீர வேண்டும். அம்மாதிரியே நடக்க ஆரம்பிக்கும் குழந்தையை நாம் தடுக்க முயன்றால், நம்மால் தடுக்க இயலாது. ஏனென்றால், ஓர் உறுப்பு உருவானதும் அது செயற்பட வேண்டும் என்பது இயற்கையின் விதி. இயற்கையின் பேச்சில் 'ஆக்குதல்' என்ற சொல்லுக்கு ஏதோ ஒன்றைச் செய்வது என்பது பொருள் அன்று. எது ஆக்கப்படுகிறதோ, அது உபயோகத்திலும் வர வேண்டும் என்பதே அதன் பொருள் ஆகும். எந்த உறுப்பு வளர்ந்து உருவாகி இருக்கிறதோ, அது அப்பொழுதே தன் தகுந்த சூழ்நிலையில் பணியாற்றித் தீர வேண்டும். இந்தச் செயல் சார் வேலை '**சூழ்நிலை அனுபவம்**'[1] என்று நவீனச் சொல்லாட்சியில் கூறப்படுகிறது. இத்தகைய அனுபவத்தைப் பெறாவிடில், அந்த உறுப்பு இயல்பாக வளர்ச்சி பெறத் தவறிவிடுகிறது. ஏனெனில், முதலில் அந்த உறுப்பு முற்றிலும்

1. Environmental experience

வளர்ச்சி பெருத நிலேயில் இருந்து வருகிறது. அது தன்னைப் பயன் படுத்துவதாலேயே முதிர்ச்சி பெறுகிறது.

சூழ்நிலேயினுல் அனுபவம் பெற்ருலொழியக் குழந்தை முழுமை யாக வளர்ச்சி பெருது என்பது இதிலிருந்து தெளிவாகிறது. இத்த கைய அனுபவத்தைத் 'தொழில்' என்கிருேம். மொழி பிறந்த உடனே குழந்தை பிதற்ற ஆரம்பித்துவிடுகிறது. எவராலும் அதைப் பேசாதிருக்கக் கேட்டுக்கொள்ள இயலாது. ஒரு சிறு குழந்தையைப் பேசாதிருக்க வைப்பது என்பது உலகத்திலுள்ள அரிய செயல்களுள் ஒன்ருகும். ஒரு குழந்தை நடப்பதையும் பேசுவதையும் தடுத்தோ மாளுல், அது இயல்பாக வளர இயலாது. அதற்கு ஒரு வளர்ச்சித் தடை ஏற்படும். அதற்கு மாருகக் குழந்தை நடக்கிறது; ஓடுகிறது; குதிக்கிறது; இம்முறைகளில் தன் கால்களை உபயோகித்து வளர்ச்சி பெறுகிறது.

குழந்தை இன்னும் புதுச்சத்திகளைப் பெற்றுத் தன் சுதந்தரத்தை விரிவாக்கிக்கொண்டிருக்கிறது. இந்தப் புதுச் சத்திகளைப் பயன்படுத் தாதுவிட்டால் குழந்தை இயல்பாக வளர இயலாது. தான் பெற்ற சுதந்தரத்தை உபயோகித்தே அது வளர்ச்சி அடைகிறது. வளர்ச்சி என்பது என்ன என்பதைச் சுருங்க விளக்க வேண்டுமாளுல், நவீன உளவியல் கூறுவது போல, அது தாளுக நடைபெறுவதில்லை. **ஒவ்வொரு தனி ஆளின் நடத்தையும் அவனது சூழ்நிலை அனுப வம் காரணமாய்த் தோன்றியதே.**

ஆதலால், குழந்தையின் வளரும் வாழ்க்கைக்குத் துணை புரிவதே கல்வி என்று கொள்வோமாளுல், அது இன்னும் புதிய ஒரு சுதந்தர நிலேயை அடைந்துவிட்டதாகக் காட்டும் பொழுதெல்லாம் நாம் மகிழ்ச்சிதானே அடைவோம்? சின்னஞ்சிறு குழந்தை அத னுடைய முதல் வார்த்தையைப் பேசினதும் நம் மகிழ்ச்சிக்கு அளவுண்டா? 'இதற்கு உதவி செய்ய நம்மால் இயலவில்லையே!' என்று நாம் உணரும்பொழுது அம்மகிழ்ச்சி இன்னும் அதிகமாகிறது அன்ருே? இந்த முன்னேற்றத்தை நிறுத்துவது எவ்வளவு கடின மாளுலும், ஓரளவு முன்னேருமல் பின் வாங்கச் செய்யவோ அல்லது வளர்ச்சி வேகத்தில் குறைந்தோ நடைபெறுவதும் உண்டு. அது எப்பொழுது என்ருல், தேவையான சூழ்நிலை அனுபவம் பெற முடியாத பொழுது இவ்வாருகிறது, இதைச் சிந்தனை செய்யும் பொழுது ஒரு கல்விப் பிரச்சினை நம்முன் தோன்றுகிறது.

எனவே, குழந்தைக்கு முதலான கல்வித் தேவை என்னவென் ருல், இயற்கையன்னையால் அதற்கு அளிக்கப்பட்ட சத்திகள் வளரத் தகுந்த ஒரு சூழ்நிலேயை அமைப்பதேயாகும். அப்படியென்ருல்,

ஏதோ அதனிடம் வேடிக்கையாக நடக்கவிட்டு, மற்றதெல்லாம் அதனிஷ்டம் போல நடந்துகொள்ளட்டும் என்று விட்டுவிடுவதன்று. இயற்கையன்னையுடன் ஒத்துழைக்கின்ற முறையில் நாம் நம் மனத்தைப் பொருத்தி அமைத்துக்கொள்ள வேண்டும். அவளுடைய சட்டங்களில் ஒன்றுக்குக் கீழ்ப்படிந்தவர்களாய் இருக்கவேண்டும். அந்த விதியோ சட்டமோ என்ன? **'சூழ்நிலை அனுபவத்தாலே தான் வளர்ச்சி அடைகிறது,'** என்பது அந்த விதி.

குழந்தை முதல் அடி எடுத்து வைத்ததும், இன்னும் உயர்ந்த அனுபவ நிலையைப் பெறுகிறது. இந்தச் சமயத்தில் அதைக் கூர்ந்து கவனியுங்கள். அது தன்னுடைய சுதந்தரத்தை மேலும் மேலும் விரி வாக்க முயற்சி செய்து வருகிறது; தானே எதையும் செய்யவேண்டும் என்கிறது; சாமான்களை எடுத்துப் போகவோ, சட்டையை அணிந்துகொள்ளவோ, கழற்றவோ, எல்லாம் தானே செய்துகொள்ள வேண்டும் என்கிறது. இவை நாம் சொல்லிக்கொடுத்ததால் ஏற்பட் டன அல்ல. அதனுடைய தூண்டுகை பெருஞ்சத்தி வாய்ந்தது. இதைக் கண்டு சாதாரணமாக நாம் தடுக்கப் பார்க்கிறோம். இவ் வாறு நாம் செய்வது உண்மையாகக் குழந்தையை அடக்குவதாகாது; இயற்கையன்னையை அடக்குவதாகும். ஏனென்றால், குழந்தையின் மனவுறுதி அவளுடைய மனவுறுதியுடன் ஒன்றியிருக்கிறது. அவ ளுடைய விதிகளுக்குக் குழந்தை ஒவ்வொன்றாகக் கீழ்ப்படிந்து கொண்டு வருகிறது.

முதலில் ஒரு விதத்தில், பிறகு மற்றொரு விதத்தில் இப்படியே படிப்படியாகக் குழந்தை தன்னைச் சுற்றிலும் உள்ளவர்களிடமிருந்து வரவர ஆதாரங்களைக் கொள்வதைக் குறைத்துக்கொண்டே வரு கிறது; இறுதியில் மனத்திலும் சுதந்தரம் பெறுகின்ற நிலையையும் அடைய விரும்புகின்றது; அப்பொழுது பிறருடைய அனுபவங்க ளில்லாமல் தன்னுடைய சொந்த அனுபவங்களைக்கொண்டு தன் மனத்தை வளர்க்க விருப்பம் காட்டுகிறது; "இது ஏன் இப்படி?" என்ற காரணத்தை ஆராய ஆரம்பிக்கிறது. இம்முறையில் மனித னுடைய தனி ஆளுந்தன்மை குழந்தைப் பருவத்தில் உருவாகிறது. இவைகளெல்லாம் ஏதோ கொள்கையென்றோ கருத்தென்றோ எண்ணு வதற்கில்லை. இவைகள் எளிய முறையில் கவனிக்கப்பட்ட மெய்ந் நிகழ்ச்சிகள். குழந்தையின் சுயேச்சை பூர்த்தியாக வேண்டும் என்றும், அதனுடைய சுதந்தரத்துக்கும் இயல்பான செயல்களுக்கும் உத்தர வாதம் அளிக்கப்பட வேண்டும் என்றும் கூறும்பொழுது இந்தச் சொற் களை ஏதோ மயக்கம் தரும் அல்லது தெளிவற்ற கருத்துக் கொள்கையை (Idealism)க் குறிப்பதற்கு என உபயோகிக்கவில்லை. இவைகளெல் லாம் வாழ்க்கையிலும் இயற்கையிலும் நேரடியாகக் கண்ட உண்மை

களாகும். சுதந்தரத்தாலும், சூழ்நிலை அனுபவங்களாலுமே மனித வளர்ச்சி ஏற்பட இயலும்.

அதே சமயத்தில், முதியோர் உலகத்தில் சுதந்தரக் கொள்கை என்று கருதப்படுபவைகளை நாம் குழந்தை உலகத்திலும் திணிக்கக் கூடாது. முதியோர்களைப் பார்த்து, 'சுதந்தரம் என்பது என்ன?' என்று கேட்டோமானால், அவர்களால் அதற்குச் சரியான விடை அளிக்க இயலாது. ஏனென்றால், சுதந்தரத்தைப் பற்றி அவர்கள் கொண்டுள்ள கருத்துகள் விசேஷமானவையல்ல. இயற்கையின் பரந்த எல்லையின் தன்மையை அவர்கள் அறியவில்லை. குழந்தை யிடத்திலேதான் இயற்கை மாட்சியின் பிரதிபலிப்பை நாம் காண இயல்கிறது. அது விடுதலையையும் சுதந்தரத்தையும் அளிக்கும் பொழுது வாழ்க்கையையே கொடுக்கிறது. தனி ஆளின் வயதுக்கும் தேவைக்கும் பொருத்தமான விதிகளில் ஒரு சிறிதும் மாறுமல் இயற்கையன்னை அவ்வாறு அளிக்கிருள். சுதந்தரத்தை வாழ்க்கை யின் விதி ஆக்கிவிடுகிருள்; "விடுதலை பெறு; இல்லையேல் நீ சாவாய்," என்கிருள்.

இந்த முறையில் இயற்கையின் போக்கு நமக்கு உதவி அளிக் கிறது என்பதை நான் நம்புகிறேன்; சமூக வாழ்க்கைக்குப் பொருள் காண்பதில் ஒரு புது அடிப்படை வெளியாகிறது என்பதை நம்பு கிறேன். முழுக் காட்சியையும் அப்படியே நம்முன் வளரும் குழந்தை விரித்துக் காட்டுவது போல இருக்கிறது. இந்தக் காட்சிகளிலிருந்து பெரியவர்களாகிய நாம் நம்முடைய சமூக வாழ்வில் ஏதோ சில சிறு பகுதிகளை மட்டும் ஏற்றுக்கொள்கிருேம். குழந்தை காட்டுவது உண்மையே. உண்மைக்கு வழி காட்டியாய் இருக்கின்ற அளவுக்கு அது உண்மை. இயற்கையான உண்மையைக் கண்டுபிடிக்கும்பொழுது அது சந்தேகங்களை நீக்கிவிடுகிறது. இதே காரணத்தால் குழந்தை தன் வளர்ச்சியாலும் உருத்துலக்கத்தாலும் பெறுகின்ற சுதந்தரமானது பரந்த அக்கறையைத் தூண்டுகின்ற அளவுக்குப் புது வழிகளில் நம் சிந்தனையைத் தூண்டிவிட இயலும்.

படிப்படியாக வளர்ந்துகொண்டே போகும் இந்தச் சுதந்தரத்தின் நோக்கம் எதுவாய் இருக்கலாம்? இது எங்கிருந்து வருகிறது? இது வளர்கின்ற ஆளுமையிலிருந்து ஊற்றெடுக்கிறது. இந்த ஆளுமை பிறகு தானே ஒதுங்கிக்கொள்ளும் சத்தியைப் பெறுகிறது. இது இயற்கை முழுவதிலும் நடைபெறுகிறது. உயிர் வாழ்வனவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனியாக நடந்துகொள்கிறது. ஆகையால், குழந்தையும் இயற்கையின் திட்டத்தையே பின் பற்றுகிறதென்பதைக் காண்கிருேம். வாழ்கின்ற எல்லா உயிரனங்களுக்கும் முதல் விதி

யாகிய **சுதந்தரத்தையே** குழந்தையும் அடைகிறது. இந்தச் சுதந்தரத்தை அது எப்படி அடைகிறது? தனது இடைவிடாத முயற்சியால் இதைப் பெறுகிறது. வாழ்க்கையில் செய்ய முடியாதது ஒன்றுளது. அதுதான் **'சும்மா இருத்தல்'**. சுதந்தரம் என்பது அசைவற்ற நிலை அன்று; இடைவிடாது தொடர்ந்த ஒரு வெற்றியாகும். சதந்தரம் பெறுவதற்கு மட்டும் அன்றி, வலிமை பெறுவதற்கும் அதனுடைய சத்திகளை இன்னும் நிறைவுபெறச் செய்வதற்கும் ஓயாத உழைப்புடன் கூடிய இந்த வழியைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது.

குழந்தையின் முதலாவது இயல்பூக்கம் என்னவென்றால், எதையும் தானே செய்துகொள்ள வேண்டும் என்பது; வேறெவர் உதவியுமின்றித் தானே செய்ய வேண்டும் என்கிறது. தனக்கு வேறெவராவது உதவி புரிய வேண்டும் என்னும் பொழுது குழந்தை அதற்கு எதிர்ப்புக் காட்டும்பொழுது அதனுடைய முதல் சுதந்தர தாகத்தின் அறிகுறி தென்படுகிறது. தானே வெற்றி பெறுவதற்காக அது தன்னுடைய முயற்சிகளை இன்னும் வலிவுபடுத்திக்கொள்கிறது.

மிகவும் இன்பமான வாழ்க்கை என்னவென்றால், ஒன்றும் செய்யாமல், பிறர் நமக்கு எல்லாம் செய்ய அவற்றை ஏற்றுக்கொண்டிருப்பதே என்று பலர் எண்ணுகின்றனர். இது விரும்பத்தக்கதாய் இருந்தால், குழந்தை பிறப்பதற்கு முன் வாழ்ந்து வந்த நிலைக்கு வேறு எது ஈடு ஆகும்? கர்ப்பத்தில் இருக்கும் பொழுது தாய் குழந்தைக்கு வேண்டியதெல்லாம் செய்து வந்தாள். பேசத் தெரிந்து கொள்ளவேண்டிய கடினமான வேலையை யோசித்துப் பாருங்கள். இதனால் வயது வந்தோர் ஒருவரோடொருவர் உரையாடக்கூடிய திறமையைப் பெறுகின்றார்கள். சும்மா இளைப்பாறுவதே வாழ்க்கையின் குறிக்கோளாய் இருப்பின், பேசக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைக் குழந்தை விட்டுவிடாதா? அல்லது இயல்பான உணவுக்குத் தன்னைத் தக்கபடி அமைத்துக்கொள்வதை நிறுத்தி விடாதா? இப்பொழுது நடமாடித் தன் மனத்தை உபயோகித்துத் தன்னைச் சுற்றிலும் உள்ளவைகளை எல்லாம் தெரிந்துகொள்கின்ற இன்பத்திலிருந்து விலகி இராதா?

குழந்தைகளே நமக்கு எடுத்துக்காட்டும் சான்றுகளுக்கு இவை முற்றிலும் மாறுனவை. **'சமூகம் தனக்கென்று ஆக்கிக்கொள்ளும் போக்கு வேறு; இயற்கை அன்னையின் போதனை வேறு,'** என்பதைக் குழந்தைகளே எடுத்துக் காட்டுகின்றன. தொழில் மூலமாகவே குழந்தை சுதந்தரத்தை நாடுகிறது. அந்தச் சுதந்தரம் உடலுக்கும் மனத்துக்கும் பொருந்தியது. பிறருடைய அறிவைப்பற்றி அது சிறிதும் கவலைப்படுவதில்லை; தன்னுடைய சொந்த அறிவைப் பெற

விரும்புகிறது; உலக அனுபவத்தைப் பெற விரும்புகிறது; பிறர் உதவி யற்ற தன் முயற்சிகளால் இவைகளை அடைய விரும்புகிறது. குழந்தை தொழில் புரிவதற்கு ஆயத்தமான ஒரு தொழிலாளி. தொழில் புரியாமல் சும்மா இருக்க அதனால் இயலாது. இப்படிப்பட்ட பேர்வழிக்கு நாம் சுதந்தரமும் விடுதலையும் அளிக்கிறோம் என்பதை நாம் மறந்துவிட லாகாது. மற்ற எல்லா உயிர் இனங்களிலும் காணப்படுவது போலக் குழந்தையிடமும் இது இருந்து வருகிறது. இதை அடக்கிறோ மானால், இது குழந்தையைக் கீழ்த்தரமாக்குகிறது.

உயிர் இனங்கள் எல்லாம் சும்மா இராமல் வினையாற்றி வரு கின்றன. வாழ்க்கை என்பதே உச்ச நிலையில் வினை ஆற்றலைக் குறிக் கும். வினை ஆற்றலாலேதான் வாழ்க்கையின் நிறைவைத்தேடவோ பெறவோ இயலும். மறைந்த பரம்பரைகள் நமக்கு விட்டுப்போன சமூக அவாக்களாகிய (Aspirations) 'குறைந்த மணி வேலை செய் தல்', 'நமக்குப் பிறர் வேலை செய்தல்', 'வரவரச் சோம்பல் அதி கரித்தல்' ஆகிய இவைகள் எல்லாம் குழந்தைமையில் இயற்கை தோற்றுவித்த ஓர் இழிவு நிலையின் அறிகுறியை வெளியாக்குகின்றன. வாழ்க்கையின் ஆரம்ப நாள்களில் தன் சூழ்நிலைக்குத் தக்கபடி தன்னை அமைத்துக்கொள்வதற்கு வேண்டிய உதவி பெறாத காரணத்தால் ஏற்பட்ட பின்னேக்குக்கே மேலே குறிப்பிட்ட அவாக்கள் அறிகுறி யாகின்றன. சூழ்நிலைமேல் விருப்பு ஏற்படுவதற்குப் பதிலாக வெறுப்பு ஏற்பட்டு, முயற்சி செய்வதென்றாலே கசப்பாகத் தோன்றுகிறது. பிறர் தனக்கு உதவவேண்டும்; தனக்காகக் காத்துக்கொண்டிருக்க வேண்டும்; பிறர் தன்னைத் தூக்கிச் செல்லவேண்டும், அல்லது சக்கர வண்டியில் வைத்துத் தள்ளவேண்டும் என்று நினைத்துப் பிறர் தோழ மைக்கு வெட்கப்பட்டு, நீண்ட நேரம் உறங்க விரும்பி வந்ததே அம்மாதிரி எல்லாம் நடந்துகொள்ளும். அத்தகைய குழந்தையின் தோற்றம் சீர்கேட்டு நிலை (Degeneracy)யைக் குறிக்கிறது. இதைக் கண்டு உணர்ந்த விஞ்ஞானியார் இது கருப்பைக்குள் திரும்பவும் புகுந்துகொள்ள வேண்டுமென்னும் உளப்போக்கைப் பெற்ற குழந்தை யைக் குறிக்கிறது என்கிறார். இயல்பாகப் பிறந்து, இயல்பாக வளர்ந்து வரும் குழந்தை சுதந்தரத்தை நாடிச் செல்கிறது. இதை விலக்கும் குழந்தை சீர்கேடு அடைகிறது.

இந்த அபாக்கியசாலிகளின் கல்விப்பிரச்சினை மிகவும் சிக்கலான காரியமாய் இருக்கிறது. இயல்பான வளர்ச்சியைக் குறுக்கிட்டுக் கோணலாக்கும் பின்னேக்கத்தை நாம் எங்ஙனம் குணப்படுத்துவது? **விலக்கல் குழந்தைக்கு** (Deviated child) சூழ்நிலைமேல் அன்பில்லை. ஏனென்றால், அதில் பல கஷ்டங்கள் இருப்பதாக அது கருதுகிறது. அதற்குச் சூழ்நிலை மிகவும் கடினமானதாகவும் எதிர்ப்புடையதாகவும்

தோன்றுகிறது. இன்று குழந்தை உளவியல் ஆராய்ச்சியில் முதன்மை இடம் பெற்று வருவது இந்த விலக்கல் குழந்தையாகும். இந்த உள வியலைக் 'குழந்தையின் உள்நோய் இயல்' என்று வழங்குவது பொருத்தமாய் இருக்கும். மனிதர் பல 'பிள்ளை உதவி நோய் பேண கங்களைத்' (Child Guidance Clinic) தோற்றுவித்துக்கொண்டிருக் கின்றனர். கலைக்கப்பட்ட குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரித்து வருவதைச் சமாளிக்க விளையாட்டுச் சிகிச்சை முறை (Play therapy) போன்ற புதிய செயல் வகைகள் (Techniques) அனுசரிக்கப்பட்டு வருகின்றன. சூழ்நிலை குறைந்த தடைகளைக் காட்டும் வகையில் இருக்கவேண்டும் என்று போதனு முறை அல்லது ஆசிரிய விதி கற் பிக்கிறது. ஆதலால், சூழ்நிலையில் அடங்கியுள்ள தடைகள் மேலும் மேலும் குறைக்கப்பட்டு வருகின்றன. ஓரளவுக்கு இல்லாமலே செய்யவும் முயற்சி செய்யப்படுகின்றது. இப்பொழுதெல்லாம் குழந் தையைச்சுற்றி உள்ளவை கூடியவரை கவர்ச்சிகரமாக இருக்கும்படி செய்யப்பட்டிருக்கின்றன. முக்கியமாகச் சூழ்நிலையைக் கண்டு வெறுக்கின்ற குழந்தைகளுக்கு அவை அனுசரிக்கப்படுகின்றன. சூழ்நிலையில் காணப்படும் நம்பிக்கையின்மையும் சலிப்பும் விலகுவதற் குத் தகுந்த பச்சாத்தாபத்தையும் அன்பையும் ஊட்ட வேண்டும் என்ற ஆசையால் இவை எல்லாம் செய்யப்படுகின்றன. விரும்பத் தக்க செயல்களும் ஏற்படுத்தப்படுகின்றன. ஏனென்றால், செயல் புரிவதாலேதான் வளர்ச்சி ஏற்படுகிறதென்பது நமக்குத் தெரியு மல்லவா ? சூழ்நிலையில் ஊக்கம் ஊட்டும் நிலைகள் காணப்படவேண் டும். இவை செயல் புரிவதில் அக்கறையைத் தூண்டிவிட்டு, குழந்தை தானகவே தன் பரிசோதனைகளைச் செய்யுமாறு அழைப்பது போல இருக்க வேண்டும். இவைகளெல்லாம் வாழ்க்கையிலும் இயற்கையில் எடுத்துக்காட்டப்படும் கொள்கையாகும். இவை பின்னுேக்குச் சிறப்பியல்புகளைப் பெற்றுள்ள குழந்தைக்கு உதவி புரிகின்றன. சோம்பல் தன்மையிலிருந்து செயல் புரிவதில் இன்பம் பெறும் நிலையையும், அசைவற்றுக் கிடக்கும் தாமச குணத்திலிருந்து தொழில் ஆற்றும் உணர்வைப் பெறுவதற்கும், அச்ச நிலையிலிருந்து (குழந்தை தான் ஒட்டிக்கொண்டிருக்கும் பெரியவர்களிடமிருந்து தன்னைப் பிரித்துவிடுவார்களோ என்ற அச்சத்தால் இன்னும் அதிகமாக ஒட்டிக்கொள்கிறது) இன்பமூட்டும் சுதந்தர நிலையை அடைவதற்கும், இக்கொள்கைகள் உதவி புரிகின்றன.

இயங்காத் தன்மையிலிருந்து (Enertia) தொழில் செய்யும் நிலை ! சிகிச்சை பெறும் வழி இதுவே. இயல்பான குழந்தையின் வளர்ச் சிக்கு எப்படி இயங்காத் தன்மையிலிருந்து தொழில் புரிவதே வழி யாகிறதோ, அப்படியே, புதுமைக் கல்விக்கு இதுவே அடிப்படை யாக இருத்தல் வேண்டும். இயற்கை அன்னையும் இதையே காட்டி நிலை நாட்டுகிருள்.

## முதிர்ச்சியின் பொருள்

நீண்ட தர்க்கங்களில் ஈடுபடுத்திக்கொள்வதற்கு எனக்கு விருப்பம் இல்லை எனினும், இன்னும் விரிவாகக் கூறுவதற்கு முன் '**முதிர்ச்சி**' என்ற சொல்லை நான் எந்தப் பொருளில் பயன்படுத்துகிறேன் என்பதை உங்களுக்குத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். இந்த விஷயத்தைப்பற்றி என் கருத்து என்ன என்பதைப் புரிந்துகொள்வது இதைத் தொடரும் உட்பிரிவுகளை மட்டும் அன்றி, இந்த நூலையே புரிந்துகொள்வதற்கு இன்றியமையாததாகிறது. முன்னெல்லாம் முதிர்ச்சி என்ற பதம் **பிறப்பியலிலும்** (Genetics) **கரு வளர்ச்சியியலி**லும் (Embriology) பயன்படுத்தப்பட்டன. ஆரம்பக் கரு உயிரணு கர்ப்பாதானம் நடைபெறுவதற்கு முன் வளர்ச்சி பெருத நிலையில் இருந்து வளர்ச்சி அடைந்த முதிர்ந்த உயிரணுவைக் குறித்துவந்தது.

ஆனால், குழந்தையின் உளவியலில் இந்தப்பதம் பரந்த பொருளைக் கொண்டிருக்கிறது; வளர்வதற்குக் காரணமாயிருக்கின்ற ஒரு வகை ஒழுங்குபடுத்தும் யந்திரம் போன்றது. உயிரியல் (Organism) முழுமையிலும், ஒரு சம நிலையையும் வளர்ச்சி உணர்ச்சிகளையும் நிர்ணயிக்கிறது. குறிப்பாக **ஆர்னல்டு கெஸெல்** (Arnold Gesell) என்பவர் இந்தக் கருத்தை விருத்தியாக்கியிருக்கிருர். ஆனல், தெளிவான வரையறை எதுவும் தெளிவாக எடுத்துக் கூறவில்லை. அவருடைய கருத்தை நான் புரிந்துகொண்டதிலிருந்து தனிப்பட்டவருடைய வளர்ச்சி சில மாருத விதிகளை ஒட்டியே நடைபெறுகின்றன என்பதை உறுதியாக்குகிருர் எனக்கொள்கிறேன். இந்த விதிகளை மதிக்கவேண்டியிருக்கிறது. ஏனென்ருல், குழந்தையிடம் இயற்கையான பண்புக்கூறுகளும் (Traits) உளப்போக்குகளும் (tendencies) இருக்கின்றன. இவை பெரும்பாலும் உடன்பிறந்தவை, இவை குழந்தை "எப்படி, எதை, எப்பொழுது கற்றுக்கொள்ளவேண்டும்?" என்பதைத் தீர்மானிக்கின்றன.

கெஸெல் என்பவர், "**குழந்தையினுடைய செயல்களைப் போதனையால் திருத்தி அமைத்தல் இயலாது,**" என்கிருர்.

உடல் நிலையைப் பொறுத்தமட்டில் இது உண்மையே. நான் இதுவரை கூறி வந்தது போல, உடலில் சில குறிப்பிட்ட உறுப்புகள் முதிர்ச்சி அடைவதற்குள் ஒரு குழந்தைக்கு நடை பழக்க இயலாது. அதேபோல, குறிப்பிட்ட வயதுக்கு முன் எந்தக் குழந்தையும் பேசக் கற்றுக்கொள்ள இயலாது. ஒரு முறை பேசக் கற்றுக்கொண்ட குழந்தையை எவராலும் பேசாதிருக்கச் செய்யவும் இயலாது. "**குறிப்பிட்ட இயற்கையான சில விதிகளைப் பின்பற்றியே குழந்தை வளர்**

கிறது,'' என்னும் கருத்தைக் காத்த முன்னணியாளர்களுள் நானும் ஒருத்தி என்பதை என்னுடைய பணியைத் தொடர்ந்து கவனித்துவந்தவர்கள் அறிவார்கள். இந்த விதிகளைக் கல்வியின் அடிப்படை என்றே நான் கருதுகிறேன். எனினும், செகுவின் விளக்கம் உடல் வளர்ச்சிக்கு மிகப் பொருத்தமானதென்றாலும், குழந்தைகளின் மன வளர்ச்சிக்குப் பொருந்தாதென்று எனக்குத் தோன்றுகிறது. அவர் **ஒருமைக் கொள்கைப்படி** (Monistic doctrine) குழந்தையின் உடலைப்போல அதன் மனமும் வளர்ச்சி முறைகளால் மலர்ச்சி பெறுகிறது என்கிறார். இது உண்மையாய் இருக்க இயலாது. மனித சமூகமே இல்லாத ஒரு தனி இடத்தில் ஒரு குழந்தையை வளரவிட்டு, உடல் நலத்துக்கு வேண்டிய உணவுப்பொருள்களை மட்டும் கொடுத்து வந்தோமானால், அதன் உடல் வளர்ச்சி மட்டும் இயல்பாய் இருக்கும். ஆனால், அதன் மனவளர்ச்சியானது மிகவும் மோசமாகப் பாதிக்கப் படும். இந்த உண்மைக்கு விளக்கமான எடுத்துக்காட்டை **டாக்டர் இட்டார்டு** (Dr. Itard) என்பவர் விளக்கியிருக்கிறார். தனிமையாகக் காட்டில் கிடந்த ஒரு பையனுக்குக் கற்பிக்கப் பொறுமையான முயற்சிகள் செய்தும் பயனற்றுப்போன கதை **'அவிரான் அநாகரிகன்'** (The Savage of Aveyron) என்ற செய்தியாய் எங்கும் பரவிற்று.

ஒரு மேதையை நம்மால் ஆக்க இயலாது என்னும் உண்மையை நான் பல முறைகளில் எடுத்துக் கூறியிருக்கிறேன். ஒவ்வொரு குழந்தையிடமும் மறைந்து கிடக்கும் சக்திகள் மலர்ச்சி பெறுவதற்கு நாம் அவகாசந்தான் கொடுக்க இயலும். 'உடலியல் முதிர்ச்சி' என்பதைப் பற்றிப் பேசினோமானால், 'உளவியல் முதிர்ச்சி' என்பது ஒன்றும் இருப்பதை நாம் ஒப்புக்கொள்ள ஆயத்தமாய் இருக்க வேண்டும். இதைப் பற்றிக் கடந்த அதிகாரங்களில் விளக்கம் தந்திருக்கிறோம். கருவளர்ச்சியில் நடைபெற்று வருகின்ற ஒவ்வொரு நிகழ்ச்சியுடன் ஒட்டியே இதுவும் நடைபெற்று வருகிறது.

உறுப்பி (Organism) ஒன்று உருவாகின்ற இந்த இன்றியமையாச் செயல் முறையில் (Process) முழுமையாக வளர்கின்ற மொத்தத்தையும் நாம் எங்கும் காண இயலாது. அல்லது வளர்ச்சி என்பது படிப்படியாகவும் ஒழுங்காகவும் நடைபெறுவதில்லை. செயல் உணர்ச்சி பெற்ற சில புள்ளிகளைச் சுற்றிலும் தொடங்கி ஒவ்வோர் உறுப்பும் தனித்தனியாகவே வளர்கின்றது. இந்தப் புள்ளிகளைச் சுற்றிலும் உள்ள _தொழிற்பாடு (Activity) குறிப்பிட்ட காலவரையுடன் நின்று, பிறகு உறுப்பு உருவானவுடன் மறைந்துவிடுகிறது. உறுப்புகளை உண்டாக்குவதற்குத் துணையாய் இருந்த இந்தத் தொழிற்பாட்டுப் புள்ளிகளில்லாமல் சில உணர்ச்சிப் பருவங்களும் இருக்கின்றன. விலங்குகள் வெளியுலகில் வாழக்கூடிய காலம் வரை

இந்த உணர்ச்சிப் பருவங்கள் விலங்கின் நடத்தைக்கு முக்கிய வழி காட்டிகளாய் இருப்பதில் பங்கு கொள்கின்றன. இந்த உண்மையை டச்சு உயிர் நூல் வல்லுனரான டி வ்ரிஸ் (De Vries) என்பவர் எடுத்துக் காட்டியிருக்கிறார். இதே உண்மையைக் குழந்தையின் உளவியல் வளர்ச்சியிலும் காண்கிறோம். இது, வாழ்க்கையின் முறைகளை ஒட்டியே மனிதப் போக்கும் நடந்து வருகிறது என்பதை நமக்கு எடுத்துக் காட்டுகிறது. '**தானாக வரையறுத்துக்கொண்ட கால வட்டத்துக்குள் செயல் புரிகின்ற ஜீன்களினுடைய பலன் களின் மொத்தத் தொகை**' என்று கெஸெஸ் முதிர்ச்சிக்கு விளக்கம் கூறியிருக்கிறார். மேலே நாம் கண்டதிலிருந்து முதிர்ச்சி என்பது இதனுடன் நிற்பதில்லை. ஏனென்றால், ஜீன்களால் பாதிக்கப் படுவதோடல்லாமல், அவைகள் சூழ்நிலையில் நடந்துகொள்வதன் விளைவுகளும் இருக்கின்றன. முதிர்ச்சியின் செயல் முறையில் சூழ்நிலையும் மிகவும் முக்கியப் பங்கெடுத்துக்கொள்கிறது.

உளவியல் முதிர்ச்சியைப் பொறுத்த மட்டில் அது சூழ்நிலை அனுபவங்களாலேதான் நடைபெற இயலும். இந்த அனுபவங்கள் முதிர்ச்சியின் உருவத்தை ஒவ்வொரு வளர்ச்சி மட்டத்திலும் மாற்று கின்றன. ஏனெனில், 'ஹார்மோ' அதன் உருவத்தை மாற்றிக் கொள்கிறது. எப்படி? சில செயல்களைப் பல முறை செய்து பார்க்க வேண்டுமென்ற உணர்ச்சி நிறைந்த அக்கறையாகத் தனி ஒருவரிடம் தோன்றுதலால், மாற்றிக்கொள்கிறது. இவ்வாறு அடிக்கடி செய்து பார்க்க வேண்டுமென்ற உணர்ச்சிக்கு ஏதாவது காரணம் உண்டா? எவையும் இல்லை. இறுதியில் இந்தப் பன்முறை செய்தது காரணமாக வெடிசக்தியுடன் (Explosive force) ஒரு புதுச்செயல் திடீரென்று தோற்றம் அளிக்கிறது. இவ்வாறு செயலின் ஒரு தனி வகையானது வெளிப்படையாகத் தோற்றம் அளியாமலே முதிர்ச்சி பெறுகிறது. இம் மாதிரி பன்முறை செய்யப்படும் செய்கைக்கும் அவற்றால் உண்டாக் கப்படும் செயற்போக்குக்கும் நேரடியான தொடர்பு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்தச் செயற்போக்கு ஏற்பட்டதும் அம்மாதிரி பன்முறை செய்வது நிறுத்தப்படுகிறது. இதற்குள் வேறு ஒரு செயலுக்கு ஆயத்தமாவதற்காகக் குழந்தையின் கவர்ச்சி முழு வதும் மற்றொரு செயலில் திருப்பப்படுகிறது. குழந்தை இந்த அனுப வங்களை இந்த இந்தக் காலங்களில் பெறவேண்டுமென்று இயற்கை யன்னை ஏற்பாடு செய்து வைத்திருக்கிறாள். இந்த அனுபவங்கள் குழந்தை அனுபவிக்கின்ற இன்பத்தைப் பெற இயலாதபடி அந்தச் சமயத்தில் தடுக்கப்பட்டால், இந்தக் குழந்தையைக் கவர்ந்த அந்த உணர்ச்சி நுண்மை மறைந்து போகும். இதனால், குழந்தையின் வளர்ச்சி தடைபடுகிறது. அது காரணமாக முதிர்ச்சியும் பாதிக்கப் படுகிறது.

நவீன உளவியல் நூல்களில் முதிர்ச்சியைப் பற்றி விரிவான வரையறை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைக் கவனிப்போம் : 'முதிர்ச்சி' என்பது பெரும்பாலும் மரபு வழியாக வரக்கூடிய உடல் அமைப்பு மாறுதல்களைக் குறிக்கும். இந்த மரபுகளின் மூலமானது கருத்தரித்த அண்டத்தில் காணப்படும் 'குரோமோசோம்களில்' சில பகுதிகள் சூழ்நிலைக்கும் உறுப்பிக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பாலும் உண்டாகின்றன.

நாம் கண்டறிந்த உண்மைகளைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இவற்றை ஆராய்ந்தோமானால், மனிதன் 'ஹார்மே' என்று கூறப் படுகின்ற சீவசத்தியுடன் பிறக்கிருன். இந்தச் சத்தி அவனுடைய உட்கவரும் மனத்தின் அமைப்பில் ஏற்கெனவே பதிந்திருக்கிறது. இந்த உட்கவர் மனத்தில் சிறப்புப் பகுதிகளும் வெற்றுமைப்பகுதிகளும் கூடியிருக்கின்றன. இவற்றை நாம் முன்பே 'நெபுலா' அல்லது 'தாராகணம்' என்று குறிப்பிட்டிருக்கிறோம்.

இந்த அமைப்பு, குழந்தைப்பருவத்தில் மாறுதல் அடைகிறது. டி வ்ரிஸ் என்பவரைப் பின்பற்றி இவ்வாறு நடைபெறுவதற்குக் காரணத்தை நாங்கள் '**உணர்ச்சிப்பருவம்**'[1] என்று வழங்கியிருக் கிறோம். எனவே, உடல் வளர்ச்சியும் உளவளர்ச்சியும் நடைபெறு வதற்கு வழிகாட்டியாய் இருப்பது **உட்கவர் மனமும், தாராகணமும், உணர்ச்சிப் பருவங்களும்** அதனுடைய இயங்குபகுதிகளை உபயோகிப்பதேயாகும். இவைகளே மரபு வழியாகப் பெறப்படுபவை. இவைகளே மனிதகுலத்தின் சிறப்பியல்பாய் நிற்பவை. ஆனால், இவை நமக்கு அளிக்கும் நம்பிக்கை எல்லாம் சூழ்நிலையின்மேல் நடத்தப்பட்ட செயல்களினடியாகப் பெறும் அனுபவத்தினாலேதான் உண்டாக இயலும்.

---

1. Sensitive period

# 9. வாழ்க்கையின் முதல் நாள்கள்

மன வாழ்க்கைக்கு உதவி புரிவது நம் கடமை என்பதை உணர்ந்தோமானால், நாம் கற்றுக்கொள்ள வேண்டிய முதற்பாடம் யாது? அது சூழ்நிலையிலிருந்தே சிறு குழந்தையின் உட்கவர் மனம் அதன் முழு உணவைப் பெறுகின்றதென்பதே. அந்த உட்கவர் மனம் தனது நிலையை இங்கே உறுதியாக்கிக்கொள்ள வேண்டும். அது சூழ்நிலையிலிருந்து எவற்றையெல்லாம் தனக்குள் ஏற்றுக்கொள்கிறதோ அவற்றை வைத்துக்கொண்டு தன்னையே ஆக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது. முக்கியமாக வாழ்க்கையின் தொடக்கத்தில் சூழ்நிலையை நம்மால் கூடிய அளவு கவர்ச்சிகரமாகவும் அக்கறையுள்ளதாகவும் செய்ய வேண்டும்.

நாம் இது வரை கவனித்து வந்தது போல, குழந்தை வளர்ச்சியின் பல படிக்கட்டுகளைத் தாண்டுகிறது; இந்தச் சூழ்நிலையின் ஒவ்வொரு பகுதியும் வேவ்வேறாயிருந்தாலும், தனிப்பங்கு எடுத்துக்கொள்கிறது. பிறப்பிற்குப் பிறகு தேவைப்படுவது போல எந்தப் பருவத்திலும் சூழ்நிலை அவ்வளவு முக்கியமாகத் தேவைப்படுவதில்லை. இந்த உண்மையைச் சிற்சிலரே உணர்ந்திருக்கின்றனர்; அண்மை வரையில் முதல் ஈராண்டுகளில் குழந்தைக்கு மனத்தேவைகள் இருக்கின்றன என்ற சந்தேகமே ஏற்படவில்லை. எனினும், இப்பொழுது இவை மிகவும் முக்கியமானவை என்பதும், இவற்றைக் கவனியாமல் விட்டுவிட்டால் பல தீமைகள் ஏற்படுகின்றன என்பதும், ஆதலால் இவற்றைப் புறகணித்தலாகாது என்பதும் உணரப்பட்டு வருகின்றன.

குழந்தையின் உடல் நலத்தைக் கவனிப்பதிலேயே விஞ்ஞானிகளின் முழு மனமும் இது வரை திருப்பப்பட்டிருந்தது. அதிலும், சிறப்பாக இந்த நூற்றாண்டில், இது வரை இருந்து வந்த ஏராளமான குழந்தைச் சாவைத் தடுப்பதற்குத் தீவிரமான சிகிச்சை முறைகளை அனுசரிக்கத் தக்க மருந்துகளும் நல்வாழ்வு முறைகளும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. இந்த முறைகளெல்லாம் சாவைத் தடுப்ப

தென்ற ஒரு குறிக்கோளைக் கொண்டிருந்ததால் இந்த முறைகள் உடல் நலத்தோடு நின்றுவிட்டன. மன நலத்துறை இன்னும் நிறைந்த அளவுக்கு ஆராய்ச்சி செய்யப்படாமலே இருந்து வருகின்றது. உயிரியல் உண்மைகளைத் தவிர, வேறு எதுவும் ஆராய்ச்சியாளர்களுக்கு வழி காட்டியாய் இருப்பதாகக் காணப்படுவதில்லை. இக்காலத்தில் காணப்படும் சமூக வாழ்வுக்கு ஒத்த முறையில் ஒரு தனியாள் தன்னை அமைத்துக்கொள்வதே குழந்தையின் நோக்கம் என்று நம்பப்படுகிறது.

உயிர் நூல் எதைக் குறிக்கிறது? தனிமையாய் வாழும் ஒரு முதற்பருவத்தைக் குறிக்கிறது; வெளி உலகத்துடன் மனம் ஒருமையடைவதைக் காட்டுகிறது; ஏற்கெனவே தம்முடைய எதிர்கால வாழ்க்கை யாது என்பதைக் குறிப்பிடுகின்ற பாலூட்டிகளுக்கும் இவ்வகையில் வெளியுலகத்துடன் ஒன்றுபடுகின்ற தேவை ஏற்படுகிறது.

மனிதனைப் பொறுத்தமட்டில் பிறக்கும் பொழுது முன் கூட்டியே நிருணயிக்கப்பட்ட நடத்தை எதுவும் இல்லை என்பதை நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். குழந்தையிடம் தோற்றம் அளிக்க வேண்டுவது **'மன விழிப்பு'** அன்று; ஆனால், **'மன ஆக்கம்'** ஆகும். இதை நினைக்கும் பொழுது குழந்தையின் வாழ்க்கையில் சூழ்நிலை எவ்வளவு பெரிய பங்கு எடுத்துக்கொள்கிறதென்பதை நாம் உடனே உணர்கிறோம். அதனுடைய மதிப்பும் இன்றியமையாமையும் பன்மடங்காகப் பெருக்கிக் காட்டப்படுகின்றன. அதே போலச் சூழ்நிலையில் காணக்கூடிய அபாயங்களும் வெளியாகின்றன. ஆதலால், பிறந்த குழந்தையைச் சூழ்ந்துள்ள எல்லா நிலைமைகளையும் நாம் பாதுகாக்க வேண்டியிருக்கிறது. அப்பொழுதுதான் அதைக் கண்டு வெறுக்காமலும், பின்னேக்குக் குணங்களைப் பெருமலும் தான் பிறந்த இந்தப் புது உலகத்தினிடம் குழந்தைக்குக் கவர்ச்சி ஏற்படும். குழந்தையின் பெரும்பணியாகிய உட்கவருதலுக்கு இச்சூழ்நிலை உதவி புரியும். அவ்வாறு **உட்கவருதலைப் பொறுத்தே குழந்தையின் முன்னேற்றம், வளர்ச்சி, அபிவிருத்தி எல்லாம் இருக்கின்றன.**

வாழ்வின் முதல் ஆண்டில் பல பயங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் தனிப்பாதுகாப்புத் தேவைப்படுகிறது. முதற்பருவம், மிகவும் சிறிய பருவம்; அற்புதமானது. அதுதான் குழந்தையின் பிறப்பு. அதிகமான தனி அமிசங்களை விட்டுவிட்டு, சில முக்கிய கருத்துகளை மட்டும் இங்குக் குறிப்பிடுவோம். முதல் சில நாள்கள் குழந்தை கூடுமானவரை தாயுடன் ஒட்டி இருக்க வேண்டும். தாயின் கர்ப்பத்தில் இருந்த வெப்பம், வெளிச்சம், சத்தம் ஆகியவற்றுக்கும் இப்போது வெளியே காணப்படுபவைகளுக்கும் அதிக வேற்றுமை

இருத்தலாகாது. தாயின் கர்ப்பத்தில் முழு இருட்டாகவும், அமைதியாகவும், ஒரே நிலையான வெப்பமாகவும் இருந்து வந்தது. நவீன முறையில் அமைக்கப்பட்ட குழந்தை நோய் பேணகங்களில் (Clinics) தாயும் சேயும் ஒரே அறையில் வைக்கப்பட்டிருக்கின்றனர். இந்த அறைகளுக்குக் கண்ணுடிச் சுவர்கள் உண்டு; ஒரே நிலையுள்ள வெப்பமும் இருக்கும். இதை உயர்த்திக்கொள்ளவோ தாழ்த்திக் கொள்ளவோ தேவையான அமைப்பும் உண்டு. இவ்வாறு செய்து வந்த பிறகு வெளியுலகத்தின் வெப்பத்தைப் போலவே அமைத்துக் கொள்ளலாம். கண்ணுடியின் நிறம் நீலம். அது கண் கூசாதபடி அமைதியான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தித் தருகிறது.

குழந்தையை இப்படி இப்படித்தான் எடுக்க வேண்டும்; இங்குமங்கும் செல்ல வேண்டும் என்றெல்லாம் கண்டிப்பான விதிகள் இருக்கின்றன. இதற்கு முன்னெல்லாம் என்ன செய்வது பழக்கமாய் இருந்தது? தரைமேல் ஓர் அகலப் பாத்திரத்தில் தண்ணீர் இருக்கும். அதற்குள் பிறந்த குழந்தையை கழுத்துக்குக்கீழ் அழுத்துவார்கள். இந்தச் செய்கையால் குழந்தைக்குப் பயங்கரமான அதிர்ச்சி ஏற்படும். குழந்தையைப் பற்றி ஒன்றுமே யோசிக்காமல், வேகமாகக் குழந்தைக்கு உடை அணிவிப்பது பழக்கமாயிருந்தது. குழந்தைக்கு உணர்ச்சி ஒன்று இருப்பதைக் கவனிப்பதில்லை. குழந்தை என்ன, உணர்வற்ற பொருளா? குழந்தை மிகமிகச் சிறிதளவே கையால் தொடப்பட வேண்டும் என்று விஞ்ஞானம் கூறுகிறது; உடையே அணிவித்தல் கூடாது என்கிறது. வேண்டும் அளவு வெப்பம் குழந்தைக்கு அளிக்கக்கூடிய அளவில் குளிர்காற்று ஏதும் தாக்காத நிலையில் இருத்தல் போதும். குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு நடமாடும் முறையும் இப்பொழுது மாற்றப்பட்டிருக்கிறது. அன்னத்தின் தூவியால் அமைக்கப்பட்ட சிறு கைம்மெத்தையில் வைத்துத் தொட்டில் போல அணைத்துக்கொண்டு போக வேண்டும். இந்த மெத்தையின்மேல் குழந்தை மிகவும் மெதுவாக வைக்கப்பட வேண்டும்; திடீரென்று மேலே எடுக்கவோ, கீழே தாழ்த்தவோ கூடாது. அடிபட்டவனிடத்தில் நாம் எவ்வளவு பரிவுடன் நடந்துகொள்ளுகிறோமோ, அவ்வளவு குழந்தையிடமும் நடந்து கொள்ள வேண்டும். இதற்குக் காரணம், வெற்று உடல் நல இயல் மட்டுமன்று. நர்சுகள் தங்கள் மூக்கையும் வாயையும் மெல்லிய ஒரு துணியால் மூடிக்கொள்கிறார்கள். இந்த அமைப்பால் தங்களுடைய உடம்பிலிருந்து நோய் வித்துகள் சூழ்நிலையில் கலவாமல் இருக்கும். தாயும் சேயும் ஒருவரோடொருவர் இணைக்கப்பட்ட ஓர் உறுப்பெனவே கருதப்படுகின்றனர். குழந்தை இந்த உலகத்துடன் ஒன்றிப் போவது இயற்கையான வழிகளை ஒட்டியதாகும். இந்த முறையில் தாயையும் சேயையும் காந்தசத்தி போன்றது ஒன்று சிறப்பாகப் பிணைக்கிறது.

தாயிடமிருந்து கண்ணுக்குத் தெரியாத சத்திகள் பரவுகின்றன. இந்தச் சத்திகளுக்குப் பச்சைக் குழந்தை பழக்கப்பட்டிருக்கிறது. புதிதாக அமைத்துக்கொள்ள வேண்டிய கஷ்டமான நாள்களில் இவை மிகவும் பயனளிக்கக் கூடியவையாய் இருக்கின்றன.

குழந்தையைப் பொறுத்த மட்டில், அது தன்னுடைய இருப்பிடத்தை மட்டும் மாற்றிக்கொண்டிருக்கிறது என்று சொல்ல வேண்டியிருக்கிறது. அது இது வரையில் தாயின் கர்ப்பத்திற்குள் இருந்தது; இப்பொழுது வெளியே இருக்கிறது. அவ்வளவுதான். மற்றவையெல்லாம் முன் போலவே இருக்கின்றன. இருவருக்கும் இடையே உள்ள தொடர்பு இன்னும் இருந்துகோண்டேயிருக்கிறது. இப்பொழுதெல்லாம் தாய் சேய்த் தொடர்பை இந்த முறையிலேதான் கருதி வருகின்றனர். ஆனால், சில ஆண்டுகளுக்கு முன் தாயும், அன்று பிறந்த சேயும் நல்ல உடல் நலம் பேணகங்களிலும் உடனே தனித் தனியாகப் பிரித்தே வைக்கப்பட்டிருந்தனர்.

இது வரை நான் வருணித்து வந்ததெல்லாம் குழந்தையை விஞ்ஞான முறைப்படி பேணுவதென்றால் இதைத் தவிர வேறு எதையும் கூறுவதற்கில்லை என்பதே. குழந்தைப் பருவத்தின் முழுக்காலத்துக்கும் இந்தத் தீவிரமான பாதுகாப்புகள் தேவையில்லை என்பதை இயற்கை நமக்கு எடுத்துக் காட்டுகிறது. குறுகிய காலத்திற்குப் பிறகு தாயும் சேயும் தனிமை வாழ்க்கையிலிருந்து சமூக வாழ்க்கையில் பங்கு கொள்ள வர இயலும்.

குழந்தையின் சமூகப் பிரச்சினைகள் முதியோர் பிரச்சினையைப் போன்றவை அல்ல. இது வரை சமூக வேற்றுமைகள் தங்களுடைய பெற்றோரைக்காட்டிலும் குழந்தைகளை மாற்று விகிதத்தில் பாதித்து வருகின்றன. முதியோர்களில் துன்பப்படுவோரை ஏழைகளில் காணலாம். ஆனால், குழந்தைகளில் துன்புறுவனவற்றைச் செல்வாக்குடையவர்களிடம் காணலாம். இது விந்தையே! பணக்காரக் குடும்பங்களில் உள்ள குழந்தைகள் சிக்கலான உடைகளை அணிவதாலும், சமூகப் பழக்க வழக்கங்களாலும் பார்க்க வருகின்ற நண்பர்களாலும் மற்றக் கூட்டங்களாலும் பாதிக்கப்படுவது ஒரு பக்கம் இருந்தே வருகிறது. இதனுடன் இந்தத் தாய்மார் குழந்தையை ஒரு செவிலித் தாயிடம் ஒப்படைத்துவிடுகின்றனர்; அல்லாவிட்டால் பச்சைக் குழந்தையிடமிருந்து விடுதலை பெற முயற்சி செய்கின்றனர். ஆனால், ஏழைத்தாய் என்ன செய்கிறாள்? இயற்கையான வழியைப் பின்பற்றுகிறாள்; தன் சிசுவை அருகில் அணைத்து வைத்துக்கொள்கிறாள். எது மிகவும் சிறப்பானது என்று முதியோர் உலகம் கருதுகிறதோ, அது குழந்தை உலகத்துக்கு நேர் விரோதமான பயனை

விளைக்கும் என்பது நமக்குப் பல சிறுசிறு வழிகளில் எடுத்துக் காட்டப் படுவதை நாம் காண்கிறோம்.

இந்தப் பருவம் கடந்த பிறகு குழந்தை சூழ்நிலையிடம் ஒரு வெறுப்பும் காட்டிக்கொள்ளாமல், தன்னை அமைதியுடன் அமைத்துக் கொள்கிறது; நாம் இது வரை விளக்கி வந்த சுதந்தரப் பாதையில் அடி எடுத்து வைக்கத் தொடங்குகிறது; சூழ்நிலைக்குத் தன் கரங்களை நீட்டுகிறது; தன்னைச் சூழ்ந்துள்ள உலகத்தின் பழக்க வழக்கங்களைத் தன்னுடையனவாக உட்கவர்ந்துகொள்கிறது.

இந்த வெற்றிப் பாதையில் குழந்தையின் முதற்செயல்கள் ஐம்புலன்களையும் உபயோகித்தலாகும். குழந்தையினுடைய எலும்புத் திசுக்கள் இன்னும் முழு வளர்ச்சி பெறாத காரணத்தால், அது தன் அங்கங்கள் அசைவற்ற நிலையில் அமைதியாய்ப் படுத்திருக்கிறது. ஆதலால், அதனுடைய வாழ்க்கை இயக்கம் பெற்றதாய் இருக்க இயலாது. அதன் மனம் மட்டும் ஐம்புலன்களின் பதிவுகளை உட்கொள்வதில் செயலுற்று இருக்கிறது.

அதனுடைய கண்கள் ஒளி நிறைவுடனும் ஆவலுடனும் இருக்கின்றன. குழந்தையின் கண்கள் ஒளி ஒன்றினால் மட்டும் பாதிக்கப் படுவதில்லை என்ற உண்மையை விஞ்ஞானம் அண்மையில் எடுத்துக் காட்டியிருப்பதை நாம் நம் நினைவில் இருத்திக்கொள்ள வேண்டும். குழந்தை செயலற்று இருப்பதாகவும் எண்ணுவதற்கில்லை. பதிவுகளைத் தன்னுள் ஏற்றுக்கொண்டிருக்கும் நிலையில் அது தன்னுடைய உலகத்தில் செயலுற்றுத் தேடுகிறது.

ஒரு விலங்கின் கண்ணைப் பிளந்து ஆராய்ந்தோமானால், நம் கண்ணைப்போன்ற அமைப்பே அதிலும் காண்கிறோம்; காமராப் போன்ற ஓர் அமைப்பைக் காண்கிறோம். ஆனால், தங்களுடைய கண்களைக் குறிப்பிட்ட அளவுக்கே பயன்படுத்துமாறு விலங்குகள் இயற்கையாகத் தூண்டப்படுகின்றன. சிலவற்றைக்காட்டிலும் வேறு சிலவற்றினிடம் அவை கவர்ச்சியைக் காட்டிக்கொள்கின்றன. ஆதலால், முழுச் சூழ்நிலையையும் அவை உட்கிரகித்துக்கொள்வதில்லை. சில வழிகளில் நடந்துகொள்ள வேண்டும் என்று தூண்டி விடுகின்ற ஒரு வழி காட்டி விலங்குகளுக்குள் இருந்து வருகிறது. இந்த வழி காட்டிக்குக் கீழ்ப்படியும் முறையில் அவ்விலங்குகள் தங்கள் கண்களைப் பயன்படுத்திக்கொள்கின்றன.

விலங்குகளிற் காணப்படும் வழிகாட்டி ஆதியிலிருந்தே வருகிறது. விலங்குகளின் புலன்கள் நிறைவுபெற்று, அவற்றைப் பின்பற்றும் முறை

யைப் பெற்று வருகின்றன. இரவில் வேட்டையாடும் விலங்குகளைப் போலப் பூனையின் கண்களும் இருட்டுக்குத் தக்கவாறு அமைந்திருக்கின்றன. பூனைக்கு இருட்டின்மேல் விருப்பமோ அக்கறையோ இருந்த போதிலும், **அசையாத பொருள்களைவிட அசையும் பொருள்கள்மேல் அதற்குக் கவர்ச்சி அதிகமாய் இருக்கிறது.** இருட்டில் ஏதாவது ஒன்று அசைய ஆரம்பித்தவுடன் பூனை அதன் மேல் பாய்கிறது; மற்றக் காட்சிகளைப் பற்றிச் சிறிதும் அக்கறை காட்டாமல் அவ்வாறு பாய்கிறது. சூழ்நிலைமேல் பூனைக்குப் பொதுவான அக்கறை இல்லை. ஏதோ சில அமிசங்களைப் பற்றி மரபு வழியாகப் பெற்ற அக்கறையே அதனிடம் காணப்படுகிறது. இதே போலச் சில பூச்சிகள் குறிப்பிட்ட நிறங்களையுடைய மலர்களால் கவரப்படுகின்றன. ஏனெனில், அவ்வகை நிற மலர்களில் அதற்குத் தேவையான உணவு கிட்டுகிறது. எனவே, கூட்டிலிருந்து அப்பொழுதுதான் வெளியேறும் பூச்சிக்கு அவற்றைப் பற்றி ஓர் அனுபவமும் இருந்திருக்க இயலாது. அதற்கு வழி காட்டுவது மரபு. ஏற்ற முறையில் நடந்துகொள்வதற்குக் கண் உதவி புரிகிறது. இனத்தை இம்மாதிரி நடந்துகொள்ள வேண்டுமென்று கட்டுப்படுத்துவது இந்த வழி காட்டியே ஆகும்.

தனி ஆள் தன்னுடைய புலன்களுக்குக் கண் மூடித்தனமாக அடிமை அல்லன். புலன்கள் அவனை இழுத்துச் செல்வதில்லை. புலன்கள் இருக்கின்றன. தன் எசமானனுக்கு அவை பணியாற்றுகின்றன. தனியாள் வழி காட்டியைப் பின் பற்றியே செயல் ஆற்றுகிறான்.

குழந்தை விசேஷ ஆதரவு பெற்றிருக்கிறது. அதனுடைய புலன்களுக்கும் ஒரு வழி காட்டி இருக்கிறது. ஆனால், விலங்குகளில் காணப்படுவது போல அது ஒரு வரம்புக்குட்பட்டது அன்று. தன் சூழ்நிலையில் அசைகின்ற பொருள்களை மட்டும் காணக்கூடிய வரம்பு பூனைக்கு உண்டு. ஆதலால், அவற்றால் அது கவரப்படுகிறது. குழந்தைக்கு அத்தகைய வரம்பு எதுவுமில்லை. தன் கண் முன் இருப்பவற்றை எல்லாம் அது கவனித்து வருகிறது. அவை யாவற்றையும் அது சமமாகவே உட்கவர்ந்துகொள்கிறதென்பதை அனுபவம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது. மேலும், யந்திரம் போலவும் காமிராப் போலவும் உள்ள தன் கண்களால் மட்டும் அது உட்கவர்ந்துகொள்வதில்லை. ஒரு வகையான '**உள ரஸாயன எதிர்வினை**' (Psycho Chemical Reaction) அதனுள் உண்டாக்கப்படுகிறது. இதனால், ஏற்படக்கூடிய பதிவுகள் அதனுடைய ஆளுமையின் அந்தரங்கப் பகுதியாய் அமைந்துவிடுகிறது. எவன் ஒருவன் தன் வாழ்க்கையில் தன் ஆசைகளாலேயே பாதிக்கப்படுகின்றானோ, எவன் அவற்றுக்கு அடிமையாய் இருந்து வருகிறானோ, அவன் ஏதோ உளக்குறைபாட்டால் துன்புற்று வருகிறான் என்று சுலபமாகக் கூறிவிடலாம். இதற்கு

விஞ்ஞானச் சான்றுகள் வேறு இருக்கின்றன. இத்தகைய பேர்வழி யின் உள வழி காட்டி இன்னும் இருந்து வரலாம். ஆனால், அவ னுடைய நடத்தையைப் பாதிக்கக்கூடிய அளவுக்கு அதன் சத்தி குன்றிவிட்டிருக்கிறது. அதனால், அவன் யந்திரம் போலப் புலன் களுக்கு அடிமையாகி மறக்கப்பட்டுக் கைவிடப்பட்ட பேர்வழியாகி விடுகிறான்.

ஒவ்வொரு குழந்தையின் உள்ளத்திலும் காணப்படும் இந்த வழி காட்டியைக் கவனித்துப் பாதுகாத்து விழிப்புடன் இருக்கச் செய் வதே முதல் இடம் பெற வேண்டிய முக்கியமான விஷயமாகும்.

இதுவரை நாம் ஆராய்ந்து வந்த ஒப்புமைகள் சூழ்நிலையிலிருந்து தான் உட்கவர்ந்துகொள்ளக்கூடிய குழந்தையின் சத்தி இத்தன் மைத்து என்பதைப் புரிந்துகொள்ள நமக்கு உதவுகின்றன. சில பூச்சிகள் இலைகளைப்போலவும், சில குச்சிகளைப்போலவும் இருக் கின்றன. இவை தம் வாழ்க்கையை இலைகளிலும் குச்சிகளிலுமே கழித்து வருகின்றன. குச்சிகளைப்போலவும் இலைகளைப்போலவும் இருப்பதால், இவை அவற்றுடன் மிகவும் ஒன்றிப்போய்விடுகின்றன. இதைப்போலவே குழந்தையிடத்திலும் நடைபெறுகிறது. இப்பூச்சி கள் தம்மைச் சூழ்ந்துள்ள செடி கொடிகளுடன் எவ்வாறு ஒன்றி இருக்கின்றனவோ, அவ்வாறே குழந்தையும் தன்னைச் சுற்றிலும் நடைபெற்றுக்கொண்டிருக்கின்ற வாழ்க்கையை உட்கவர்ந்துகொண்டு அதனுடன் ஒன்றிவிடுகிறது. குழந்தையின் பதிவுகள் எல்லாம் மிக மகத்தானவை. அதனுள் ஓர் **உயிர்ப்பு மாறுதல்** (Biolcgical Change) அல்லது **உள ரசாயன மாறுதல்** (Pasycho-Chemical Change) நடை பெற்று இறுதியில் சூழ்நிலையைப்போலவே மனமும் மாறிவிடுகிறது. குழந்தைகள் எதைக் காதலிக்கின்றனவோ, அதைப்போலவே ஆகிவிடுகின்றன. சூழ்நிலையை உட்கவர்ந்துகொண்டு சூழ்நிலை போலவே ஆகிவிடுவதற்குத் தேவையான சத்தி ஒவ்வொரு வகை யான வாழ்க்கையிலும் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றது.

நாம் விளக்கிய பூச்சிகளிலும் மற்ற விலங்குகளிலும் அச்சத்தி உடலியலில் காணப்படுகிறது. குழந்தையில் அது உளவியலில் காணப் படுகிறது.

இதை உயிர் வாழ்வனவற்றில் காணப்படும் பெரும்பாலான **பற்றுகை**களாகவே (Propensities) நாம் கணக்கிட வேண்டியிருக் கிறது. நாம் பார்ப்பது போலக் குழந்தை உலகத்தைக் காண்ப தில்லை. ஏதோ ஒன்றைப் பார்த்ததும் நாம், ''ஆ! எவ்வளவு அழகாய் இருக்கிறது!'' என்று கூறிவிட்டு மற்றவைகளின்மேல் நம்

கருத்தைச் செலுத்தி, இந்தப் பதிவை ஏதோ மங்கலான நினைவாக இருத்திக்கொள்வோம். இது நமது போக்கு. ஆனால், சிறு குழந்தை தனக்குள் ஆழமாகப் பதிவாக்கப்படுபவைகளைக்கொண்டு தனது ஆழ்ந்த உள்ளத்தை உருவாக்கிக்கொள்கிறது. இது முக்கியமாக அதன் முதற்பருவத்தில் காணப்படுகிறது. குழந்தை தன் இளம் பருவத்தில் காணப்படும் சத்திகளைக்கொண்டே தன்னுடைய சிறப் பியல்புகளை ஆக்கிக்கொள்கிறது. இவை என்றும் மாறுதவை. குழந்தையின் மொழியும், மதமும், பேரினமும் (Race), பிறவும் இவற்றைச் சேர்ந்தவையேயாகும். இவ்வாறு செய்வதில் குழந்தை இன்புறுகிறது ; அதன் மனமும் முதிர்ச்சி அடைகிறது. இது மட்டும் அன்று ; இனிச் சந்திக்கக்கூடிய ஒவ்வொரு வகையானசூழ்நிலைக்கும் தக்க முறையில் தன்னை அமைத்துக்கொள்கிறது. இவ்வாறு ‘ அமைத்துக்கொள்கிறது ’ என்பதன் பொருள் யாது ? அதாவது, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்குத் தக்கவாறு ஒருவருடைய உள்ளத்தை மாற்றி அமைத்துக்கொள்வதாகும். அவ்வாறு செய்யும் பொழுது **அந்தச் சூழ்நிலை அப்பேர்வழியுடன் ஒன்றிவிடுகிறது**. குழந்தைக்கு உதவி புரிய வேண்டும் என்றிருந்தால், நாம் என்ன செய்ய வேண்டும் ? எத்தகைய சூழ்நிலையை ஆக்க வேண்டும் ? இவற்றை யெல்லாம் நாம் சிந்திக்கவேண்டியிருக்கிறது.

மூன்றுண்டுக் குழந்தையைப் பற்றியதானல், அதுவே நமக்கு இன்னின்னது என்பதை எடுத்துக் கூறிவிடும். அழகான பண்டங் களுக்கும் மலர்களுக்கும் அதற்கு ஒரு குறைவும் இராமல் நாம் பார்த் துக்கொள்ள வேண்டும். அதன் வளர்ச்சிப் பருவத்துக்கு ஏற்ற **செயல் ஊக்கிகளை** (motives of activity) முன் கூட்டியே இருக்குமாறு செய்ய வேண்டும். அதனுடைய வளரும் சத்திகளைப் பயிற்றும் வகை யில் தேவையான செயல் ஊக்கிகள் எவை என்பதை நாம் எளிமையா கக் கண்டுபிடித்துவிடலாம். ஆனால், அன்று பிறந்த பச்சைக் குழந்தை தனது அமைப்பை உருவாக்கிக்கொள்ள வேண்டுமானல், அதற்காக எத்தகைய சூழ்நிலையை நாம் அமைக்க வேண்டி யிருக்குமோ !

இன்று கருதப்படுகின்ற அளவில் இதற்குத் தக்க விடை ஏது மில்லை. ஆனல், **பச்சிளங்குழந்தையின் இயற்கையான சூழ்நிலை என்பது உலகமே ஆகும்**. தன்னைச் சுற்றிலும் எவையெவை இருக் கின்றனவோ, அவையெல்லாம் அதைச் சேர்ந்தவையே. ஒரு மொழியை அது கற்றுக்கொள்ள வேண்டுமாயின், அம்மொழி பேசு வோர் நடுவில் அது வாழ வேண்டும். அல்லாவிடில், அது அம்மொழி யைப் பேச இயலாது. சிறப்பான மனச் சத்திகளை அது பேசவேண்டு மாயின் அச்சத்திகளை இடைவிடாமல் பயன்படுத்திக்கொண்டிருப்

போர் சூழ்நிலையில் அது வாழவேண்டும். நடை உடை பாவனை, பழக்க வழக்கங்கள் எல்லாம் பெறவேண்டுமானால், அது அவற்றைப் பழக்கத்தில் அனுசரித்து வருவோருடன் கூடிப் பழகுவதாலேதான் பெற இயலும்.

## பிள்ளை வளர்ப்பிடம் (The Nursery)

இப்பொழுது இது உண்மையில் மிகவும் புரட்சிகரமான கருத்து. இது கடந்த சில ஆண்டுகளாக எண்ணியும் செய்தும் வந்தவைகளுக்கு நேர் விரோதமானதாய் இருக்கிறது. உடல் நலத்தை ஒட்டிய சில கருத்துகளையே அடிப்படையாகக்கொண்டு குழந்தை தனியாக ஒதுக்கப்படவேண்டுமென்ற தீர்மானத்துக்கு வந்திருக்கின்றனர். இந்தத் தீர்மானம் முரணானதே. இத்தீர்மானத்தின்படி குழந்தைக்கென ஒரு தனி அறை அமைக்கத் தொடங்கினர். இதற்கு 'நர்சரி' அல்லது பிள்ளை வளர்ப்பிடம் என்பது பெயர். இவ்வாறு குழந்தைகளுக்கென ஒதுக்கப்பட்ட தனி அறை, உடல் நல இயலுக்குப் பொருந்தாதிருந்த பொழுது ஆஸ்பத்திரியை எடுத்துக்காட்டாகக் கொண்டனர். குழந்தையைத் தனிமையாய் இருக்க வைத்தனர். அதற்கேதோ நோய் இருப்பது போலப் போதுமான நேரம் உறங்கவைத்தனர்.

உடம்பின் நல முன்னேற்றத்தில் இது ஒரு வகை என்று கருதப்பட்டால், மன வாழ்வில் இதனால் ஏற்படக்கூடிய அபாயங்கள் இருப்பதை நாம் சிந்திக்கவேண்டியிருக்கிறது. நர்சைத் தவிர வேறு ஒரு தோழமையும் இல்லாமல் குழந்தை நர்சரியில் அடைபட்டுக்கிடந்தால், உண்மையான தாயன்பின் வெளித்தோற்றங்களுள் எதுவும் குழந்தையைச் சாராமலும் இருந்தால், அதன் இயல்பான வளர்ச்சியும் உருத்துலக்கமும் (Growth and development) தடுக்கப்படுகின்றன. குழந்தையிடம் வேகக்குறைவும் (Retardation), பிடித்தமின்மையும், மனப்பசியும் தோன்றிக் கெடுதல் செய்யும் அளவு அதைப் பாதிக்கும். குழந்தை தன் தாயுடன் தன் விருப்பம் போல வாழ விரும்புகிறது. தாயுடன் அதற்கு விசேஷமான பரிவு இணக்கம் உண்டு. இதற்குப் பதிலாக அதனிடம் அதிகமாகப் பேசாத ஒரு நர்சைத் தோழமைக்கு வைத்திருக்கின்றனர், குழந்தை தள்ளு வண்டிக்குள் பெரும்பாலும் அடைத்துவைக்கப்பட்டிருக்கிறது. வெளி உலகத்தில் என்ன நடைபெறுகிறதென்பதை அந்த வண்டிக்குள்ளிருந்து குழந்தையால் பார்க்க இயலாது.

சிறந்த செல்வர் குடும்பத்தில் பிறந்த குழந்தைக்கு இந்த அனுகூலமற்ற ஏற்பாடுகள் இன்னும் மோசமாகிவிடுகின்றன. நல்ல வேளையாக, உலகப் பெரும்போருக்குப் பிறகு இத்தகைய நிலைமைகள் முன்

போல அவ்வளவாகக் காணப்படுவதில்லை. வறுமையும் புதுச் சமூகக் கொள்கைகளும், பெற்றோரை முன் போல் அன்பான பயனளிக்கும் தோழர்களாக்கியிருக்கின்றன.

## புது உடல் நல இயல்

குழந்தைப் பராமரிப்பு நம் சமூகத்தின் முக்கியமான கடமையாகக் கருதப்படவேண்டும். நவீன ஆராய்ச்சிகளும் குழந்தை இயல் படிப்புகளும் நமக்கு என்ன கருத்துகளைப் போதிக்கின்றன ? வீட்டை விட்டு வெளியே போகக்கூடிய சத்தியைக் குழந்தை பெற்றவுடன் நாம் அதை வெளியே எடுத்துக்கொண்டுபோய், அதனால் எவ்வளவுக்கெவ்வளவு பார்க்க இயலுமோ, அவ்வளவுக்கவ்வளவு பார்க்க வாய்ப்புத் தரவேண்டும். இதை எண்ணும்பொழுது உயர்ந்த தள்ளுவண்டிகளின் அமைப்பிலும், நர்சரிகளின் அமைப்பிலும் மாறுதல் அமைந்திருப்பதையும் காணச் செய்கிறது. இந்த நர்சரி உடல் நல இயலுக்கு ஒட்டியே இருப்பினும், இதன் சுவர்களில் பல படங்கள் தொங்கவிடப்பட்டிருக்கின்றன. குழந்தை ஓரளவுக்குச் சாய்மானமான படுக்கையில் படுத்துக்கொண்டு எல்லாக் காட்சிகளையும் பார்க்க இயலும்படி இருக்கிறது. முன்பெல்லாம் குழந்தை மல்லாந்து கிடந்து மேலுள்ள கூரையையே கண் கொட்டாது பார்த்துக்கொண்டிருக்க வேண்டியிருந்தது.

மொழியை எடுத்துக்கொண்டாலோ, அது இன்னும் கடினமானது. வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கும் ஆயாள் குழந்தையின் சமூக இனத்துக்கு மிகவும் வேறுபட்ட நிலையைச் சார்ந்தவளாய் இருப்பாள். ‘பெற்றோர் தம் நண்பர்களுடன் உரையாடிக்கொண்டிருக்கும் பொழுது சிறு குழந்தை அருகில் இருக்கலாமா?’ என்பது ஒரு கேள்வி. அது அருகில் இருத்தல் கூடாது என்பதற்கு எத்தனையோ காரணங்கள் எடுத்துக்கூறப்பட்டாலும், குழந்தைக்கு நாம் உதவி புரியவேண்டும் என்று கருதினோமானால், அதை நம் அருகில் வைத்துக்கொண்டிருக்க வேண்டும். அப்பொழுது அது நாம் இன்னது செய்கிறோம் என்பதைப் பார்க்கவும், இன்னது பேசுகிறோம் என்பதைக் கேட்கவும் இயலும். தன்னைச் சுற்றிலும் நடைபெறுவது இன்னது என்று குழந்தையால் நனவுடன் கிரகிக்க இயலாவிட்டாலும், அதன் பதிவை ஆழ்ந்த மனத்தில் இருத்திக்கொள்ளும். அப்பதிவு உள்ளே உறிஞ்சப்பட்டு வளர்ச்சிக்கு உதவி புரியும். குழந்தையை வீட்டை விட்டு வெளியே அழைத்துச் சென்றோமானால், அதன் கவனம் எவற்றின்மேல் செல்லும் ? எவராலும் இதை உறுதியாகக் கூற இயலாது. நாம் குழந்தையைக் கவனித்து வரவேண்டும். ஒரு குழந்தை ஏதாவது ஒன்றின்மேல் தன் கவனத்தைச் செலுத்து

வதைக் கண்ட பண்பட்ட தாயும், ஆயாளும் அதைத் தன் விருப்பம் போலத் தேவையான நேரம் கவனிக்குமாறு விட்டுவிடுவார் கள்; அது எதன்மேல் கவனத்தைச் செலுத்திற்ரே, அந்த உயரத் துக்குக் குழந்தையைத் தூக்கிப் பிடித்துக் காட்டுவார்கள். தன் கவனத்தைக் கவர்ந்தது எதுவோ, அது அதனுடைய முகத்தில் அக் கறையையும், அன்பையும் காட்டும் வகையில் ஒரு பிரகாசத்தைத் தோற்றுவித்துவிடுகிறது. சின்னஞ்சிறு குழந்தைக்கு இதன் மேலே தான் விருப்பம் தோன்றும் என்று நம்மால் எவ்வாறு கூற இயலும்? அது நம்மை எவ்வாறு பயன்படுத்திக்கொள்ளவும் நாம் தயாராக இருக்க வேண்டும். பழைய கருத்துகள் எல்லாம் பின் வாங்குகின் றன. இந்தப் புரட்சிக் கருத்துகளை வயது வந்தவர்கள் அறியும்படி பரவச் செய்ய வேண்டும். சூழ்நிலைக்குத் தக்க முறையில் உயிர்ப் புடன் குழந்தை தன்னை அமைத்துக்கொள்கிறது. ஆதலால், அது சூழ்நிலையுடன் முழுமையான தொடர்பைப் பெற்றிருக்க வேண்டும் என்ற உண்மையை நாம் எல்லாரும் சந்தேகப்படாமல் நம்ப வேண்டி யிருக்கிறது. இந்த விஷயத்தில் குழந்தை வெற்றி பெருவிடில், மிகவும் ஆழ்ந்த பிரச்சினைகளுக்கு வழிதேட வேண்டிய நிலை ஏற்படும்.

அறநெறித் துறையிலும் மற்றவைகளிலும் தக்க முறையில் தனி யாள் தன்னை அமைத்துக்கொள்ளாத காரணத்தால், எத்தனை எத்தனை சமூகப் பிரச்சினைகள் தோன்றியிருக்கின்றன! இது ஓர் அடிப்படையான பிரச்சினை. நாகரிகமடைந்த ஒவ்வொரு சமூகத் திற்கும் ஆழ்ந்த கவலைக்குரிய விஷயம் குழந்தைப் பாதுகாப்பில் நிரந்தரமான ஏற்பாட்டைத் தேட வேண்டியிருப்பது.

தானே விளக்கம் காட்டும் இவ்வளவு பெரிய உண்மை எப்படித் தான் இவ்வளவு காலமாகக் கவனிக்கப்படாமல் இருந்திருக்க இயலும் என்று நாம் கேட்கலாம். புதுமையில் நம்பிக்கை கொள்ளாத வர்கள் பழைய பல்லவியாகிய, 'இந்த அறிவில்லாமலே கடந்த பரம் பரைகளெல்லாம் காலம் போக்கவில்லையா?' என்பதையே பாடுவார் கள். மேலும், அவர்கள் நமக்குக் கூறுவதென்ன? 'மனித இனம் மிகப் பழைமையானது. பல்லாயிரம் மக்கள் இது வரை வாழ்ந்து வந் திருக்கின்றார்கள். நானே வளர்ந்திருக்கிறேன். என் மக்களுங்கூட இந்தக் கருத்துகளின் உதவியின்றியே வாழ்ந்து வந்திருக்கின்றார்கள். என் காலத்துக் குழந்தைகள் பேசக் கற்றுக்கொண்டார்கள். சார் பெண்ணங்கள் என்று கூறும் அளவுக்கும் விடாப்பிடியான பழக்கங் களையும் அவர்கள் கற்றுக்கொண்டார்கள்,' என்பார்கள்.

நம்முடைய பண்பாட்டைப் போலல்லாமல், பல நிலைகளில் வாழ்ந்து வரும் உலக மக்களைப் பற்றிச் சற்றுச் சிந்திப்போம்.

குழந்தை வளர்ப்பில் அவர்களுள் பெரும்பாலார், மேனுட்டு உயர்ந்த நவீன எண்ணங்களைக் கொண்டுள்ள நம்மைவிட நல்ல தெளிவு பெற்றவர்களாய் இருக்கின்றனர். குழந்தைகளின் இயல்பான தேவைகளுக்கு விரோதமான முறையில் வேறு எங்கும் நடந்து கொள்வதை நாம் காண இயலாது. பெரும்பாலான நாடுகளில் தாய் எங்கெங்குச் செல்கிருளோ, அங்கங்கெல்லாம் குழந்தையும் உடன் செல்கிறது. தாயும் சேயும் இணை பிரியாதவர்கள். இருவரும் வெளியே செல்லும்பொழுது தாய் இடைவிடாமல் பேசிக்கொண்டே யிருப்பாள். சேயும் அவள் பேச்சைக் கேட்டுக்கொண்டேயிருக்கும். ஒரு வியாபாரியுடன் தாய் பேரம் செய்வதென்ருல், குழந்தையின் முன்னிலையிலேதான் செய்வாள். அது நடைபெறுவதையெல்லாம் பார்த்துக்கொண்டும் கூர்ந்து கவனித்துக்கொண்டும் இருக்கிறது. **தாய்ப் பால் குடிக்கும் பருவம் முடியும் வரை இவ்வாறு நடைபெறு கிறது.** தாய்க்கும் சேய்க்கும் நெருங்கிய தொடர்புக்கு இது ஒரு காரணம். குழந்தைக்குத் தாய் பாலூட்ட வேண்டியிருக்கிறது. ஆதலால், அவள் வெளியே போகும்போது குழந்தையைத் தனியாக விட்டுவிட்டுப் போக இயலாது. உணவுத் தேவையுடன் அவர்க ளுடைய அன்பும் பிரியமும் சேர்க்கப்படுகின்றன. இந்த வகையில் சேயின் உணவுத் தேவையும் அன்பும் இருவரையும் ஒன்றுபடுத்து கின்றன. குழந்தை உலகத்தோடு ஒன்றி வாழ்வதற்கு இருவரும் சேர்ந்து வழி காண்கின்றனர். இது கூடிய வரை மிகவும் இயல்பான வழியில் நடைபெறுகிறது. **தாயும் சேயும் ஒன்று.**

நாகரிகம் எங்கு இப்பழக்கத்தைச் சீர் கெடுத்துவிட்டதோ அங்குத் தவிர, மற்றெங்கும் ஒரு தாயும் தன் சேயை வேறெவரிடமும் ஒப்படைக்கமாட்டாள். சேய் தாயின் வாழ்க்கையில் பங்கு கொண்டு எப்பொழுதும் அவள் **பேச்சைக் கூர்ந்து கவனித்த வண்ணமாய் இருக்கிறது.** தாய்மார்கள் பொதுவாக **வாயாடிகள்** என்று சொல் லப்படுவதுமுண்டு. இவ்வாறிருப்பினும், அது குழந்தையின் வளர்ச் சிக்கும் தன்னைச் சூழ்நிலைக்குத் தக்கவாறு அமைத்துக்கொள்வதற்கும் பயனுடையதாய் இருக்கும். தன்னைக் குறித்துக் கூறப்படும் சொற்களை மட்டும் குழந்தை கேட்டுக்கொண்டிருந்தால், அதனுல் குழந்தை பெறும் இலாபம் மிகக் குறைவே. முதியோர்களின் முழு உரையாடல் களையும் கேட்கும் பொழுதும், அவ்வுரையாடலைத் தெளிவாக்க வல்ல அவர்களுடைய சாடைகளைக் காணும் பொழுதும், படிப்படியாகச் சொற்ருெடர்களின் அமைப்பையும் குழந்தை புரிந்துகொள்கிறது. தாய் வாயிலிருந்து தனக்கு மெல்லிய குரலில் வரும் ஒற்றைப் பதங்களைவிட இவை மிகவும் முக்கியமானவை. உயிருள்ள எண்ணங் களின் மொழி, செயலால் போர்த்தப்பட்டிருக்கிறது.

உலகத்திலுள்ள மனிதப் பெரும்பகுதிகளும், நாடுகளும், சாதிகளும் தத்தமக்குள்ள தனித்தனி வேற்றுமைகளைப் பெற்றிருக்கின்றன. எடுத்துக்காட்டாக, மக்கள் தங்கள் குழந்தைகளை வெவ்வேறு விதமாக எடுத்துச்செல்கின்றார்கள். நவீன மனித இன இயல் ஆராய்ச்சியில் இப்பகுதி மிகவும் அக்கறை ஊட்டும் பகுதிகளுள் ஒன்றாகும். பெரும்பாலான நாடுகளில் தாய்மார் குழந்தைகளை ஒரு சிறு மெத்தையின்மேலோ, அல்லது ஒரு பெரிய பாயிலோ படுக்க வைக்கின்றனர்; தாய்மார் குழந்தைகளை நேரடியாகக் கையில் தூக்கிக்கொண்டு போவதில்லை. சில நாடுகளில் கயிற்றுச் சுருக்கால் கட்டப்பட்ட ஒரு மரக்கட்டையில் குழந்தை கிடத்தப்படும். இதைத் தாய் வேலைக்குப் புறப்படும்பொழுது தன் தோளில் மாட்டிக் கொண்டு செல்வாள். சிலர், தம் குழந்தையைக் கழுத்தில் தொங்க விட்டுக்கொள்வர். வேறு சிலர், தம் முதுகில் கட்டிக்கொள்வர். இன்னும் சிலர், அதை ஒரு சிறு கூடைக்குள் இட்டு எடுத்துச் செல்வர். எனவே, எல்லா நாடுகளிலும் தாய்மார் குழந்தையை எவ்வாறு தம்முடன் எடுத்துச் செல்வது என்பதற்கு வழி கண்டுபிடித்திருக்கின்றனர். சிலர், தம் குழந்தை தம் முதுகைப் பார்க்கும் வண்ணம் எடுத்துச் செல்கின்றனர்; அந்த நிலையில் குழந்தைக்கு மூச்சுத் திணறாமல் இருப்பதற்காகத் தனி ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். ஜப்பானியக் குழந்தை தாயின் முதுகில் கட்டப்பட்டிருக்கும். ஆனால், அதன் தலை தூக்கிச் செல்பவருடைய தோள்களுக்கு உயரமாகவே இருக்கும். இவ்வாறு தலை நீட்டிக்கொண்டிருப்பதைக் கண்டு முதலில் ஜப்பானுக்குச் சென்ற வணிகர்கள் ஜப்பானியர்களை **'இருதலை இனம்'** என்று வழங்கினார்கள். இந்தியாவில் குழந்தை இடுப்பில் வைத்துச் செல்லப்படுகிறது. செவ்விந்தியர் தம் குழந்தைகளைத் தம் முதுகில் வார் கொண்டு கட்டித் தொங்கவிடுகின்றனர்; அதுவும் முதுகோடு முதுவாய் இருக்கும்படி தொங்கவிடுகின்றனர். தாயுடன் போகும் பொழுது அவளுக்குப் பின் நடைபெறும் காட்சியைக் குழந்தை நன்றாகப் பார்த்துக்கொண்டு செல்வதற்கு இது வசதியாய் இருக்கிறது. குழந்தையைத் தனியாக விட்டுவிடுதல் என்பது இந்தத் தாய்மார்களின் உள்ளத்தில் சிறிதளவும் தோன்றுவதில்லை. ஒரு நாள் ஆப்பிரிக்க இனத்தைச் சார்ந்த இராணிக்கு முடி சூட்டு விழா நடைபெற இருந்தது. அப்பொழுது அந்த இராணி தன் கையில் தன் குழந்தையை வைத்துக்கொண்டிருந்தாள். அந்த விழாவுக்குச் சென்றிருந்த பாதிரிமார்கள் அக்காட்சியைக் கண்டு வியப்படைந்தார்கள்.

இன்னுமொரு விஷயம், தாய் பாலூட்டும் காலத்தை நீடிப்பது. சில சமயங்களில் இது ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டுகள் வரை நீடிக்கலாம்; சில சமயங்களில் இரண்டு மூன்று ஆண்டுகள் வரையும்

நீடிக்கலாம். இதற்கும் குழந்தையின் உணவுத் தேவைக்கும் சம்பந்தம் இல்லை. ஏனென்ருல், குழந்தை சிறிது காலமாகவே வேறு உணவுப் பொருள்களையும் தின்று பழகிக்கொண்டிருக்கிறது. நீண்ட காலம் தாய்ப்பால் சுரக்கும் வரை தாய் சேயுடன் இருந்து தீர வேண்டியிருக்கிறது. குழந்தை முழுச்சமூக வாழ்வுடன் கலந்து, அதைக்கொண்டே தன் மனத்தை உருவாக்கிக்கொள்கிறது. இது இவ்வாறு செய்துகொள்வதற்குத் தகுந்த முறையில் தன் குழந்தைக்கு உதவி புரிய வேண்டுமென்று தாய் உள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஆவலை நிறைவேற்றிக்கொள்வதற்குப் பயனுகிறது. குழந்தையிடம் நேராகத் தாயானவள் பேசாவிட்டாலும், அவளுடன் இருப்பதாலேயே உலகத்துடன் பழகுவதற்கு அதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. குழந்தை தெருவிலும் சந்தையிலும் உள்ள மக்களின் பேச்சைக் கேட்கிறது; அங்குள்ளவர்களைப் பார்க்கிறது; விலங்குகளையும் மற்றக் காட்சிகளையும் தன் மனத்தில் பதிவு செய்துகொள்கிறது. அவற்றின் பெயர் தெரியாவிட்டாலும் பாதகமில்லை. ஒரு பழக்கடையில் தன் தாய் பேரம் பேசும் பொழுது குழந்தையின் முகத்தில் ஏற்பட்டுவிடும் விழிப்பும் தெளிவும் பாருங்கள்! வார்த்தைகளும் சாடைகளும் எவ்வளவு ஆழ்ந்த அக்கறையைத் தூண்டி விடுகின்றன என்பது உங்களுக்கு நன்ருக விளங்கும்.

## அழும் குழந்தை

தாயுடன் இங்குமங்கும் செல்கின்ற குழந்தை சாதாரணமாக **அழுவதில்லை.** உடல் நலம் குன்றும் போதோ, அல்லது அடிபட்டாலோ ஒழிய, அழுவதில்லை என்பதை நாம் கவனிக்கிருேம். சில சமயங்களில் அது உறங்கிப்போய்விடலாம். ஆனுல், அது அழுவதில்லை. நாட்டின் சமூக வாழ்க்கையின் விளம்பரத்துக்காக எடுக்கப்படும் படங்களைக் கவனித்தீர்களானுல், தாய்மாருடன் இருக்கின்ற ஒரு குழந்தையாவது அழுவதில்லை என்பதை அறியலாம்.

எனினும், மேனுடுகளில் அழும் குழந்தை ஒரு பெரும்பிரச்சினையாய் இருந்து வருகிறது. ''ஓயாமல் அழுகின்றது என் குழந்தை!'' என்று எத்தனை முறை பெற்ருேர் முறையிடுவதை நாம் கேட்டிருக்கிருேம்! அதை அடக்குவது எப்படி என்று வாதாடுகின்றனர்; அதை எவ்வாறு இன்புறச் செய்வதென்று வழி தேடுகின்றனர். இதற்கு நவீன உளவியலின் விடை இது: குழந்தை அழுகிறது; கலவரப்படுகிறது; வீரிட்டு அழுகிறது; கோபப்படுகிறது. ஏன்? அது மனப்பசியால் வாடுகிறது. இதுதான் உண்மை. குழந்தை

சலித்துப்போய்விட்டது ; **மனப்பசியுடன்** கிடக்க விடப்பட்டிருக்கிறது. தனியிடத்தில் அடைபட்டுத் தன் சத்திகளைப் பயன்படுத்த இயலாதபடி மனமுறிவுகளைத் தவிர வேறு எதுவும் அதற்கு அளிக்கப்படுவதில்லை. இதற்கு விமோசனம் என்ன ? **தனிமையாய் இருப்பதிலிருந்து விடுதலை**; சமூக வாழ்க்கையில் பங்கு கொள்ள அதற்கு அனுமதி அளித்தல். இந்த முறைகளைப் பல நாட்டினர் இயற்கையாக மேல் மனம் அறியாமல் அனுசரித்து வருகின்றனர். நல்ல நினைவின் பயனாக எல்லாவற்றையும் புரிந்துகொண்டு வேண்டுமென்றே நாம் அனுசரிக்க வேண்டும்.

# 10. மொழியைப் பற்றிய சில கருத்துகள்

குழந்தையின் மொழி வளர்ச்சியைப் பற்றி நமது ஆராய்ச்சியைத் திருப்புவோம். இதைப்பற்றி நாம் சற்றுச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. இல்லையெனில், மொழிக்கும் சமூக வாழ்வுக்கும் உள்ள தொடர்பை நாம் காண இயலாமற்போய்விடலாம். மக்களை ஒரு குழுவினராகவும், நாட்டினராகவும் இணைப்பது மட்டும் அல்லாமல், விலங்குகளுக்கும் மனித இனத்திற்கும் உள்ள முக்கிய வேற்றுமையும் மொழியே ஆகும். சூழ்நிலையை மாற்றி அமைப்பதை நாம் நாகரிகம் என்கிறோம். அந்த மாறுதலுக்கு அடிப்படையாய் இருப்பது மொழியே யாகும்.

விலங்குகளைப் போல மனித வாழ்க்கை முழுதும் மரபு சம்பந்தப் பட்டதன்று. ஒரு குறிப்பிட்ட சிசு உலகத்தில் இன்னது செய்யும் என்று எவராலும் குறி சொல்ல இயலாது. மற்றவர்களுடன் அளவளாவாமல் குழந்தையால் எதுவும் சாதிக்க இயலாது என்பது தெளிவு. எண்ணுவதற்குச் சக்தி இருத்தல் மட்டும் போதாது. எவ்வளவு நுண்ணறிவு படைத்தவர்களாய் இருப்பினும், மக்களுக்கிடையே ஏற்படும் ஒப்பந்தங்களையும் அந்த நுண்ணறிவே சாதித்துவிட இயலாது. மொழியென்பது பலருடைய எண்ணங்களின் கருவியாகும்.

மனிதன் பூமியில் தோன்றுவதற்கு முன்பு மொழியிருந்ததில்லை. மொழி என்பதுதான் என்ன ? அது ஒரு மூச்சு; தொடுக்கப்பட்ட சில ஒலிகள்.

மொழியின் ஒலிகளை மட்டும் எடுத்துக்கொண்டால், அவை பொருளற்றவை. இந்தப் 'பாத்திரத்துக்கும்' அந்தக் 'கிண்ணத்துக்கும்' நியாயமான சம்பந்தம் எதுவும் இல்லை. இந்த ஒலிகளுக்குப்

பொருள் தருவது எது? அது, மனிதர்கள் இச்சொற்களுக்கு இவை பொருள்கள் என்பதை ஒப்புக்கொண்டிருப்பதே ஆகும்; இதே போல மற்றச் சொற்களுக்கும். மனிதக் குழுவினர்க்குள் ஏற்பட்ட ஒப்பந்தங்களேயே இது வெளியாக்குகின்றது. இதைப்பற்றித் தெரிந்த வர்களுக்கே இது புரியும். இதே கருத்துகளை வெளியாக்குவதற்கு வேறு குழுவினர் வேறு ஒலிகளைப் பயன்படுத்தலாம்.

குறிப்பிட்ட ஒரு மனிதக் கூட்டத்தை மற்றவர்களிடமிருந்து பிரித்து அடைத்து வைக்கும் சுவர் என ஒரு மொழியைக் கருத வேண்டியிருக்கிறது. இதனுலேதானே என்னவோ, ‘சொல்’ என்றது மனிதனுடைய மனத்துக்கு ஒரு மாய மதிப்புடையதாகவே இருந்து வந்திருக்கிறது. தேசியத்தன்மையைவிட இன்னும் நெருக்க மாக மக்களைப் பிணைப்பது மொழியேயாகும். வார்த்தைகள் மக்களிடையே உள்ள ஒரு கயிறு. அவர்கள் உபயோகிக்கும் மொழியும் அவர்களுடைய மனத்தின் தேவைக்கு ஏற்றவாறு வளர்ந்து விரிவடைகிறது.

ஓர் அற்புதம் என்னவென்ருல், இவ்வளவு சொற்களையும் தோற்றுவிக்க எவ்வளவு குறைந்த ஒலிகளே தேவைப்படுகின்றன! இந்த ஒலிகளை எண்ணில்லாத வகைகளில் கலக்கலாம். இவைகளி லிருந்து பிறக்கும் சொற்களுக்கு முடிவு இல்லை. இந்த ஒலி முன்னிருக்கலாம், அல்லது ஒன்றைத் தொடரலாம். சில உச்சரிக்கப் படலாம். சில, உச்சரிக்கப்படாமலிருக்கலாம். சில, உதடுகள் கூடிய வண்ணம் ஒலிக்கப்படலாம், வேறுசில, விரிந்த உதடுகளுடன் ஒலிக்கப் படலாம். இவைகளெல்லாவற்றையும்விட வியக்கத்தக்கது என்ன? இத்தனை வகை ஒலிகளும் இவற்றின் சேர்க்கையால் உண்டாகும் பொருள்தரும் சொற்களும் நம் நினைவில் இருக்கின்றனவே, அதுதான் ஒருபுதுமை. அடுத்தபடியாக எண்ணம் என்பது ஒன்றிருக்கிறது. இதை வெளியாக்க வேண்டுமானுல், பல சொற்களை ஒன்று கூட்டிச் சொற்ருெடர்களாகக் கூற வேண்டியிருக்கிறது. இந்தச் சொற்ருெடர் களில் உள்ள சொற்கள் குறிப்பிட்ட ஒழுங்கில் அடுக்கப்படவேண்டும். ஓர் அறையில் குவித்து வைக்கப்பட்டிருக்கும் தட்டுமுட்டுச் சாமான் கள் போல இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சேர்த்துவிட இயலாது. பேசுவோருடைய நோக்கம் இன்னதென்பதைக் காட்டுவதற்கு வழி காட்டியாகச் சில விதிகள் இருக்கின்றன. ஒன்றைப்பற்றிய கருத்தை வெளியிட வேண்டுமானுல், பெயர்ச் சொல்லுக்கருகில் உரிச் சொல்லையும் உபயோகிக்க வேண்டியிருக்கிறது. எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் ஆகியவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஒரு வாக்கியத்தில் குறிப்பிட்ட இடம் இருக்கிறது. வார்த்தைகளைக் கோப்பது மட்டும் போதாது. அவற்றின் ஒழுங்கும் அவசியமானது.

இதன் உண்மையைச் சோதிக்க வேண்டுமானால், தெளிவாக உரைக்கப்பட்ட ஒரு முற்றுச் சொற்றொடரை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதிப் பார்த்தல் போதும். சொற்களைத் தனித்தனியாகக் கத்தரிக்க வேண்டும். அவற்றைக் கலக்கும் பொழுது அவற்றின் பொருள் மறைந்துவிடுகிறது. வேறு ஓர் ஒழுங்கில் அமைத்தோமானால், அதே சொற்களுக்குப் பொருளே காண இயலாது. ஆதலால், சொற்கள் இந்த ஒழுங்கு முறையிலேதான் அமைய வேண்டும் என்பதும் மக்களால் ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதும் தெளிவாகிறது.

எனவே, மொழியென்பது உயர்ந்த ஒரு நுண்ணறிவின் வெளியீடாகும் என்னும் உண்மை தோன்றுகிறது. சரித்திர ஆராய்ச்சியின்படி நோக்கும் பொழுது சில மொழிகள் சில சமயங்களில் பல சிக்கல்களைப் பெற்று வளர்ந்துவிடுகின்றன. அவை எந்த நாகரிகத்துக்குத் துணையாய் இருந்தனவோ அந்த நாகரிகம் அழிந்தவுடன் அம்மொழிகளும் வழக்கழிந்து போகின்றன. இவற்றை நினைவுபடுத்திக்கொள்வது மிகவும் கடினமானதால், இம்மொழிகள் அடியோடு மறைந்துவிட்டன. மேலோடியாக நோக்கும் பொழுது மொழி இயற்கையால் நமக்கு அளிக்கப்பட்டதென்பது நமக்குத் தோன்றலாம். ஆனால், அது இயற்கைக்கும் அப்பாற்பட்டதென்னும் முடிவுக்கு நம்மைக் கொண்டுவந்துவிடும். இயற்கையின்மேல் இது பதிக்கப்பட்ட ஒரு சிருஷ்டியே மொழியாகும். இது பல மனங்களின் நுண்ணறிவுச் செயலாகும். இது எதையும் வெளிப்படுத்தக் கூடிய பரந்த வலை போன்றிருக்கிறது. எல்லாத் திக்குகளிலும் இது படர்ந்திருக்கிறது. சம்ஸ்கிருதத்தைப் போலவோ, அல்லது இலத்தீனைப் போலவோ, ஒரு மொழியை நாம் பல ஆண்டுகள் கற்று வரலாம். அப்பொழுதும் அதில் முழுத்தேர்ச்சி பெற்றுவிட இயலாது; தங்களுடைய திட்டங்களில் எதையேனும் நிறைவேற்ற வேண்டுமானால், மக்களுக்குள் அதைப்பற்றிய ஓர் ஒப்பந்தம் வேண்டும். அதற்காக ஒரு பொது மொழி தேவைப்படுகிறது. இந்த மொழியானது ஓர் உண்மையான பொருள். எனினும், மனிதனால் உபயோகிக்கப்படுகின்ற கருவிகளிலெல்லாம் மொழியானது மிகவும் குறைந்த உறுதியுடையதாகும்.

இந்தக் கருவி மனிதனால் பெறப்படுகிறது. இந்தப் பிரச்சினையைப் பற்றி நாம் நம் கவனத்தைச் செலுத்தி வந்திருக்கிறோம். இதன் தொடர்ச்சியாக மொழியை உட்கவர்ந்துகொள்வது சிறு குழந்தை என்பதை நாம் நம்பும்படி செய்கிறது. இந்த உட்கவரும் சத்தியின் உண்மை மிக ஆழமானது ; கலக்கத்தை உண்டுபண்ணுவதாயும் இருக்கிறது. இதைப் பற்றி அதிகமான கவனம் இன்னும் செலுத்தப்

பட்டதாகத் தெரியவில்லை. நாம் பொதுவாக என்ன சொல்கிறோம் ? " குழந்தைகள் ஒரு மொழியைப் பேசுபவர்களுடன் வாழ்கின்றன. ஆதலால், அவை இயற்கையாகவே பேசுகின்றன," என்று கூறுகிறோம். பெரும்பாலான மொழிகளில் நிறைந்து கிடக்கும் சிக்கல்களை ஆராய்ந்து பார்க்கும் பொழுது மேலே குறிப்பிட்ட கருத்து மிகவும் ஆழமானதன்று. எனினும், இக்கருத்து எவ்வித முன்னேற்றமும் இல்லாமல் பல்லாயிரம் ஆண்டுகளாக மக்களிடை நிலவி வந்திருக்கிறது.

இந்தப் பிரச்சினையை ஆயும் பொழுது வேறொன்று நம் கவனத்துக்கு வருகிறது. எவ்வளவு கடினமான மொழியாக நமக்குத் தோன்றினாலும், அந்த மொழி பிறந்த நாட்டில் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் அம்மொழியைப் பேசித்தான் வந்திருக்கின்றார்கள். எடுத்துக்காட்டாக, இலத்தீன் மொழி அடியாகப் பிறந்த ஒரு மொழியைப் பேசுகின்ற நமக்கே அந்த இலத்தீன் மொழியைப் பேசுவது கடினமாய் இருக்கிறது. அந்த இலத்தீன் மொழியை ரோமாபுரி அடிமைகள் பேசிவந்தார்கள். இன்று போலவே அன்றும் இலத்தீன் மொழியில் சிக்கல்கள் இருந்துதான் வந்தன. ரோமாபுரி அரண்மனையில் வாழ்ந்த மூன்றாண்டுக் குழந்தைகள் பேசி வந்தது போலவே, காடு கரைகளில் தொழில் புரியும் விவசாயியும் பேசி வரவில்லையா ?

இந்தியாவில் என்ன நடந்தது ? பல ஆண்டுகளுக்கு முன்பு நிலத்தை உழுத உழவனும், காடுகளில் திரிந்தவனும் இயற்கையாகவே சம்ஸ்கிருத மொழியில் தன் கருத்துகளைத் தெரிவித்துக்கொள்ளவில்லையா ?

இந்தப் பிரச்சினைகள் நம்மிடம் ஓர் அதிசயத்தைக் காணும்படி தூண்டி விடுகின்றன ; சிறு குழந்தைகளிடம் நேரடியாகக் காணக்கூடியபடி மொழியின் வளர்ச்சியைப் பற்றி நுட்பமான ஆராய்ச்சிகளைச் செய்ய வழிகாட்டியிருக்கின்றன. தாய் தன் குழந்தைக்கு ஒரு மொழியைக் கற்பிப்பதில்லை. ஆதலாலேதான் மேலே 'மொழியின் வளர்ச்சி' என்று குறிப்பிட்டிருக்கிறேன் ; 'மொழியின் போதனை' என்று குறிப்பிடவில்லை. மொழியானது இயற்கையாய் வளர்கிறது ; தானே ஆக்கப்படும் தொழில் போல வளர்கிறது. இதன் வளர்ச்சியும் சில குறிப்பிட்ட விதிகளைப் பின்பற்றுகிறது. இந்த விதிகள் எல்லாக் குழந்தைகளுக்கும் பொதுவானவை. குழந்தை வாழ்வின் பல பருவங்களும் அதே அளவை அடைந்ததாகக் காட்டுகின்றன. இது உலகில் உள்ள எல்லாக் குழந்தைகளிடமும் திரும்பத் திரும்பக் காணப்படுகிறது. இந்த மொழியானது எளிதானாலும் சரி, கடினமானாலும் சரி. நாகரிகமற்ற மக்களால் பேசப்படுகின்ற மிக எளிமையான மொழி

களும் இருக்கின்றன. மிகவும் கடினமான மொழிகளுக்கு எப்படியோ, அப்படியே இந்த மொழியைப் பேசுகின்ற குழந்தைகளும் அவ்வப் பருவங்களில் அதே நிலையைப் பெறுகின்றன. எல்லாக் குழந்தைகளும் சில பதங்களை மட்டும் உச்சரிக்கக் கூடிய பருவத்தைக் கடக்கின்றன; பிறகு முழு வார்த்தைகளை உச்சரிக்கின்றன; பிறகு எல்லா இலக்கண விதிகளையும் பிழையின்றி அனுசரித்துப் பேசுகின்றன.

ஆண்பால், பெண்பால், ஒருமை பன்மை, காலங்கள் மூன்று, உபசர்க்கம் அல்லது மொழி முதல் அடை மொழி, பிரத்தியயம் அல்லது மொழியீற்றடை மொழி அல்லது அசை முதலியவற்றில் காணப்படும் வேற்றுமைகளுடன் குழந்தைகள் பேசுகின்றன. மொழி பல சிக்கல்களை உடையதாய் இருக்கலாம்; பல விதி விலக்குகளைப் பெற்றதாய் இருக்கலாம். எனினும், இதைக்கற்றுக்கொள்கின்ற குழந்தை மொழியை முழுமையாக உட்கவர்ந்துகொள்கிறது. ஆப்பிரிக் காவில் வாழும் நாகரிகமற்ற குழந்தை எந்த வயதில் அதன் மொழியில் காணப்படும் குறைந்த சொற்களை வைத்துக்கொண்டு எவ்வாறு பேசுகின்றதோ, அதே போலப் பல சொற்களையும் இலக்கணச் சிக்கல்களையும் உடைய மொழியையும் வேறு ஒரு குழந்தை ஆப்பிரிக்கக் குழந்தையின் வயதிலேயே பேசுகிறது.

வெவ்வேறு ஒலிகள் உண்டாக்கப்படுவதை நாம் கவனித்தோ மானல், அவைகளும் சில விதிகளைப் பின் பற்றுவது விளங்கும். சொற்களில் உண்டாகும் எல்லா ஒலிகளும் சில இயக்க உறுப்புகளைக் கொண்டே ஆக்கப்படுகின்றன. சில சமயங்களில் மூக்கு, தொண்டை யுடன் இணைந்து ஒலிக்கிறது. வேறு சில சமயங்களில் நாக்கின் தசை களும் கன்னத்தின் தசைகளும் ஒன்றி இருக்க வேண்டியிருக்கிறது. இந்த இயக்கத்தை உண்டுபண்ண உடலின் பல பகுதிகள் பங் கெடுத்துக்கொண்டு குழந்தைகள் தாம் கற்றுக்கொள்கின்ற தாய் மொழியைப் பிழையின்றி உருவாக்குகின்றன. ஆனல், பெரியவர் களாகிய நம்மால், அயல் நாட்டில் என்னென்ன ஒலிகள் உச்சரிக்கப் படுகின்றன என்பதைக்கூடக் கண்டுபிடிக்க இயலாது. அந்த ஒலிகளை நாம் உச்சரிப்பதெங்கே! நம்முடைய மொழியின் இயக் கத்தையே (Machinery) நம்மால் உபயோகப்படுத்த இயலும். குழந்தையைத் தவிர, வேறு எவராலும் ஒருவருடைய மொழியின் மொழி அமைப்பு அல்லது இயக்கத்தை ஆக்கிவைக்க இயலாது. அதன் சூழ்நிலையில் எத்தனை மொழிகள் பேசப்படுகின்றனவோ, அத்தனை மொழிகளையும் பிழையின்றிக் குழந்தையைப் போல வேறெவ ராலும் பேச இயலாது.

இவை நனவால் செய்யப்பட்ட வேலை அல்ல. இவையெல்லாம் நனவிலா முறையில் மனத்தால் உருவாக்கப்பட்டவை. இவை

ஆழ்ந்த மனத்தின் இருண்ட பகுதியில் தொடங்கி வெளியாகும் பொழுது நிலைபெற்ற திறமையாகிவிடுகின்றன. நாம் தெரிந்த எண்ணத்தோடு ஒரு மொழியைப் புதிதாகக் கற்றுக்கொள்வது இப்படி இருக்கும் என்று நம் போன்ற பெரியவர்கள் ஒருவாறு கற்பனை செய்து கொள்ளத்தான் இயலும். இந்த முயற்சியில் நாம் வேண்டுமென்று அறிய ஈடுபடுகிறோம். ஆனால், நாம் வேறொரு கருத்தையும் வளர்க்க வேண்டும். இது இயற்கையான ஓர் இயக்கம் (Mechanism) என்ற கருத்தைப் பற்றியது. இது இயற்கையின்மேல் இடப்பட்ட பொதுநுட்பம் (மெக்கானிகல்) எனலாம். இவை நம் நனைவைக் கடந்தே பணியாற்றுகின்றன. இந்தப் பொறிநுட்பம் ஒன்றன்று; பலவற்றின் ஒரு தொடர். இவை நம்முடைய கவனத்துக்குச் சிக்காத ஆழத்தில் வளர்ச்சி பெறுகின்றன. இவற்றைப் பற்றிய சான்றுகள் வெளிப்படையாய்த் தெரிகின்றன. ஆனால், மனித இனத்துக்கே பொதுவானபடியால், இவை முழுமையும் நமக்குக் காட்சி அளிக்கின்றன.

இந்த முழுமைக் காட்சியும் அற்புதமானது. இதன் சில உட்பிரிவுகள் இன்னும் கவர்ச்சியானவை. ஓர் அற்புதம் என்னவென்றால், ஒரு பரம்பரையிலிருந்து மற்றொரு பரம்பரைக்கு மொழியின் உச்சரிப்புத் தொடர்ந்துகொண்டே போவது. இதை எல்லா மக்களிடமும் காணலாம். மற்றொன்று என்னவென்றால், குழந்தைகள் மிகவும் சிக்கல் நிறைந்த மொழியையும் எளிய மொழியைப் போலவே சுலபமாகக் கற்றுக்கொள்வது. தன்னுடைய தாய் மொழியைக் கற்றுக் கொள்ள எந்தக் குழந்தைக்கும் சலிப்புத்தட்டி விடுவதில்லை. அந்தத் தாய் மொழி எப்படிப்பட்டதாயிருந்தாலும், சரி; குழந்தையின் பொறி இயக்கம் அதை ஒரு முழுமையாக உருவாக்கிவிடுகிறது.

குழந்தை இவ்வாறு மொழியை உட்கவர்ந்துகொள்வது ஓர் ஒப்பனையை எனக்கு நினைவூட்டுகிறது. அவ்வளவாக நெருங்கியதாக இல்லாவிட்டாலும், குழந்தையின் மனத்துக்குள் என்ன நடைபெற்று வருகிறது என்பதை நாம் அறிவதற்கு வேண்டிய கருத்து ஆய்வை நமக்குள் ஒருவாறு தூண்டிவிடலாம்.

ஏதோ ஒரு காரியத்துக்காக நமக்கு ஒரு படம் தேவையாயிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். நிறத்தையோ, பென்சில்களையோ உபயோகித்து அதை நாமே தீட்டிக்கொள்ளலாம்; அல்லது ஒரு போட்டோவும் பிடித்துவிடலாம். இரண்டாவது முறை வேறு தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அப்பொழுது எடுக்கப்படும் படத்தில், உணர்ச்சி பெற்ற ஒரு தட்டின்மேல் உருவம் விழுகிறது. இந்தத் தட்டோ, கண்ணாடியோ, ஒருவர் உருவத்தைப்

பதிப்பதைப் போலவே அதே வேகத்தில் பத்து ஆள்களின் உருவத்தையும் பதிப்பித்துக்கொள்ள இயலும். எல்லாம் கண் மூடித் திறப்பதற்குள் நடைபெற்றுவிடுகின்றன. ஆயிரம் பேர்களின் படம் எடுப்பதென்றாலும், அதிகமான கஷ்டம் எதுவும் இல்லை. ஒரு புத்தகம் சிறு பக்கத்துக்கானாலும் சரி, அயல் மொழியில் நெருக்கமாக அச்சிடப்பட்ட பெரிய பக்கத்துக்கானாலும் சரி, வேலை எல்லாம் ஒன்றே. அந்தத் தட்டின்மேல் பூசப்பட்டிருக்கும் இரசாயனப் பொருள் எல்லாவற்றிலும் ஒரே மாதிரி நடந்துகொள்கிறது. அது சாதாரணமானதானாலும் சரி, சிக்கல் நிறைந்ததானாலும் சரி, அதுவும் ஒரு வினாடியின் பின்னத்துக்குள் எதையும் பதிவு செய்துகொள்கிறது. ஆனால், நமக்கு ஓர் ஆளின் உருவத்தை வரைவதென்றால், நெடுநேரம் ஆகிறது. எவ்வளவுக்கெவ்வளவு பேர் வழிகள் அதிகமாகின்றார்களோ, அத்தனை பேரையும் வரைவதற்கு மிகுந்த நேரம் ஆகும். ஒரு புத்தகத்தின் பெயரை எழுதிக்கொள்வதற்கு நமக்கு நேரம் ஆனால், இதே புத்தகத்தில் நெருக்கமாக அச்சிடப்பட்டிருக்கும் ஒரு பக்கத்தை நாம் பார்த்து எழுதிக்கொள்வதென்றால் எவ்வளவு நேரம் ஆகும்!

இது மட்டும் அன்று. போட்டோக் கண்ணாடித் தட்டிலோ, பிலிமின் மேலே உருவம் முழு இருட்டில் பதிவாகிறது. இதைக் கழுவுவதும் (Development) இருட்டிலேயே நடைபெறுகிறது. போட்டோக் காகிதத்தில் உருவத்தைப் பதிப்பதும் இருட்டிலேதான். இத்தனையும் முடிந்த பிறகே திறந்த வெளியில் எவருக்கும் உருவப் படத்தைக் காட்ட இயலும். ஆனால், இதற்குள் படம் இனி மாற்ற இயலாத நிலையைப் பெற்றுவிடுகிறது.

மொழி கற்கும் குழந்தையின் உளவியல் பொறி இயக்கமும் இது போன்றதே ஆகும். மனத்தின் ஆழ்ந்த இருண்ட நனவிலாப் பகுதியில் (அடி மனத்தில் எனலாம்) மொழியின் வேலை தொடங்குகிறது. அந்த ஆழ்ந்த நிலையில் மொழி அங்கு வளர்ச்சி பெற்று, அதன் பலனும் நிலைபெற்றுவிடுகிறது. அதன் பிறகே பிறர் அறிய அது வெளியாகிறது. இவை எல்லாம் நடைபெறுவதற்குக் காரணமான ஒரு பொறி இயக்கம் வேலை செய்து வருகிறதென்பதற்கு ஐயமே இல்லை.

இதைப்பற்றி நாம் ஒப்புக்கொண்ட போது என்னதான் நடைபெறுகிறது என்பது தெரியவேண்டும் என்ற ஆச்சரியத்தோடு எதிர்பார்ப்பது இயற்கைதானே! இந்தப் பிரச்சினையைப்பற்றி மொழி நுட்பமுறையில் ஆராய்வதற்கு நிறைந்த ஊக்கம் இக்காலத்தில் இருந்து வருகிறது. கூர்ந்து கவனித்து வருவது என்ற வேலையின்

ஒரு பகுதியை நாமே நமக்குள் நடத்திக்கொள்ளலாம். வெளிப்படையாகத் தோற்றம் அளிக்கும் சம்பவங்களைக் கவனிப்பது ஒன்று. இவற்றுள் ஒன்றைப் பற்றித்தானே நம்மால் உறுதியாகக் கூற இயலும்? இத்தகைய ஆராய்ச்சிகள் எல்லாம் குற்றங்குறை காணப் படாத கண்டிப்புள்ளனவாய் இருக்க வேண்டும். பிறப்பிலிருந்து இரண்டு வயதிலும் அதற்கு மேலும் இந்த ஆராய்ச்சியை ஆராய்ச்சியாளர் இன்று மிகவும் கவனத்துடன் செய்து வருகின்றனர்; தினந்தோறும் நடைபெறுவதைக் குறித்துக்கொண்டு வருகின்றனர். அதனுடன் எந்தெந்தப் பருவங்களில் வளர்ச்சி முன்னேறுமல் அப்படியே நிற்கிறதோ, அதையும் குறித்துக்கொள்கின்றனர். இந்தக் குறிப்புகளிலிருந்து சில விஷயங்கள் மைல் கற்கள் போலத் தோன்றி நிற்கின்றன. உள்ளே நடைபெறுகின்ற வேலை அதிகமாய் இருக்கலாம். ஆனால், அதன் வெளிப்படையான அறிகுறிகள் பெரும்பாலும் சிறியனவாகவே இருக்கின்றன. குழந்தை அந்தரங்கத்தில் செய்து கொண்டிருக்கும் வேலைக்கும் வெளிப்படையாக அறிவிப்பதற்கும் அளவில் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது என்பது புலனாகிறது. மேலும், நமக்கு வெளிப்படையாகத் தெரியக்கூடிய முன்னேற்றமும் படிப்படியாகப் போவதில்லை. ஆனால், அது தாவித்தாவிப் போவது போல இருக்கிறது. எடுத்துக்காட்டாக, குறிப்பிட்ட ஒரு வயதில் பதங்களை உச்சரிக்கின்ற திறமை தோன்றுகிறது. பிறகு பல மாதங்களுக்குக் குழந்தை பதங்களையே உச்சரித்துக்கொண்டிருக்கிறது. வெளிப்படையாகப் பார்த்தால், குழந்தை ஒரு முன்னேற்றத்தையும் அடைந்ததாகத் தெரியவில்லை. ஆனால், திடீரென்று ஒரு நாள் அது ஒரு சொல்லை உச்சரித்துவிடுகிறது; பிறகு நெடுநாள் வரை இரண்டொரு சொற்களையே சொல்லிக்கொண்டிருக்கிறது. இதற்கு மேல் பேசுவதற்கு அக்குழந்தையிடம் ஒரு வேகத்தையும் காண இயலுவதில்லை. எனினும், அக்குழந்தை வேறு வகையான செயல்களைச் செய்து வருவது அதன் அந்தரங்க வாழ்க்கை நிதானமாக ஒரு விசித்திர விரிவைப் பெற்றுக்கொண்டிருக்கிறது என்பதைக் காட்டுகிறது.

எனினும், நம்முடைய அனுபவங்களில் விஷயங்கள் வேறு வகையாகவா இருக்கின்றன? நாகரிகமற்ற பழங்குடி மக்களைப்பற்றி நாம் சரித்திரத்தில் படிக்கிறோம். பல நூற்றாண்டுகளாக மிகவும் தாழ்ந்த நிலையில் இருப்பதைப்பற்றி நாம் அறிவோம். அவர்கள் முன்னேற்றத்திற் சிக்கமாட்டாதவர்கள் போலும்! ஆனால், இவைகளெல்லாம் சரித்திரக்காரனுக்கு வெளிப்படையாகக் கிடைக்கும் காட்சிகளாகும். உண்மை என்ன? தொடர்ந்த அந்தரங்க வளர்ச்சி ஒன்று நடைபெற்றுக்கொண்டே வருகிறது. இவ்வளர்ச்சி திடீரென்று சில புதுமைகளில் தோற்றம் அளிக்கிறது. இது வேகமான மனமாறு

தல்களில் கொண்டுபோய் விடுகின்றது. பிறகு இதன் தொடர்ச்சியாக அடுத்த வேகமுள்ள அதிர்ச்சி தோன்றுவதற்குமுன் ஓர் அமைதியும் மெதுவான வளர்ச்சியும் கூடிய பருவம் இருந்து வருகிறது.

மனிதனது மொழியைப் பொறுத்தவரையில் குழந்தையில் இதைப் போலவே நடைபெறுகிறது. ஒவ்வொரு வார்த்தையாகப் படபடப் பில்லாமலும் நிதானமாகவும் முன்னேற்றம் ஏற்படுவதில்லை. இங்கும் திடீரென்று தோன்றும் நிகழ்ச்சியே நாம் காண்கிறோம். உளவியலார் இதைத் **'திடீர் நிகழ்ச்சி'** (Explosive Phenomena) என்கின்றனர். இவையெல்லாம் எந்த ஆசிரியருடைய தூண்டுதலாலும் நடைபெற்று விடவில்லை; ஆனால், தாமே எக்காரணமுமின்றியே நடைபெறு கின்றன. ஒவ்வொரு குழந்தையும் அதன் வாழ்வில் ஒரு குறிப்பிட்ட வயதில் சில வார்த்தைகளைத் திடீரெனச் சரமாரியாகப் பொழிகிறது. ஒவ்வொரு வார்த்தையும் செம்மையாக உச்சரிக்கப்படுகிறது. இது வரையிலும் அநேகமாக ஊமைபோல இருந்து வந்த குழந்தை, மூன்று மாதங்களுள் (இது பிறந்த குழந்தையின் மூன்றும் மாதத்தைக் குறிப்ப தன்று) பெயர்ச்சொல்லின் வகைகளை எல்லாம் சுலபமாக உபயோ கிக்கக் கற்றுக்கொள்கிறது; சொற்களின் முன் சேர்க்கையையும், பின் சேர்க்கையையும், வினைச்சொற்களையும் அவ்வாறு உபயோகிக் கிறது. ஒவ்வொரு குழந்தையிடமும் அதனுடைய இரண்டாம் வயது முடிவில் இவை எல்லாம் நடைபெறுகின்றன.

எனவே, நாமும் குழந்தையின் உதாரணத்திலிருந்து தைரியம் பெற்றுக் காத்திருக்க ஒருவாறு ஒப்புக்கொள்ளலாம். சோம்பிக்கிடந்த சரித்திர காலத்திலிருந்து முன்னேற்றம் தோன்றும் என்பதை நாம் எப்பொழுதும் எதிர்பார்க்கலாம். ஒரு வேளை மனிதனது முட்டாள் தனம் என்பது அது தோற்றம் அளிப்பதைவிடக் கம்மிபோல நமக்குத் தெரியாமல் மறைந்திருக்கும் அந்தரங்க வாழ்க்கையிலிருந்து அற்புதச் செயல்கள் எதிர்காலத்துக்காகத் திடீரென வெடிக்கக் காத்துக்கொண் டிருக்கலாம்.

இந்தத் **திடீர்வெடிப்பு நிகழ்ச்சி**களும், குழந்தை தன்னுள் இருப் பதை வெளியாக்கிக்கொள்ளக்கூடிய பேச்சுத் திறமையில் திடீர்த் தோற்றங்களும் இரண்டாம் வயதுக்குப் பிறகும் தொடர்ந்து நடை பெறுகின்றன. தனி வாக்கியங்கள் கலப்பு வாக்கியங்கள் ஆகிய வற்றின் உபயோகமும், வினைச்சொற்களின் கால வகைகளும் (Moods) (வியங்கோள் வகை உட்பட—Subjunctive Mood) ஆகிய வற்றின் உபயோகங்களைத் தெரிந்துகொண்டிருக்கிறது. அவ்வாறே இணைந்த சொற்றொடர்களும் (Coordinate clauses) சார்புச் சொற் றொடர்களும் (Subordinate clauses) எதிர்பாராத விதத்தில் தோற்றம்

அளிக்கின்றன. இந்தக் குழந்தை பிறந்த சாதிக்கோ, சமுதாயக் குழுவுக்கோ உள்ள விசேஷ மொழி உச்சரிப்புகளும் மனப்பாடங்களாய் அமைந்துவிடுகின்றன. நனவிலா நிலையில் ஆக்கப்பட்ட செல்வம் இது. பிறகு இது நனவு நிலைக்கு அளிக்கப்படுகிறது. இந்தப் புதுச் சத்தியைக் குழந்தை பெற்றவுடன் ஓயாமல் பேசிக்கொண்டேயிருக்கிறது.

மனிதனுடைய மன வளர்ச்சியில் இரண்டரை வயது ஓர் எல்லைக் கோடு ஆகும். இதற்கு அடுத்தபடியாக மொழி வளர்ச்சியில் வேறு ஒரு புதுப் பருவம் தோன்றுகிறது. இது திடீர் வெடிப்பு எதுவும் இல்லாமலே வளர்ந்துகொண்டு போகிறது. ஆனால், இதில் மிகுந்த அளவு உயிர்ப்பும் தானே செய்கின்ற ஆற்றலும் காணப்படுகின்றன. இந்த இரண்டாம் பருவம் சுமார் ஐந்து அல்லது ஆறு வயதுவரை நீடிக்கிறது. இந்தப் பருவத்தில் குழந்தை பல வார்த்தைகளைக் கற்றுக்கொண்டு வாக்கிய அமைப்புகளைச் சீர்படுத்திக்கொள்கிறது. குழந்தையின் சூழ்நிலையிலிருந்து அது கேட்கக்கூடிய வார்த்தைகள் மிகக் குறைந்தவைகளாய் இருந்தாலோ, அல்லது கொச்சை மொழிகளைத் தவிர வேறு ஒன்றும் அதன் செவிகளில் படாமல் இருந்தாலோ, குழந்தை அவற்றைத்தான் பேசும். ஆனால், இதற்குப் பதிலாகப் பரந்த சொற்றொகையை உபயோகிக்க வல்ல பண்பட்ட மக்கள் சூழ்நிலையில் குழந்தை வாழ்ந்து வந்தால், அவர்கள் பேசுகின்ற பேச்சையும் அப்படியே முழுமையாக ஏற்றுக்கொள்கிறது. ஆதலால், சூழ்நிலை மிகவும் முக்கியமானது. எனினும், எத்தகைய சூழ்நிலையானாலும், குழந்தையின் இந்தப் பருவத்தில் மொழி மிகவும் சிறப்படைகிறது.

இரண்டு இரண்டரை ஆண்டுக் குழந்தைகளுக்கு முந்நூறு சொற்கள் தெரியும் என்று பெல்ஜிய நாட்டு உளவியலார் சிலர் கண்டறிந்திருக்கின்றனர். அதே குழந்தை ஆறும் ஆண்டில் ஆயிரக் கணக்கான சொற்களைத் தெரிந்துகொண்டிருக்கிறது. இவை அனைத்தும் ஆசிரியர் இல்லாமலே நடைபெற்றிருக்கின்றன. இவையெல்லாம் குழந்தை தானே பெற்றவை. குழந்தை தானாகவே இத்தனையும் தெரிந்துகொண்ட பிறகு அதைப் பள்ளியில் வைக்கிறோம். பெரிய விருந்தளிப்பது போல நெடுங்கணக்கை அதற்குச் சொல்லிக்கொடுக்கிறோம். என்ன விந்தை !

இப்பொழுது இரண்டு பாதைகள் பின் பற்றப்படுகின்றன. இதை நம் மனத்தில் கவனத்துடன் இருத்திக்கொள்ளல் வேண்டும். பேச்சை உருவாக்கி வருகின்ற ஒரு நனவிலாச் செயற்போக்கு நடைபெற்று வருகிறது. இதற்கு அடுத்தாற்போல நனவுடன் சொல் ஆற்றல் மெதுவாக விழிப்படைந்து நனவிலா நிலை அளிக்கக்கூடியதை அதனிடமிருந்து ஏற்றுக்கொள்கிறது.

இவற்றின் இறுதிப் பலன் யாது ? ஆருண்டு மனிதக் குழந்தைக் குப் பிழையில்லாமல் பேசத் தெரிந்துவிட்டது. அது தன் தாய் மொழி யின் சட்டங்களை நன்ருக அனுசரித்தே பேசுகிறது. ஆனல், நனவிலா நிலையில் இவை எல்லாம் எவ்வாறு ஆக்கப்பட்டு வந்தன என்பதை அதனுல் விவரிக்க இயலாது. எனினும், மொழியை ஆக்கியோன் யார் ? குழந்தையே. மனிதனே மொழியை ஆக்கியவன். இதை ஆக்குவதைக் குழந்தை பிறருதவியின்றித் தானே செய்துகொண்டிருக் கிறது, ஆனல், இவ்வாறு ஆக்கும் சத்தியை அது பெற்றிராவிடில், திடீரெனத் தானே மொழியின் பல சிக்கல்களைக் கற்றுக்கொள்ளும் திறமை அடையாவிடில், மனித உலகத்தால் பயன்தரக்கூடிய எதை யும் சாதித்திருக்கவே இயலாது ; நாகரிகம் என்பதே தோன்றியிருக்க இயலாது.

நாம் குழந்தையைக் காண வேண்டிய நேர்மையான நோக்கு இதுவே ஆகும். இதிலேதான் குழந்தையின் இன்றியமையாமை தெரி கிறது. அது எதையும் சாதிக்க வல்லதாய் இருக்கிறது. அதனுடைய தொழிலைக்கொண்டே நாகரிகம் நிலை பெறுகிறது. ஆதலாலேதான் குழந்தைக்குத் தேவைப்படும் உதவியை நாம் அளிக்க வேண்டும். அது தன் வாழ்க்கைப் பாதையில் தனியாக நடவாமல் அதற்கு வேண் டிய உதவியை நாம் அதனருகில் இருந்து அளிக்கக் காத்திருக்க வேண்டும்.

# 11. மொழி எவ்வாறு குழந்தையை அழைக்கிறது ?

மொழியின் பொறி நுட்பச் சம்பந்தமான பல அற்புதங்களைப் பற்றி விளக்கிக் காட்ட விரும்புகிறேன். வெளியுலகத்தை அனுசரித்து நடக்க வேண்டிய பொறி அமைப்பை மத்திய நரம்பு மண்டலம் அமைத்துத் தருகிறது என்பது எல்லாரும் அறியும் விஷயமாகும். ஐம்பொறிகளும், நரம்புகளும், நரம்பு மையங்களும், இயங்குதல் சம்பந்தப்பட்ட தசை உறுப்புகளும் ஆகியவற்றுள் ஒவ்வொன்றுக்கும் இதிற்பங்குண்டு. ஆனால், மொழி பற்றிய பொறி நுட்பம் ஒன்று இருப்பது என்பது, பெரும்பொருளான (Material) ஏதுக்கள் (Factors) இருப்பதைக் குறிப்பதோடு மற்றவைகளையும் குறிக்கின்றது. **மூளையின் புரணியல்** (Brain Cortex) உள்ள நரம்பு மையங்கள் மொழியுடன் சம்பந்தப்பட்டவை என்பது சென்ற ஆண்டின் இறுதியில் எடுத்துக் காட்டப்பட்டது. இவற்றுள் முக்கியமானவை இரண்டு. ஒன்று, பேச்சைக் கேட்பதில் சம்பந்தப்பட்டது. அது கேள்விப் பதிவு மையம்; மற்றொன்று, பேச்சைத் தோற்றுவிக்கும் மையம். அது வார்த்தைகளை உருவாக்குவதற்குத் தேவையான இயக்கங்களை ஒன்றுபடுத்துவது. ஆதலால், இவற்றுள் ஒன்று, புலன் மையம் ; மற்றொன்று, இயக்க மையம்.

மொழியின் துணைக்கருவிகளும் இவ்வாறு பிரிவுகளைப் பெற்றிருப்பதை வெளிப்படையாகக் காணலாம். செவியின் சம்பந்தமான உறுப்பு மையங்கள், பேச்சின் ஒலியைப் பதிவு செய்துகொள்கின்றன. வாய், தொண்டை, மூக்கு என்பன அந்த ஒலியை உண்டாக்குகின்றன. இவ்விரு மையங்களும் தனித்தனியாக வளர்கின்றன. உடலியலிலும் உளவியலிலும் இவ்விரண்டு மையங்கள் வெவ்வேருக வளர்கின்றன. ஒரு விதத்தில் குழந்தையின் மன வாழ்க்கையின் மாயமான இருப்பிடத்துடன் கேள்வி உறுப்புகள் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இந்த மாயமான இடத்தில் குழந்தையின்

ஆழ்ந்த மனத்தில் மொழியானது உருவாக்கப்படுகிறது. வார்த்தையைப் பேசுவதற்குத் தேவையான மிக அற்புதமானதும், சிக்கல் நிறைந்ததும், நுண்மையானதுமான இயக்கங்கள் வேண்டியிருக்கின்றன. இவைகளிலிருந்து இயக்கத்துக்குரிய செயல்களை ஊகிக்க இயலும்.

இந்த இரண்டாவது பகுதியான பேசும் திறமை இன்னும் மெதுவாக வளர்வது தெளிவாகத் தெரிகிறது. முந்தினதைவிட இது காலம் தாழ்த்தே காட்டிக்கொள்கிறது. இதற்குக் காரணம் என்ன என்று கேட்கலாம். ஏனென்றால், குழந்தையால்கேட்கப்பட்ட ஒலிகள் பிரதிபலிக்கத் தூண்டிவிடுகின்றன.

இது முற்றிலும் நியாயந்தான். ஏனென்றால், மனிதன் பிறப்பதற்கு முன் கூட்டி வைக்கப்பட்ட மொழி எதுவுமே இல்லையல்லவா? இனிமேலேதான் அந்த மொழியை அது படைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. குழந்தை ஒரு மொழியைப் பேசுவதத்கு முன் அதனுடைய சுற்றத்தார் பேசுகின்ற மொழியைக் கேட்க வேண்டுவது நியாயந்தானே? ஆதலால், மனத்தில் பதித்துக்கொண்ட ஒலிகளின் அடைப்படையில் இவ்வார்த்தைகளை உச்சரிக்க வேண்டிய இயக்கங்களை அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. அது கேட்பது, மனத்தில் பதிந்து கிடக்கும் ஒலிகளைப் பொறுத்திருக்கிறது. அது இனிமேல் உருவாக்கும் இயக்கங்களும் இந்த அளவுக்கு நாம் புரிந்துகொள்ள இயலும். பேச்சு என்பது இயற்கையான பொறி அமைப்பால் உண்டாக்கப்படுவது என்பதும், தர்க்க நியாயத்தால் அன்று என்பதும் நாம் நினைவு படுத்திக்கொள்ள வேண்டும். என்ன நடை பெறுகிறதென்றால், விஷயங்கள் நம் கவனத்துக்கு வருகின்றன. நாம் அவற்றைப் புரிந்துகொண்ட பிறகு, "இது எவ்வளவு தர்க்க முறையாய் இருக்கிறது!'' என்கிறோம். இவற்றைக் கவனிக்கும் பொழுது, ''இந்தச் சம்பவங்களை எல்லாம் நடத்திவைக்கின்ற ஒரு நுண்ணறிவுச் சத்தி இருக்க வேண்டுமல்லவா?'' என்பது தோன்றுகிறது. இத்தகைய ஒரு நுண்ணறிவின் இயக்கம் புதுமையை ஆக்குவதில் இறங்குகிறது. இதன் ஆட்சித் தோற்றம் உளவியல் நிகழ்ச்சியாய் இருந்தால், நன்கு வெளியாகிறது; உடல் இயல் நிகழ்ச்சியாய் இருந்தால், அவ்வளவாகக் காட்டிக்கொள்வதில்லை; எனினும், அப்பொழுதும் ஓரளவுக்கு நன்றாகக் காட்சி அளிக்கிறது. ஒரு மலரின் வண்ணம் உருவம் எல்லாவற்றையும் இங்கு நினைவு படுத்திக்கொள்கிறோம். பிறக்கும் பொழுது குழந்தை கேட்கவும் கேட்காது; பேசவும் பேசாது என்பது தெளிவாகிறது. அப்படியானால், பிறகு என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. எனினும், எல்லாவற்றையும் உருவாக்குவதற்கு வேண்டியவை ஆயத்தமாய் இருக்கின்றன.

இந்த இரண்டு மையங்கள் இருக்கின்றன : ஓர் ஒலியைப் பற்றியும் முன்பின் அறியாதது; மரபு வழியாகச் செயல் ஆற்றப்படாமலும் இருக்கின்றது. இவையெல்லாம் ஒரு மொழியைப் பொறுத்தவை. எனினும், ஒரு மொழியைப் பற்றிக்கொள்வதற்குத் தேவையான சத்தியை ஓரளவுக்குக் குழந்தைகள் பெற்றிருக்கின்றன; இவற்றைக் கொண்டு அம்மொழியின் வார்த்தைகளை உருவாக்கும் சத்தியை உடையனவாய் இருக்கின்றன. மொழியின் எல்லாப் பகுதிகளையும் உருவாக்குவதற்கு இயற்கை அன்னை உபயோகிக்கும் பொறி அமைப்பில் குழந்தைகளும் தொர்புடையவை.

இன்னும் ஆழமாகத் துருவிப் பார்ப்போம் : இந்த இரண்டு நரம்பு மையங்களுடன் ஒரு தனிப்பட்ட உயர்ச்சியும் இருக்க வேண்டும் என்பதும் இயங்குதற்கு ஆயத்தம் கொண்டதாகவும் இருக்க வேண்டும் என்பதும் தெளிவாகின்றன. இவை மத்தியிலிருந்து நடத்தி வைக்கப்படுகின்றன. ஆதலால், கேட்கும் இச்சத்தியைப் பொறுத்தே குழந்தையின் இயக்கமும் பின் தொடர்கிறது. எல்லாம் மாட்சியுடன் முன் கூட்டியே ஏற்பாடாகி இருக்கின்றன, குழந்தை பிறந்தவுடனே பேசுவதற்குத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கும்.

இந்தச் சிக்கல் வாய்ந்த தயாரிப்புக்கு உறுப்புகளும் இன்னும் ஒரு பகுதி ஆகின்றன. இவைகளைக் கவனிக்கும் பொழுது உளவியல் பகுதியில் நடைபெறும் சம்பவங்களைவிட எந்த வகையிலும் குறை யாத அற்புதப் பொறி அமைப்பை நாம் காண்கிறோம். மொழியின் ஒலி வடிவத்தின் உறுப்பாகிய செவியானது, கர்ப்ப வாழ்க்கையின் அற்புதமான நிலையில் இயற்கை அன்னையால் உருவாக்கப்படுகிறது. செவி மிகுந்த நுட்பத்தையும் சிக்கல்களையும் பெற்றிருப்பதை நோக்கு மிடத்து அது ஓர் இசை மேதையின் சிறந்த அமைப்போ எனத் தோன்றுகிறது. செவியின் நடுப்பகுதி 'ஹார்ப்' என்னும் இசைக் கருவியை நினைவுறுத்துகிறது. அக்கருவிக்கு வெவ்வேறு நீளங்களைப் பெற்ற கம்பிகள் இருக்கும். அவை துடிக்கும் பொழுது நீளத்துக்குத் தக்கவாறு வெவ்வேறு இசைகளைப் பிறப்பிக்கும். செவி அத்தகைய இசைக் கருவியைப் போன்றிருக்கிறது எனலாம். நம் செவியின் 'ஹார்ப்பில்' அறுபத்து நான்கு நரம்புகள் இருக்கின்றன. இவை வெவ்வேறு ஒழுங்கில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இடம் அதிகம் இல்லாத காரணத்தால், சங்கில் காணப்படுவது போல இந்நரம்புகள் செவியில் வளைந்து வளைந்து சுருங்கி இருக்கும். குறுகலான இடத்திலும் இயற்கை அன்னை எல்லா இசைச் சுரங்களையும் ஏற்றுக்கொள்ளத் தேவையானவைகளை நுண்ணறிவுடன் அமைத்துக் கொடுத்திருக் கிறுள். இந்த நரம்புகளைத் துடிக்கச் செய்வது எது ? இந்நரம்புகளை

ஒன்றுமே தாக்காவிடில் இவை தொடாமல் கிடக்கின்றன. 'பியானோ' என்னும் இசைக் கருவியைப்போல இதுவும் பல ஆண்டுகள் அப்படியே கிடக்கும். இந்த 'ஹார்ப்'புக்கு முன் மத்தளத்தின் தோல் போன்ற ஒரு சவ்வு அமைந்திருக்கிறது. இந்தக் கர்ண பேரி என்ற செவிப்பறைச் சவ்வை ஓர் ஒலி தாக்கினவுடன் ஹார்ப்பின் நரம்புகள் துடிக்கின்றன. அப்பொழுது செவியானது பேச்சின் இசையைக் கவர்ந்துகொள்கிறது—பதிவு செய்துகொள்கிறது.

செவியானது உலகில் உள்ள எல்லா ஒலிகளுக்கும் இடங்கொடுப்பதில்லை. ஏனெனில், அதற்கு வேண்டிய அத்தனை நரம்புகள் அதனிடம் இல்லை. ஆனால், அதனிடம் காணப்படும் நரம்புகள் மிகச் சிக்கலான இசைகளுக்குத் துடிக்க இயலும்; ஒரு மொழியின் எல்லாச் சிக்கல்களுடனும் நுண்மைகளுடனும் பிரதிபலிக்க இயலும். செவியின் இசைக்கருவி கர்ப்ப வழியில் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஏழு மாதத்திலே ஒரு குழந்தை பிறந்த போதும் செவியானது முழுவளர்ச்சியையும் பெற்றுவிட்டிருக்கிறது. அது தன் வேலையைச் செய்ய ஆயத்தமாய் இருக்கிறது. இந்தக் கருவியை அடைகின்ற ஒலிகளை எவ்வாறு அனுப்பி வைக்கிறது? அவ்வாறு வருகின்ற ஒலிகளை மிகமிக நுண்மையான நூல் இழை போன்ற நரம்புகளின் மூலமாகச் சென்று ஒலிப் பதிவுக்கென்றே மூளையில் இருக்கும் தனி மையங்களில் கொண்டு சேர்க்கும். மறுபடியும் இயற்கை அன்னையின் அற்புதங்களுள் ஒன்றைக் காண்கிறோம்.

எனவே, பிறப்புக்குப் பிறகு பேச்சு எப்படி உருவாகிறது? அன்று பிறந்த குழந்தைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து வருகின்ற உளவியலார், பொறிகள் எல்லாவற்றிலும் கேள்விதான் கடைசியில் வளர்ச்சி பெறுகிறது என்கின்றனர். இதனுடைய வளர்ச்சி அவ்வளவு மந்தமாய் இருப்பதைப் பார்த்துப் பலர் குழந்தைகள் செவிடாகவே பிறக்கின்றன என்று முடிவு கட்டிவிடுகின்றனர். பெரிய அதிர்ச்சியுடன் கூடியதல்லாத எந்தச் சத்தத்தாலும் அவை இயங்குவதே இல்லை. இதில் ஏதோ ஒரு மாயமான பொருள் இருக்க வேண்டும் என்று என் மனத்துக்குத் தோன்றுகிறது. அது உணர்ச்சி அற்றிருக்கிறது என்ற ஐயத்துக்கே இடமில்லை; அதற்குப் பதிலாக ஒலிகளை ஆழ்ந்தவாறு சேகரித்தலாகும்; மொழியின் மையங்களில் உணர்ச்சிகளை ஒன்றாகத் திரட்டுவதாகும். அதுவும், முக்கியமாகச் சொற்களைச் சேர்த்து வைக்கும் மையத்தில் திரட்டுவதாகும். இந்த மையங்கள் மொழியை அதாவது சொற்களைப் பதிவு செய்துகொள்வதற்கு என்றே தனியாக அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று நான் வாதாடுகிறேன். இந்தச் சத்தி வாய்ந்த கேள்விப் பொறி அமைப்பு ஒரு வகைச் சத்தங்களால் மட்டும் இயங்கக் கூடியதாக இருக்கலாம்.

அந்தச் சத்தங்கள் பேச்சைக் குறிக்கின்றன. இதன் பலன் என்ன? குழந்தையால் கேட்கப்பட்ட சொற்கள் சிக்கல் வாய்ந்த ஒரு பொறியமைப்பைத் தூண்டிவிடுகின்றன. அதன் உதவி கொண்டு அது பேசுவதற்குத் தேவையான இயக்கங்களைத் தன்னுடன் அமைத்துக்கொள்கிறது. இதை நடத்தி வைக்கும் உணர்ச்சிகளைத் தனியாகப் பிரிக்காவிட்டாலும், அந்த மையம் எல்லாச் சத்தங்களையும் வரவேற்பதாய் இருந்தாலும், குழந்தை என்ன செய்யும் தெரியுமா? மிகவும் வேடிக்கையான சத்தங்களை எல்லாம் செய்ய ஆரம்பித்துவிடும். விலங்குகளின் குரல் உட்பட அதன் சூழ்நிலையில் இருக்கும் தனிப்பட்ட சத்தங்கள் அனைத்தையும் அது பிரதிபலிக்கும். மொழிக்காக இந்த மையங்களைத் தனியாக ஒதுக்கி இயற்கை அன்னை அமைத்திருப்பதாலேதான் குழந்தையால் எப்பொழுதேனும் பேச இயல்கிறது. சில சமயங்களில் காட்டில் தனியாக விட்டுப் போகப்பட்ட குழந்தைகளைக் கண்டு பிடித்திருக்கின்றனர். இவை விலங்குகளின் பாதுகாப்பிலிருந்து விடுவிக்கப்பட்டவை. இவ்வாறு அற்புதமாகத் தப்பித்து வந்த குழந்தைகளை '**ஓநாய்க் குழந்தைகள்**' என்று சொல்வார்கள். (ஏனென்றால், இவை ஒரு நாயின் பாதுகாப்பிலிருந்து விடுவிக்கப்பட்டவை.) இந்தக் குழந்தைகள் வாழ்ந்த சூழ்நிலையில் விலங்குகளின் சத்தமும், பறவைகளின் கத்தலும், நீரோடையின் சலசலப்பும், பிறவும் இருந்திருந்த போதிலும் இவற்றுள் ஒன்றுக்கும் குழந்தை செவி சாய்க்கவில்லை. இவை முழுமையும் ஊமையாகவே இருந்திருக்கின்றன. இவை எந்தச் சத்தத்தையும் வெளியாக்குவதில்லை. ஏனென்றால் மனிதனுடைய குரலை இவை கேட்டதே இல்லை. பேச்சுப் பொறி அமைப்பைத் தூண்டிவிடும் சத்தி மனிதக் குரல் ஒன்றுக்கே உளது.

இதை நான் வற்புறுத்துகிறேன். ஏனெனில், மொழிக்கென்று உள்ள ஒரு தனிப்பட்ட பொறி அமைப்பு இருக்கிறது என்பதைக் காட்ட விரும்புகிறேன். இவை மொழியையே பெற்றிருப்பதில்லை. ஒருவருக்குத் தேவையான மொழியை உருவாக்க வல்ல பொறி அமைப்பைப் பெற்றிருப்பதே மனிதனை மற்ற இனங்களிலிருந்து வேறுபடுத்தக் காரணமாயிருக்கிறது. ஆதலால், வார்த்தைகள் என்பவை குழந்தையால் ஆக்கப்பட்ட ஓர் அமைப்பு ஆகும். இவ்வாறு அது ஆக்குவதற்கு ஒரு பொறி அமைப்பு இருத்தல் நல்லதாயிற்று. குழந்தையின் பிறப்புக்குப் பிறகு மாயமான ஒரு பருவம் தொடர்கிறது. குழந்தை ஓர் உளவியல் பேர்வழி. இதற்கு விசேஷமான உணர்ச்சிகள் இருக்கின்றன. குழந்தையைத் தூங்கும் 'தான்' (Ego) என்று கருதலாம். திடீரென்று அது விழித்துக்கொள்கிறது; அருமையான இன்னிசையைக் கேட்கிறது. நரம்பு இழைகள் துடிக்க ஆரம்பிக்கின்றன. வேறு எந்த ஒலியும் தன் செவிகளில் படவில்லை என்று குழந்தை நினைத்துக்கொள்ளலாம். ஆனால், உண்மையாக நடப்ப

தென்ன ? அதன் ஆன்மா வேறு எந்த ஒலிகளுக்கும் அசையவில்லை. மனிதக் குரல் ஒன்றே குழந்தையின் உள்ளத்தைத் தட்டி எழுப்ப வல்லதாய் இருக்கிறது.

வாழ்க்கையை ஆக்குவதும் காப்பதுமான கட்டாயப் பெருஞ் சத்திகளை நாம் நனவில் வைத்துக்கொண்டோமானால், இந்த இசை காரணமாக உருவாக்கப்பட்டவைகளும் எக்காலத்துக்கும் நிலைத்திருக்க வேண்டும் என்பதை நாம் புரிந்துகொள்வோம். ஒரு மொழியின் தொடர்ச்சியை நிலை நாட்டி வைப்பவர்கள் இவ்வுலகத்தில் பிறந்துகொண்டேயிருக்கும் மக்களே என்பதையும் புரிந்துகொள்கிறோம். குழந்தையின் ‘ நெமியில் ’ எவை அப்பொழுது உருவாகின்றனவோ, அவை என்றும் அழியாதிருக்கும் சத்தியைப் பெற்றுவிடுகின்றன.

அதைப் போன்றனவே தாளத்தோடு கூடிய பாட்டுகளும் நாட்டியங்களும், ஒவ்வொரு மனித இனமும் இசையை விரும்புகின்றது. ஒவ்வோர் இனமும் தன் மொழியை ஆக்கிக்கொள்வது போலத் தனக்கென்று இசையையும் ஆக்கிக்கொள்கின்றது. ஒவ்வொரு குழுவும் தன் இசைக்கு இயங்குவது எப்படி ? தன் உடல் இயக்கங்களாலும் பின் தொடர்ந்த வார்த்தைகளாலும். மனிதனுடைய குரல் ஓர் இசை. வார்த்தை, அதன் சுரங்கள். வார்த்தைகளை அப்படியே எடுத்துக்கொண்டோமானால், ஒரு பொருளும் அவற்றுக்கு இல்லை. எனினும், ஒவ்வோர் இனமும் அவ்வார்த்தைகளுக்கு இன்ன இன்ன பொருள் என்று அதனுடைய தனிப் பொருளைக் கொடுத்திருக்கின்றது. இந்தியாவில் நூற்றுக்கணக்கான மொழிகள் மக்களைப் பல குழுவினராகப் பிரிக்கின்றன. ஆனால், இசை அனைவரையும் ஒன்றுக்குகிறது. இது குழந்தைப் பருவத்தில் எதுவும் அழியாது பதிந்தபடியே இருக்கும் என்பதற்கு ஒரு சான்று.

இதனுடைய பொருள் என்ன என்பதை நாம் சற்று ஆராய்வோம்: எந்த விலங்கிடமும் இசையும் நாட்டியமும் இல்லை. ஆனால், உலகத்திலுள்ள எல்லா நாட்டவரும் ஆடுகின்றனர் ; பாடுகின்றனர். பேச்சின் ஒலிகள் நனவிலா நிலையில் பதிந்துவிடுகின்றன. வாழ்கின்ற பேர் வழியின் உள்ளத்தில் நடைபெறுவதை நம்மால் காண இயலாது. ஆனால், வெளிப்படையாக நடப்பது நமக்கு வழி காட்டியாகின்றது. சின்னஞ்சிறு குழந்தையின் நனவில்லா நிலையில் பதிவு பெறுவது ஒரு மொழியின் தனி ஒலியாகும். இதுவே தாய் மொழியின் அடிப்படைப் பகுதி ஆகும். இதை நாம் நெடுங்கணக்கு எனலாம். பிறகு அசைகளும், பிறகு வார்த்தைகளும் தொடர்கின்றன. ஆனால், இவை அறியாமலே செய்யப்படுகின்றன. சில சமயங்களில் குழந்தை

தனது பால பாடத்தை உரக்கப் படிக்கும் பொழுது அதன் பொருள் அறிந்து படிப்பதில்லை. அதைப் போல இயங்கும் சொற்களை மொழியும் பொழுதும் பொருள் அறியாமலே உபயோகிக்கின்றன. ஆனால், என்ன அறிவோடு இந்த வேலை எல்லாம் நடத்தப்படுகின்றன! குழந்தைக்குள் ஒரு சின்ன ஆசிரியர் இருக்கிறார். பழங்கால ஆசிரியரைப் போன்றவர் அவர். பழங்கால ஆசிரியர் என்ன செய்தார்? எல்லாரையும் முதலில் நெடுங்கணக்கை ஒப்பிக்கச் சொல்லுவார். பிறகு அசைகளையும் பிறகு சொற்களையும் இப்படித் தொடர்ந்து ஒப்பிக்க வைப்பார். இவையெல்லாம் சரி! ஆனால், அந்த ஆசிரியர் செய்ய வேண்டாத காலத்தில் இவற்றைச் செய்ய வைத்தார். குழந்தை இவற்றைத் தானே தனக்குச் செய்துகொண்டிருக்கிறது. அதனுடைய மொழி முழுமையும் தன் வசம் ஆக்கிக்கொண்டிருக்கிறது. இதற்குப் பதிலாகக் குழந்தைக்குள் இருக்கும் ஆசிரியர் எல்லாவற்றையும் காலாகாலங்களில் செய்கிறார். குழந்தை முதலில் ஒலியையும் பிறகு அசைகளையும் பதிவு செய்துகொள்கிறது. இது மொழியில் காணப்படுகின்ற தர்க்க முறைப்படியே ஒழுங்கான முறைப்படியே நடைபெறுகிறது. சொற்கள் தொடர்ந்து வருகின்றன. இறுதியில் இலக்கணப் பாதையில் அடி எடுத்து வைக்கிறோம். முதலில் கற்றுக்கொள்ள வேண்டும் சொற்கள் பெயர்ச்சொற்கள் ஆகும். நம்முடைய எண்ணங்களை இயற்கை அன்னையின் போதனை எவ்வாறு ஒளி பெறச் செய்கிறதென்பதை நாம் காண்கிறோம். இயற்கை அன்னைதான் ஆசிரியர். அவளுடைய கட்டளைப்படி குழந்தை கற்றுக்கொள்கிறது. பெரியவர்களாகிய நமக்கு அவையெல்லாம் மொழியின் கவர்ச்சி அற்ற பகுதிகள் என்று தோன்றுகின்றன. எனினும், குழந்தை எவ்வளவு சிறந்த அக்கறையைக் காட்டுகிறது! அதனுடைய அடுத்த பருவமாகிய மூவாண்டிலிருந்து ஐந்தாண்டு வரையும் உள்ள வளர்ச்சி முடிய நிலை பெற்றுவிடுகிறது. இயற்கை அன்னை முறைப்படி பெயர்ச்சொல், இடைச்சொற்கள் (Conjunctions), எச்ச வினைகள், வினைச்சொற்பாகுபாடுகள், உறுப்புணர்ச்சிகள், சொல்லின் முன் சேர்க்கை பின் சேர்க்கை ஆகிய அடை மொழிகள், விதிவிலக்குகள் ஆகிய இவற்றைச் சொல்லி வைக்கின்றாள். அது ஒரு பள்ளிக்கூடம் போன்றது. இறுதியில் ஒரு தேர்வு உண்டு. ஒரு மொழியின் எல்லா வகைச் சொற்களையும் தன்னால் உபயோகிக்க இயலும் என்பதைக் குழந்தை செய்து காட்டுகிறது. அப்பொழுது தான் குழந்தைக்குள் எவ்வளவு நல்ல ஆசிரியர் தம் வேலையைச் செய்து வந்திருக்கிறார் என்பதை நாம் அறிகிறோம்; குழந்தை எவ்வளவு விடாமுயற்சி உடைய மாணவன்! இவ்வளவையும் பிழையின்றிக் கற்றுக்கொள்வதற்கு என்ன நுண்ணறிவு பெற்றிருக்க வேண்டும் என்பதையும் நாம் உணர்கிறோம். ஆனால், இந்த அற்புதமான செயலை மெச்சிக்கொள்வதற்கு எவரும் சற்றுப் பொறுமையாகச்

சிந்திக்க முன் வருவதில்லை. குழந்தை பள்ளிக்கூடத்துக்குப் போகும் பொழுதே நாம் அதனுடைய வேலையில் அக்கறை காட்டி, அது கற்றுக்கொள்வதில் பெருமை அடைகிறோம். எனினும், பெரியவர்களாகிய நாம் குழந்தைகளிடத்தில் உண்மையான அன்பு கொண்டவர்களாய் இருந்தோமானால், குழந்தைகளின் வெற்றிகளின் அற்புதங்களே நம் கண்களைக் கவர வேண்டும்; அவற்றின் குறைபாடுகள் என்று கருதப்படுபவைகளல்ல.

குழந்தை ஓர் அற்புதப் பேர்வழி. இவ்வுண்மை ஆசிரியர் உள்ளத்தில் ஆழ்ந்திருக்க வேண்டும். இரண்டு ஆண்டுகளில் இந்தச் சிறு குட்டி எல்லாவற்றையும் கற்றுக்கொண்டிருக்கிறது. இந்த இரண்டு ஆண்டுகளில் நனவுநிலை ஒன்று படிப்படியாக இதனுள் விழிப்படைந்து வருவதை நாம் காண்கிறோம். பிறகு வேகமான இயலில் இது நடைபெறுகிறது; திடீரென்று முன் உந்தப்பட்டுஎல்லாவற்றையும் பாதிக்கத் தொடங்கிவிடுகிறது. நாலாம் மாதத்தில் (சிலர் மூன்று மாதங்கள் என்கின்றனர். அதுவே எனக்கும் உடன்பாடு) தன்னைச் சூழ்ந்துள்ள இந்த அற்புத—தன் உள்ளத்தின் ஆழத்தைத் தொட்டுவிட்ட—இசை மனிதனுடைய வாயிலிருந்து பிறக்கிறது என்பதைக் குழந்தை உணர்கிறது. வாயும் உதடுகளும் தம் இயக்கங்களால் இந்த இசையை உண்டாக்குகின்றன. பேசுகின்றவர்களின் உதடுகளைக் குழந்தை எவ்வளவு கூர்ந்து கவனிக்கிறது என்பதை எத்தனை பேர் குறித்திருப்பர்? பேசுபவர்களைக் கூர்ந்து கவனித்து, அந்த இயக்கங்களைப்போலத் தானும் செய்ய வேண்டும் என்று குழந்தை முயற்சி செய்கிறது.

அப்பொழுது இந்த வேலையில் அதன் நனவு நிலை குறுக்கிட்டு முக்கியமான பங்கு எடுத்துக்கொள்கிறது. இயக்கங்கள் நனவிலா நிலையில் ஆக்கப்பட்டன என்பது மெய்யே. பேச்சைத் தோற்றுவிப்பதற்குத் தேவையான நுண்மையான தசை நார்கள் எல்லாம் இன்னும் ஒழுங்காக இணக்கம் பெறவில்லை. ஆனால், நனவு நிலையில் இப்பொழுது அக்கறையானது தட்டி எழுப்பப்பட்டிருக்கிறது. உயிர்ப்புடன் கூடிய நுண்ணறிவு முயற்சிகள் பல தொடர்ந்து தோன்ற ஆரம்பிக்கின்றன.

பேசுவோரின் வாயை இரண்டு மாதங்கள் வரை கவனித்த பிறகு குழந்தை அசைகளை ஒலிக்கின்றது. இதற்குள் ஆறும் மாதம் ஆகிவிடுகிறது. இதற்கு முன் ஓர் ஒலியையும் பிறப்பிக்கத் திறமையற்றதாய் இருந்து வந்த குழந்தை, நீங்கள் எழுந்திருப்பதற்கு முன் ஒரு நாள் எழுந்து, "பா–பா, மா-மா" என்று பேசத் தொடங்கிவிடுகிறது. சில நாள்களுக்கு இந்த இரண்டே அசைகளை உச்சரித்துக்கொண்டிருக்கும். இதை எல்லாம் பார்த்து அப்பொழுது என்ன சொல்

கிறோம் ? ''குழந்தைக்கு வேறென்ன பேசத்தெரியும் !'' என்கிறோம். பெருமுயற்சிக்குப் பிறகே இந்த நிலையை அது அடைந்திருக்கிறது என்பதை நம் மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். அதன் ஆளுமைத் திட்டமிட்டதன் முடிவு இது. அந்த ஆளுமை புதிதாக ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறது. இப்பொழுது அதன் சக்தியின் வலுவை அது உணர்கிறது. இப்பொழுது நம் முன் காட்சி அளிப்பவன் சின்னஞ்சிறு மனிதன். இனிக் குழந்தை ஒரு பொறி அமைப்பன்று. பொறி அமைப்பைத் தன் விருப்பம் போல உபயோகிக்கக்கூடிய ஒரு பேர் வழி இனித் தோன்றியாயிற்று.

இதனுடன் முதல் ஆண்டு நிறைவுக்கு வருகிறோம். இதற்குச் சற்று முன், அதாவது சுமார் பத்தாம் மாதம், குழந்தை புதிதாக ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறது. அதாவது, ஒருவர் வாயினின்று பிறக்கும் இந்த இசைக்கு ஒரு நோக்கம் இருக்க வேண்டும். அது வெற்று இசை அன்று. நாம் அதனிடம் அன்புடன் கொஞ்சிப் பேசும்பொழுது இந்த வார்த்தைகளெல்லாம் தனக்குத்தான் என்பதைக் குழந்தை உணர்ந்துகொள்கிறது. நாம் வேண்டுமென்றே அவ்வாறு பேசுகிறோம் என்பதையும் அது உணர்கிறது. எனவே, முதல் ஆண்டின் இறுதியில் இரண்டு விஷயங்கள் நடைபெற்றிருக்கின்றன. அதனுடைய நனவிலா நிலையின் ஆழத்தில் அது புரிந்துகொண்டிருக்கிறது ; தான் அடைந்த நனவு நிலையில் பேச்சை உருவாக்கிக்கொண்டிருக்கிறது. அந்தச் சமயத்தில் பார்த்தால் வெறும்பிதற்றல் போலவும், சில ஒலிகளைச் சேர்த்துத் திரும்பத் திரும்ப உச்சரிப்பது போலவும் தோன்றலாம்.

ஒரு வயது ஆனவுடன் குழந்தை வேண்டுமென்று தனது முதல் வார்த்தையைச் சொல்கிறது ; முன் போலப் பிதற்றிக்கொண்டிருக்கிறது. ஆனால், இந்தப் பிதற்றலுக்கு ஒரு நோக்கம் இருக்கிறது. இவ்வாறு கருத்துடன் பேசுவது நனவுடன் கூடிய நுண்ணறிவுக்குச் சான்று ஆகிறது.

குழந்தையின் உள்ளத்தில் நடைபெற்றிருப்பது யாது? குழந்தையின் சக்தியை அடக்கமான முறையில் வெளிக்காட்டிக்கொள்வதை விட, இன்னும் எத்தனையோ மடங்கு அதனுடைய ஆழ்ந்த மனத்தில் நிறைந்திருக்கிறது என்பது நெருங்கி ஆராய்பவர்க்குப் புலனாகிறது. குழந்தை முன்னைவிட இப்பொழுது மொழியானது தன் சூழ்நிலையைக் குறிக்கிறதென்பதை உணர்ந்துகொள்கிறது. ஆதலால், தான் விரும்பி அம்மொழியைக் கற்றுத் தேர்ச்சி பெற வேண்டுமென்னும் விருப்பமும் அதிகரிக்கிறது. இத்தருணத்தில் அதனுடன் ஒரு பெரும்போர் தொடங்குகிறது. இது பொறியுடன் நனவு நிலை போரிடுதலாகும்.

இதுதான் மனத்துக்குள் ஏற்படும் முதற்போர்; அதனுடைய உறுப்புகளுடன் நடைபெறும் முதற்போர். என்ன நடைபெறுகிறது என்பதை விளக்க என்னுடைய சொந்த அனுபவத்தையே எடுத்துக்காட்டாக உபயோகிக்கிறேன். பல கருத்துகளை வெளியிட வேண்டுமென்று நினைப்பவள் நான். அயல் நாடுகளில் பெரும்பாலும் நடப்பது போல என் மொழி அல்லாத வேறு மொழியில் என்முன் கூடி இருப்பவர்கள் புரிந்துகொள்ளும்படி பேச விரும்புவேன். ஆனால், அயல் மொழியில் நான் பேசுவது வெறும்பிதற்றலாக இருக்கும். என் சொற்பொழிவைக் கேட்க வந்தவர்கள் நுண்ணறிவாளர்கள் என்பதை நான் அறிவேன். என் விருப்பமும் என் கருத்துகளை அவர்களுடன் பரிமாறிக்கொள்ள வேண்டுமென்பதே. ஆனால், வெளியிடுவதற்குத் தக்க வழியில்லாமையால் இந்தப் பேறு எனக்கு இல்லாது போகிறது.

பிறருக்கு எடுத்துக் கூற வேண்டுமென்று மனத்தில் பல கருத்துகள் இருக்கின்றன. ஆனால், வார்த்தைகள் இல்லாத காரணத்தால் அக்கருத்துகளை வெளிப்படுத்த இயலாது. இம்மாதிரி நிலை குழந்தைப் பருவத்தில் இருந்து வருகிறது. அது ஓர் அற்புதமான நிலை. அது குழந்தையினிடம் முதல் ஏமாற்றத்தை உண்டாக்குகிறது. ஒருதவியுமின்றி நனவிலா நிலையில் குழந்தை தானே கற்றுக்கொள்வதற்குத் தன்னை வருத்திக்கொள்கிறது. இந்த முயற்சி குழந்தையின் வெற்றியை இன்னும் அற்புதமாக்கிவிடுகிறது. தம் கருத்துகளை விளக்க வேண்டும் என்று நினைப்பவருக்கு வார்த்தைகளைத் தெளிவாக எடுத்துரைக்க வல்ல ஆசிரியர் துணை ஒன்று வேண்டியிருக்கிறது. வீட்டில் உள்ளவர்கள் இதை ஏன் செய்யக் கூடாது? இதற்குப் பதிலாக நம்முடைய சாதாரணமான பழக்கம் என்னவென்றால், இதைப்பற்றி ஒன்றும் செய்யாமல் இருப்பதே. குழந்தையைப் போல நாமும் பிதற்றிக் காட்டுகிறோம். குழந்தையின் அந்தர்ங்கத்தில் ஓர் ஆசிரியர் இல்லாவிட்டால், அதனால் ஒன்றுமே கற்றுக்கொள்ள இயலாது. பெரியவர்கள் பேசுவதைக் குழந்தை கூர்ந்து கவனித்து வருவதெல்லாம் இந்த ஆசிரியராலேதான். அந்தப் பெரியவர்கள் குழந்தையைக் கவனிக்காமல் பேசிக்கொண்டிருக்கும் பொழுதும் குழந்தையைக் கவனிக்கச் செய்பவரும் இந்த ஆசிரியரே. நாம் குழந்தைக்குக் கற்றுக்கொடுப்பதற்கு எவ்வித முயற்சியும் செய்யாவிடினும், அந்தரங்க ஆசிரியர் மொழியைத் துல்லியமாகக் கற்கும்படி செய்துவிடுகிறார்.

எனவே, எங்கள் பள்ளிக்கூடங்களில் ஓராண்டுக் குழந்தைகளுக்கென்று சில ஏற்பாடுகள் செய்திருக்கிறோம். நல்ல நுண்ணறிவுடன் பேசும்படி ஏற்பாடு செய்திருக்கிறோம். இம்மாதிரி மற்றவர்களும் செய்யலாமே ! முதலாண்டுக்கும் இரண்டாம் ஆண்டுக்கும் இடையில் குழந்தைக்கு நேரிடும் இடையூறுகள் இன்னவை என்பதை

எல்லாரும் உணர்வதில்லை. துல்லியமாய்க் கற்றுக்கொள்ள வேண்டுவது எவ்வளவு அவசியமானதென்பதையும் நாம் உணர்வதில்லை. இலக்கண அறிவைக் குழந்தை தானாகவே படிப்படியாகக் கற்றுக் கொள்கிறதென்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அதனால், குழந்தையிடம் இலக்கண வரம்புடன் நாம் பேசாதிருப்பதற்குக் காரணமே இல்லை. அது தன் சொற்றொடர்களை அமைப்பதிலும் நாம் உதவி புரியாதிருப்பதற்கும் நியாயமில்லை.

குழந்தையைப் பிறந்ததிலிருந்து பார்த்துக்கொள்வதற்குப் புதுமைச் செவிலியர் சிலர் இருந்து வருகின்றனர். மொழி எவ்வாறு வளர்ச்சி பெறுகிறது என்பதைப் பற்றி விஞ்ஞான முறை அறிவு இந்தச் செவிலியர்க்கு இருக்க வேண்டும். குழந்தைக்கு உதவி புரியும் பொழுது, குழந்தையை உருவாக்கும் இயற்கை அன்னையுடன் நாம் சேர்ந்து சேவை செய்யும் தோழர்கள் ஆகிவிடுகிறோம். குழந்தையின் கல்வித் திட்டம் ஏற்கெனவே வகுக்கப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம்.

நான் முன்னே கூறின அந்த உதாரணத்தை மறுபடியும் கவனிப்போம். அயல் மொழியில் உளறிக் கொட்டும் பொழுது நான் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்? மிகவும் முக்கியமான விஷயம் ஒன்றை எடுத்துக் கூறும் போது நான் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்? ஒரு வேளை எனக்குக் கோபம் வந்துவிடலாம்; கோபத்தை அடக்க இயலாமல் நான் சத்தங்கூடப் போட்டுவிடலாம். இதே மாதிரிதான் இரண்டோர் ஆண்டுக் குழந்தையிடமும் நடைபெறுகிறது. அது ஒரே வார்த்தையில் ஒரு விஷயத்தைப் பற்றி நமக்கு எடுத்துக் கூற முயல்கிறது. அது சொல்லப் புகுவதை நம்மால் புரிந்துகொள்ள இயலுவதில்லை. இதைக்கண்டு அதற்குக் கோபம் பொங்கிவிடுகிறது. அது கோபாவேசத்துடன் கத்துகிறது. அதன் போக்கு நமக்கு முட்டாள்தனமாகத் தோன்றுகிறது. இம்மாதிரிச் சந்தர்ப்பத்தில் நாம் 'மனித இயல்பின் கூடப்பிறந்த சீர் கேட்டை இப்பொழுது நீங்கள் பார்த்துக்கொள்ளுங்கள்,' என்று சலித்துக்கொள்கிறோம்.

எனவே, இவன் ஒரு சிறு மனிதன்? இவனை யாரும் புரிந்து கொள்வதில்லை. இவன் தனது சுதந்தரத்துக்காகப் போராடி வருகிறான். பேசும் மொழி தன் வசப்படாததால், இவன் தனது கொதிப்பைத்தான் காட்டிக்கொள்ள இயலும். எனினும், இவனுக்கு ஒரு மொழியைப் படைத்துக்கொள்ளும் திறமை உண்டு. தன்னால் கூடிய வரை முயற்சி செய்தும் பொருத்தமான சொல் வாராத காரணத்தால் ஏற்படும் மன முறிவின் அறிகுறியே அந்தச் சினம் எல்லாம். ஆயினும், ஏமாற்றமும் மதிமயக்கமும் இவன் முயற்சிகளைத்

தடுப்பதில்லை. பழக்கத்தில் இருக்கின்ற சொற்களைப் போன்ற சொற்கள் ஆரம்பிக்கின்றன.

சுமார் ஒன்றரை வயதில் மற்றொரு மெய்ந்நிகழ்ச்சியைக் குழந்தை கண்டு பிடிக்கிறது. அதாவது, ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு தனிப் பெயர் உண்டு என்பது. இது வரை கேட்டு வந்த சொற்களிலிருந்து பெயர்ச்சொற்களை மட்டும் பிரித்தெடுக்கும் திறமை அதற்கு இருக்கிற தென்பது தெரிகிறது. அவற்றிலும், முக்கியமானவை பொருட்பெயர் களாகும். இது எவ்வளவு அற்புதமான அடி எடுத்து வைத்தலாகும்! குழந்தை பல பொருள்கள் நிறைந்த உலகில் தான் வாழ்ந்துவந்திருக் கிறது என்பதை உணர்கிறது; அப்பொருள்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனிப் பெயரால் குறிப்பிடப்பட்டிருப்பதையும் உணர்கிறது. எல்லாவற்றையும் பெயர்ச்சொற்களாலேயே சொல்லிவிட இயலா தென்பது உண்மையே. முழுக்கருத்தையும் எடுத்துக் கூறுவதற்கு முதலில் ஒரே வார்த்தையையே உபயோகிக்க வேண்டியிருக்கிறது. வாக்கியங்களுக்குப் பதிலாகக் குழந்தைகள் உபயோகிக்கின்ற இந்தத் தனிச்சொற்களைப் பற்றி உளவியலார் தம்முடைய மிகுந்த கருத்தைச் செலவிடுகின்றனர். இச்சொற்களுக்கு (‘Fusive’ words) என்றும் ‘Portemanteau’ words என்றும் பெயர் கொடுத்திருக்கின் றனர். இவைகளை ‘ஒரே சொல் வாக்கியங்கள்’ (One-word Sentences) எனலாம்.

இம்மாதிரி சுருங்கச் சொல்வதில் ஒரு முக்கியமான விசேஷம் என்னவென்றால், வார்த்தைகளே மாற்றப்படுவது. அடிக்கடி குறி சொல் ‘பவ் வவ்’ என்று நாயைக் குறிப்பது போல, ஒலியே சொல் லாக்கப்படுவதும் உண்டு. இதன் முழுப்பலனைக் குழந்தைப் பேச்சு என்று நாம் சொல்லிவிடுகிறோம். ஆனால், இது வரை நாம் இச் சொற்களைப் பற்றிச் சிந்தித்ததைவிட இன்னும் அதிகம் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. அதுவும் குழந்தைகளைப் பாதுகாப் பவர்கள் இன்னும் சிறப்பாகக் கவனித்து வர வேண்டும்.

குழந்தை இந்த வயதில் உருவாக்குவது மொழி மட்டும் அன்று; மற்ற விஷயங்களிலும் குழந்தைக்கு ஒழுங்கின்மேல் உள்ள உணர்ச்சி யுமாகும். பொதுவாகக் கருதப்படுவது போல இவ்வுணர்ச்சி ஏதோ மேலுக்கு மேலானது, நிலையாதது என்று ஒருபோதும் எண்ணுவதற் கில்லை. ஆனால், இது உண்மையான தேவையின் காரணத்தால் தோன்றுகிறது. தன் உள்ளத்தை உயிர்ப்புடன் அமைத்துக்கொண் டிருக்கும் பருவத்தில் அதனுடைய எண்ணப்படி எதெது ஒழுங்கற்ற நிலையில் இருக்கிறதோ அதையதை ஒழுங்குபடுத்த வேண்டும் என்று கருதுகிறது.

தன் துணையற்ற நிலையில் எவ்வளவு சுலபமாக அதனிடம் மனக் குழப்பத்தை உண்டாக்கிவிட இயலும்! இந்த நிலையிலிருந்து சின்னஞ் சிறு குழந்தையைக் காத்து அதன் மனத்தை அமைதிப்படுத்த அதனுடைய மொழியை நாம் புரிந்துகொண்டோமானால், அது நமக்கு எவ்வளவு பயனுள்ளதாக இருக்கும்!

தினந்தோறும் பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்த போதிலும், நான் முன் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சியை இங்கு எடுத்துக் கூறுகிறேன். ஏனென்றால், அது இந்த உண்மையைப் பற்றிப் புது விளக்கம் தருகிறது. அது ஒரு ஸ்பானிஷ் குழந்தையைப் பற்றியது. அது 'அப்ரிகோ' (Abrigo) என்று சொல்வதற்குப் பதிலாக, 'Go கோ' என்று சொல்லும். 'அப்ரிகோ' என்பது, மேலே அணிந்துகொள்ளும் ஒரு நீண்ட அங்கி (Over Coat). அப்படியே 'எஸ்பால்டா' (Espalda) என்பதற்குப் பதிலாகப் 'பால்டா' (Palda) என்று சொல்லும். Espalda என்பதற்குத் தோள் என்பது பொருள். குழந்தையின் இரு சொற்களாகிய 'போ, பால்டா' என்பவை அதனுடைய மனக் குழப்பத்தால் பிறந்தவை. குழந்தை இந்தச் சொற்களைச் சொல்லிக்கொண்டு வீரிட்டது; தத்தளித்தது. குழந்தையின் தாய் தனது மேலங்கியைக் கழற்றித் தன் கைமேல் தொங்கவிட்டுக்கொண்டிருந்தாள். குழந்தை விரிட்டழுதது. என்ன செய்தும் அதை அடக்க இயலவில்லை. இதைப் பார்த்துக்கொண்டிருந்த நான் தாயைப் பார்த்து, 'ஓவர் கோட்டை முன் போல அணிந்துகொள் அம்மா,' என்று சொன்னேன். அப்படியே அந்த அம்மாளும் அணிந்துகொண்டாள். உடனே குழந்தையும் அழுவதை நிறுத்திவிட்டது; மகிழ்ச்சியுடன் 'கோ, பால்டா' (Go, Palda) என்றும் சொல்லிற்று. அதனுடைய கருத்தென்ன? 'இப்பொழுது அது சரியாய் இருக்கிறது. ஒரு கோட்டுத் தோளின்மேல் அணிந்துகொள்வதற்குத்தானே? ஒழுங்கில் குழந்தைக்குள்ள விருப்பமும், ஒழுங்கின்மையில் அது காட்டும் வெறுப்பும் இந்த நிகழ்ச்சியால் பயன் தரக் கூடிய ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும். ஓராண்டு, ஒன்றரை ஆண்டுக் குழந்தைகளுக்கென்றே ஒரு தனிப் பள்ளிக்கூடம் அமைக்கப்பட வேண்டும் என்ற முக்கியத்துவத்தை நான் மறுபடியும் உறுதியாகக் கூற விரும்புகிறேன். தாய்மார்கள், பொதுவாகச் சமூகம், குழந்தைகளை ஒதுக்கித் தனியாக வளர்வுடுவதற்குப் பதிலாக வயது வந்தவர்களுடன் அக்குழந்தைகள் நெருங்கிப் பழக விடவேண்டும். பெரியவர்களின் நல்ல உச்சரிப்புடன் கூடிய உரையாடல்களை அவை கேட்க வசதி அளிக்கப்பட வேண்டும் என்று நான் வற்புறுத்துகிறேன்.

# 12 வளர்ச்சிக்குத் தடங்கல்களால் ஏற்படும் விளைவு

குழந்தைகளின் மனத்தில் சில ஆழ்ந்த உணர்ச்சி நிலைகள் இருந்து வருகின்றன. இவற்றைப் பற்றிக் கூறுவது குழந்தையின் மறைந்த போக்குகளைப் பற்றித் தெளிவு ஏற்பட ஒருவாறு உதவும் என்று நினைக்கிறேன். இது குழந்தை மனத்தைப் பாகுபாடு செய்து ஆராய்வது போன்றதாம். படம் 8, 9 ஆகிய இரண்டிலும் குழந்தையின் மொழி வளர்ச்சியைக் காட்டச் சில அடையாளங்களை உபயோகித்திருக்கிறேன். அவை நம் கருத்துகளைத் தெளிவுபடுத்த உதவும்.

கறுப்பு முக்கோணங்கள் பெயர்ச்சொற்களைக் குறிக்கும். சிவப்பு வட்டங்கள் வினைச்சொற்களைக் குறிக்கும். மற்றச் சொற்கள் 9-ஆம் படத்தில் குறிப்பிட்டபடியே ஒரு குறிப்பிட்ட வயதில் குழந்தைகள் சுமார் இருநூறு முந்நூறு சொற்களை உபயோகிக்கின்றன என்பது நமக்குத் தெரியும். நான் இவற்றைப் படம் மூலமாக விளக்கிக் காட்டும்படி செய்கிறேன். படத்தைப் பார்த்தவுடன் மொழியின் வளர்ச்சி நமக்கு எளிதில் விளங்கிவிடும். அந்தக் குழந்தை பேசுவது ஆங்கிலம், தமிழ், குசராத்தி, இத்தாலி, ஸ்பானிஷ் ஆகிய இவற்றுள் எதுவானாலும், சொற்களைக் குறிக்கும் அடையாளங்கள் எப்பொழுதும் ஒரே மாதிரிதான் இருக்கும்.

விளக்கப் படத்தின் இடக்கோடியில் மூடுபனி போன்ற சில பகுதிகள் இருக்கின்றன. இவை குழந்தை முதன்முதலாகப் பேசும் முயற்சியைக் குறிக்கும் ஆச்சரியங்களையும் வியப்பிடைச் சொற்களையும் குறிக்கும். இதற்குப் பிறகு இரண்டு ஒலிகளைச் சேர்த்து ஒரு பதத்தை உண்டாக்கும் நிலை ஏற்படுகிறது. அதற்கடுத்து அது மூன்று ஒலிகளை இணைத்துச் சொற்களை உண்டாக்குகிறது. விளக்கப் படத்தின் வலப்பக்கத்தில் பல வார்த்தைத் தொகைகளைக் குறிப்பிட்டிருப்



Fig: 8.
The development of language from its nebulous stage to conscious expression in grammatical form.
நெபூலா வடிவத்திலிருந்து இலக்கண வடிவுவரை அறிந்து உருவாகும் மொழியின் வளர்ச்சி.
0
1
2
3
4
5
6
7
8
9
10
11
1
1
2
3
4
5
6
7
8
9
10
11
2
NEBULA IN AUDITIVE OBSCURITY
தெளிவற்ற கேள்வியில் நெபூலா
SEPARATE NEBULAE
தனி நெபூலாக்கள்
NEBULAR VOWELS & INTERJECTIONS
நெபூலா உயிரெழுத்துக்களும் வியப்புகளும்
THE NEBULAE HAVE SOUNDS IN THE MIDDLE OF THEM (VOWELS)
நெபூலாக்களின் மையத்தில் ஒலிகள் இருக்கின்றன (உயிரெழுத்துக்கள்)
THE FIRST SYLLABLE
முதல் அசை
THE SOUNDS ARE SEEN TO COME FROM A MOUTH IN MOVEMENT
இயங்கும வாயிலிருந்து ஒலிகள் வருவதாகத் தெரிகிறது
UNCONSCIOUS ATTEMPTS TO FORM WORDS (MECHANICAL BABBLING)
சொற்களை ஆக்குவதற்கு இயல்பான முயற்சிகள் (வெறும் பிதற்றல்)
THE SOUNDS HAVE A MEANING
ஒலிகளுக்குப் பொருளுண்டு
FIRST INTENTIONAL WORD
அறிந்து மொழிந்த முதல் சொல்
AMIDST VOWELS AND INTERJECTIONS APPEAR TWO-SYLLABLE WORDS WITH DIFFUSED MEANING (BABY TALK-MEANINGFUL BABBLING)
உயிரெழுத்துக்களுக்கும் வியப்புச் சொற்களுக் கும் இடையில் பொருள் தெளிவற்ற ஈர் அசைச் சொற்கள் தோன்றுகின்றன (குழந்தைப் பேச்சு-பொருளுடைப் பிதற்றல்)
EVERYTHING HAS A NAME
ஒவ்வொன்றுக்கும் ஒரு பெயருண்டு
SUBSTANTIVE NOUNS
பெயர்ச்சொல்
BABBLING OF PHRASES
மழலை வடிவில் சொல் தொடர்கள்
(PHRASES WITH DIFFUSED MEANING)
பொருள் தெளிவற்ற தொடர்கள்
THE NEBULAE COME TO AN END
நெபூலா முடிவடைகிறது.
SYNTAX
சொற்றொடர் இலக்கணம்
Noun
பெயர்ச்சொல்
Adjective
பெயர் உரிச்சொல்
Indefinite Article (a, an)
எண்ணுப்பெயர் (a, an)
Definite Article (the)
சுட்டுப்பெயர் (the)
Verb
வினைச்சொல்
Adverb.
வினை உரிச்சொல்
Pronoun
பிரதிப்பெயர் (சுட்டு.வினு)
Conjunction
உம்மை
Preposition
இடைச்சொல்
Verbal infinitives participles
எச்ச வினைகள்
Interjection
வியப்புச்சொல்

பதைக் காண்கிறோம். இவற்றில் அடிக்கடி உபயோகிக்கும் பெயர்ச் சொற்கள் அடங்கியிருக்கின்றன. இதைத் தொடர்ந்து இரு சொற்களாலாகிய சொற்றொடர்கள் தோன்றுகின்றன. இத்தொடர்கள் தெளிவற்ற பொருளோடு பயன்படும். இத்தொடரில் அமைந்துள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் பல பொருள்கள் இருக்கும். இதையடுத்துத் திடீரென்று ஒரு 'வெடிப்பு' ஏற்படுகிறது. இதிலிருந்து எண்ணுக்கடங்காத புதுச் சொற்கள் உபயோகத்தில் வருகின்றன. இந்தச் சொற்களின் எண்ணிக்கையை உள இயலார் ஆராய்ந்து எடுத்துக் கூறியபடியே நானும் இப்படத்தில் காட்டியிருக்கிறேன்.

இந்த விளக்கப்படத்தில் இதற்கு முன் சில சொற்களின் கூட்டத்தைக் காண்கிறோம். இவை பெரும்பாலும் பெயர்ச்சொற்களே. இவற்றுக்கு அருகில் பல சொற்கள் இங்குமங்கும் பரவலாய், ஓர் ஒழுங்கில்லாமல் இருக்கின்றன. ஆனால், இரண்டு வயதுக்குப் பிறகு இரண்டாவது பகுதி கட்டாயப்படுகிறது. இப்பகுதியில் சொற்கள் ஒழுங்கான கூட்டங்களாய் அமைகின்றன. இது வாக்கியங்களில் வெடிக்கக் கூடிய நிலையைக் குறிக்கிறது. எனவே, முதல் வெடிப்பு, சொற்களைப் பொறுத்தது; இரண்டாவது வெடிப்பு, எண்ணங்களைப் பொறுத்தது.

ஆனால், இவ்வெடிப்புகள் ஏற்படுவதற்கு முன் ஒரு வகையான தயாரிப்பு இருந்திருக்க வேண்டும். இது இரகசியமாக மறைந்திருக்கலாம். ஆனால், இது ஒன்று இருக்கிறது என்பது உத்தேசத்தில் கூறுவதன்று. தன்னுடைய எண்ணங்களை வெளியாக்குவதற்குக் குழந்தை செய்து வரும் முயற்சிகளின் பலன்களால் இதை நாம் காண இயலும். இந்தப் பருவத்தில் குழந்தையின் கோபமும் எரிச்சலும் அடிக்கடி தோன்றுவதைக் காண்கிறோம். குழந்தை எதைச் சொல்ல முயற்சி செய்கிறது என்று வயது வந்தவர்கள் எப்பொழுதும் புரிந்துகொள்ள இயலாத காரணத்தால் குழந்தைக்கு அம்மாதிரி கோபம் ஏற்படுகிறது. இதைப்பற்றி முன்னதாகவே நாம் குறிப்பிட்டிருக்கிறோம். இந்த வயதில் அலைக்கழிப்புத் தோன்றுவது குழந்தை வாழ்க்கையின் ஒரு பகுதியாகும். அதனுடைய முயற்சிகள் எல்லாம் வெற்றி காணாதபொழுது இனத்தைத் தூண்டிவிடுகிறது. செவிடர்களும் ஊமைகளும் பெருஞ்சண்டைக்காரர்கள் என்பதை எல்லாரும் அறிவார்கள். தங்களால் தங்கள் கருத்துகளை வெளியிட முடியாததே இதற்கு ஒரு காரணமாயிருக்கலாம் என்று நாம் கருதலாம். உள்ளத்தில் பொதிந்து கிடக்கும் செல்வத்தை வெளியாக்க வேண்டுமென்றிருக்கிறது சாதாரணக் குழந்தை. இதைச் சாதிப்பதற்கு அது வழி கண்டு பிடிக்கிறது; அதையும் பெருங்கஷ்டங்களுடனே சாதிக்கிறது.

இப்பருவம் குழந்தைக்கு மிகவும் கஷ்டமான பருவம். ஏனென்ருல், அதனுடைய கஷ்டங்களெல்லாம் சூழ்நிலையைப் பொறுத்தவை; அல்லது தன்னுடைய சொந்தச் சத்திகளின் வரம்பைப் பொறுத்தவையாகும். குழந்தை தழுவலில் இரண்டாம் முறை கஷ்டப்படுவதாகும். முதலாவது கஷ்டம் பிறந்தவுடனே ஏற்பட்டது. குழந்தை தானே எல்லாக் காரியங்களையும் தனக்காகச் சாதித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இது வரை எல்லாம் அதன் தாயே அதற்கு வேண்டியவைகளைச் செய்து வந்தாள். தக்க பாதுகாப்பும் அன்புடன் புரிந்துகொள்ளுதலும் இல்லாத பொழுது பிறந்த குழந்தைக்கு ஏற்படும் பிறப்பதிர்ச்சி அதனிடம் ஓர் அச்சத்தையும் பின்னேக்கத்தையும் உண்டாக்கிவிடுகிறது என்பதை நாம் இதற்கு முன்பு பார்த்தோம். மேலும், சில குழந்தைகள் மற்றவர்களைவிட நல்ல உடல் வலிமையுடன் பிறப்பதையும் பார்த்திருக்கிருேம். சில, நல்ல சூழ்நிலையில் பிறக்கும் பேறு பெற்றிருக்கின்றன. இயல்பான வளர்ச்சிக்கு அடிப்படையான சுதந்தரத்தை இத்தகைய பேறுபெற்ற குழந்தைகள் தடை ஏதுமின்றி உடனே அடைகின்றன. இவற்றுக்கெல்லாம் இப்பொழுது கண்ட நிலைமையும் நேரான சான்றுகளைப் பெற்றிருக்கின்றது. மொழி என்பது விரிந்த சுதந்தரத்தை அடைவதற்கான தொல்லைகள் நிறைந்த பயணமாகும். இந்தச் சுதந்தரத்தை அளிப்பது பேச்சு. இங்கும் பின்னேக்கின் அபாயங்கள் பதுங்கிக் கிடக்கின்றன.

இந்த ஆக்கப் பருவத்தில் மற்ருெரு விசேஷம் இருப்பதை வாசகர்கள் நினைவுபடுத்திக்கொள்வார்கள். குழந்தை மனம் பெறுகின்ற பதிவுகளும் அவை தூண்டிவிடும் மனவெழுச்சியைச் சார்ந்த விளைவுகளும் நிரந்தரமாக நிலைத்து நின்றுவிடப் பார்க்கின்றன. பேசும் ஒலிகளிலும் இலக்கணத்திலும் இது பலன் அளிக்கும் வகையில் நடைபெறுகிறது. ஆனால், இப்பருவத்தில் கற்றுக்கொள்வது வாழ்நாள் முழுதும் எவ்வாறு நிலைத்துவிடுகிறதோ, அவ்வாறே துரதிருஷ்டவசமாக இடையூறுகளால் ஏற்படும் விளைவுகளும் நிரந்தரமாக நிலைத்துவிடுகின்றன. வாழ்க்கையின் ஆக்கத் தொழிலின் ஒவ்வொரு பகுதியிலும் இந்த இரு தன்மையும் இருந்தே வருகின்றன. ஒரு போராட்டம்—ஓர் அச்சம்—எவ்வகையில் பின் வாங்கினாலும், அது அளவிட முடியாத பலனைத் தோற்றுவித்துவிடும். ஏனெனில், முன்னேற்றத்தில் நல் விளைவுகள் எவ்வாறு உடனே பதிந்துவிடுகின்றனவோ, அவ்வாறே இடையூறுகளுக்கு ஏற்பட்ட எதிர்ப்புகளும் பதிந்துவிடுகின்றன. வெளிச்சம் எங்கோ ஒரு சந்தின் மூலம் ஊடுருவிச் சென்றதால் போட்டோத் தட்டில் ஏற்பட்ட குறி நமக்கு நினைவு வருகிறது. இந்தக் குறைபாடு ஒவ்வொரு படத்திலும் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும். அதே போல இப்பருவத்தில் இயல்பாகச் சிறப்பியல்பின் வளர்ச்சி மட்டும் அன்றி, அதனுடன் ஆளுமையின் சில தோற்றக் கேடுகள்

(Malformations) அல்லது சில விலக்கங்களையும் (Deviations) நாம் எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. இவை வருங்கால வளர்ச்சியில் கவலைக்கு இடமுள்ளன ஆகிவிடுகின்றன.

இந்த ஆக்கப்பருவத்தில் நடையும் பேச்சும் நிலை நாட்டப்படுகின்றன. இரண்டரை ஆண்டுக்கு மேலும் இது நடைபெறுகிறது. ஆனால், இதனுடைய தீவிரமும் செழுமையும் வரவரக் குறைந்து கொண்டே வருகின்றன. இந்தச் சத்திகள் விரிவடைந்து வளர்ந்து கொண்டு வருவது போலவே, குறைபாடுகளும் கஷ்டங்களும் இதே பருவத்தில் தோன்றி விரிவடைந்து வளர்கின்றன. பெரியவர்களின் மனக்கோளாறுகளுக்குக் காரணம் மூவாண்டு இளம்பருவத்தில் காணப்படுகிறது என்ற உளப்பகுப்பாளர் கண்ட உண்மையை எல்லோரும் அறிவர்.

இயல்பான வளர்ச்சியுடன் இணைக்கப்பட்ட கஷ்டங்கள் எல்லாம் ஒடுக்குதல் (Repression) என்றதன் எல்லைக்குள் அடங்கிவிடுகின்றன. இந்தப் பதம் பொதுவாக உளவியலில் பயன்படுத்தப்பட்டாலும், சிறப்பாக இது உளப்பகுப்பையே சேர்ந்ததாகும். ஒடுக்குதல் என்று ஒவ்வொருவரும் கேள்விப்பட்டனவெல்லாம் குழந்தைப் பருவத்தில் முளை விட்டவையாகும். மனிதனுடைய செயல் துறைகள் பலவற்றிலும் இவை தோன்றினாலும், பேச்சில் பல உதாரணங்களைப் பார்க்கலாம். 'வார்த்தை வெடிப்பு' (Word explosion) என்பது ஏற்படும்பொழுது இவ்வார்த்தைத்தொகைக்கு வாயில் ஒன்று வேண்டும். அதே போல, அடுத்த பகுதியிலும் வாக்கியங்களுக்கும் வெளியாகும் வாயில் தேவையாகும். குழந்தை தன் எண்ணங்களை இலக்கண வடிவில் அமைக்கத் தொடங்குகிறது. கல்விக் கருதுகோளின்படி இக் காலத்தில் பேச்சுரிமைக்கு மிக்க முக்கியத்துவம் அளிக்கப்பட்டுவருகிறது. பேச்சுப்பொறி நுட்பத்தின் உடனடித் தேவையுடன் இது இணைந்திருப்பதோடல்லாமல், தனியாளின் எதிர்கால வாழ்வுடனும் பிணைக்கப்பட்டிருக்கிறது. சரியான வயதில் இயல்பான வெடிப்புகள் நிகழாதிருப்பதற்கும் சில உதாரணங்கள் இருக்கின்றன. இதற்கு எடுத்துக்காட்டாக மூன்று அல்லது மூன்றரை வயதுக் குழந்தை தன்னைவிடக் குறைந்த வயதுக்குரிய சில வார்த்தைகளையே உபயோகிக்கலாம்; அல்லது முழு ஊமையாகவும் இருக்கலாம். எனினும், பேச்சுச் சம்பந்தப்பட்ட உறுப்புகள் இயல்பாகவே இருக்கின்றன. இத்தகைய நிலைமையை 'மன ஊமை' (Mental dumbness) என்பார்கள். ஏனென்றால், இதற்குரிய காரணங்கள் எல்லாம் இதன் மனத்திலே இருக்கின்றன. இது ஓர் உள நோய் சம்பந்தமான நிலையைக் குறிக்கும்.

இக்கால மருத்துவக் கலையின் ஒரு பிரிவு உளப்பகுப்பு இயல் (Psycho analysis) ஆகும். வேறு வகையான மனக் குழப்பங்கள் என்று உளப்பகுப்பு நூலார் ஆராய்ந்து வருவனவெல்லாம் இந்தப் பருவத்தில் தொடங்குகின்றன. ஒரு மாயம் போல ஊமை நிலை திடீரென்று மாறிவிடலாம். எதிர்பாராத விதத்தில் குழந்தை பேசத் தொடங்கிவிடுகிறது; நல்ல அழுத்தந் திருத்தத்துடனும், இலக்கண வரம்பை ஒட்டியும் பேச ஆரம்பிக்கிறது. அதனுடைய ஆழ்ந்த உள்ளத்தில் முன் கூட்டியே எல்லாம் ஆயத்தமாயிருக்கின்றன என்பது தெளிவு. ஆனால், ஏதோ ஒரு தடங்கல் இது வரை அது வெளிப்படா வாறு குறுக்கிட்டிருக்கிறது.

மூன்று நான்கு வயதுக் குழந்தைகள்—இது வரை பேசாதிருந்தவைகள்—எங்கள் பள்ளிக்கூடங்களில் சேர்க்கப்பட்டதுண்டு. ஈராண்டுக் குழந்தைகள் உபயோகிக்கும் ஒரு சொல் வாக்கியங்களைக் கூட (Fusive words) இவை இது வரை உபயோகித்ததில்லை. நல்ல வேளையாக இக்குழந்தைகள் எம் பள்ளிக்கூடங்களில் சுதந்தரம் பெற்றன. தங்களுடைய சூழ்நிலையின் தூண்டுதல்களால் திடீரென்று 'இது வரையும் பேசியிருக்கலாமே' என்பதைக் காட்டிவிடுகின்றன. இதன் மாயம் என்னவோ! பெரிய மனவிபத்து அல்லது இடைவிடாத ஒரு வகையான தடங்கல் இருந்துகொண்டிருக்க வேண்டும். அது பெற்றிருந்த உண்மையான மொழிச் செல்வம் தடையின்றி வெளிப்பட முடியாதபடி இருந்திருக்கிறது.

பெரியவர்களுள் எத்தனை பேர் பேசத் தயங்குகின்றனர்! பெரிய முயற்சியுடன் உரை நிகழ்த்துகின்றனர்! அதுவும் பேசும் பொழுது எதைப் பேசுவது என்று ஐயப்பட்டுக்கொண்டே உரை நிகழ்த்துவார்கள். இந்தத் தயக்கம் வெவ்வேறு உருவங்களில் காட்சி அளிக்கும்.

(1) பேசுவதற்கு அஞ்சாமை இல்லாதிருத்தல்

(2) சொற்களை அமைத்தற்கே அஞ்சாமை இன்மை

(3) சொற்றொடர்களை உபயோகிப்பதில் தொல்லைப்படுதல்

(4) இயல்புக்கு மாறாக—அதுவும் குறுக்கே குறுக்கே ஆ—உம் ஈ—ரு என்று நீட்டி நீட்டிப் பேசுவது. இது வரை உள்ளே கிடந்த இந்தத் தொல்லைகள் இப்பொழுது தோலாதவை[1] ஆகிவிட்டன. இவை நிரந்தரமான இளப்பத்தின் வடிவங்கள் ஆகிவிடுகின்றன.[2]

1. Invincible, 2. Inferiority.

இவற்றை வாழ்நாள் முழுவதும் பொறுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

உள்ளத்தில் பிறந்த மற்ற இடையூறுகள் நல்ல உச்சரிப்பைத் தடை செய்கின்றன. இதில் சிக்குண்டவர்கள் திக்கித்திக்கிப் பேசுவார்கள். இவர்களுடைய உச்சரிக்கும் சக்தியில் குறைபாடு ஏற்படுகிறது. பேச்சுப் பொறியியல் உருவம் ஆகின்ற பருவத்திலிருந்து இந்தக் குறைபாடுகள் தோன்ற ஆரம்பித்திருக்கின்றன. எனவே, திறமை பெறும் வெவ்வேறு பருவங்களிலும் அதனதன் பின்னேக்கங்களும் இருந்திருக்கின்றன.

## முதற்பருவம்

சொற்களை அமைத்தற்குத் தேவையான பொறி நுட்பம் பெறப்படுகிறது. அதற்கேற்ற பின்னேக்கம் மோசமான உச்சரிப்பு; சொற்குழறல்.

## இரண்டாம் பருவம்

சொற்றெடர் அமைத்தற்குத் தேவையான பொறி நுட்பம் பெறுகிறது. (எண்ணங்கள் வெளியாகின்றன). அதற்கேற்ற பின்னேக்கம்: சொற்றெடர் உருவாக்குவதில் தாமதம்.

இவ்வகைப் பின்னேக்கங்கள் குழந்தையின் உணர்ச்சிகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றன. தன்னுடைய சக்திகளை அதிகப்படுத்திக்கொள்வதிலும், பொதுவாக ஆக்கும் தொழிலிலும் குழந்தைக்குச் சிறப்பான ஏற்கும் தன்மை இருக்கிறது. அதே போல, தன்னைத் தீவிரமாக எதிர்க்கும் சக்திகளிடத்திலும் உணர்ச்சி உடையதாய் இருக்கிறது. இந்த மனம் முறிந்த ஆக்கும் தன்மையின் விளைவுகள் இதனுடைய வாழ்நாள் முழுவதும் இதன் குறைபாடுகளாய் நிலைத்துவிடுகின்றன. குழந்தையின் உணர்ச்சி நம் கற்பனைக்குரியதென்பதை நாம் எப்பொழுதும் நினைவில் இருத்திக்கொள்ள வேண்டும்.

குழந்தையைத் தடுப்பவர் பெரும்பாலும் நாமே. ஆதலால், அதனுடைய வாழ்வில் காணப்படும் ஒழுங்கீனங்களுக்கு நாமே பொறுப்பாளிகள் ஆகிறோம். எப்பொழுதும் குழந்தையிடத்தில் நாம் கூடிய வரை அமைதியாகவே நடந்துகொள்ள வேண்டும்; பலாத்காரத்தை விலக்க வேண்டும். நாம் எவ்வளவு கொடுமையான பலாத்காரத்தை உபயோகிக்கிறோம் என்பதை எளிதில் உணர்ந்துகொள்ள மறுக்கிறோம். நம்மை நாம் மிகவும் கண்காணிப்புடன் கவனித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. தன்னைப் பற்றி அறிந்து

கொள்வதே கல்விக்கு உண்மையான ஆயத்தமாகும். கருத்துகளைக் கற்பதைவிட வாழ்க்கைக்கு உதவி புரியும் ஆசிரியர்களைப் பயிற்றுவித்தலும் இன்னும் மேலான சிறப்பியலைப் பயிற்றுவித்தலும் இதில் அடங்கும். இது ஆன்ம சத்தியையே பயிற்றுவித்தலாகும்.

குழந்தைகளுக்குப் பல விதமான உணர்ச்சித் தன்மைகள் இருக்கின்றன. ஆனால், அச்சத்தைப் பொறுத்த மட்டில் எல்லாக் குழந்தைகளும் ஒரே விதமான உணர்ச்சித்தன்மையைக் காட்டுகின்றன. குழந்தைகளைப் புண்படுத்துவது எவ்வளவு எளிது! 'கண்ணே, அம்மா என்ன சொன்னாள்? மறந்துவிட்டாயா?' என்று பெரியவர்கள் மனக்குழைவு இன்றி மிக்க அமைதியுடன் எடுத்துக் கூறும் பொழுதும் அவை அதே ஆவலுடன் உணர்கின்றன. இன்னும் குழந்தைகளை ஆயாக்களிடம் விட்டுவிட்டுச் செல்கின்ற பெற்றோர், சிறிதும் அன்பில்லாமல் அதிகாரத் தோரணையில் ஆயாக்கள் அடிக்கடி பேசுவதை எச்சரிக்கையுடன் கவனித்தல் வேண்டும். செல்வச் சீமான் மக்களுக்கு உடல் வலிமையும் அஞ்சாமையும் இருந்த போதிலும், அவர்கள் பேச்சில் பேடித்தனம் காட்டுகின்றார்கள்; தயங்குகின்றார்கள்; நாக்குழறுகின்றார்கள். இத்தனைக்கும் காரணம், மேலே குறிப்பிட்டதே.

நானே ஒரு குழந்தை விஷயத்தில் மிகமிகக் கண்டிப்பாய்ச் சில சமயங்களில் இருந்திருக்கிறேன். என் நூலில் [1] கீழ்க்காணும் உதாரணம் எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது:

ஒரு குழந்தை தனது செருப்பைத் தன் அழகான பட்டு மெத்தை விரிப்பின்மேல் வைத்திருந்தது. நான் துணிவுடன் அவற்றை அப்புறப்படுத்தினேன்; என் கைகளால் விரிப்பைத் துடைத்தேன். ஒருவருடைய செருப்புகளை வைப்பதற்கு இது இடமன்று என்பதைக் காட்டும் வகையில் அதைச் செய்தேன். அதற்குப் பிறகு இரண்டு மூன்று மாதங்களாக எங்காவது ஓரிடத்தில் ஒரு ஜதைச் செருப்பை அக்குழந்தை பார்த்ததோ, உடனே அவற்றை வேறு இடத்தில் கொண்டு போய் முதலில் வைத்துவிடும்; பிறகு தூசு தட்டுவதற்காகப் படுக்கை விரிப்பையோ, ஒரு திண்டையோ தேடும். நான் அளவுக்கு மீறிப் படிப்பித்த பாடத்தைக் கண்டு அக்குழந்தை வருத்தப்படவும் இல்லை; புரட்சி செய்யவும் இல்லை. 'என்னிடத்தில் அவ்வாறு நடந்துகொள்ள வேண்டா. எனக்கு விருப்பமான இடத்தில் என் செருப்புகளை வைப்பேன்,' என்று அக்குழந்தை சொல்லவில்லை. ஆனால், என்னுடைய தவறான நடத்தைக்கு அந்தக் குழந்தை விடுத்த மறுப்பு (rejoinder) யாது? குழந்தையிடம் தோன்றிய

1. குழந்தைமை இரகசியம்

இயல்பற்ற நடத்தையே. குழந்தைகள் பெரும்பாலும் உக்கிரமாக நடந்துகொள்வதில்லை. அவ்வாறு நடந்துகொள்வது மேலானதாய் இருக்கும். ஏனென்றால், கோபப்படும் குழந்தை தன்னை எவ்வாறு காத்துக்கொள்ள இயலும் என்பதைக் கண்டு பிடித்துக்கொள்கிறது. அதன் பிறகு இயல்பாக வளரலாம். ஆனால், தன் சிறப்பியலிலேயே மாற்றத்தைக் காட்டுகின்ற முறையில் அது நடந்துகொண்டால், அல்லது, இயல்புக்கு மாறான நிலையில் அடைக்கலம் புகுந்தால், அதன் வாழ்க்கை முழுவதும் பாழாகிவிடுகிறது. பெரியவர்கள் இதை உணர்வதில்லை; குழந்தை கோபித்துக்கொள்ளாத வரைக்கும், நாம் கவலைப்படுவதற்கு என்ன இருக்கிறது என்று நினைக்கின்றார்கள்.

பெரியவர்களிடம் காணப்படும் மற்றொரு வகையான ஒழுங்கீனம் பொருளற்ற அச்சங்களாகவும், தறிதலைகளாகவும் (Ticks) தோற்றம் அளிக்கின்றன. இவற்றுக்கெல்லாம் மூல காரணத்தைக் குழந்தைப் பருவத்தில் அதன் நுண்மையான உணர்ச்சிகளுக்கு விளைக்கப்பட்ட கொடுமைகளில் காணலாம். பூனை கோழிக்குஞ்சு போன்ற விலங்கு பறவைகளாற்பெற்ற பரிதாப அனுபவங்களைச் சிலர் பிரதிபலிக்கின்றனர். வேறு சில அச்சங்கள், இளமையில் அறைக்குள் அடைத்து வைப்பார்கள் என்ற பயத்தால் ஏற்பட்டவையாகின்றன. இந்த அச்சங்களுக்கு ஆளானவர்களை வற்புறுத்தியும் வாதாடியும் மாற்றுவது எளிதன்று. இவ்வகை அச்சத்தை மருத்துவத்துறையில் 'ஃபோபியா' (Phobia) 'கிலி' என்பார்கள். சில அமிசங்கள் பொதுவானவை. எடுத்துக்காட்டாக 'அடைப்புக் கிலி' (Claustrophobia) என்பது ஒன்று. இது அறையில் அடைத்துவிடுவார்கள் என்ற அச்சத்தைக் குறிக்கும்.

இதற்கு மருத்துவ அனுபவத்திலிருந்து பல சான்றுகள் எடுத்துக் கூறலாம். ஆனால், குழந்தை இந்தப் பருவத்தில் பெற்றிருக்கும் மனப்போக்கைக் காட்டுவதற்கு இவற்றைக் குறிப்பிடுகிறேன், குழந்தையை நாம் எவ்வாறு நடத்துகிறோமோ, அதற்குத்தக்க பலனை அது அளிக்கும் என்பதை வலியுறுத்தவே இவற்றைக் கூறுகிறேன். இந்தப் பலன் என்பது இப்பொழுது மட்டும் அன்றி, இனிமேல் இவன் வயது வந்த மனிதன் ஆகப்போகிறானே, அப்பொழுதும் நிலைத்து நிற்கும்.

குழந்தையின் மனத்தைப் புரிந்துகொள்ள வேண்டுமானால், கவனித்தலும், புதியதைக் கண்டு பிடித்தலுமாகிய முறைகளை அவசியமாக அனுசரிக்க வேண்டியிருக்கிறது. பெரியவர்களுடைய மனத்தை உளப்பகுப்பு முறையில் ஆராய்ந்து வரும் பொழுது மனிதனுடைய நனவிலாப் பகுதியுள்ள மன அளவுக்கு வருகிறார்கள். அப்பொழுது என்ன முறைகளை அனுசரிக்கின்றனரோ, அதைப்போலக் குழந்தை

யிடத்தில் கையாள வேண்டியிருக்கிறது. இது எந்த வகையிலும் எளிதான காரியம் அன்று. ஏனென்றால், 'குழந்தைப் பேச்சு' என்பது பற்றி நாம் அறிந்ததெல்லாம் மிகவும் குறைவே. குழந்தை தன்னுடைய சொற்களால் என்ன தனிப்பொருள் என்று நம்மை நினைக்க எதிர் பார்க்கிறதோ, அந்த அளவுக்கு நம்மால் புரிந்து கொள்ள இயலுவதில்லை. சில சமயங்களில் குழந்தையின் முழு வாழ்க்கையையும் நாம் அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அல்லது அதனுடைய முந்தின வாழ்க்கையை ஆராய்ச்சி செய்ய வேண்டியிருக்கிறது. இதற்குப் பிறகுதான் இந்தச் சின்னஞ்சிறு குழந்தை படவேண்டிய கஷ்டங்களுக்கு ஓர் ஆதரவு அளிக்க இயலும். குழந்தை சொல்வது என்ன என்பதை நமக்குப் புரியுமாறு எடுத்துக் கூறும் ஒரு மொழி பெயர்ப்பாளரை நாம் எத்தனை முறை பெற விரும்பியிருக்கிறோம் !

இது சம்பந்தமாகப் பல ஆண்டுகள் நானே ஆரர்ய்ச்சி செய்து வந்திருக்கிறேன். என்னைக் குழந்தையின் மொழி பெயர்ப்பாளராக்கிக்கொள்ள முயற்சி செய்து வந்திருக்கிறேன். அவர்களுக்கு இவ்வாறு செய்யும் பொழுது அவர்கள் நம்மிடம் எப்படி ஓடி வருகிறார்கள் என்பதை வியப்புடன் கவனித்து வந்திருக்கின்றேன். தங்களுக்கு உதவி புரிபவர் இங்கு ஒருவர் இருக்கிறார் என்று நன்றாகப் புரிந்துகொண்டவர் போல இவ்வாறு நம்மிடம் வருகின்றனர்.

குழந்தைகள் இங்குக் காட்டுகின்ற மிகுந்த ஊக்கத்தைப் போல, சாதாரணமாகக் கொஞ்சி அணைக்கின்றவர்களிடம் அவ்வளவாகத் தம் அன்பைக் காட்டிக்கொள்வதில்லை. குழந்தையின் முழு நம்பிக்கையும் அதன் மொழி பெயர்ப்பாளரிடத்திலே இருக்கிறது. ஆனால், வெளி உலகம் இதன் கதவை அடைத்திருக்கிறது. இதோ இதைத் திறந்து விடுபவர் ஒருவர் இருக்கிறார். குழந்தைகள் மொழி பெயர்ப்பாளரிடம் மிகவும் நெருங்கிப் பழகுகின்றன. இது அன்பையும் மீறினது. ஏனென்றால், ஆறுதலைவிட உதவியானது மேலான கொடையாகிறது.

நான் ஒரு குடும்பத்தாருடன் வாழ்ந்து வந்தேன். நான் வைகறையில் எழுந்து என் வேலைகளைத் தொடங்குவது வழக்கம். அந்த வீட்டில் உள்ள ஒன்றரை வயதுக் குழந்தை ஒன்று ஒரு நாள் அந்நேரத்தில் என் அறைக்குள் வந்தது. அன்போடு அந்த ஆண் குழந்தையைப் பார்த்து, 'ஏதாவது சாப்பிட வேண்டுமா ?' என்று சற்று வியப்புடனே கேட்டேன். அது 'புழுக்கள்' என்று விடை அளித்தது. அதைக் கேட்ட நான் ஆச்சரியத்துடன் 'புழுக்களா ! புழுக்களா !' என்றேன். நான் புரிந்துகொள்ளவில்லை என்பதை அறிந்த குழந்தை, எனக்கு உதவி புரிவதற்காக இரண்டாவது

சொல்லாகிய 'முட்டை' என்பதையும் கூட்டிச்சொலிற்று; 'இதற்கு வேண்டியது காலைப் பானமாக இருக்க இயலாதே!' என்று எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன். 'இது சொல்வது என்னவோ!' என்று ஐயப்பட்டேன். பிறகு குழந்தை, 'நீனு, முட்டைகள், புழுக்கள்,' என்று சொல்லிற்று. உடனே எனக்குப் புரிந்துவிட்டது. ஏனென்றால், எனக்கு நினைவு வந்தது. இதற்கு முந்தின நாள் அவன் அக்காள் நீனு என்பவள் முட்டை வடிவக் கோட்டுக்குள் வருணம் தீட்டிக்கொண்டிருந்தது எனக்கு நினைவுக்கு வந்தது. குழந்தை வாழ்வின் முழு அமைப்பும் நாம் அறிந்திருப்பதன் அவசியத்தை இங்கு மறுபடியும் வற்புறுத்த விரும்புகிறேன். இந்தச் சிறு பயல் அந்த வருணக் கோலைக் கேட்டிருக்கிறன். ஆனல், கோபத்தில் அவள், 'போ' என்று கூறி இவனை அனுப்பிவிட்டிருக்கிறள். இப்பொழுது பாருங்கள், குழந்தையின் மனம் எவ்வாறு நடந்துகொள்கிறதென்று. தன் மனவுறுதியால் அவளது மனவுறுதியை எதிர்க்காமல் தனக்கு எப்போதுவாய்ப்புக் கிட்டுமோ என்று காத்துக்கொண்டிருந்திருக்கிறது. மறுபடியும் முயற்சி செய்வோம் என்பதற்கு என்ன மனவுறுதி, என்ன பொறுமை! அதனிடம் வருணக் கோலையும் முட்டை வடிவத் தட்டையும் கொடுத்தேன். உடனே அதன் முகத்தில் ஓர் ஒளி சுடர்விட்டது. ஆனல், அதனல் முட்டை வடிவக் கோட்டைத் தானக வரைந்துகொள்ள இயலவில்லை. நான் அதற்காக வரைந்து கொடுக்க வேண்டியதாயிற்று. உடனே அது அலைக் கோடுகளை முட்டை வடிவத்துக்குள் தீட்ட ஆரம்பித்தது. அதன் அக்காள் பொதுவாக எல்லாரும் செய்வது போல நேர்க்கோடுகளால் நிறைத்திருந்தாள். ஆனல், அந்தச்சிறு குழந்தைக்கு அதைவிட மேலான கருத்துத் தோன்றிற்று; புழுக்களைப் போன்ற அலைக்கோடுகளைத் தீட்டிற்று. எனவே, அந்தச் சின்னஞ்சிறு குழந்தை எல்லாரும் உறங்கும் வரை காத்திருந்தது. அதன் மொழி பெயர்ப்பாளர் மட்டும் இன்னும் உறங்கவில்லை. அவர் கட்டாயம் உதவி அளிப்பார் என்ற நம்பிக்கையுடன் என்னிடம் வந்திருக்கிறது.

●

குழந்தையின் இந்தப் பருவத்தில் காணப்படுவதென்ன? கோபம் அன்று; பலவந்தம் அன்று; ஆனல், பொறுமை; பொருத்தமான வேளை வரும் வரையில் பொறுத்திருத்தல். தன் உள்ளத்தில் இருப்பதை வெளிப்படுத்த அதற்கு இயலாத பொழுது, தன் விருப்பத்தை ஏதோ உள்ளிருந்தே தடுத்தலைச் செய்யும்பொழுது குழந்தை முரட்டுத்தனத்தையும் கோபத்தையும் காட்டுகிறது. மேலே குறிப்பிட்ட எடுத்துக்காட்டு, சின்னஞ்சிறு குழந்தைகள் பெரிய குழந்தைகளைப்போல எவ்வாறு நடந்துகொள்கின்றன என்பதையும் தெளிவாக்குகிறது. மூவாண்டுக் குழந்தை ஏதோ ஒரு வேலையைத் தொடங்கினல், ஒன்றரை வயதுக் குழந்தையும் அதையே செய்ய விரும்பும். அதற்கு

அது கடினமாய் இருக்கலாம் ; எனினும், செய்ய முயற்சி செய்கிறது.

எங்கள் வீட்டில் ஒரு பெண் நாட்டியம் கற்றுக்கொண்டிருந்தாள். அவள் தம்பி மூவாண்டுக் குழந்தையும் அக்காளைப்போல நடிக்க விரும்பினன். ஏற்கெனவே ஆசிரியை இவ்வளவு சின்னப் பெண்ணுக்கு எவ்வாறு தாள நடைகளைப் பழக்க இயலும் என்று கேட்டிருக்கிருள். பெண் குழந்தை எவ்வளவு கற்றுக்கொள்கிறது என்பதைப் பொருட்படுத்தாமல் சும்மா முயற்சி செய்தல் போதும் என்று நாங்கள் மன்ருடிக் கேட்டுக்கொண்டோம். குழந்தையின் வளர்ச்சிக்கு உதவி புரியவேண்டும் என்பதே எங்கள் கருத்து என்பதை உணர்ந்த அந்த ஆசிரியை அம்மையார் இதைச்செய்ய ஒருவாறு ஒப்புக்கொண்டனர் ; அப்படியே ஆரம்பித்தார். உடனே அந்த ஒன்றரை வயதுக் குட்டிப் பயலும் ‘ நானும் நானும் ’ என்று கத்திக்கொண்டே முன்னே ஓடினன்.

இதைக்கண்ட ஆசிரியர் கண்டிப்பாக மறுத்து, ‘ முடியவே முடியாது!’ என்றனர். ‘ பேலே ’ (Ballet) என்ற சிறந்த நாட்டியக் கலையைப் பழக்கி வைப்பவராகிய இந்த ஆசிரியரின் கௌரவம் இவ்வளவு சின்னஞ்சிறு குழந்தைகளுக்கெல்லாம் சொல்லிக்கொடுப்பதென்ருல் என்னுகும் என்ருர். நாங்கள் அவரை விடவில்லை. அவருடைய பெருமையை ஓரளவுக்குக் கவனிக்காமல் எங்களுடைய விருப்பத்தை வேடிக்கைக்காவது நிறைவேற்றும்படி மறுபடியும் கேட்டுக்கொண்டோம். அவரும் சரி என்று ஒப்புக்கொண்டு உட்கார்ந்து ஒரு பாட்டை வாசிக்கத் தொடங்கினர். உடனே குழந்தை வீரிட்டது ; பிடிவாதமாக அசைய மறுத்தது. ‘ நான் சொன்னது சரி,’ என்று அவரும் தம் மனத்துள் எண்ணினர். ஆனல், குழந்தை நாட்டியத்தைப்பற்றிக் கவலைப்படவில்லை. பிறகு ஏன் அவ்வாறு கோபாவேசத்துடன் அலறுகிறது ? காரணம் என்னவென்ருல், ஆசிரியை அம்மையார் தமது தொப்பியை ‘சோஃபா’மேல் வைத்திருந்தார். அது ‘தொப்பி’ என்ருே, ‘ஆசிரியை’ என்ருே சொல்லாமல், வேறு இரு சொற்களை மிகுந்த படபடப்புடன் திரும்பத்திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தது. ‘ ஹால்,’ ‘மூலை ’ என்பனவே அவ்விரு சொற்களும். குழந்தை சொல்ல விரும்பியது, ‘அந்தத் தொப்பி தவருன இடத்தில் இருக்கிறது ; ஹாலில் ஒரு மூலையில் அது இருக்க வேண்டும்,’ என்பதே. அது நாட்டியத்தின்மேல் உள்ள இன்பத்தை எல்லாம் மறந்துவிட்டது ; குழப்பத்திலிருந்து ஒழுக்கத்தை நிலை நாட்ட வேண்டும் என்ற ஒரு முதன்மையான தூண்டுதல் தன்னுள் இருப்பதாகத் தோன்றிற்று. தொப்பியை மூலையின்மேல் மாட்டின உடனே அதன் சீற்றம் எல்லாம் தணிந்துவிட்டது. அதுவும் நாட்டியம் ஆட ஆயத்தமாகிவிட்டது. உலகம் குழந்தையிடமிருந்து எதிர்பார்க்கும் சமூக நடத்

தைகள் எல்லாவற்றையும்விட ஒழுங்குக்காகக் குழந்தையிடம் காணப்படும் அடிப்படைத் தேவையானது முதல் இடம் பெறுகிறது என்பது தெளிவாகப் புலனாகிறது,

உளப் பகுப்பியலார் இது வரை ஆராய இயலாத அளவுக்குக் குழந்தையின் வார்த்தைகளும் உணர்ச்சிகளும் ஆராயப்படும்பொழுது அவை அதன் ஆழ்ந்த உள்ளத்தை நாம் துருவிப்பார்க்கத் துணை புரிகின்றன.

முதல் எடுத்துக்காட்டில் **குழந்தையின் பொறுமையைக் கண்டோம்;** இரண்டாவதில் **ஒழுங்கில் குழந்தைக்குள்ள ஆவேசத்தைக் கண்டோம்.** இவ்விரண்டும் குழந்தையின் மிகுந்த அக்கறைகள் என்ன என்பதைச் சிந்திக்க உதவுகின்றன. குழந்தைமை இரகசியத்தில் குறிப்பிட்டிருப்பதை இங்கு நினைவுபடுத்துகிறேன். பெரியவர்கள் உரையாடிக்கொண்டிருந்ததை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்த ஒரு சிறு குழந்தை முழுமையும் புரிந்துகொண்டது. பெரியவர்களில் கடைசியில் பேசினவர், 'கதை இன்பமாக முடிகிறது,' என்றார். ஆனால், இந்த முடிவைக் குழந்தை ஒப்புக்கொள்ளவில்லை. இந்த எடுத்துக்காட்டையும் சேர்த்துக்கொண்டோமானால், நாம் இதுவரை கண்ட 7-ஆம் படத்தில் காட்டப்பட்ட விஷயங்களெல்லாம் குழந்தையின் உள்ளத்தில் ஒரு முழு வாழ்வு நடைபெற்றுக்கொண்டிருக்கிறது என்பதைக் குறிப்பதை நாம் உணர்வோம். இம்மாதிரி மனத்துக்குள் நடைபெறும் நாடகம் நமக்குத் தெரியாமல் நடைபெற்று வருகிறது.

இந்த வயதுக் குழந்தைகளைப் பற்றி ஆராய்ந்து கண்டுபிடிக்கப்பட்ட ஒவ்வோர் உண்மையையும் பலர் அறிய விளம்பரப்படுத்த வேண்டும். ஏனென்றால், சூழ்நிலைக்குத் தக்கபடி இன்னும் மேலான முறையில் குழந்தைகள் அனுசரித்து நடந்துகொள்வதற்கு இவை தெளிவுடன் உதவி புரிய வழி காட்டும். நமக்கு எவ்வளவு சலிப்புண்டாக்கக் கூடியதாய் இருந்தாலும், மனித வாழ்க்கைக்கு உதவி புரியும் எந்தக் காரியமும் மிகமிக மேலான மதிப்புடைய ஒரு முக்கிய விஷயமாகும். குழந்தைக்கு அதன் இளம்பருவத்தில் உதவி புரிபவர் நற்காரியத்தைச் செய்கின்றவர் ஆகின்றனர். மனவளர்ச்சியும், சிறப்பியல்பு தோன்றுவதும் ஆகியவை பற்றிய ஒரு புது விஞ்ஞானம் தோன்ற இருக்கிறது. இதைத் தொடங்கவும், இதை வளர்ப்பதற்காகக் கூடி ஒத்துழைக்கவும் வேண்டியிருக்கிறது. இந்த இடைவேளையில் இந்தச் சுமையைத் தாங்கும் கடமை நம்மைச் சேர்ந்தது.

விலக்கல்களும் குறைபாடுகளும் தோன்றிக் குழந்தையின் ஆளு மையை ஒடுக்கித் தாழ்வான மனிதனை உண்டாக்காமல் தடுக்க வேண்டியிருக்கிறது. இந்தக் குறிக்கோளுடன் நாம் இவற்றைக் கருத்தில் அமைத்துக்கொள்ள வேண்டும் :[1]

(1) முதல் இரண்டு ஆண்டுகள், வாழ்க்கையின் மற்றப்பருவங்களையும் பாதிக்கும்.

(2) குழந்தைக்குப் பெரிய மனச்சக்திகள் உண்டு. இவற்றைப் பற்றிப் பெரியோர் அதிகம் கவனம் செலுத்தியதில்லை.

(3) குழந்தை மிகுந்த உணர்ச்சி பெற்றிருக்கிறது. அதனால், எவ்வகையான பலாத்காரமும் உடனடியாக ஓர் எதிர் வினையை உண்டுபண்ணுவதுடன் நிரந்தரமான குறைபாடு நிலைபெறவும் செய்துவிடுகின்றது.

---

1. குழந்தைமை இரகசியம், அத். 3 பக். 73, முதற்பதிப்பு.

# 13. பொது வளர்ச்சியில் இயக்கத்தின் முதன்மை

கல்விக் கொள்கையில் இயக்கத்தைப் புதுக்கோணத்தில் காண வேண்டிய காலம் நெருங்கிவிட்டது. முக்கியமாகக் குழந்தைப் பருவத்தில் இயக்கத்தின் தன்மையை நாம் சரிவரப் புரிந்துகொள்வதில்லை. பல தப்பு அபிப்பிராயங்களால் அதற்குரிய பெருமதிப்பைக் குறைத்தே எண்ணுகிறோம். பள்ளிக்கூட வாழ்வில் நுண்ணறிவுக்கே முதலிடம் அளிக்கப்படுகிறது. ஆதலால், இயக்கத்தைப் பற்றி எப்பொழுதும் அவ்வளவாக மதிக்கப்படாமலே இருந்து வருகிறது. ஒரு வேளை அங்கீகரிக்கப்பட்டாலும், '**உடற்பயிற்சி**', '**உடலியற் கல்வி**', '**விளையாட்டு**' என்னும் தலைப்புகளின்கீழ் ஏற்கப்படுகின்றது. மன வளர்ச்சியுடன் அது கொண்டிருக்கும் நெருங்கிய தொடர்பை இது புறக்கணிப்பதாகும்.

மனிதனது நரம்பு மண்டலத்தை அதனுடைய எல்லாச் சிக்கல்களும் உட்பட ஆராய்ந்து பார்ப்போம்: முதலாவது, மூளை இருக்கிறது (இதுவே நடுவுநிலை) ; வெவ்வேறு புலன் உறுப்புகள் வேறு இருக்கின்றன. இவை பதிவுகளை ஒன்று சேர்த்து மூளைக்கு அனுப்பி வைக்கின்றன. மூன்றாவதாகத் தசைகள் இருக்கின்றன. நரம்புகள் செய்வதென்ன ? இவை தந்திக் கம்பிகள் (Cable) போல நரம்பு சக்தியைக் கட்டுப்படுத்துகின்றன. எனவே, இந்த ஏற்பாட்டில் மூன்று முக்கியப் பிரிவுகள் இருக்கின்றன. அவை **மூளை, புலன்கள், தசைகள்** என்பவை. இந்த நுண்மையான பொறி நுட்பங்கள் எல்லாம் தொழில் புரிந்து இறுதியில் இயக்கத்தில் முடிவடைகின்றன. உண்மையாகப் பார்க்கும் பொழுது, இயக்கத்தினாலேதான் ஆளுமை தன்னை வெளியாக்க இயலும். உயர்ந்த தத்துவ ஞானிகளும் தங்களுடைய கருத்துகளை வெளிப்படுத்துவதற்குப் பேச்சையோ, எழுத்தையோ உபயோகித்துத் தீர வேண்டியிருக்கிறது. இவ்வாறு செய்வதென்றால், தசை இயக்கம் தேவைப்படு

கிறது. அவருடைய கருத்துகளை வெளிப்படுத்தாது போனால், அவற்ருற் பயன் என்ன ? இவ்வாறு செய்ய வேண்டுமானுல், அவருடைய தசைகளை அவர் உபயோகித்தே தீர வேண்டும்.

விலங்குகளைப் பற்றிக் கவனிப்போம் : இயக்கங்களிலேதான் அவை தம் இயலை வெளிப்படுத்த இயலும் என்பது நமக்கு முதலில் தோற்றுகிறது. மனித வாழ்க்கையின் இந்தப் பகுதியை நாம் கவனியாது புறக்கணிப்பது நியாயமாகத் தோன்றவில்லை.

தசைகளை மத்திய நரம்பு மண்டலத்தின் ஒரு கூருக உடல் இயலார் கருதுகின்றனர். ஏனென்ருல், தசைகள் எல்லாம் ஒன்ருக இயங்கி மனிதனைத் தம் சூழ்நிலையுடன் தொடர்பு கொள்ளச் செய்கின்றன. **மூளை, புலன்கள், தசைகள்** ஆகிய மூன்றின் முழு ஏற்பாடும் '**உறவு மண்டலம்**' (System of Relationship) என்று அடிக்கடி வழங்கப்படுகிறது. அதாவது, மனிதனுடைய உலகத்துடன் அவனை உறவுபடுத்திவிடுகின்றது. உயிருள்ள வகைகளும் உயிரற்ற வகைகளும் அறிமுகப்படுத்தப்படுகின்றன. ஆதலால், மற்ற மக்களுடனும் உறவு ஏற்படுகிறது. இந்த உறவு மண்டலத்தின் துணையின்றி மனிதனுக்குச் சூழ்நிலைத் தொடர்பும் அவனுடைய இனத்தார் தொடர்பும் ஏற்பட இயலாது.

இதனுடன் ஒப்பிடும் பொழுது மனித உடலில் காணப்படும் மற்ற ஏற்பாடுகள் எல்லாம் ஓரளவுக்குத் தன்னலம் கருதியவை என்றே கருத வேண்டியிருக்கிறது. ஏனென்ருல், அவை எல்லாம் அந்த மனிதனது நலத்துக்கே உழைக்கின்றன. அவை அவனை வாழச் செய்கின்றன ; வெற்று வளர்ச்சிக்கே உதவி புரிகின்றன. ஆதலால், அவற்றை வெற்றுடல் வளர்ச்சி **உறுப்புகள்** என்றும், '**மண்டலங்கள்**' என்றும் கூறுகின்றனர்.[1] வெற்றுடல் வளர்ச்சி மண்டலங்கள் (Vegetative Systems) அவற்றின் உடைமைக்காரனை வளர வைத்து வாழ்விக்கின்றன. இது உறவு மண்டலம். இது வெளி உலகத்துடன் அவனை உறவுபடுத்துகிறது.

வெற்றுடல் வளர்ச்சி மண்டலம் மனிதனது உடல்நிலையைப் பாதுகாத்து நல்வாழ்வுடன் இன்புற்றிருக்க ஏற்பாடு செய்கிறது. ஆனுல், நரம்பு மண்டலத்தை வேறு விதமாகவே எண்ண வேண்டியிருக்கிறது. நம் மனப்பதிவுகளின் அழகும், எண்ணங்களின் முழுமையும் இதனுலேதான் கிட்டுகின்றன. உயிர்ப்பூட்டுதலுக்கெல்லாம் (Inspiration) இதுவே காரணமாகும். ஆதலால், இதைக் கேவலம் வெற்று வளர்ச்சி மட்டத்துக்குக் கொண்டு வருவது தப்பான காரியம் ஆகும். நாம் பற்றிக்கொண்டிருக்கும் தரம் எல்லாம் நம்முடைய சொந்த நிறைவுக்

1. Organs and Sistems of Vegetative Life

கென்றே, அல்லது நம்மைத் தெய்விக நிலையில் உயர்த்திக்கொள் வதற்கென்றே தொடர்புள்ளதாயிருந்தால், நம்மிடம் தெய்விகச் செருக்குத் தோன்றும் நிலை ஏற்பட்டுவிடுகிறது. இது பெரும்பிழை யாகும். ஒரு வேளை மனிதனால் இதைவிட வேறு எப்பிழையும் செய்ய இயலாது போலும்! மிருகங்களுக்கு அழகான உடலைப் பெறுவ தும், கண் கவரும் இயக்கங்களைப் புரிவதும் மட்டும் இயல்பன்று; இவை மட்டும் அல்லாமல், அவை இன்னும் பரந்த நோக்கங்களையும் பெற்றிருக்கின்றன. அம்மாதிரியே மனித வாழ்க்கையும் ஒரு குறிக் கோளைப் பெற்றது. அந்தரங்க அழகும், எப்பொழுதும் தெய்விக மேன்மையில் வரவர உயர்வைப் பெறுதலுமே கொள்கையென நினைப்பது போதாது. இயற்கையாக ஒரு மனிதன் உயர்ந்த உடற் கட்டையும், மனச் சீரமைப்பையும் விரும்புவான்—விரும்பத்தான் வேண்டும். ஆனால், அவனது விருப்பம் எல்லாம் இதனுடன் நின்று விட்டால், அவனது வாழ்க்கை வீணாகிவிடும். அவனுக்கு மூளையும் தசைகளும் இருந்து என்ன பயன்? உலகப் பொருளாதார அமைப் பிற் பங்கு கொள்ளாதது எதுவுமே இல்லை. நமக்குத் தெய்விகச் செல்வமும், கலை உணர்ச்சிகளும், பண்பட்ட நெஞ்சமும் கொடுக்கப் பட்டிருந்தால், அவை எல்லாம் நமக்கே உரியவை அல்ல. ஆனால், அப்பேறுகள் எல்லாம் பொதுநலப் பயனுக்கானவையே. தெய்விக வாழ்வின் பொதுவான பொருளாதாரத்தில் அதற்குரிய பங்கு கொள் ளல் வேண்டும்.

தெய்விகச் சத்திகளும் ஒரு வகைச் செல்வம் ஆகும். அவை களும் செயல் முறையில் வர வேண்டும். மற்றவர்களும் அவற்றால் இன்பம் பெற வேண்டும். அவை வெளிப்படுத்தப்பட வேண்டும்; மனித உறவு வட்டத்தை முழுமையாக்கப் பயன்படுத்தப்பட வேண் டும். தனக்கென்றே முயற்சி செய்து பெற்ற ஆன்ம சம்பந்தமான உச்ச நிலையானாலும், அதற்கு மதிப்பில்லை. இவற்றையே நம் குறிக் கோளாகக் கொண்டோமானால், வாழ்க்கையின் முக்கிய நோக்கத்தின் பெரும்பகுதியையே நாம் புறக்கணித்தவர்கள் ஆகிறோம். மறு பிறப் பில் நம்பிக்கை உள்ளவர்களாய் இருந்து, ‘இப்பிறவியில் நன்றாக வாழ்ந்தேனானால் வரு பிறவியில் இன்னும் நல்ல பதவியில் வாழ்வேன்,’ என்று நினைப்பதும் நம் உள்ளத்தில் இருக்கும் சுயநலத்தின் குரலைத் தவிர வேறென்ன? நாம் தெய்விக நிலையை வெற்று உடல் வளர்ச்சி நிலைக்குத் தாழ்த்திவிடுகிறோம். இம்மையிலும் நம்மைப் பற்றியே நினைத்துக்கொண்டு மறுமையிலும் நம்முடைய நலனையே கருதினோ மானால், நாம் என்றுமே நமக்கென்று வாழ்வோராகிவிடுகிறோம். இதற்கு மாறாக, மற்றொரு கருத்தைப் பின் பற்ற வேண்டும். இது தினசரி வாழ்க்கையில் மட்டும் அன்று; கல்வித்துறையிலுந்தான். இயற்கை அன்னை நமக்குப் பல திறமைகளை அளித்திருக்கின்றாள்.

இவை வளர்க்கப்பட வேண்டும்; வளர்க்கப்படுவதோடு நில்லாமல், பயன் படுத்தப்படவும் வேண்டும்.

கீழே தரப்படும் ஒப்புமை (Analogy) உதவியாய் இருக்கலாம்: ஆரோக்கிய வாழ்வுக்கு இருதயம், நுரையீரல், இரைப்பை ஆகியவை ஒத்துழைக்க வேண்டும் என்பதை நாம் அறிவோம். மத்திய நரம்பு மண்டலமாகிய உறவு மண்டலத்துக்கும் இதே விதியை ஏன் அனுசரிக்கக் கூடாது? நமக்கு மூளை, புலன் உறுப்புகள், தசைகள் எல்லாம் இருந்தால், இவைகளும் ஒத்துழைக்க வேண்டும். இந்த மண்டலம் தன்னுடைய ஒவ்வொரு பகுதியையும் உழைக்கச் செய்ய வேண்டும்; எதையும் புறக்கணிக்கக்கூடாது. மூளைச் சக்தியில் உணர்ச்சி பெற வேண்டும் என்று நாம் விரும்புவதாக வைத்துக் கொள்வோம். இதில் வெற்றி பெற வேண்டுமானால், மற்றவைகளையும் இதனுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். எந்தச் செயலையும் நிறைவு பெறச் செய்ய வேண்டுமானால், அந்த வட்டத்தின் இறுதிக்கட்டமாக இயக்கமானது தேவைப்படுகிறது. இதையே வேறு வகையில் கூற வேண்டுமானால், மேலான தெய்விக நிலையை இயக்கத்தாலேதான் பெற இயலும் என்று சொல்ல வேண்டும். இந்தக் கண் கொண்டே இயக்கத்தைப் பற்றித் தீர்ப்புத் கூற வேண்டியிருக்கிறது. அது மத்திய நரம்பு மண்டலத்தின் முழுச் செயல்களைச் சேர்ந்தபடியால் புறக்கணிக்க இயலாதவை. உறவு மண்டலம் என்பது ஒரு முழுமை. அதற்கு மூன்று பிரிவுகள் இருந்தாலும், தனி முழுமை அது ஒன்றுபட்டதாதலால், எல்லாம் சேர்ந்து ஒன்றாக உழைக்கும் பொழுதுதான் அது குறைவில்லாததாகும்.

இயக்கத்தை மேலான செயல்களுக்குச் சம்பந்தப்படாதது என்று கருதுவது இக்காலத்தில் நாம் செய்கின்ற பெரும்பிழையாகும். தசைகள் ஆரோக்கிய வாழ்வுக்குப் பயன்படுத்த வேண்டுபவைதாமே என்று நாம் கருதுகிறோம். உடற்பயிற்சி செய்வதும், மல் யுத்தம் கசரத்து முதலியவை செய்வதும் நம் உடலைப் பாதுகாப்பதற்கும் நன்றாகச் சுவாசித்து உண்டு வாழ்வதற்கும் என்று நினைக்கிறோம். உடல் இயல் உலகில் இது ஓர் இளவரசன் இடையனுக்கு வேலைக்காரன் ஆவது போலத் தோன்றுகிறது. தசை மண்டலமாகிய இளவரசன் வெற்று உடல் வாழ்க்கைக்குப் பயன்படுத்தப்படுகிறான்.

இத்தகைய பெரும்பிழையானது சேதம் விளைவிக்காமல் வேறு என்ன செய்யும்? இயக்கத்தின் வாழ்க்கைக்கும் எண்ணத்தின் வாழ்க்கைக்கும் இடையில் ஒரு பிளவு ஏற்படுகிறது. குழந்தைக்கு உடலும் மனமும் இருப்பதால், அதன் பாடத்திட்டத்தில் விளையாட்டையும் சேர்க்க வேண்டும் என்று நாம் கருதுகிறோம். அப்பொழுது இயற்கை

அன்னையால் கொடுக்கப்பட்ட எந்தப் பகுதியும் புறக்கணிக்கப்பட மாட்டாதென்று எண்ணுகிறோம். எப்பொழுதும் மனத்தை ஒன்றாக வும் உடலை மற்றொன்றாகவும் பிரித்துக் கருதும் பொழுது இரண்டுக்கும் இடையே நிலைத்திருக்க வேண்டிய தொடர்பை நாம் அறுத்துவிடு கிறோம். இதனால், எண்ணத்திலிருந்து செயல் ஒதுக்கப்படுகிறது. இயக்கத்தின் உண்மையான நோக்கம், வெறும்பசியை உண்டாக்கு வதோ, அல்லது நுரையீரலை உறுதி ஆக்குவதோ அன்று. அது எங்கும் நிறைந்த தெய்விகப் பொருளாதார நிலையின் நோக்கத்துக்குப் பணி புரிவதாகும்.

அவற்றுக்கு உரிய இடத்தைக் கொடுக்க வேண்டுமானால், மனித னுடைய இயக்கங்கள் நடுவுநிலையுடனும் மூளையுடனும் ஒருமைப்படுத் தப்பட வேண்டும். **கருத்தும் செயலும் ஒரு காரியத்தின் இரு பகுதிகளாகின்றன.** இது மட்டுமன்று. இயக்கத்திலேதான் உயர்ந்த வாழ்க்கை தன்னை வெளியாக்கிக்கொள்ள இயலும். வேறு விதமாகக் கருதுவது, உடலை மூளை இல்லாத ஒரு தசைத்தொகை என்பது போல ஆகிறது. வெற்றுடம்பின் வளர்ச்சி முன்னேறலாம். ஆனால், மனத்துக்கும் தசைக்கும் இடையே ஏற்பட வேண்டிய இணைப்புப் பின் தங்கிவிடுகிறது. தீர்மானம் செய்கின்ற சத்திக்குத் தசைக் கட்டுப் பாடு இல்லாது போகிறது. அது இருந்தால்தான் தீர்மானத்தை வெளியாக்க இயலும். இந்த முறையில் சுதந்தரம் பெறப்படுவதில்லை. இயற்கை அன்னை தன் பேரறிவால் எது நடைபெற வேண்டும் என்று நினைத்தாளோ, அதை இந்த முறை கலைத்துவிடுகிறது.

மன வளர்ச்சியைப் பற்றிக் கருத்து ஆராயும் பொழுது பலர், ‘ இயக்கத்துக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? நாம் மனத்தைப் பற்றி அல்லவா பேசிக்கொண்டிருக்கிறோம் ?’ என்கின்றனர். அறிவு சார்ந்த செயல்களைப் பற்றி நாம் எண்ணும் பொழுது அசைவற்றுச் சும்மா இருப்பதே நம் மனக்கண் முன் தோன்றும். ஆனால், **மன வளர்ச்சி இயக்கத்துடன் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்;** அத னுடன் சார்பு கொண்டதாய் இருக்க வேண்டும். கல்விக் கொள்கை களும், செயல் முறைகளும் இந்தக் கருத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

தசை மண்டலத்தைப் பற்றியும் இயக்கத்தைப் பற்றியும் பெரும் பாலாரான ஆசிரியர்களுடைய கருத்து இதுவரை எதுவாய் இருந்தது? மூச்சு விடுதல், இரத்த ஓட்டம் ஆகியவைகளுக்கு உதவி புரி வதற்கோ அல்லது உடற்கட்டை வளர்ப்பதற்கோ, தசை மண்டலம் அமைந்திருக்கிறது என்று கருதி வந்தனர். ஆனால், எம்முடைய புதுக்கருத்தென்ன? மனவளர்ச்சிக்கு இயக்கம் மிகவும் முக்கிய மானது. ஆனால், அத்தகைய இயக்கம் மனச் செயல்களுடன்

தொடர்பு கொண்டவைகளாய் இருத்தல் வேண்டும். மனவளர்ச்சியும், அறவளர்ச்சியும் (Spiritual growth) இதன் ஆதரவு பெற்றவையே. இது இல்லாவிடில் மேலான முன்னேற்றமோ, மனத்தைப் பொறுத்த மேலான ஆரோக்கியமோ இருக்க இயலாது.

இதற்கு ஏராளமான சான்றுகள் இயற்கையில் காணப்படுகின்றன. குழந்தைகளின் வளர்ச்சியை அக்கறையுடனும், கவனத்துடனும் பின் தொடர்ந்தோமானுல், இதனுடைய இன்றியமையாமை விளங்கும். ஒரு குழந்தையைக் கூர்ந்து கவனித்து வரும் பொழுது அதன் இயக்கத்தால் மனம் விருத்தி அடைகிறது என்பது தெளிவாகிறது. சான்ருக, பேச்சின் வளர்ச்சியைப் பார்ப்போம். புரிந்து கொள்ளும் சத்தியானது படிப்படியாக வளரும்போது அதனுடன் அது ஒலிகளையும் வார்த்தைகளையும் உருவாக்குவதற்குத் தேவையான தசைகளும் கூடுதலாகப் பயன்படுத்தப்படுகின்றன. குழந்தை தான் புரிந்துகொள்ளும் சத்தியை விரிவாக்குவதற்காக இயக்கங்களை உபயோகிக்கிறது என்பது உலகத்தில் உள்ள பல நாட்டுக் குழந்தைகள் எடுத்துக்காட்டும் உண்மையாகும். மனவளர்ச்சிக்கு இயக்கம் உதவி புரிகிறது. இது இதனுடன் நிற்காமல், இன்னும் தொடர்ந்து பல இயக்கங்களிலும் செயல்களிலும் தன்னைக் காட்டிக்கொள்கிறது. நாம் ஏதோ ஒரு வளையத்தைப் பற்றி ஆராய்வது போல இருக்கிறது. ஏனென்ருல், மனமும் இயக்கமும் ஒரு பேர்வழியின் பகுதிகளேயாகின்றன. புலன்களும் பங்கெடுத்துக்கொள்கின்றன. புலன் செயல்களில் எந்தக் குழந்தைக்குக் குறைந்த அவகாசங்கள் கிடைக்கின்றனவோ, அத்தகைய குழந்தைகள் மனவளர்ச்சியில் தாழ்ந்தவைகளாகவே காணப்படுகின்றன.

மூளையால் இயக்கப்படும் தசைகளுக்கு 'இயக்கு தசைகள்' என்பது பெயர். அது மனவுறுதியின் கீழ்ப்பட்ட தசைகள் என்று பொருள்படுகிறது. மனவுறுதி என்பது மனத்தின் மேலான வெளியீடாகும். முயற்சியின் சத்தியின்றி மனவாழ்வு இருக்கும் என்றே சொல்ல இயலாது. ஆதலால், இயக்கு தசைகள் மனவுறுதியால் இயக்குவிக்கப்பட்டால் அத்தசைகள் மனிதனுக்கு ஒரு வகையான உறுப்பு ஆகிவிடுகின்றன.

மனிதனுடைய தசைகளானவை உடலின் பெரும்பகுதியை உருவாக்கிவிடுகின்றன. எலும்புக்கூடும் எலும்புகளும் தசை தாங்கிகள் ஆகிவிடுகின்றன. எனவே, எலும்புகளும் இந்தத் தசை மண்டலத்துடன் சேர்ந்தவையாகிவிடுகின்றன. விலங்குகளிலும், மனிதனிலும், நமக்குத் தோற்றமளிக்கும் வெளிப்படையுருங்கள் தசைகளாலும் எலும்புகளாலும் அமைந்தவை. நம் கண்களுக்குப்

புலப்படும் உடல் உருவம் இயக்குதசைகளால் ஏற்பட்டவை. இந்தத் தசைகளின் எண்ணிக்கை வரையறைக்கு உட்படாதது. இவற்றிடையே காணப்படும் வேற்றுமைகள், நிறைந்த அக் கறையை ஊட்ட வல்லவை. சில பருத்தும், சில மிகமிக நுண்ணியவையாயும், சில சிறுத்தும், சில நீண்டு நாடாவைப் போன்றும், இப்படிப் பல வடிவங்களைப் பெற்றிருக்கின்றன. இவற்றுள் ஒவ்வொன்றின் நோக்கமும் வெவ்வேறனது. ஒன்று ஒரு பக்கம் இழுத்தால், அதற்கு எதிரிடையாக இழுக்க வேறொரு தசை இருந்தே தீரும். இந்த எதிரிடையான தசைகளுக்கிடையே எவ்வளவுக்கெவ்வளவு வேகமாகவும் நுட்பமாகவும் இயக்கம் நடைபெறுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு பேர்வழியின் இயக்கங்கள் நயத்துடன் அழகு வாய்ந்தனவாய் இருக்கும். அடிக்கடி ஒரு புது இயக்கத்தைக் கூடிய வரையில் பிழையில்லாமல் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் செய்து வரும்போது எதிர் எதிர்ச் சத்திகள் இரண்டையும் ஒன்றுபடுத்தும் ஓர் அற்புதச் செயல் ஆகும். இதன் பலன் வெற்று ஒற்றுமையன்று. இது இரண்டு எதிர்ப்புகளை இணைப்பதாகும் ; இசைவற்றவைகளுக்கு இடையே ஏற்ற ஓர் ஒப்பந்தமாகும்.

இத்தகைய எதிர்ச் சத்திகள் இருக்கின்றன என்பதை நாம் சாதாரணமாக உணர்வதில்லை. நாம் வேண்டுமென்று முயற்சி செய்கின்ற எல்லா இயக்கங்களையும் கட்டுப்படுத்துவதற்காக நாம் இத்தசைகளுக்குக் கடமைப்பட்டிருக்கிறோம். விலங்குகளுக்கு இந்த அந்தரங்க ஒருமைப்பாடு இயற்கை அன்னையால் அளிக்கப்படுகிறது. புலியின் கம்பீரப் பாய்ச்சலும், அணிலின் தாவுதலும், பல எதிர் எதிர்த் தசைகளின் ஒன்றிய இயக்கங்களால் ஏற்பட்ட திறமைகளாகும். இவற்றுள் ஒவ்வொன்றும் அருமையாய் இணைந்து இந்தச் சிறப்பான முயற்சிகளை உருவாக்குகின்றன. ஒரு கடிகாரத்தில் சக்கரங்கள் எதிர்த் திசையில் சுழல்பவை அமைக்கப்பட்டிருக்கின்றன. இது சிக்கலான யந்திர அமைப்பு. சக்கரங்கள் சீராகச் சுழல்வதால் தவறாமல் காலங்காட்டி வருகின்றன. அந்தச் சக்கரங்கள் மிகமிக நுட்பமாக இணைக்கப்பட்டிருப்பதால், இது நடைபெறுகிறது. தசைகளின் இயக்கத்தைக் கருதும் பொழுது கடிகார அமைப்பு நமக்கு நினைவுக்கு வருகிறது.

எனவே, எல்லா இயக்கங்களும் சிக்கல் நிறைந்து ஒரு நுட்பமான யந்திரம் போல இருக்கின்றன. ஆனால், மனிதன் பிறக்கும் பொழுது இந்த இயக்கங்களில் எதுவும் அமைவு பெறவில்லை. குழந்தை இவ்வுலகில் தான் ஆற்றும் இயக்கங்களாலேயே இவை இனிமேல் உருவாக வேண்டியிருக்கின்றன. மனிதனுக்கு ஏற்பட்ட தசைகள் சிறப்பு வாய்ந்தவை. மனிதனல் சாதிக்க முடியாத இயக்

கங்களே இல்லை. அத்தனையும் சாதிக்க வல்ல தசைகள் இவை. விலங்குகளிடம் இத்தகைய தசைகள் காணப்படுவதில்லை. குழந்தை இவற்றை எல்லாம் சாதிக்கும் பொழுது தன் தசைகளை வலுவாக்கிக் கொள்கிறதென்று சொல்கிறோம்? இல்லை; அவற்றை ஒன்றுபடுத்துகிறது என்று கருதுகிறோம். இரண்டுக்கும் வேற்றுமை இல்லையா? விஷயம் என்னவென்றால், மனிதனைப் பொறுத்தமட்டில் அவனுடைய தசைகள் எல்லாம் தொடக்கத்தில் ஒருமைப்பாடு பெறுதவைகளாகவே இருக்கின்றன. அவன் கற்றுக்கொள்கிற எல்லா இயக்கங்களுக்கும் வேண்டிய நரம்பு அமைப்புகளெல்லாம் அவனது மனத்தின் தூண்டுதலால் தொடங்கப்பட்டு, இயக்கங்களால் நிறைவு பெறுகின்றன. அதாவது, ஒருமை பெற வைக்கும் சத்தி ஒன்று குழந்தையின் உள்ளத்தில் இருந்து வருகிறதெனலாம். இந்த ஒருமைப்பாட்டைக் குழந்தை தானாகவே சாதிக்க வல்லது; ஒரு முறை பயின்று மேம்படுத்திக்கொள்கிறது.

விலங்குகளிடத்தில் இயக்கங்களுக்கு வரம்பு காணப்படுவது போல மனிதனுடைய இயக்கங்களுக்கு வரம்பில்லை. அவனுக்குக் கற்றுக்கொள்ளக் கூடியவைகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள இயலும். விலங்குகளுள் சில, ஏறும்; சில, ஓடும்; சில, நீந்தும். இப்படிச் சிறப்பான தனித் திறமைகளை அவை பெற்றிருக்கின்றன. மனிதனிடம் இத்தகைய திறமைகள் பிறப்பில் இல்லை. ஆனால், அதற்குப் பதிலாக அவனிடம் ஒரு திறமை இருக்கிறது. அது இவற்றை எல்லாம் கற்றுக்கொள்ளக்கூடிய திறமை ஆகும்.

இத்தகைய மாறும் தன்மையானது (Versatility) தொழிலைப் பொறுத்திருக்கிறது; பல முறை செய்வதற்கு முயல்கிறது. இவ்வாறு பழகும்பொழுது தசைகள் ஒன்றுபட்டு இயங்குகின்றன. ஏனென்றால், நரம்புகளுக்கிடையில் ஏற்பட்டுள்ள இணைப்புகள் தேவையான இணக்கத்தை எப்படியோ நனவிலா நிலையில் உணர்ந்துகொள்கின்றன. மனவுறுதியால் தூண்டப்பட்டு இந்த இணக்கம் ஏற்படுகிறது.

ஒருவனிடம் காணப்படும் எல்லாத் தசைகளின் சத்தியையும் உண்மையில் எவருமே பெறுவதில்லை. நிறைந்த செல்வத்துடன் ஒருவன் பிறக்கிறான். வழி வழியாக வந்த செல்வத்தில் ஒரு பகுதியை மட்டுமே அவனால் உபயோகிக்க இயலும். ஆனால், அவன் விருப்பம் போல எந்தப் பகுதியை உபயோகிப்பது என்று அவன் தேர்ந்தெடுக்கலாம். இதே போலத்தான் இந்த விஷயத்திலும். ஒருவன் தொழிலில் மல்லன் ஆகலாம். அதனாலேயே அவன் பிறக்கும் பொழுதே அதற்கென்ற தசைகளுடன் பிறந்தான் என்று சொல்வதற்கில்லை. நாட்டியக்

காரர் பிறக்கும் பொழுது நாட்டியத்துக்கென்றே சிறப்பான தசைகளைப் பெற்ருேர் என்று கருத முடியாது. மல்லரும் நாட்டியக் கலைஞரும் தம்முடைய மனவுறுதி கொண்டு தம்மை உருவாக்கிக் கொள்கின்றனர். ஒவ்வொருவரும் தாம்தாம் எதெதைச் செய்ய வேண்டுமென்று விரும்புகின்றனரோ, அதற்குத் தகுந்த வகையில் விரிந்த அளவில் தசைச் சத்திகள் இருக்கின்றன. இவற்றுள் எது வேண்டுமோ, அதைத் தேர்ந்து எடுத்துக்கொண்டு அதன்படி நடந்துகொள்ளலாம். ஒருவனுடைய வளர்ச்சியை வகுப்பதும் நடத்தி வைப்பதும் ஒருவனுடைய மனம் ஆகும். எதுவும் முன் கூட்டியே நிருணயிக்கப்பட்டதன்று. ஆனல், எதுவும் சாதிக்கக் கூடியதுதான். அவனுடைய மன உறுதி மட்டும் ஒத்துழைத்தல் வேண்டும்.

விலங்குகளில் ஓர் இனத்தைச் சேர்ந்தவை ஒரே வகையில் வளரும். ஆனல், மனிதர்களில் எல்லாரும் ஒரே மாதிரிக் கலையை வளர்த்து வந்த பொழுதும், ஒவ்வொருவரும் தனித்தனி முறையில் நடந்துகொள்கின்றனர். இதை நாம் கையெழுத்தில் பார்க்கிருேம். நம் எல்லோராலும் எழுத முடிந்த போதிலும், ஒவ்வொருவர் எழுத்தும் ஒரு தனி வகையாகவே இருக்கிறது. ஒவ்வொரு தனி ஆளுமையும் தனது தனிப்பட்ட முறையிலேயே எதையும் சாதிக்கிறது.

ஒருவனது தொழிலின் தன்மை அவனது இயக்கத்தால் வெளியாக்கப்படுகிறது. ஏனென்ருல், அவனது தொழிலானது அவனுடைய மனத்தின் வெளிப்பாடாகும். அது அவனுடைய மனவாழ்வு. மனிதனுடைய உள்ளத்தின் மையத்திலிருந்து ஆட்சி புரியும் இந்த மனப்பகுதியின் சேவைக்கென்று பல தசைகள் அமைந்திருக்கின்றன. இந்த மனவாழ்வு இயக்கங்களின் கருவூலத்திலே கை வைக்க இயலும்.

ஒருவன் தன் முழுத் தசைகளையும் வளர விடாதிருந்தாலோ, அல்லது சில சமயங்களில் நடைபெறுவது போல ஸ்தூல உடலைப் பெரிதாகப் பயன்படுத்தக்கூடிய தசைகளையே பெருக்கி இருந்தாலோ, இந்த இயக்கங்கள் எந்த மட்டத்தில் நின்றுவிட்டனவோ, அதே தாழ்ந்த மட்டத்தில் அவனுடைய மனமும் நின்றுவிடும். எனவே, ஒருவனுடைய மன வாழ்வு அவனுக்கென்ற அமைந்த தொழிலைப் பொறுத்தோ, அல்லது அவன் விரும்புகின்ற செயலைப் பொறுத்தோ கட்டுப்படுத்தப்படுகிறது. **ஒரு தொழிலும் செய்யாதிருப்பவனுடைய மன வாழ்வு பேராபத்தில் இருக்கிறது.** ஏனென்ருல், எல்லாத் தசைகளையும் உபயோகிக்க இயலாது என்பது உண்மை என்ருலும், உபயோகத்தில் உள்ள சில தசைகள் ஒரு குறிப்பிட்ட அளவுக்குக்

குறைந்தபடி பயன்படுத்தப்படுவது அபாயத்தை விளைவிக்கக் கூடிய தாகிவிடும். இந்த அளவுக்குக் கீழானல் ஒருவனுடைய வாழ்வே பலவீனப்பட்டுவிடுகிறது. இக்காரணத்தால் உடற்பயிற்சியும், விளையாட்டும், பள்ளிக்கூடப் பாடத் திட்டத்தில் ஒரு பகுதியாகக் கட்டாயப்படுத்தப்படுகின்றன. தசைத் தொகையில் பெரும்பகுதி பயன் படாமற்போகாமல் தடுத்துவிடுகிறது.

சாதாரணப் பள்ளிக்கூடங்களில் அனுசரிக்கின்றபடி மனமும் உடலும் மாறிமாறிச் செயல் புரியும் வண்ணம் நாங்களும் எங்கள் முறையில் கையாள வேண்டி இருந்திருக்கும். ஆனல், எங்களுடைய குழந்தைகள் தங்களுடைய முழுத் தசைகளையும் பயன்படுத்துமாறு தங்கள் மன வாழ்க்கையை வெளிப்படுத்தினர்கள். ஒரு குறிப்பிட்ட திறமையைக் கற்றுக்கொள்வதற்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. இது சில நவீன கல்விப் போக்குகளிலிருந்து முற்றிலும் மாறுபடு கிறது. நல்ல குமாஸ்தாவாவதற்குக் குழந்தை நல்ல கையெழுத்தை எழுதிப் பழகுகிறது. வேறு சிலர், மண் வெட்டி வேலை செய்து நல்ல தொழிலாளர்கள் ஆவதற்காக இளமையிலிருந்தே பழகிக்கொள் கின்றனர். ஒரு தொழிலுக்கென்று இம்மாதிரிப் பயிற்சி பெறுவது கல்வி யில் இயக்கத்தின் முக்கிய நோக்கத்துக்குச் சேவை புரியாது என்பது எங்கள் கருத்து. எங்கள் மனத்தில் கொண்டிருக்கும் கருத்து முற்றி லும் மாறுபட்டது. மன வாழ்க்கைக்குத் தேவையான இயக்கங்களைக் குழந்தையே ஒன்றுபடுத்தி நடைமுறையையும் நிருவாகத்தையும் சிறப்படையச் செய்வதென்பதுதான் பிரச்சினை.

இந்தத் தோழமையைப் பெருமல் மூளை தன்னுடைய தொழிலி லிருந்து நட்புப் பிரிவு ஏற்பட்டது போல வளர்கிறது. மனத்தால் நடத் தப்படாத இயக்கங்கள் எல்லாம் அகஸ்மாத்தாக நடக்கின்றன. அவைகளால் தீமையே விளைகிறது. சூழ்நிலையுடன் தொடர்புள்ள வர்கள் மற்றவர்களிடம் உறவு கொள்வோருக்கு இயக்கம் இன்றி யமையாதது. இந்த நிலையில் அது வளர வேண்டும்.

மனிதன் வெளி உலகத்துடன் ஏற்படுத்திக்கொண்டுள்ள உறவு பற்றிய அவனுடைய வாழ்க்கை முழுமைக்கும் சேவை செய்வதே இயக்கத்தின் கடமையாகும்.

இன்றைய கொள்கைகளும் கருத்துகளும் தன்னை நிறை வாக்குதல் தன்னை நிறைவேற்றுதல் ஆகிய இரண்டின்மேல் செல் கின்றன. இயக்கத்தின் உண்மையான நோக்கத்தை நாம் புரிந்து கொண்டவுடன் இந்த அகம் மிகுந்த தன்மை நிச்சயமாக விலகிவிடும். பெறக்கூடிய எல்லா உள்ளார்ந்த சக்திகளையும் இயக்கக் கருத்துக்குள் அடக்கும்படியான நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. சுருங்கச் சொல்லின்,

இயக்கத்தின் தத்துவத்தை நாம் தளராது கடைப்பிடிக்க வேண்டி யிருக்கிறது. உயிருள்ளதற்கும் உயிரற்றதற்கும் உள்ள வேற்றுமை இயக்கம். எனினும், உயிருள்ளவை எப்பொழுதும் அகஸ்மாத்தாக இயங்குவதில்லை. அவை குறிக்கோளை நோக்கியே செல்கின்றன. அவற்றின் வாழ்க்கையும் இயற்கை விதிக்குட்பட்டதே. மேலே குறிப்பிட்டது நமக்கு நன்ருக விளங்குவதற்காக ஒவ்வொன்றும் தத்தம் இயக்கத்தை இழந்துவிட்டால் என்னுகும் என்று கற்பனை செய்து பார்ப்போம். செடி கொடிகளுக்குள் எல்லா இயக்கமும் நின்றுவிட்டால், ஒரு பூவோ கனியோ இனிமேல் காண இயலாது. காற்றிலுள்ள கரியமில வாயுவின் அளவு பேராபத்தை விளைவிக்கும் அளவுக்கு அதிகரித்துவிடும். எல்லா இயக்கமும் நின்ருல், பறவைகள் மரக் கிளைகளின்மேல் அசைவற்றிருந்துவிட்டால், பூச்சிகள் எல்லாம் தரைமேல் விழுந்தால், மாமிசபட்சணிகள் காடுகளில் அலையாமல் இருந்துவிட்டால், மீன்கள் தண்ணீரில் நீந்துவதை நிறுத்திவிட்டால், அப்பொழுது நம்முடைய உலகம் என்ன பயங்கரமுள்ளதாக மாறி விடும்!

அசைவற்றிருப்பது நடவாத காரியம். எல்லா இயக்கங்களும் நின்றுவிட்டால் உலகம் முழுவதுமே குழப்பம் ஏற்பட்டுவிடும். எல்லா ஜீவ ராசிகளும் தங்களுக்கென்று ஒரு குறிக்கோளை வகுத்துக்கொண் டிருக்கின்றன. அந்தப் பயனுள்ள குறிக்கோளுக்கு விரோதமாக உயிரினங்கள் தாறுமாருக இயங்கினுலும், பெருங்குழப்பம் ஏற்பட்டு விடும். ஒவ்வோர் உயிரினத்துக்கும் சிறப்பான ஓர் இயக்கம் இருந்து வருகிறது. அதே போல முன் கூட்டியே ஒரு நோக்கம் இருக்கிறது. சிருஷ்டியில் வெவ்வேறு செயல்களுக்கிடையே ஓர் அமைதியான ஒற்றுமை ஏற்பட்டிருக்கிறது. இந்தச் செயல்களும் ஒரு நோக்கத்தைச் சாதிப்பதற்கென்று ஒற்றுமைப்படுத்தப்படுகின்றன.

இயக்கம் இல்லாமல் வேலை நடைபெருது. மனிதனுடைய வாழ்க் கையும் பெரிய மனிதச் சமுதாயமும் இயக்கத்துடன்பிணைக்கப்பட்டிருக் கின்றன. ஒவ்வொருவரும் ஒரு மாதம் வேலை நிறுத்தம் செய்துவிட்டார் களானுல், உலகமே அழிந்துவிடும். ஆதலால், இயக்கத்துக்குச் சமூகப் பகுதியும் ஒன்றிருக்கிறது. இயக்கம் என்பது ஏதோ உடல் நலத்தை ஒட்டியது என்று கருதிவிடக்கூடாது. உடற்பயிற்சியிலேயே செல வழிந்துவிட்டால் மனிதச் சமூகத்தின் முழுச் சத்தியும் உபயோகப் பட்டுவிடும். ஆக்கப்படுவது ஒன்றும் இராது. சமூக வாழ்வு நிலைத் திருப்பது இயக்கத்தைப் பொறுத்திருக்கிறது. அந்த இயக்கமும் ஆக்கத்தில் ஈடுபடும் நோக்கம் பெற்றவையாய் இருக்கும். சமூக வாழ்வு என்ற கருவில் வளரும் தனிப் பேர்வழி ஆற்றுகின்ற செயல் களெல்லாம் தனக்கும் சமூகத்துக்கும் தேவையானவைகளே. மனி

தனுடைய நடத்தை அல்லது ஒரு விலங்கினுடைய நடத்தை என்று நாம் கூறும்பொழுது, இத்தகைய நோக்குடைய செயல்களையே நாம் குறிப்பிடுகிறோம். அவற்றின் இயக்கங்களின் மையம் அத்தகைய நடத்தைகளே. சுத்தமாயிருத்தல், அல்லது வீட்டு வேலை செய்தல் போன்ற சொந்தத் தேவைகளுக்கானவைகளை மட்டும் அல்ல. ஆனால், இவைகளைச் செய்யும் பொழுது பரந்த நோக்கங்களுக்குச் சேவை செய்யலாம். இவை பிறருடைய நன்மைகளுக்கெனப் பயன்படுகின்றன. இந்த நோக்கம் இல்லாவிடில் மனிதனுடைய இயக்கங்களெல்லாம் என்னாகும்? வெற்று உடற்பயிற்சியாகிவிடும். தனியாக இயங்கு கின்ற இயக்கங்களுள் மிகவும் சிறப்பானது நாட்டியம். இந்த நாட்டிய மும் பார்ப்பதற்கு மக்கள் இல்லை என்றால் பயனற்றுப் போகிறது. சமூக நோக்கமோ அல்லது மேம்பாடுள்ள ஒரு நோக்கமோ இல்லா விடில், எந்த இயக்கமும் வீணாகிறது.

விஸ்வத்திட்டத்தின் நோக்கத்தை உணர்தல் வேண்டும். அதன் படி எல்லாச் சீவராசியும் நடத்தப்படுகின்ற ஓர் இயக்கத்தைப் பொறுத் திருக்கிறது. இந்த இயக்கங்கள் அந்தச் சீவராசிகளின் நனவு நிலைக்கு அப்பாலும் பாதிக்கின்றன. இவற்றைப் புரிந்துகொள்ளும் பொழுது குழந்தையின் தொழிலை நன்றாகப் புரிந்துகொள்ளவும் அதற்கு நல்ல முறையில் வழி காட்டவும் இயலும்.



DEVELOPMENT OF MOVEMENT
இயக்கத்திறன் வளர்ச்சி
படம்-10
0 1 2 3 4 5 6 7 8 9 10 11 1 1 2 3 4 5 6 8 9 10 11 2 1 2 3 4 5 6
ENORMOUS DEVELOPMENT OF THE BRAIN
மூளையின் மாபெரும் வளர்ச்சி
RAPID DEVELOPMENT OF THE CEREBELLUM
சிறு மூளையின் துரித வளர்ச்சி
EQUILIBRIUM IS ACQUIRED IN FOUR STAGES
சம நிலை நான்கு கட்டங்களில் பெறப்படுகிறது
CYCLES OF ACTIVITY
செயற்சுழல்கள்
EQUILIBRIUM
சமநிலை
Control of the Head
தலையைக் கட்டுப்படுத்துதல்
When placed on his face, the child can lift his head and shoulders
குழந்தையைக் குப்புறப்படுக்க வைத்தால் அதனுல் தன் தலையையும் தோள்களையும் தூக்க இயலும்
I
He can sit if helped
பிறர் உதவியுடன் உட்கார முடியும்
II
He can sit by himself
தானுகவே உட்காரமுடியும்
He can hold himself erect but walks on four limbs
நேராக நிற்க முடியும் ஆனுல் தவழ்ந்துதான் முடியும்
His walking movements When held up are made on tip toe
நிறுத்திவைத்தால், கட்டை விரல்களை நடக்கும் பாவனையில் அசைக்கிறது.
III
He can walk if helped
பிறர் உதவியுடன் நடக்கமுடியும்
He places the foot flat on the ground
தன் பாதங்களைத் தரையில் தட்டையாகப் பதிக்கிறது
IV
He wa without
MAXIMUM EFFORT
உச்ச முயற்சி
He walks carrying heavy objects
பளுவான பண்டங்களைத் தூக்கி நடக்கிறது
He catches hold of objects when climbing
ஏறும்பொழுது பொருள்களைப் பற்றிக்கொள்கிறது
He goes up the staircase
படிக்கட்டு ஏறுகிறது
Runs and holds things with certain
GYMNASTICS
உடற் பயிற்
Takes long walks
நெடுந்தொலைவுகள் நடக்கிறது
1 2 3 4 5 6 7 8 9 10 11 1 1 2 4 5 6 7 8 9 10 11 2 1 2 3 4 5 6
THE FIRST THING IS TO BE ALIVE
முதல் காரியம் உயிருடன் இருப்பது
Physiological Adaptations
உடலின் தக அமைப்பு
DEVELOPMENT OF GRASPING
பொருள்களைப் பற்றுதல்
INSTINCTIVE PREHENSION
இயல்பூக்க உணர்வால் பற்றுதல்
HE STUDIES HIS HAND
தன் கையை ஆராய்கிறது
INTENTIONAL GRASPING OF OBJECTS
வேண்டுமென்றே பொருள்களைப் பற்றுகிறது
PREHENSION BECOMES PURPOSIVE
பொருள்களைப் பற்றுதல் நோக்கத்துடன் தோன்றுகிறது
GRASPING OF SOMETHING SELECTED (CHOICE)
தேர்ந்தெடுத்துப் பற்றுதல் (தேர்தல்)
(WORK AND REPETITION PRACTICE)
செயல்புரிதல், செய்தவற்றை மீண்டும் பயிற்சி செய்தல்
DISCRIMINATION BETWEEN DESIRES
விருப்பங்களுள் தேர்ந்தெடுத்தல்
STRENGTH
வலிமை
LIFTS HEAVY OBJECTS IN HIS ARMS
பளுவான பண்டங்களைக் கையில் தூக்குகிறது
HANDS USED TO HELP IN CLIMBING
மேலேறுவதற்குக் கைகள் பயன்படுத்தப்படுகின்றன
CO-ORDINATION BY MEANS OF EXPERIENCE
அனுபவ வாயிலாகச் செயல் இணக்கம்
EXERCISES WITH THE HAND
கையால் பயிற்சிகள்
WORK LEADING TO INDEPENDENCE
தனியே இயங்கத் துணை செய்யும் தொழில் முயற்சி
MOVES THINGS ABOUT WITH A PURPOSE
நோக்கத்துடன் பண்டங்களை
WASHING
CROCKERY
"HELP ME TO DO IT BY MYSELF"
" அதை நானே செய்துகொள்ள விட்டுவிடுங்கள் " என்ற எண்ணம்
HAND
கை



மொழி வளர்ச்சி
1
2
6
1 2 3 4 5 6 7 8 9 10 11
1 2 3 4 5 6 7 8 9 10
1 2 3 4 5 6
MIELINIZATION
AUDITIVE
கேள்வி
At two months he turns at the sound of a voice
இரண்டாம் திங்களில் குரல் ஒலிக்கு நேராகத் திரும்புகிறது
VISUAL
பார்வை
Looks intensely at the mouth that speaks
பேசுபவரின் வாயைக் கூர்ந்து பார்க்கிறது
MOTOR
இயக்கம்
1st SYLLABL
Repeats the san syllable again and again
திரும்பத் திரும்ப உச்சரிக்கிறது
Absorption of language. Formation of
BABBLING
மொழியை மனத்தில் வாங்கிக்கொள்ளுதல் மழலையின் தோற்றம்
FIRST INTENTIONAL WORD
பொருள் அறிந்து பயன்படுத்தும் முதல் சொல்
HE BECOMES CONSCIOUS THAT LANGUAGE HAS A MEANING
மொழி பொருளுடையது என உணர ஆரம்பிக்கிறது
" Baby Talk "-prevalence of vowels and interjections Mimetic words
" மழலைப் பேச்சு "
உயிரெழுத்துக்களும் வியப்புச் சொற்களும் பரவியிருத்தல். பிறருடைய சொற்களைத் திருப்பிக் கூறுகிறது
HE UNDERSTANDS THE SENSE EXPRESSED IN LANGUAGE
மொழி வெளியிடும் கருத்தைப் புரிந்துகொள்கிறது
Phrases formed without regard to grammar. " Fusive " words and single words with a diffused meaning
இலக்கணத்தைப் பொருட் படுத்தாமல் தொடர்கள் உருவாகின்றன ஒரு சொல் வாக்கியங்களும் தெளிவிலாப் பொருளுடை இணைப்புச் சொற்களும் தோன்றுகின்றன
NOUNS
பெயர்ச்சொற்கள்
HE USES SUBSTANTIVES
பொருள்களைக் குறிப்பிடும் சொற்களைப் பயன்படுத்துகிறது
Sudden increase an explosive phen of development. of nouns and prep verbs and adjec
PHRASES OF FEW WORDS
சில சொற்கள்கொண்ட தொடர்களின் தோற்றம்
EXPLOSIO WORD
சொற்களின்
GRAMMA
Substantives,
Completion of bulary with prefixes suffixes conjunctions, njugations of verbs, adverbs.
The variety of phrases increases with surprising rapidity co-ordinated and subordinated phrases with the use of the subjunctive.
வியப்பூட்டும் வேகத்தில் தொடர் வகைகள் அதிகரிக்கின்றன............
சார்புத் தொடர்களும் வியங்கோளுடன் அதிகரிக்கின்றன.
LANGUAGE IS NOW COMPLETE
மொழி வளர்ச்சி இப்பொழுது முழுமையாகிறது
SYNTAX
சொற்றொடர் இலக்கணம்
Thoughts are also expressed concerning the future
எதிர்காலம்பற்றிய எண்ணங்களும் வெளியிடப்படுகின்றன.
EXPLOSION OF PHRASES
தொடர்களின் திடீர் வெளிப்பாடு
Words are joined to express thoughts
எண்ணங்களை வெளிப்படுத்த சொற்கள்

# 14. நுண்ணறிவும் கையும்.

இயக்கத்தின் பொறி சார்ந்த வளர்ச்சியைப் பற்றி ஆராய்தல் மிகவும் அக்கறை ஊட்டுவதாக இருக்கும். அதனுடைய சிக்கல்களின் காரணம் மட்டுமன்றி, அது முன்னேறும் ஒவ்வொரு கட்டமும் மிகவும் தெளிவாக இருக்கும்.

பத்தாம் படத்தில் இயக்கத்தின் வளர்ச்சியை இரண்டு கிடைக் கோடுகளாலும் அவற்றின்மேல் நிற்கும் பல முக்கோணங்களாலும் காட்டியிருக்கிறேன். நீல முக்கோணங்கள் அவ்வாறு மாத இடைக் காலத்தைக் குறிக்கின்றன. சிவப்புச் சிகரமுடையவை ஆண்டு இடைக்காலத்தைக் குறிக்கின்றன. கீழ்க்கோடு கையின் வளர்ச்சியைக் குறிக்கிறது. மேற்கோடு சம நிலையையும், நடையையும் குறிக்கும். எனவே, இப்படம் கை கால்களின் வளர்ச்சியைக் காட்டும். இப்படம் கையின் வளர்ச்சியையும் காலின் வளர்ச்சியையும் தனித்தனியாகக் காட்டுகிறது.

தாழ்ந்த விலங்குகளில் கைகால்கள் சேர்ந்தே வேலை செய்கின்றன. ஆனால், மனிதனில் கைகள் வேருகவும் கால்கள் வேருகவும் வளர்கின்றன. இரண்டின் நோக்கங்களும் வெவ்வேருனவை என்பது இதிலிருந்து தெளிவாகிறது. சமநிலையில் இருப்பதும் நடப்பதும் எல்லா மக்களிடமும் ஒரே ஒழுங்கில் நடை பெறுகின்றன. இதை ஓர் உயிர்ச் சம்பவம் (Biological event) என்று கருதலாம். மனிதன் பிறந்தாலுல் கட்டாயம் நடப்பான் என்று உறுதியாகக் கூறலாம். எல்லா மனிதர்களும் தங்கள் கால்களை உபயோகிப்பதில் ஒரேமாதிரி இருப்பார்கள் என்பதும் உறுதியானது. ஆனல், குறிப்பிட்ட ஒரு மனிதன் தன் கைகளை எவ்வாறு பயன்படுத்தப் போகிருன் என்பது எவராலும் முன் கூட்டியே கூற இயலாது. இக்காலச் சின்னஞ்சிறு குழந்தைகள் வருங்காலத்தில் என்னென்ன திறமைகளைப் பெறப் போகின்றன என்று எவரால் கூற இயலும்? கடந்த பரம்பரை மக்கள் வேறு திறமைகளை வளர்த்துக்கொண்டிருந்தார்கள். கைகளைப்

பற்றியோ, கால்களைப் பற்றியோ நாம் ஆராய்வதற்குத் தகுந்த முறையில் நாம் வரைந்து காட்டியுள்ள இரு கோடுகளும் வெவ்வேறு பொருளை எடுத்துக் காட்டும்.

பாதங்கள் செயல் ஆற்றுவது உயிரியல் அடிப்படையைக் கொண்டது என்பதற்கு ஐயமில்லை. அது மூளையின் உள் வளர்ச்சியுடன் தொடர்பும் கொண்டிருக்கிறது. எல்லா விலங்குகளும் நான்கு பாதங்களால் நடக்கும் பொழுது, மனிதன் ஒருவன்தான் இரு பாதங்களால் நடப்பவன். மனிதன் ஒரு முறை சம நிலையைப் பெற்றுவிட்டானானல் இந்தக் கஷ்டமான நிலையை இரு பாதங்களாலேயே நிலை பெறச் செய்ய இயலும். இந்தச் சமநிலையை அவனால் சுலபமாகப் பெற முடிவதில்லை. இது நீண்ட கால முயற்சியால் பெறக் கூடிய உண்மையான திறமையாகும். இதைச் சாதிப்பதற்கு ஒருவன் தன்னுடைய முழுப்பாதத்தையும் தரைமேல் ஊன்ற வேண்டியிருக்கிறது. ஆனல், பெரும்பாலான விலங்குகள் தம் கால் விரல்களாலேயே நடக்கின்றன. நான்கு கால்களும் உபயோகப்படும்பொழுது உடலைத் தாங்குவதற்கு நிறைந்த ஆதரவுகள் இருக்கின்றன. மனிதனுடைய பாதத்தை மூன்று நோக்கங்களுடன் ஆராயலாம். உடலியல், உயிரியல், உடற்கூறுபாட்டியல் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றும் அக்கறையுடையது.

கைக்கு உயிர் இயல் வழியாகப் பாதம் இருப்பதில்லை. கையினுடைய இயக்கங்களும் முன் கூட்டியே நிருணயிக்கப் பட்டவையும் அல்ல. அப்படியானல், கையின் வளர்ச்சிக்கு வழி காட்டி எது? உடலியலுடனும் உயிரியலுடனும் தொடர்பு கொள்ளாத காரணத்தால், கைகளுக்கு வழி காட்டி மனமாகத்தான் இருக்க வேண்டும். கை மனிதனுடைய ஆன்மாவுடன் நேர்த் தொடர்புகொண்டிருக்கிறது. தனி மனிதனுடைய ஆன்மாவுடன் மட்டும் அல்ல; பற்பல காலங்களில் பல்வேறு இடங்களில் தங்களைப் பொருத்தமான முறையில் அமைத்துக்கொண்ட மனிதர்கள் போக்குடனும் தொடர்பு கொண்டிருக்கிறது. மனிதனுடைய கைத்திறன் அவனுடைய மனவளர்ச்சியுடன் பிணைக்கப்பட்டிருக்கிறது. சரித்திரங்களைக் கொண்டு பார்க்கும் அளவில் நாகரிக வளர்ச்சிக்கும் மனிதன் கைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது. மனிதனுடைய எண்ணங்களைக் கைகள் வெளியாக்குகின்றன. மனிதன் முதலில் தரைமேல் தோன்றியதிலிருந்து அவனுடைய கைவேலைகள் சரித்திரச் சான்றுகளாகி நிலைத்துவிட்டிருக்கின்றன. ஒவ்வொரு நாகரிகத்தின் உச்சநிலையும் அதனுடைய கலைத்திறனை அறிகுறியாக விட்டுச் சென்றிருக்கிறது. இந்தியாவில் அற்புதமான கலைத்திறன் இருந்து வந்தது. அதைப்போல இக்காலத்தில் காண்பது அரிது. அற்புதமான வேலைப்

பாடுகளின் அறிகுறிகள் எகிப்து நாட்டில் காணப்படுகின்றன. இதைக் காட்டிலும் தாழ்ந்த நிலையில் இருந்துவந்த பழைய நாகரிகங்களும் அவற்றின் சான்றுகளை விட்டுச் சென்றிருக்கின்றன. இச்சான்று கள் அவ்வளவு உயர்ந்த வேலைப்பாடு பெற்றவை அல்ல.

எனவே, கைத்திறத்தின் வளர்ச்சி மனவளர்ச்சியுடன் இணைந்து செல்கிறது. வேலைப்பாடு எவ்வளவுக்கெவ்வளவு நுட்பமாக இருக் கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஒரு நுண்ணறிவு படைத்த மனத்தின் கவனமும் மேற்பார்வையும் தேவைப்படுகின்றன. ஐரோப்பாவில் இடைக்காலத்தில் பெரிய மனவெழுச்சி தோன்றிய காலப்பகுதி இருந் தது. அப்பொழுது புதுக்கருத்துகளை எடுத்துக்கூறும் புத்தகங்களும் கை ஏடுகளும் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. தெய்விக வாழ்க்கை லௌகிக வாழ்க்கைக்குத் தொடர்பில்லாமல் எட்ட இருப் பது போல இருந்தாலும், அதிலும் இந்த அற்புதங்களுக்கு இடம் இருந்தது. கோவில்களில் அமைந்துள்ள கட்டடக்கலையின் அற்புதங் களைக் கண்டு நாம் மெச்சுகிறோம். இந்தக் கோவில்கள் பொது மக் களைப் பூசைக்கு அழைக்கின்றன. தெய்விக வாழ்வு எங்கிருந்ததோ, அங்குக் கோவில்கள் தோன்றியிருக்கின்றன.

செயின்ட்ஃபிரான்சிஸ் ஆஃப் அசிசி (St. Francis of Assisi) என் பவர் மக்களுள் மிகவும் எளியவராய் இருந்து பரிசுத்த ஆன்மாவைப் பெற்ற துறவியார். அவர் இவ்வாறு கூறியதாகச் சொல்கின்றனர்கள்:

'இப்பெருங்குன்றுகளைப் பாருங்கள். இவைகள் நம் கோவிலின் மதில்கள்; நம் இருதயத்தின் மனவெழுச்சிகள்!'

எனினும், ஒருநாள் இவரும் இவருடைய வைதிகத் தோழர்களும் மாதா கோவில் ஒன்று கட்டுவதற்கு அழைக்கப்பட்டனர். இவரும் இவருடைய தோழர்களும் மிகவும் ஏழைகளானபடியால், செதுக்கப் படாத கற்களை அருகில் கிடைத்தபடியே தங்கள் தோள்மேல் சுமந்து சென்று மாதாகோவிலைக் கட்டிவைத்தார்கள். இதன் உண்மை என்ன? **சுதந்தரமான உள்ளம் படைத்திருந்தால் அது ஒரு தொழி லில் வெளிக்காட்டி ஆகவேண்டும்.** அதற்குக் கரங்கள் தேவை. எங்குப் பார்த்தாலும் மனிதனுடைய கைத்தொழிற்சின்னங்கள் காணப் படுகின்றன. இவற்றின் மூலமாக அவன் காலத்து எண்ணங்களும் உணர்ச்சிகளும் என்னவாய் இருந்திருக்கலாம் என்பதை ஒருவாறு நாம் யூகித்துக்கொள்ளலாம்.

மிகவும் பழங்காலத்தைப் பார்ப்போம். எலும்புகள்கூட நிலைத் திராத மங்கலான பழங்காலத்தைப் புரிந்துகொள்வதற்கு நமக்கு உதவுவது எது? அந்தக் காலத்தில் வாழ்ந்தவர்களைப்பற்றி

நமக்கு அறிமுகப்படுத்துபவை எவை ? அவர்களுடைய கலைதான். சரித்திர காலத்திற்கு முற்பட்ட பழங்காலங்களில் உடல் வலிமையை அடிப்படையாகக்கொண்ட புராதன நாகரிகங்கள் இருந்ததற்குச் சான்றுகள் இருக்கின்றன. ஞாபகக் கட்டடங்களும், கலை அமைப்புகளும், பெருங்கற்களால் ஆனவை. இவைகளைக் கண்டு நாம் ' இவை எங்ஙனம் இவ்வாறு அமைந்தன !' என்று வியப்படைகிறோம். வேறு இடங்களில், மிக மிக நுண்மையான கலை வேலைப்பாடுகள் தோற்றம் அளிக்கின்றன. இவை முன்னிலும் உயர்ந்த நாகரிகத்தின் அறிகுறி என்பதை வாதாட இடமில்லாமல் காட்டிவிடுகின்றன. ஆதலால், **மனிதனுடைய நுண்ணறிவையும், தெய்விக வாழ்வையும், அவனுடைய மனவெழுச்சியையும் ஒட்டி அவன் கைகளும் பின் தொடர்ந்திருக்கின்றன** எனலாம். இவைகளால் விடப்பட்ட பகுதிகள் அவனைக் காட்டிக்கொடுக்கின்றன. விஷயங்களைப்பற்றி இந்த உள இயல் நோக்கம் இல்லாமல் பார்க்கும் பொழுதும் மனிதனுடைய சூழ்நிலையில் ஏற்படுத்தப்பெற்றுள்ள எல்லா மாறுதல்களும் அவனுடைய கைகளால் ஆனவை என்பது நமக்குப் புலனாகிறது. நுண்ணறிவின் முக்கிய நோக்கம் கரங்களுக்கு வழி காட்டுவது போலத் தோன்றுகிறது. மனிதர் தம் கருத்துகளை வெளிப்படுத்துவதற்குத் தம்முடைய வாக்கையே பயன்படுத்திக்கொண்டிருந்தனர் என்று வைத்துக்கொள்வோம். அதாவது, அவர்களுடைய அறிவையெல்லாம் வார்த்தைகளால் மட்டும் வெளிப்படுத்தியிருந்தார்களானால், பழைய பரம்பரைகளைப்பற்றிய ஒரு சான்றும் நிலைத்திராது. **மனத்தின் தோழமை கொண்ட கைக்கு** நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அந்தக் கைகளாலேயே நாகரிகம் தோன்றியிருக்கிறது. நமக்கு வழி வகுத்தலாகிய இந்தப் பேற்றினுக்கு மூலகாரணமாயிருந்தது மனிதனுடைய கரமே.

எனவே, கரங்கள் மனவாழ்வுடன் இணைந்திருக்கின்றன. பழைய ரேகை சாஸ்திரம் மனித இனத்தின் சரித்திரமே உள்ளங் கையில் பதிந்திருக்கிறதென்று கூறவில்லையா ? இது ஒரு தெய்விக உறுப்பு என்றும் எடுத்துக்காட்டவில்லையா ? ஆதலால், குழந்தையின் உள இயல் வளர்ச்சியைப்பற்றி ஆராயும் பொழுது அதனுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட குழந்தையின் கைவேலைகளையும் ஆராய்தல்வேண்டும். இவ்வேலைகள் மனத்தால் தூண்டப்படுகின்றன. கையும் மனமும் ஒன்றோடொன்று இணைந்திருக்கின்றன என்பதை கைத்தொழிலைத் தவிர வேறு எதுவும் அவ்வளவு தெளிவாக எடுத்துக்காட்டாது.

இதே கருத்தை வேறு விதமாகவும் கூறலாம். கையின் உதவியில்லாமல் குழந்தையின் நுண்ணறிவு ஓரளவுக்கு வளர்ச்சி பெற இயலும். ஆனால், அது கரங்களுடன் வளர்ந்தால், அப்பொழுது நுண்

ணறிவு இன்னும் உயர்ந்த நிலையை அடைகிறது. அப்பொழுது குழந்தையின் சிறப்பியல்களும் இன்னும் உறுதி பெறுகின்றன. 'வெற்று உள இயல் சம்பந்தமானதுதானே' என்று நாம் கருதுகின்ற இதில் கூடக் குழந்தையின் சிறப்பியல்கள் தாழ்ந்த நிலையில் இல்லாமலிருக்க வேண்டுமானால், தன் சூழ்நிலையில் குழந்தையின் இயக்கும் சக்திகளைப் பயன்படுத்தத் தகுந்த அவகாசங்களைப் பெறவேண்டும். நான் என் அனுபவத்தில் கண்டது இது. ஏதோ காரணத்தால் குழந்தை தன் கரங்களை உபயோகிக்காமல் இருந்திருந்தால், அதனுடைய சிறப்பியலும் தாழ்ந்த வளர்ச்சியையே பெற்றிருக்கிறது; கீழ்ப்படியச் சக்தியற்றதாயும், தான் தொடங்காற்றலைப் (Initiative) பெறுததாயும், சோம்பலும் சோகமும் பெற்றதாயும் இருக்கிறது. ஆனால், தம் கரங்களை உபயோகித்து வேலை செய்யக்கூடிய வாய்ப்புப்பெற்ற குழந்தைகள் அவற்றின் வளர்ச்சியில் எட்டித்தாவுகின்றன; நன்றாக வெளியாக்க வல்ல சிறப்பியலைப் பெறும் வலிவையும் அடைகின்றன.

எகிப்து நாட்டின் சரித்திரத்தில் அக்கறையான ஒரு காலம் இத்தருணத்தில் நம் நினைவுக்கு வருகிறது. அப்பொழுது திறமையான கைப்பாடுகள் எங்கும் காட்டப்பட்டன; கலை, சிற்பம், சமயம் ஆகிய எல்லாத் துறைகளிலும் காணப்பெற்றன. அக்காலத்தில் ஒருவனுடைய சவச்சமாதியின்மேல் ஒருவனைப்பற்றிச் சிறப்பாகக் கூறப்படுவது என்னவென்றால், 'சிறப்பியல்பு பெற்றவன்' என்று பொறிக்கப்பட்டிருப்பதே. ஆதலால், அந்நாட்டு மக்களுக்குச் சிறப்பியல்பு வளர்ச்சி மிகவும் சிறந்ததாகத் தோன்றியிருக்க வேண்டும். அவர்களுடைய கைப்பாட்டுத் திறன்கள் உன்னத நிலையை அடைந்திருந்தன. சிறப்பியல்பின் வளர்ச்சியுடனும் நாகரிகத்துடனும் கரத்தின் இயக்கங்களும் தொடர்பு கொண்டு சரித்திரத்தில் பங்கு கொண்டிருக்கின்றனவென்று மறுபடியும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. மேலும், ஆளுமையுடன் கரம் தொடர்பு கொண்டிருப்பது தெளிவாகிறது.

இதைக் கவனித்த பிறகு இந்த மக்களெல்லாம் எவ்வாறு நடந்தார்கள் என்று பார்ப்போமானால், எப்படி இருக்கும்? எப்பொழுதும் இரு கால்களால் நேராக, சமநிலை தவறாமல் நடந்திருப்பார்கள். வேறெப்படி நடந்திருக்க இயலும்? ஒரு வேளை அவர்கள் நம்மைவிட வேறு வகையில் நாட்டியம் ஆடியிருக்கலாம்; ஓடி இருக்கலாம். ஆனால், என்ன இருந்த போதிலும் அவர்கள் இங்குமங்கும் நடமாடுவதற்குத் தம் கால்களையே உபயோகித்திருப்பார்கள்.

இயக்கத்தின் வளர்ச்சியானது இருதலைப்பட்டது. உயிர் இயல் விதிகளுடன் இணைக்கப்பட்டிருப்பது ஒரு புறம்; மற்றொன்று, அது அந்தரங்க வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. இரண்டுக்கும் தசைகளின் உதவி தேவைப்படத்தான் செய்கிறது. குழந்தையைப்

பற்றி ஆராயும் பொழுது நாம் இருவகை வளர்ச்சிகளைத் தொடர்ந்து கவனிக்க வேண்டும். **கரத்தின் வளர்ச்சியும், நடந்து சமநிலையைச் சாதிப்பதும்** ஆகிய இவை இரண்டையும் ஆராய்தல் வேண்டும். பத்தாம் படத்தைப் பார்த்தால், ஒன்றரை வயதிலேதான் இவ்விரண்டுக்கும் ஓர் இணைப்பு ஏற்படுவதை நாம் கவனிக்கிறோம். குழந்தை இந்த வயதில் பளுவான பொருள்களைக் கைகளால் தூக்கிச் செல்ல வேண்டும் என்று விரும்புகிறது. அப்பொழுது கால்கள் அதைத் தாங்கவேண்டியிருக்கிறது. மனிதன் எங்கெங்குச் சென்று வேலை செய்ய வேண்டும் என்று எண்ணுகிறானோ, அங்கங்கு அவனை எடுத்துச் செல்வன கால்களே. இது இயற்கை. ஆனால், அவன் புரிகின்ற தொழில் தன் கரங்களால் ஆவது. அவன் நெடுந்தூரம் நடந்து செல்லலாம். உண்மையில் மனிதன் பூமியின் பெரும்பரப்பைத் தன்னுடையதாக்கிக் கொண்டிருக்கிறான். இவ்வாறு நிலத்தை வென்றுகொண்டிருக்கும் பொழுது மக்கள் தோன்றி மறைந்தார்கள். அவர்கள் மறைந்ததற்குச் சான்றாக விட்டுச் சென்றவை எல்லாம் அவர்களுடைய கை வேலைப்பாடுகளே.

மொழியைப்பற்றி நாம் ஆராயும் பொழுது **பேச்சு, கேள்வியுடன் முக்கியத் தொடர்பு கொண்டிருக்கிறது** என்பதைக் கண்டோம். ஆனால், **செயல், பார்வையுடன் தொடர்பு கொண்டிருக்கிறது.** ஏனென்றால், நம் பாதத்தை எங்கு வைக்கிறோம் என்பதை நாம் முதலில் காணும் திறமை பெற வேண்டும். நம் கரங்கள் செயல் ஆற்றும் பொழுது அவை என்ன செய்கின்றன என்று நாம் காண வேண்டும். கேள்வியும் பார்வையும் ஆகிய இவ்விரு புலன்களும் குழந்தையின் உடல் உளவளர்ச்சிகளில் மிகவும் பங்கு கொள்பவைகளாகும். குழந்தையின் மன வாழ்க்கையில் முதலில் விழிப்புப் பெறுவது தன் சூழ்நிலையைக் கூர்ந்து கவனிக்கக் கூடிய சக்தி. இனிமேல் அது நடமாடப் போகிற சூழ்நிலையை அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறதென்பது தெளிவு. அது முதலில் இயங்குவதற்கு முன் கூர்ந்து கவனித்தல் என்பது முதற்படி. அப்படி அது இயங்கத் தொடங்கும்பொழுது இதற்குமுன் கவனித்து, இது இது இன்னது என்று தெரிந்துகொண்டுள்ள சக்தி அதற்கு வழி காட்டும். நாம் எங்கிருக்கிறோம் என்று உணர்ந்துகொண்டு நடமாடுவது என்பது ஏற்கெனவே பெற்றுள்ள மன வளர்ச்சியின் அளவைப் பொறுத்திருக்கிறது. இக்காரணத்தாலேதான் பிறந்த குழந்தை எங்கும் இயங்காமல் படுத்தே கிடக்கிறது. பிறகு, அது இயங்க ஆரம்பிக்கும் பொழுது அதனுடைய மனம் காட்டும் வழியைப் பின் பற்ற இயலும்.

குழந்தை இயக்கத்தின் முதல் அறிகுறியை அது ஒரு பொருளைப் பற்றுவதிலோ எடுப்பதிலோ பார்க்கலாம். **பற்றுதல் திறமை** ஏற்பட்ட பிறகே இதைச் சாதித்த கையைப்பற்றிக் கூர்ந்து கவனிக்க ஆரம்பிக்

கிறது. ஒரு பொருளைப் பற்றுதல் என்பது, நனவிலா நிலையில் முதலில் ஏற்பட்டது; இப்பொழுது நனவுடன் ஏற்படுகிறது. நாம் குழந்தையைக் கவனித்தோமானால், அதனுடைய கவனத்தை முதலில் பெறுவது அதனுடைய கரங்களேயன்றிப் பாதங்களல்ல என்பது விளங்கும். ஒரு முறை இது நடைபெற்றுவிட்டால், பற்றுதல் வேகமாக முன்னேறுகிறது. இதற்கு முன் இது இயல்பூக்கத்தால் நடைபெற்று வந்தது. ஆனால், இனிமேல் வேண்டுமென்றே செய்கிறது. **பத்தாம் மாதத்தில் குழந்தையைச் சுற்றிலும் உள்ள உலகத்தின்மேல் அதன் கருத்துச் சென்று அக்கறையைத் தூண்டிவிட்டிருக்கிறது.** அது இப்பொழுது அவ்வுலகத்தைத் தன்வசப்படுத்த விரும்புகிறது. தன்னுடைய விருப்பங்களுக்கு இணங்கி வேண்டுமென்று பற்றி வந்ததெல்லாம் வெறும் பற்றுதலுடன் நின்றுவிடுவதில்லை. இது இனிமேல் கரங்களின் உண்மையான பயிற்சியாக மாறுகின்றது. பண்டங்களை இங்குமங்குமாக மாற்றி வைப்பதால் இந்த மாற்றத்தை இது வெளிக்காட்டுகிறது. குழந்தை தன் சூழ்நிலையைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொண்டிருக்கிறது; அதைப்பற்றி நிறைந்த விருப்பத்தையும் பெற்றிருக்கிறது. ஆண்டு நிறைவதற்குள் அதனுடைய கரங்கள் சுறுசுறுப்பாகப் பல வழிகளில் செயல் புரியத் தொடங்கிவிடுகின்றன. இவை யாவும் அதற்குப் பற்பல தொழில்களாகும் என்றே கூறலாம். பீரோக்களைத் திறப்பதும் மூடுவதும், பெட்டிகளைத் திறந்து மூடுவதும், மேசையின் (டிராயர்களை) தட்டுகளை இழுப்பதும் தள்ளுவதும், புட்டிகளில் உள்ள அடைப்பான்களை நீக்குவதும் அடைப்பதும், கூடைக்குள் கிடக்கும் சில்லறைச் சாமான்களை எடுப்பதும் மறுபடியும் வைப்பதும் ஆகிய இவை போன்றவை, அதனுடைய தொழிலாகின்றன, இத்தகைய விடாமுயற்சிகளால் மேன்மேலும் கரங்களைக் கட்டுப்படுத்தும் சத்திகளைக் குழந்தை பெற்று வருகிறது.

இவ்வாறு நடைபெற்று வரும்பொழுது பாதங்கள் என்னாயின? இங்கு நுண்ணறிவோ அல்லது நனவு நிலையோ குறுக்கிடவேண்டுவதில்லை. இங்கு நடைபெறுவது உடற்கூறு மாறுபாடு. சிறு மூளை வேகமாக வளர்கிறது. தசைகளைக் கட்டுப்படுத்திச் சமநிலையைப் பெறச் செய்யும் தனி உறுப்பு, சிறு மூளையே ஆகும்.

இது வரை அசைவற்றுக் கிடக்கும் ஒரு பொருளை எழுந்து தன் சம நிலையை நிலை நாட்டென்று ஏதோ ஒரு மணி அடித்து எழுப்பி விட்டதுபோல இருக்கிறது இச்செயல். சூழ்நிலை இதில் ஒரு பங்கும் எடுத்துக்கொள்வதில்லை. கட்டளைகள் மூளையிலிருந்து வருகின்றன. குழந்தை தன் முயற்சியினாலும் சிறிதளவு உதவியுடனும் முதலில் உட்காருகிறது; பிறகு தட்டுத்தடுமாறி நிற்கிறது.

மனிதன் நேராக நிற்பதற்குள் நான்கு பகுதிகள் இருப்பதாக இப்பொழுது உள இயலார் கூறுகின்றனர். அவன் முதல் பருவத்தில் உட்காருகிருன்; இரண்டாம் பருவத்தில் குப்புற உருண்டு தவழ ஆரம்பிக்கிருன். இந்தப் பருவத்தில் அவனுக்குப் பெரியவர்கள் தங்கள் இரு விரல்களையும் நீட்டினூர்களானுல், அவனுடைய பாதங் களையும் அவன் இயக்குவான். ஆனுல், அவனுடைய கால் விரல் களே தரையைத் தொடும். அவன் இறுதியில் தானே நிற்கும்பொழுது முழுப் பாதங்கள் தரைமேல் அழுந்தும்படி நிற்கிருன். மனிதனுடைய இயல்பான நேராக நிற்கும் நிலையைப் பெற்ற பிறகு ஏதாவது ஒரு பொருளைப் பற்றிக்கொண்டு இப்பொழுது அடி எடுத்து வைக்க இயலும். சான்ருக, தாயாரின் உடையைப் பற்றிக்கொண்டு அவன் நடக்க ஆரம் பிப்பான்; பிறகு சீக்கிரத்தில் நான்காவது பருவத்தை அடைந்து விடுகிருன். அதாவது தானுக நடக்கும் பருவம்.[1]

இத்தனையும் அந்தரங்கத்தில் நிறைவு பெற்ற ஒரு முதிர்ச்சியால் நடைபெற்றிருக்கின்றன. இப்பொழுது குழந்தை என்ன சொல்லப் பார்க்கும்?

'சரி, எனக்குக் கால் முளைத்துவிட்டது. நான் போய் வரு கிறேன்,' என்பது போல இருக்கும்.

## வளர்ச்சியின் தத்துவம்

குழந்தை இப்பொழுது சுதந்தரத்தில் புதியதொரு கட்டத்தை அடைந்துவிட்டது. சுதந்தரத்தின் சாரம் என்ன? தனக்கு வேண்டி யதைத் தானே செய்துகொள்ளும் திறமையைப் பெற்றுவிடுதல். ஒன்றின் பின் ஒன்ருகப் பெறப்படும் இந்தச் சுதந்தர வெற்றிகளின் அடிப்படையான தத்துவக் கருத்து இது. முயற்சிகள் செய்வதனுல் மனிதன் தன்னுடைய சுதந்தரத்தைப் பெறுகிருன். வேருெருவர் உதவி பெருமல் தானே ஒரு காரியத்தைச் செய்வதுதான் சுதந்தரம். இது இருந்தால், குழந்தை வேகமாக வளர்ச்சி அடை யும். இது இல்லாவிடில், வளர்ச்சி தளரும். இந்தக் கருத்துகளை மனத்தில் இருத்திக்கொண்டு குழந்தையை எவ்வாறு நாம் நடத்த வேண்டும் என்று பார்ப்போம். அவற்றை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதற்குப் பயன் தரும் குறிப்புகளை அவைகளே நமக்குத் தரு கின்றன. குழந்தையினுடைய சூழ்நிலையில் அதற்கு உதவி புரிவதே நம்முடைய இயல்பான போக்காய் இருந்த போதிலும், அதற்கு அவசியமாய்த் தேவைப்படுவதற்கு மிகையாக எவ்வுதவியும் நாம் புரிதலாகாது என்று இந்தத் தத்துவம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

---

1. இதைத் தளர்நடைப் பருவம் என்கின்றனர் நம்மவர்.

நடக்க விரும்பும் குழந்தையை நடக்க விட்டுவிட வேண்டும். ஏனென்ருல், **வளர்கின்ற சத்திக்கு வலிமை தருவது பயிற்சியே.** அடிப்படைச் சத்தியைப் பெற்ற பிறகும் பயிற்சி தேவைப்படுகிறது. இங்கு அடிக்கடி நடைபெறுவதை நான் பார்த்தபடி ஒரு குழந்தையைப் பெரியவர்கள் மூன்று ஆண்டு வரைக்கும் எடுத்துக்கொண்டு போனுர்களாஞல் அதனுடைய வளர்ச்சியை அவர்கள் வளர விடுவதில்லை. அதற்குப் பதிலாக அது தடைபடுகிறது. குழந்தை சுதந்தரம் பெற்றவுடன் குழந்தைக்கு இடைவிடாது உதவி செய்துகொண்டு வரும் பெரியவன் ஓர் இடைஞ்சலாகத்தான் இருக்கிருன்.

எனவே, இதிலிருந்து குழந்தையை நாம் எடுத்துக்கொண்டு போகக் கூடாது என்பது விளங்குகிறது.[1] (நடக்கக்கூடிய குழந்தைகளே இங்குக் குறிப்பிடப்படுகின்றன.) அதை நடக்கவிட வேண்டும். அதனுடைய கரங்கள் தொழில் புரிய வேண்டும் என்ருல், நுண்ணறிவு சார்ந்த செயல்களை அது புரியத்தக்க பொருள்களை அதன் சூழ்நிலையில் அமைத்தல் வேண்டும். சுதந்தரப் பாதைக்கு எவை சின்னஞ்சிறு குழந்தையை அழைத்துச் செல்லுமோ, அவைகளே அதனுடைய சொந்தச் செயல்களாகும்.

கை கால்களின் வளர்ச்சிக்கு மிகவும் முக்கியமான ஒரு காரணி குழந்தையின் ஒன்றரை வயதில் தோன்றுவதைக் கவனித்தால் தெரிகிறது. அக்காரணி வலிமை என்பதாகும். கைத்திறனும், சுறுசுறுப்பும் பெற்ற குழந்தை இப்பொழுது தான் வலிமை பெற்றுவிட்டதாக உணர்கிறது. இனிமேல் அது செய்கின்ற செயல்கள் யாவும் ஏதோ பயிற்சிக்கென்றே செய்யப்படுவதன்று; முயற்சியின் உச்சத்தைப் பயிலுவதேயாகும் (நம்மைப் போன்றனவா அவை ?)

இது, 'நீ இயக்க விரைவும் திறனும் பெற்றுவிட்டாய். இனி வலிவு பெற வேண்டும்,' என்று இயற்கை அன்னை குழந்தையைப் பார்த்துக் சொல்லுவது போலிருக்கிறது. இல்லாவிடில் எல்லாம் பயனற்றதாகி விடும்.

இங்கேதான் கரங்களின் திறனும் பாதங்களை ஊன்றிச் சம நிலை பெறுவதும் ஆகிய இரண்டும் ஒரே காரியத்தைச் சாதிக்கப் பயன்படுகின்றன. சும்மா நடப்பதைவிடக் குழந்தை நெடுந்தூரம் நடக்க வேண்டும் என்றும் மிகப் பளுவான பண்டங்களைத் தூக்கிச் செல்ல வேண்டுமென்றும் விரும்புகிறது. மனிதர் நடப்பதற்கு மட்டுமா படைக்கப்பட்டிருக்கின்றனர் ? இல்லை, சுமைகளைச் சுமந்து செல்வ

1. இதை நாம் அம்புலிப் பருவம் என்கிறேம். இது நிலாவை அழைக்கின்ற பருவம்.

தற்குந்தான். பற்றத் தெரிந்துகொண்ட கரங்கள் இப்பொழுது பளுவைத்தூக்கவும் கடத்தவும் பழகிக்கொள்ள வேண்டும். இதோ பாருங்கள்! ஒன்றரை வயதுக் குழந்தை ஒரு பெரிய சாடி நிறையத் தண்ணீரைத் தன் கரங்களில் பற்றிக்கொண்டிருக்கிறது. எப்படியோ அதைத் தூக்கிக்கொள்கிறது; தன்னுடைய சம நிலையைக் குலைக்காமல் கஷ்டத்துடன் மெதுவாக நடந்து செல்கிறது. பூமியாகர்ஷண சத்தியை எதிர்த்து அதற்கு மீறி நடக்க வேண்டும் என்ற ஆவலும் அதனிடம் இருக்கிறது.

குழந்தைக்குப் படிக்கட்டு ஏறுவது விருப்பம். அது அவ்வாறு ஏறும்பொழுது தன் கரங்களால் படிக்கட்டுகளைப் பற்றிக்கொண்டு தன்னுடலை மேலே இழுத்துக்கொண்டு செல்கிறது. அது தனக்கு வேண்டுமென்று பறித்துக் கொள்வதற்கு இனிமேல் பற்றுகிறதில்லை. இப்பொழுது பற்றுவதெல்லாம் கஷ்டப்பட்டுத் தவழ்ந்து ஏறுவதற்கு. இவைகளெல்லாம் வலுவைச் சோதிப்பவையாகும். இது இவற்றுக்கென்றே ஒதுக்கப்பட்ட ஒரு பருவமாகும். எனவே, இயங்கும் இயற்கை அன்னையின் அளவியலைக் (Logic) காண்கின்றோம். ஏனெனில் வளர்ந்த மனிதன் உடல் உறுதி பெற்றவனாய் இருத்தல் வேண்டும்.

நடக்கத் தெரிந்த குழந்தை இதற்குப் பிறகுதான் தன் உடல் வலிமையில் தன் நம்பிக்கை பெறத் தொடங்குகிறது; தன்னைச் சூழ்ந்துள்ளவர்களின் செயல்களை உற்று நோக்குகிறது; அவர்களைப் போலத் தானும் செய்ய முயற்சி செய்கிறது. இப்பருவத்தில் மற்றவர்களைப் போலச் செய்வது எல்லாம் எவருடைய தூண்டுதலாலும் இல்லை. ஆனால், தனக்குள் ஆழத்தில் தோன்றும் ஓர் அந்தரங்கத் தேவையால் நடைபெறுகின்றன. குழந்தை சுதந்தரத்துடன் இருக்கும் போதே இவற்றை நம்மால் காண இயல்கிறது. எனவே, இங்கு இயற்கை அன்னையின் அளவியலைக் கீழ் வருமாறு குறிப்பிடலாம்:

1. குழந்தைக்கு நேராக நிற்கும் நிலை அளித்தல்
2. குழந்தையை நடக்க வைத்து வலிமை பெறச் செய்தல்
3. தன்னைச் சூழ்ந்துள்ள வாழ்க்கையில் குழந்தையும் பங்கெடுத்துக்கொள்ள வசதி ஏற்படுத்துதல்

இவைகளிலிருந்து தயாரிப்புப் பருவங்கள் ஒன்றையொன்று எவ்வாறு தொடர்கின்றன என்பதை நாம் காண்கிறோம். குழந்தை முதலில் தன்னையும் தன் உடல் உறுப்புகளையும் ஆக்கிக்கொள்ள வேண்டும்; பிறகு வலிமை பெறவேண்டும்; பிறகு பிறரைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். இறுதியில் தானாகவே செயல் புரியவேண்டும். இயற்கை

அன்னை குழந்தையைத் தூண்டிவிடுகிருள். நாற்காலிகளின்மேல் ஏறுவது, ஏணிகள்மேல் ஏறுவது போன்ற உடற்றளிப் பயிற்சிகளேயும் செய்ய ஊக்குவிக்கிறது. இதற்குப் பிறகுதான் புதுக்கட்டம் தொடங்குகிறது. அதில் தானே எல்லாம் செய்துகொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி தோன்றுகிறது. இது, 'நான் இப்பொழுது ஆயத்தமாகிவிட்டேன். இனி நான் சுதந்தரமாக இருக்க விரும்புகிறேன்,' என்று சொல்வது போலிருக்கிறது.

குழந்தை நன்ருக நடக்கக்கூடிய பேர்வழி ஆகிவிடுகிறது. அதற்காக நெடுந்தூரம் உல்லாச நடை நடக்கவேண்டியிருக்கிறது. இந்த உண்மை எந்த உளவியல் அறிஞரையும் இது வரை போதிய அளவு வசப்படுத்தவில்லே. நாம் சாதாரணமாகக் குழந்தையைச் சுமந்து கொண்டோ, அல்லது தள்ளு வண்டியில் வைத்துத் தள்ளிக் கொண்டோ செல்கிருேம். நாம் கருதுவது என்ன ? அதனுல் நடக்க இயலாது ; அதனுல் சுமந்து செல்ல ஓர் ஏற்பாடு அமைத்துத் தருகிருேம். அதனுல் செயல் புரிய இயலாது ; அதற்காக நாம் செயல் ஆற்றி வைப்போம். **வாழ்க்கைப் பாதையில் குழந்தை அடி எடுத்து வைக்கும்பொழுதே நாம் அதன் உள்ளத்தில் தாழ்ந்த மனச் சிக்கலே ஊட்டிவிடுகிருேம்.**

# 15. வளர்ச்சியும் ஒப்பனையும்[1] பின்பற்றுதலும்

சென்ற அதிகாரத்தில் ஒன்றரை வயதுக் குழந்தையைப்பற்றி ஆய்ந்தோம். இந்த வயது அக்கறையின் மையமாகிவிட்டிருக்கிறது. இது கல்வியில் ஒரு முக்கியமான வயதாகிறது; கைகளின் ஆயத்தமும் கால்களின் ஆயத்தமும் ஒன்று சேர்கின்ற தருணம் ஆகிறது. குழந்தையின் ஆளுமை விரிவடையும் சமயமும் இதுவே. ஏனென்றால், இன்னும் குறுகிய காலத்துக்குள்—அதாவது இரண்டாம் வயதில்-மொழியின் வெடிப்பால் உண்மையானமுழுமையை அடையும் பருவத்தைப் பெற்றுவிடுகிறது. இந்தச் சம்பவத்தின் தொடக்கத்தில் ஒன்றரை ஆண்டில் தன் மனத்துள் இருப்பனவற்றை வெளிப்படுத்த முயற்சி செய்ய ஆரம்பித்துவிடுகிறது. பெருமுயற்சியும் ஆக்கத் தொழிலும் கொண்ட ஒரு காலம் இது.

குழந்தையின் இந்த வளர்ச்சிப் பருவநேரத்தில் வாழ்க்கையின் இயல்பான போக்குகளுள் எதையும் நாம் அழித்துவிடாமல் கவனத்துடன் காத்துக்கொள்ள வேண்டும். இது தீவிரமான முயற்சிப் பருவம் என்று இயற்கை அன்னை காட்டுகிறதாய் இருந்தால், இந்த முயற்சிக்கு நாமும் உதவி புரிய ஆயத்தமாய் இருக்கவேண்டும். இவ்வாறு கூறுதல் ஒரு பொதுவான உறுதி வாக்காகும். ஆனால், குழந்தைமையைப்பற்றி அறிந்தவர்கள் இன்னும் விவரமாக எடுத்துரைப்பார்கள். இந்தப் பருவத்தில் குழந்தைகள் குழந்தைகளைப் பின் பற்றுகின்றன என்று அவர்கள் கூறுகின்றனர். இது ஒரு புதுக் கருத்து அன்று. ஏனென்றால், பெரியவர்களைப் பார்த்து நடந்துகொள்வது குழந்தைகளின் இயல்பு என்பது எப்பொழுதுமே சொல்லப்பட்டு வந்திருக்கிறது. ஆனால், இவ்வாறு கூறுவது ஏதோ மேற்போக்காகச் சொல்வதாகும். குழந்தை ஒன்றைப் பின் பற்றுவதற்கு முன்பு அது

---

1. Imitation

அதைப் புரிந்துகொள்ளவேண்டும் என்பது தெளிவாகிறது. பழைய கருத்து என்ன ? பெரியவர்களாகிய நாம் நம் பழக்கம்போல நடந்து கொள்ள வேண்டும். குழந்தைகள் நம்மைப் பின்பற்றி நம்மைப் போல வளர்ந்துவிடுவார்கள். இதனுடன் நம் பொறுப்பு முடிந்துவிடு கிறது என்றெல்லாம் நினைத்தோம். நாம் ஓர் எடுத்துக்காட்டாக இருக்கவேண்டும் என்ற கருத்தையும் அனுசரித்து வருகிறோம். பெரிய வர் எல்லோரும் இதைப் பின்பற்ற வேண்டும் என்று முக்கியமாக ஆசிரியர்களைக் குறிப்பிடுவது வழக்கம். ஆசிரியர்கள் எடுத்துக்காட் டைப் பொறுத்திருக்கிறது மனித சமுதாயத்தின் நன்மை. தாய்மார் களும் நன்னெறிச் சிறப்புடையவர்களாய் இருக்கவேண்டும். ஆனால், இயற்கை அன்னை இவ்வாறு வாதாடுவதில்லை. பெரியவர்களுடைய நிறைவைப்பற்றி இயற்கை அன்னை கவலைப்படுவதில்லை. பின் பற்று தலுக்கு முன்பு குழந்தை அதற்கு ஆயத்தமாக இருக்க வேண்டும் என் பதே முக்கியம். இந்த ஆயத்தம் குழந்தை இதுவரை செய்துகொண்டு வருகிற முயற்சி அடியாகப் பிறக்கின்றது. இது ஒவ்வொரு மனித னுக்கும் பொருந்தும். பெரியவர்கள் நடத்தையில் காட்டுகின்ற உதாரணம், குழந்தையின் பின் பற்றலுக்கு ஓரளவு தூண்டுகோலாக இருக்கும். வெற்றிகரமான பலனை அது உண்டாக்குவதில்லை. உண்மை யாக நடைபெறுவது என்னவென்றால், குழந்தை தன்னுடைய முயற்சி களில் இறங்கின பிறகு தான் கண்ட உதாரணங்களைக் கொண்டு இன்னும் முன்னேற்றம் அடைவது. எவற்றில் ஊக்கம் பெறப் பெற்றிருக்கிறதோ, அவைகளை எல்லாம் இன்னும் சரியாகவும் நிறை வாகவும் செய்துகொள்கிறது. சில செயல்களில் இவ்வுண்மை தானகவே விளக்கம் பெற்றுவிடுகிறது. பியானோ என்ற இசைக் கருவியை ஒரு குழந்தை வாசிக்கத் தெரிந்துகொள்ளவேண்டுமானால் அதை வாசிக்கத் தெரிந்தவர்களைப் பின் பற்றுதல் மட்டும் போதாது என்ற உண்மை ஒவ்வொருவருக்கும் தெரியும். விரல்களுக்குத் தேவை யான திறமையைப் பெற ஓயாது உழைக்க வேண்டியிருக்கிறது. இதைவிட இன்னும் உயர்ந்த திறமைகளிற்கூட இந்தச் சூதற்ற நம்பிக் கையைப் பயன்படுத்தி அவைகளையும் குழந்தை பின்பற்றுதல் வேண்டும் என்று அடிக்கடி முயற்சி செய்து வருகின்றோமல்லவா ? நாம் குழந்தைகளுக்குப் படித்துக் காட்டுகிறோம், அல்லது வீரர்கள், முனிவர்கள் ஆகியோர் பற்றிய கதைகளைச் சொல்லுகிறோம். இவை களால் அவன் வீர உணர்ச்சி பெறுவான் என்றோ நன்னெறியைக் கடைப்பிடிப்பானென்றோ நாம் எண்ணுகிறோம். உள்ளத்தை ஆழ்ந்த முறையில் ஆயத்தமாக்காமல் இதைச் சாதிப்பது இயலாத காரியம் ஆகும். வெறும் பின் பற்றலாலே எவரும் பெரியவர்கள் ஆகிவிட இய லாது. எடுத்துக்காட்டு, வேண்டுமானால் ஓரளவுக்கு நம்பிக்கையை உண்டாக்கி, அக்கறையைத் தூண்டிவிடலாம். பின் பற்றலின் மேலுள்ள ஆசையால் முயற்சி தூண்டப்படலாம். ஆனால், உயர்ந்த

திறமையைப் பெறுவதற்குப் பரந்த அளவுக்குப் பயிற்சி பெறவேண்டும். கல்வித்துறையில் பின் பற்றலுக்கு ஆயத்தம் தேவை என்பதை இயற்கை அன்னையே கற்பிக்கிருள். குழந்தை முதன்முதலாகச் செய்கின்ற முயற்சிகளுள் எதுவும் பின்பற்றல் என்ற நோக்கத்துடன் செய்யப்பட்டதன்று. ஆனால், பின் பற்றலுக்கு வேண்டிய திறமையைப் பெறுவதே அதன் நோக்கமாகும். அந்த முயற்சிகள் விரும்பப்படுகின்ற பொருளுக்குத் தன்னையே மாற்றி அமைத்துக்கொள்ளுதலும் ஆகும். மறைமுக ஆயத்தத்தின் பொதுவான முக்கியத்துவத்தை இது காட்டுகிறது. இயற்கை அன்னை நமக்குத் தருவது பின்பற்றும் சத்தி மட்டும் அன்று. உதாரணம் எடுத்துக் காட்டுகின்ற பொருளைப்போல ஆக்கிக்கொள்வதற்குத் தேவையான சத்தியுங்கூடத்தான். கல்வி புகட்டுவோர் என்ற முறையிலே குழந்தைகள் தங்களுடைய குறிக்கோளை அடைவதற்கு அவற்றின் வாழ்க்கைச் சத்திகளுக்கு உதவி புரிய முடியும் என்று நாம் நம்பினோமானல், எந்தெந்தச் சந்தர்ப்பத்தில் பயனுற உதவி புரிய முடியும் என்பதை நாம் அறிதல் வேண்டுமென்பது இன்றியமையாததாகிறது.

இந்த வயதுக் குழந்தையை நாம் கூர்ந்து கவனித்தோமானல், திட்டமான ஒன்றை அது செய்வதற்கு முயற்சி செய்துகொண்டிருப்பதைக் காண்போம். அது செய்கின்ற செயல் மிகவும் இழிவாக நமக்குத் தோன்றலாம். அதைப்பற்றிக் கவலை இல்லை. அது அதை முடித்தே தீரவேண்டும். அதனுள் இருக்கும் வாழ்க்கையின் தூண்டுதலே இவ்வாறு அதைச் செய்யச்சொல்லி ஆஞ்ஞை இடுகிறது. குழந்தை செய்துகொண்டிருக்கின்ற செயல்வட்டம் குறுக்கிடப்பட்டால் அதன் விளைவு என்ன ? ஆளுமையில் ஒரு கோணல், குறிக்கோள் இன்மை, அக்கறை இழத்தல். இப்பொழுதெல்லாம் இந்தச் செயல் வட்டங்கள் நிறைவு பெற விட்டுவிட வேண்டுமென்பது மிகவும் அவசியமானது என்று கருதப்பட்டு வருகிறது. மறைமுக ஆயத்தங்களும் இதைவிட முக்கியத்தில் எவ்வகையிலும் குறைந்தவையல்ல. உண்மையாக இவைகளெல்லாம் அதன் பல உருவங்களே. நம்முடைய முழு வாழ்க்கையும் மறைமுகமாக எதிர்காலத்திற்கு நம்மை ஆயத்தமாக்கிவிடுகிறது. அடிப்படையில் முக்கியமான காரியம் ஒன்றைச் சாதித்தவர்களின் வாழ்க்கையில் இதைச் சாதிப்பதற்கு முன்பு உழைப்பு நிறைந்த பருவம் ஒன்று இருப்பதைப் பார்க்கலாம். அதே மாதிரியான செயலாக இருக்கவேண்டும் என்று அவசியம் இல்லை. ஏதோ ஒரு வழியில் தீவிர முயற்சியில் ஈடுபட்டிருக்கவேண்டும். அந்தச் செயல் தன் உள்ளத்தையே அதில் கொட்டத்தக்கதாய் இருந்தால் அச்செயல் ஒரு தெய்விகத் தயாரிப்பாகவே நடைபெறுகிறது. அந்தச் செயல் வட்டம் முடிவு வரை நிறைவேற்றப்பட்டிருக்கவேண்டும். குழந்தையிடத்தில் எத்தகைய நுண்ணறிவுச் செயலைக் கண்டோமானு

லும், அது நமக்கு மிகவும் பொருத்தமற்றதாகக் காணப்பெறினும், அல்லது அதற்குத் தீங்கு விளைவிக்காததும் நம் விருப்பங்களுக்கு எதிர்ப்பானதுமாய் இருந்த போதிலும், நாம் அதன் போக்கில் குறுக்கிடக் கூடாது. ஏனென்றால், குழந்தை தன் உள்ளத்தை எதில் ஈடுபடச் செய்ய முனைந்திருக்கிறதோ, அச்செயல் வட்டம் குறுக்கிடப் படாமல் நிறைவேற்றப்பட வேண்டும்.

முன் சென்ற அதிகாரத்தில் கண்டது போல இந்த வயதுக் குழந்தைகள் தங்கள் கருத்துகளை வேடிக்கையான வழிகளில் நிறைவேற்றுவதைக் காட்டுகின்றன. **இரண்டு வயதுக்கு உட்பட்ட சின்னஞ்சிறு குட்டிகள் தங்கள் சத்திக்கு மீறின பளுவைத் தூக்கிக்கொண்டு போகின்றதைப் பார்க்கின்றோம்.** இதற்கு ஏதாவது வெளிப்படையான காரணம் உண்டோ? அப்படி ஒன்றும் இல்லை. என்னுடைய நண்பர்களுள் ஒருவருடைய இல்லத்தில் பளுவான 'முக்காலிகள்' (Stools) இருந்தன. ஒன்றரை ஆண்டுக் குழந்தை அவற்றைச் சிரமத்துடன் அறையின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு மாற்றுவதென்று தீர்மானித்துச் செய்து கொண்டிருந்ததை நான் பார்த்திருக்கிறேன். மேசை மேல் சாப்பாட்டுக்குத் தட்டுகளை அடுக்குவதில் குழந்தைகளுக்கு விருப்பம் உண்டு. அவை ரொட்டிகளைத் தங்கள் கைகளில் எடுத்துச் செல்லும். அவற்றை எடுத்துச் செல்லும் பொழுது தங்களுடைய பாதங்களைக் காண முடியாதபடி அவ்வளவு பெரிய ரொட்டிகள் அவை. இம்மாதிரிப் பண்டங்களைத் தங்களுக்குச் சலிப்பு ஏற்படும் வரை இங்குமங்கும் எடுத்துச் செல்லும். சாதாரணமாகப் பெரியவர்களுடைய கவலை குழந்தை சுமந்து செல்லும் பளுவைச் சற்றுக் குறைக்கலாமே என்றுதான் இருக்கும். இதைப் பற்றி உளவியலார் இக்காலத்தில் கொண்டுள்ள உறுதியான கருத்து என்ன? குழந்தை தானாகத் தேடிச் செய்துகொண்டிருக்கின்ற ஒரு தொழிலுக்கு நாம் இவ்வாறு உதவி புரிவது அதன் செயலில் குறுக்கிடுவது போல ஆகிறது. இவ்வாறு செய்வது குழந்தையை ஒடுக்குவதில் நாம் செய்யக்கூடிய மிகக் கொடிய செயலாகும். **தொல்லை கொடுக்கும் குழந்தைகள் என்பவைகளின் நரம்புக் கோளாறுகளின் ஆரம்பத்தை இம்மாதிரி பெரியவர்கள் குறுக்கிடுவதில் காணலாம் என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள்.**

குழந்தைகள் தாங்களே முயற்சி செய்ய வேண்டும் 'என்று விரும்புவது மற்றொன்று உண்டு. அது படிக்கட்டு ஏறுவது. நாம் படிக்கட்டு ஏறும் பொழுது ஒரு நோக்கத்துடன் செய்கிறோம். ஆனால், குழந்தை படிக்கட்டு ஏறுவதற்கு ஒரு நோக்கமும் இல்லை. எல்லாப் படிகளையும் ஏறி உச்சியை அடைந்த பிறகும் அதற்கு மனநிறைவு

ஏற்படுவதில்லை ; அதனால், கீழே இறங்கி மறுபடியும் மேலேறுகிறது. இவ்வாறு அதனுடைய செயல் வட்டத்தைப் பல முறைகள் செய்து செய்து நிறைவுபடுத்திக்கொள்கிறது. பள்ளிக்கூட விளையாட்டுத் திடல்களில் மரத்தாலோ சிமெண்டாலோ செய்யப்பட்ட சறுக்குப் பலகைகளை நாம் அடிக்கடி பார்க்கிறோம். இவை இந்த நோக்கத்தை நிறைவேற்றப் பயன்படுகின்றன. ஆனால், **சின்னஞ்சிறு குழந்தைக்குக் கீழே சறுக்குவது அவ்வளவு கவர்ச்சி தருவதில்லை.** ஆனால், மேலேறுவதும், முயற்சி செய்வதில் பெறும் மகிழ்ச்சியும் அதன் மனத்தைக் கவர்கின்றன.

சின்னஞ்சிறு குழந்தைகளின் செயல்களில் குறுக்கிடாத பெரியவர்களைக் காண்பது அரிது. இதை உணர்ந்த எல்லா உளவியலாரும் குழந்தைகளின் போக்கில் குறுக்கிடுதல் இல்லாத தனிப்பட்ட இடங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்றும் கூறுகின்றனர். இதற்காகப் பகல் 'நர்சரிகளும்' (பிள்ளை வளர்ப்பிடங்களும்) குழந்தைப் பள்ளிக்கூடங்களும் மிகவும் முக்கியமான தேவைகளாகும். அதிலும், முக்கியமாக ஒன்றரை ஆண்டுப் பச்சிளங்குழந்தைகளுக்கு இவை மிகவும் அவசியமானவை. இத்தகைய பள்ளிக்கூடங்களுக்கென்று தனியாகப் பற்பல சாமான்கள் செய்யப்படுகின்றன. ஒரு மரத்தின் மேல் சிறுவீடு ஒன்று அமைக்கப்படலாம். அதன்மேல் ஏறுவதற்கும், இறங்குவதற்கும் ஏணியும் வைக்கப்படலாம். ஆனால், அந்த வீடு வாழ்வதற்கென்றோ தங்குவதற்கென்றோ அமைக்கப்பட்டதன்று. அது போய்ச் சேர்வதற்கென்று அமைக்கப்பட்ட எல்லைக் குறி. அங்குப் போய்ச் சேருவதற்குத் தேவையானது முயற்சியாகும். அந்த வீடு என்னவோ இடை நிகழ்ச்சியாகும். தளர்நடைக் குழந்தை ஏதாவது ஒன்றைத் தூக்கிக்கொண்டு போகவேண்டுமானால் தனக்குக் கிடைப்பதில் மிகவும் பளுவான பொருளையே தூக்கிச் செல்லும். நம் கவனத்துக்கு வரக்கூடியவை ஏறும் ஊக்கமும் (Instinct of climbing) தேவையான அளவுக்கு முயற்சி செய்யவேண்டும் என்ற ஆவலும் தவிர வேறென்ன ? கஷ்டப்பட்டுத் தவழ்ந்து ஏறுவதற்குக் குழந்தை ஏதாவது ஒன்றைத் தேடுகிறது. ஒரு நாற்காலி கிடைத்தாலும் போதும். ஆனால், படிக்கட்டு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது. ஏனெனில், மேலே ஏறுகின்ற போக்கு, குழந்தைகளின் உள்ளத்தில் ஒன்றியிருக்கிறது.[1]

வெளிப்படையாக எந்தப் பயனையும் அளிக்காத செயல் அவர்களுடைய இயக்கத்தை ஒன்றுபடுத்துவதற்குத் தேவையான பயிற்சியைக் குழந்தைகளுக்கு அளிக்கிறது. ஒன்றுபட்ட இயக்கங்களை

1. இத்தகைய செயல் வட்டத்துக்குப் பல சான்றுகளை என்னுடைய 'குழந்தைமை இரகசியத்தில்' காணலாம்.

உண்டாக்குவது பல தசைகள் ஒன்றுகூடி ஒற்றுமையாய் இயங்குவதாலாகும். இவ்வாறு ஒன்றுபட்ட இயக்கங்கள் பெரியவர்களாகிய நம் செயல்களைக் குழந்தைகள் பின்பற்ற உதவுகின்றன. குழந்தைச் செயலின் நோக்கம் என்று வெளிப்படையாகக் காட்சி அளிப்பது அதனுடைய முடிவான குறிக்கோளன்று. அது தன்னை ஆயத்தம் ஆக்கிக்கொண்ட பிறகு தானே பெரியவர்களைப் பின்பற்ற முடியும். அப்பொழுதுதான் அதனுடைய சூழ்நிலை அதற்கு ஊக்கம் அளிக்க முடியும். யாராவது ஒருவர் தரையைக் கூட்டிக்கொண்டிருப்பதை அது கண்டால், அல்லது அப்பம் சுட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்தால், இப்பொழுது தானும் அதில் கலந்துகொள்ள இயலும் என்ற புதுக்கருத்து வெற்றிகரமான செயலைத் தூண்டிவிடும்.

## நடப்பதும் தேடி ஆராய்வதும்

இப்பொழுது ஈராண்டுக் குழந்தை நடக்கும் தேவையைப் பற்றி நம் கவனத்தைத் திருப்புவோம்: இந்தத் தேவையை அக்குழந்தை உணர்வது இயற்கையே. ஏனெனில், வருங்கால மனிதனை அது ஆக்குவிக்க வேண்டியிருக்கிறது. ஆதலால் மனிதனுடைய அவசியமான சத்திகளைத் தனக்குள் அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஈராண்டுக் குழந்தையால் ஓரிரண்டு மைல்கள் நன்றாக நடக்க முடியும்; நல்ல மனமிருந்தால், சிறு மேடு அல்லது குன்றையும் ஏற முடியும். மிகவும் கடினமான நடைபாதையே அதற்கு மிகவும் பிடித்திருப்பது போலத் தோன்றுகிறது. நடப்பதைப் பற்றிக் குழந்தையின் கருத்து நம்முடையதைப் போன்றதன்று என்பதை நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். நெடுந்தூரம் குழந்தையால் நடக்க முடியாது என்று நாம் நம்புவதற்குக் காரணம், நம்முடைய வேகத்தில் அதை நடக்க வைப்பதே ஆகும். நாம் ஒரு குதிரையுடன் நடந்து போக முடியுமா? கடைசிவரை அதனுடன் சமமாக நடக்க முடியுமா? இது எவ்வளவு அறிவின்மையோ அதே போன்றதுதான் குழந்தையையும் நமக்குச் சரியாக நம்முடன் நடந்து வர முடியவில்லையே என்று எதிர்பார்ப்பதிலும் இருக்கிறது. குதிரை நாம் மூச்சுத் திணறுவதைக் கண்டு 'இது பயன் படாது, என் முதுகின்மேல் ஏறிக் கொள். நாம் இருவரும் அங்குப் போய்ச் சேர்வோம்,' என்று சொல்லும். (நாமும் குழந்தைக்கு அப்படித்தான் சொல்கிறோம்.) ஆனால், குழந்தைக்கு அங்குப் போய்ச் சேர வேண்டும் என்று எதுவும் இல்லை. அதற்குத் தேவையானது நடைதான். நம்முடைய கால்களைவிட அதனுடைய கால்கள் குட்டையாய் இருத்தலால், நம்முடைய நடைக்கு ஒத்து நடக்கச் சொல்லி முயற்சி செய்யலாகாது. அதனுடைய நடைக்கு ஒத்து நடக்க வேண்டியவர்கள் நாம். குழந்தையின் போக்குக்குத் தகுந்தபடி நாம் நடக்க வேண்டும் என்பதைப்

பொறுத்தமட்டில் நமக்குத் தெளிவாகிவிடுகிறது. ஆனால், குழந்தை களுக்கு எத்துறையில் கல்வி புகட்டினாலும் நாம் இதே விதியை அனு சரிக்க வேண்டும் என்பதை மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். **குழந்தை தனக்கென்ற வளர்ச்சி விதியைப் பெற்றிருக்கிறது.** நாம் அதனுடைய வளர்ச்சிக்கு உதவி புரிய வேண்டுமானால், இந்த விதிகளை நாம் அனுசரித்து நடந்துகொள்ள வேண்டும். நம்முடைய கருத்துகளையோ போக்கையோ அதன்மேல் திணித்தலாகாது. குழந்தைத் தன் கால்களால் மட்டும் நடப்பதில்லை; தன்னுடைய கண் களாலும் நடக்கிறதெனலாம். வழியில் காணக்கூடிய பொருள் களின்மேல் உள்ள அக்கறையே அதை உந்துகிறது. அதோ ஓர் ஆடு மேய்ந்துகொண்டிருக்கிறது. அதனருகே குழந்தை கவனிப் பதற்கு உட்காருகிறது; பிறகு எழுந்திருக்கிறது; சிறிது தொலைவு நடக்கிறது; ஒரு மலரைக் காண்கிறது; அதனருகே செல்கிறது; அதைச் சுற்றிப் பல முறை வலம் வருகிறது; பிறகு அதை உற்று நோக்க உட்காருகிறது. அது இம்மாதிரி சுமார் ஒரு மைல் தொலைவு நடந்து திரியலாம். அதனுடைய நடையில் இடையிடையே ஓய்வும் இருக்கிறது. அதனுடன் அக்கறை ஊட்டும் புதுமை காண்டலும் நிறைந்திருக்கின்றது. வீழ்ந்த ஒரு பாறையோ அல்லது ஓர் அடி மரமோ வழியில் குறுக்கே கிடந்தால், இத்தகைய குறுக்கீடுகள் அத னுடைய மகிழ்ச்சியை நிறைவுபடுத்திவிடுகின்றன. தண்ணீரைக் கண்டால் குழந்தைக்கு உயிர். சிற்றோடையின் அருகில் உட்கார்ந்து கொண்டு 'தண்ணீர், தண்ணீர்!' என்று மகிழ்ச்சியுடன் அது தனக்குள் முணுமுணுக்கும். இதனுடன் உல்லாச நடைக்கு வருகின்ற வயதான தோழர் ஏதோ சீக்கிரம் சீக்கிரமாகக் குறிப்பிட்ட இடத்துக்குப் போய் ஆக வேண்டும் என்று நினைக்கிறார். நடப்பது எதற்கு என் பதைப் பற்றி அவர் கொண்டுள்ள கருத்து வேறு.

குழந்தையின் போக்கு, பழங்குடி மக்கள் முதலில் பூமியின்மேல் பல இடங்களுக்கு நடந்து நடந்து திரிந்தார்களே, அதை ஒக்கும். 'பாரிஸ் நகரத்துக்குப் போகலாம்,' என்று அப்பொழுது எவரும் சொல்லவில்லை. ஏனென்றால், அக்காலத்தில் பாரிஸ் நகரமே தோன்ற வில்லை. 'ரயிலில் போகலாம்' என்று எவரும் கூறவில்லை: அப் பொழுது ரயிலே இல்லை. மனிதர் ஒரு பயன் உள்ள பொருளையோ, அக்கறையூட்டும் பொருளையோ சந்திக்கும் வரையில் நடந்து கொண்டே சென்றனர். அது விறகு சேகரிக்கக் கூடிய காடாய் இருக்

கலாம்; அல்லது ஒரு மேய்ச்சல் நிலமாய் இருக்கலாம். குழந்தைகளும் அப்படித்தான். இங்குமங்கும் நடமாட வேண்டும் என்ற ஓர் இயல் பூக்கம், ஒரு புதுமை காண்டலிலிருந்து மற்றென்றுக்குச் செல்லுதல் எல்லாம் குழந்தை இயலின் ஒரு பகுதியாகும். அது அவற்றின் கல்வியின் ஒரு பகுதியாகவும் மையமாகவும் வேண்டும். உல்லாச நடை நடக்கும் குழந்தையானது கல்வி கற்பிப்பவர் கண்களுக்குப் புதுமையை ஆராய்வதாகவே காட்சி அளிக்கிறது. சுற்றிலும் சென்று ஆராய்தல், அல்லது சாரண இயக்கம் ஆகியவற்றைப் பள்ளிக்கூடங்களில் இப்போது பாடங்கள் கற்றுச் சலித்துப் போகும் பொழுது ஓர் இடைக்கால ஓய்வுக்கென்று பயன்படுத்தி வருகின்றனர். இது கல்வியின் முக்கியப் பங்காகவும் வாழ்க்கையில் இன்னும் இளம் பருவத்திலும் அனுசரிக்கப்பட வேண்டும். மனத்தைக் கவரக்கூடிய பொருள்களையோ காட்சிகளையோ காணும் வகையில் எல்லாக் குழந்தைகளும் உல்லாச நடை நடக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அந்த வகையில் வகுப்பிலேயே முன்னுய்ந்த உதவிகளைப் பள்ளிக் கூடங்கள் அளிக்க இயலும். எடுத்துக்காட்டாக, நிறங்களின் பெயர்கள், இலைகளின் வடிவங்களும் நரம்பமைப்பு வகைகளும், விலங்குகள் பறவைகள் ஆகியவற்றின் பழக்கங்கள் முதலியவற்றைக் கற்றுக்கொடுக்கலாம். இவைகளெல்லாம் அக்கறை ஊட்டும் துறைகளை வகுத்துத் தருகின்றன. எவ்வளவுக்கு எவ்வளவு குழந்தைகள் இவற்றைப் பற்றி எல்லாம் கற்றுக்கொள்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அவை வழியில் பார்க்க இயலுவதுடன் இன்னும் அதிகமான தொலைவு நடக்கவும் செய்யும். **ஒன்றை ஆராய வேண்டுமானுல், ஒருவருக்கு நுண்ணறிவு கலந்த அக்கறை இருக்க வேண்டும்.** இவற்றை ஊட்டுவது நம் கடமையாகும்.

நடப்பதில் முழு உடற்பயிற்சியும் அமைந்திருக்கிறது. நடக்கின்ற மனிதன் மூச்சு விடுகிருன்; உணவை நன்ருகச் செரித்துக் கொள்கிருன்; விளையாட்டுகளின் மூலம் தான் பெற வேண்டும் என்று முயலும் உடல் நலம் முழுவதும் நடப்பதால் பெறுகிருன். நடப்பது ஒரு வகையான உடற்பயிற்சி. அதனுல், உடல் அழகு பெறுகிறது. வழியில் சிறு வாய்க்காலைக் கடக்க வேண்டியிருந்தாலோ, அல்லது தீ மூட்ட விறகு சேர்க்க வேண்டினுலோ, இம்மாதிரி ஏதாவது அக்கறையை ஊட்டக் கூடியது கண்ணுக்குப் பட்டாலோ, கையை நீட்டியும் உடலை வளைத்தும் செய்யும் பொழுது அது முழுமையான

உடற்பயிற்சி ஆகிவிடுகிறது. மனிதனது அறிவு வளர வளர, அவனது நுண்ணறிவு அக்கறைகளும் விரிவடைகின்றன. இவற்றுடன் உடலின் செயல்களும் விரிவடைகின்றன. கல்விப் பாதையும் பரிணமப் பாதையைப் பின் பற்றி நடந்து பின்னும் மேலும் மேலும் பரந்த பரப்புகளைக் கண்டு இன்புற வேண்டும். இம்முறையில் குழந்தையின் வாழ்க்கை வரவரச் சிறப்படைகிறது.

இக்காலத்தில் பொதுமக்கள் அவ்வளவாக முன் போல நடப்பதில்லை; ஏறிச் செல்லும் பல்வகை வாகனங்களை உபயோகிக்கின்றார்கள். இந்தச் சமயத்தில் நடையைப் பற்றி நாம் ஆராய்ந்து வந்த கருத்தைக் கல்வியின் அமிசமாக அமைப்பது இன்றியமையாததாகும். வாழ்க்கையை இரு கூறுகள் ஆக்கி, கை கால்களை விளையாட்டுக்கென்றும், மூளையைப் புத்தகங்களுக்கென்றும் பிரிப்பது நல்லதன்று. வாழ்க்கை துண்டிக்கப்படாமல் முழுமையாய் இருக்க வேண்டும். முக்கியமாக இளமையில் வளர்ச்சி விதிக்கு இணங்கிக் குழந்தை தன்னையே ஆக்கிக்கொண்டிருக்கும் பொழுது இந்த முறையையே அனுசரிக்க வேண்டும்.

# 16. நனவிலாப் படைப்பாளியிலிருந்து நனவுடைத் தொழிலாளி

இது வரை நாம் குழந்தை வளர்ச்சியில் ஒரு பருவத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்து வந்திருக்கின்றோம். இந்தப் பருவம் அது தாயின் வயிற்றில் வளர்ந்து வந்த பருவத்துக்குப் பல விதங்களில் ஒத்திருப்பதைக் காண்கிறோம். இத்தகைய வளர்ச்சி மூவாண்டு வரை தொடர்ந்து நடைபெறுகிறது. இந்தப் பருவம் ஆக்கும் சக்தி பெற்ற சிறந்த பருவம். பல முக்கியமான மாறுதல்கள் இப்பருவத்தில் நடைபெறுகின்றன. இவ்வளவு இருந்தும், இப்பருவத்தை **வாழ்க்கையில் மறக்கப்பெறும்** பருவம் என எண்ண வேண்டியிருக்கிறது. இயற்கை அன்னை ஓர் எல்லைக்கோடு வரைந்திருக்கிறாள் போலத் தோன்றுகிறது. கோட்டின் ஒரு பக்கம் நம் நனவுக்கு வர இயலாத சம்பவங்கள், மற்றொரு பக்கம் இப்பொழுதுதான் நனவு என்பது உதயமாகப் போகிறது. மறந்து போன பகுதியை **உள இளஞ்சூல் நிலை** (Psycho-embryonic) என்று குறிப்பிடுகிறோம். தாயின் கருப்பையில் வளர்ந்த பருவத்தை எவரால் நனவில் வைத்திருக்க இயலும்! அதே போலப் பிறப்பிலிருந்து மூன்று வயது வரை நடைபெற்ற வாழ்க்கையும் எவர் நனவுக்கும் வருவதில்லை.

இந்த உள இளஞ்சூல் பருவத்தில் பல சக்திகள் தனித்தனியாகவும் ஒன்றுக்கொன்று தொடர்பு பெற்றும் வளர்கின்றன. எடுத்துக்காட்டாக, மொழியையும், கை கால்களின் இயக்கங்களையும் கூறலாம். சில புலன் அறி சக்திகளும் உருவாகின்றன. கருவில் உடல் உறுப்புகள் ஒன்றோடு ஒன்று தொடர்பில்லாமல் முதலில் வளர்ச்சி பெறுகின்றன. இதையே இங்கு நமக்கு நினைவூட்டுகின்றன. ஏனெனில், இந்த உள இளஞ்சூல் பருவத்தில் கட்டுக்கு உட்படுத்தும் மனச்சக்திகள் எல்லாம் (Mental Powers of Control) தனித்தனியாக உருவாவதை நாம் காண்கிறோம். இப்பருவத்தில் நடைபெற்றவற்றை நாம் நனவு படுத்திக்கொள்ளச் சக்தி அற்றவர்களாய் இருப்ப

தில் விந்தை ஏதும் இல்லை. ஏனெனில், ஆளுமையில் இன்னும் ஓர் ஒற்றுமை ஏற்படவில்லை. எல்லாப் பகுதிகளும் நிறைவு பெற்ற பிறகே இந்த ஆளுமையும் ஒற்றுமை பெற இயலும்.

எனவே, மூன்று வயதில் வாழ்க்கை மறுபடியும் தொடங்குவது போலத் தோன்றுகிறது. ஏனென்றால், நனவு நிலை தன்னுடைய முழு மகிமையுடன் ஒளி விடுகிறது. நனவிலாப் பருவமும், அதைத் தொடர்ந்து வரும் நனவுடை வளர்ச்சிப் பருவமும் ஆகிய இவ்விரு பருவங்களுக்குமிடையில் நன்கு நிருணயிக்கப்பட்ட எல்லை ஒன்று இருப்பதாகத் தோன்றுகிறது. முதற்பருவத்தில் நமக்குத் தெரிந்த நனவு ஏதும் இருப்பதற்கு வழி இல்லை. **நனவு தோன்றின பிறகே ஆளுமையின் ஒற்றுமை உண்டாகிறது.** ஆதலால், நினைவூட்டும் சக்தி பிறக்கிறது.

மூன்ருண்டுக்கு முன் செயல்கள் ஆக்கப்படுகின்றன. மூன்ருண்டு களுக்குப் பிறகு அவை வளர்ச்சி பெறுகின்றன. கிரேக்கர் புராணக் கதையில் மறைந்தோர் உலகிலிருந்து ஓர் ஆறு வருவதாகவும், அதன் நீரைப் பருகுவோர் உடனே தம் நனவை அறவே இழந்து விடுவதாகவும், அந்த ஆற்றுக்கு '**மறதி ஆறு**' (The Waters of Lethe) என்பது பெயர் என்வும் கூறப்படுகிறது. இந்த இரு பருவங்களுக் கும்இடையில் உள்ள எல்லையை நினைக்கும் பொழுது மேற்கூறிய 'மறதி ஆறு' நினைவிற்கு வருகிறது. மூன்று வயதுக்கு முன் நமக்கு நடந்த எதையும் நினைவு படுத்துவதென்பது மிகவும் அரிதாய் இருக்கிறது. இரண்டு வயதுக்கு முன் நடந்தவற்றைப் பற்றி ஞாபகப்படுத்திக் கொள்வது அதிலும் அரிதாகிறது. உளப்பகுப்பு (Psychoanalysis) பல வழிகளைப் பயன்படுத்தி மனத்தைத் தன் முன் நிலைக்குச் செல்லும் படி செய்து ஓரளவுக்கு நனவு படுத்த வைக்கிறது. ஆனால், பொது வாக எவராலும் தம் வாழ்க்கைச் சம்பவங்களில் எவை மூன்ருண்டுக்கு முன் நடந்தவை என்று ஞாபகப்படுத்திக்கொள்ள இயலுவதில்லை. ஒன்றுமில்லாதது போல இருந்த பருவத்திலிருந்து படைப்பு நம்மை உருவாக்கிக்கொண்டிருக்கும் தருணத்தில் படைப்புக் கர்த்தாவே அதைப் பற்றி நமக்கு எடுத்துக் கூற இயலாத நிலையில் இருப்ப தென்ருல், இதைவிட வேறு எந்த நிலை இவ்வாறு விந்தையாக இருக்க இயலும்!

இந்த நனவிலாப் படைப்பாளி—மறக்கப்பட்ட இந்தப் பேர்வழி— மனிதனுடைய ஞாபகத்திலிருந்தே துடைக்கப்பட்டான் போலும்! நம்மை மூன்ருண்டில் எதிர்கொண்டு அழைக்க வரும் பேர்வழியைப் புரிந்துகொள்வதற்கு நாம் கஷ்டப்படுகிரேம். நம்முடன் அவனைப் பிணைக்கின்ற கயிறு இயற்கை அன்னையால் அறுக்கப்பட்டுவிட்டது.

இயற்கை அன்னை செய்து வருவதை வயது வந்தவர்கள் அடியோடு அழித்துவிடக்கூடிய அச்சம் ஒன்று இருந்து வருவதை நாம் உணர வேண்டும். ஏனெனில், குழந்தை இந்த முதற்பருவத்தில் எல்லா வற்றுக்கும் பெரியவர்களையேதான் எதிர் பார்க்கிறது ; ஆனால் எதையும் தவிர்க்க இயலாது. அதன் மனம் எவ்வாறு வளர்கிறது என்பதை நாம் இயற்கையின் மூலமாகவோ, விஞ்ஞானத்தின் மூலமாகவோ, உணர்ந்துகொள்ளாவிடில், நாம் குழந்தையின் முன்னேற்றத்துக்குப் பெரிய இடையூறாக நேரும்.

ஆனால், இந்தப் பருவத்தின் முடிவில் தன்னைத்தானே காத்துக் கொள்ளக் கூடிய சத்திகளைக் குழந்தை பெற்றுவிடுகிறது ; பெரியவர் களால் தொல்லைபடுத்தப்பட்டால் வார்த்தைகளைக் கொண்டு எதிர்ப் பைக் காட்டுகிறது ; அல்லது ஓடி ஒளிந்துகொள்ள முயல்கிறது. தன்னைக் காத்துக்கொள்வதுதான் குழந்தையின் உண்மையான நோக்கம் என்பதன்று. அதற்குச் சாதிக்க வேண்டியதெல்லாம் தன் சூழ்நிலையைத் தனக்குப் பயனாக்கிக்கொண்டு அதன் மூலமாகத் தன் வளர்ச்சியைக் காண வேண்டுமென்பதே அதன் நோக்கம். அது வளர்த்துக்கொள்ள வேண்டுவதுதான் என்ன ? இது வரை அது படைத்துக்கொண்டு வந்த சத்திகளே. எனவே, மூன்றுமாண்டி லிருந்து ஆறுமாண்டு வரை தன் சூழ்நிலையைத் தன் நனவுடன் தேவைக்கு ஏற்பப் பயன்படுத்திக்கொள்ள அதற்கு இயலும். ஆதலால், குழந்தை **உண்மையான படைப்புப் பருவத்தை ஆரம்பிக்கிறது**. இது வரை மறைந்த சத்திகளைக் குழந்தை ஆக்கிக்கொண்டிருந்தது. அந்தச் சத்திகள் தங்களை வெளிக்காட்டிக்கொள்ள வசதி ஏற்பட்டிருக்கிறது. குழந்தையின் சூழ்நிலையில் கிடைக்கக்கூடிய நனவுடைய அனுபவ அவகாசங்களுக்கு நன்றி கூறவேண்டியிருக்கிறது. இந்த அனுபவங் கள் ஏதோ வெற்று விளையாட்டென்றோ, அல்லது ஏதோ அகஸ்மாத் தாக நடைபெற்ற செயல் தொடர் என்றோ நினைத்துவிடக்கூடாது. ஆனால், இவையெல்லாம் குழந்தை வளர்ச்சிக்குத் தேவையான தொழில்கள் என்றே கொள்ள வேண்டும். நுண்ணறிவால் தூண்டப் பட்ட குழந்தையின் கரங்கள் மனித சம்பந்தப்பட்ட செயல்களில் ஈடுபடத் தொடங்குகின்றன. முதலில் குழந்தை அனேகமாக ஆழ்ந்த சிந்தனைப் பேர்வழியாகவே இருந்தது ; தன் உலகத்தைச் செயலற்று உற்று நோக்கிய வண்ணமாய் இருந்தது ; தன் மனத்தின் அடிப் படையை ஆக்குவிப்பதற்கு உபயோகித்து வந்தது. ஆனால், இந்தப் புது உலகில் (பருவத்தில்) அது தன் மனவுறுதியைப் (Will) பயின்று கொள்கிறது. முதலில் ஆள் குறியாத [1] சத்தி ஒன்று அதற்கு வழி காட்டியாய் இருந்தது. அச்சத்தி தனக்குள் மறைந்துகிடந்ததுபோல இருந்தது. இப்பொழுதோ, நனவுள்ள 'நான்' என்ற தன் சொந்த

1. Impersonal

இயலே அதற்கு வழிகாட்டியாய் இருக்கிறது. அதன் கைகள் துறு துறு என்று ஏதோ செய்துகொண்டிருப்பதையும் நாம் காண்கிறோம். இது வரை குழந்தையானது ஏதோ நனவிலா நுண்ணறிவால் உலகத்தை உட்கவர்ந்த பிறகு இப்பொழுது அதன்மேல் தன் கரங்களை வைப்பது போல இருக்கிறது.

இப்பொழுது தொடங்கும் மற்றொரு வளர்ச்சியானது இது வரை பெறப்பட்ட திறமைகள் எல்லாவற்றையும் நிறைவுபடுத்துகிறது. இதற்கு மொழி ஒரு தெளிவான எடுத்துக்காட்டாகும். ஏனெனில், தன்னியல்பாக நடைபெறும் இவ்வளர்ச்சி சுமார் ஐந்தாண்டு வரை நடைபெற்று வருகிறது. இரண்டரை வயதிலிருந்தே இந்த மொழித்திறமை குழந்தையிடம் இருந்துதான் வந்திருக்கிறது. குழந்தை அப்பொழுது நிறைவுபெற்றிருக்கிறது. ஏனென்றால், சொற்களை உபயோகிப்பதோடல்லாமல், இலக்கணவழு ஏற்படாமல் முற்றுச் சொற்றொடர்களை உபயோகிக்கும் திறமையும் பெற்றிருக்கிறது. இந்த **மொழி உணர்ச்சி**— (இந்தப் பதம் எங்கள் கற்பனை) குறிப்பிட்ட வயதில் மொழியைக் கற்றுக் கொள்ளும் திறமையைப் பெற்றது. அப்பருவம் தாண்டிவிட்டால் அந்தத் திறமையும் மறைகிறது. இந்த மொழி உணர்ச்சியானது ஒலிகளை மேலும் மேலும் திருத்தமாக நிலைபெறச் செய்யுமாறு குழந்தையைத் தூண்டிவிடுகிறது. இதற்கும் மேலாகப் பற்பல சொற்கோவைகளைத் தான் பெறும்படியாகவும் உந்திவிடுகிறது.

எனவே, இரண்டு போக்குகள் இருக்கின்றன: **சூழ்நிலையின் மேல் ஆற்றப்படுகின்ற செயல்களால் நனவு நிலையை விரிவு படுத்துவது ஒன்று; மற்றொன்று, இது வரை ஆக்கப்பட்ட சத்திகளை இன்னும் அதிகப்படுத்தி நிறைவாக்குவது.** இவை நமக்கு என்ன காட்டுகின்றன? மூன்றுமாண்டிலிருந்து ஆறுமாண்டு வரை உள்ள பருவம் செயல்களால் **'ஆக்க நிறைவு'** [1] **அடையும் பருவம்** என்பதைக் காட்டுகின்றன.

வெளியுலகத்திலிருந்து சலிப்படையாமல் உட்கவரும் திறமை மனத்திற்கு இன்றும் இருந்து வருகிறது. ஆனால், இந்த உட்கவரும் சத்தி செயலுற்ற அனுபவங்களால் உதவி பெற்று, மேலும் வளம் பெறுகிறது.

இனிப் புலன்களின் செயல்கள் மட்டும் அன்றி, கையும் பங்கெடுத்துக்கொள்கிறது. இந்தக் **கை மனத்தின் பற்றும் உறுப்பாகிவிடுகிறது.** [2] இதற்கு முன்பு குழந்தையைக் கையில் ஏந்திக்கொண்டு

1. Constructive perfectionment

2. பச்சோந்தியின் வால் கிளைகளைப் பற்றிக்கொள்ள வளைந்து கொடுக்கிறது. தேவாங்கின் வாலும் பற்றும் உறுப்பாகப் பயன்படுகிறது.

இங்குமங்கும் செல்லும்பொழுது குழந்தை தன்னைச்சுற்றிலும் உள்ளன வற்றைத் தன் கண்களால் உற்று நோக்கி அவற்றைத் தனக்குள் கவர்ந்துகொண்டு வந்தது. ஆனால், அது எதையும் தொடவேண்டும் என்ற தடுக்க இயலாத ஓர் உளப்போக்கைக் காட்டுகிறது; ஒவ்வொரு தனிப்பொருளினிடத்தும் சற்றுத் தாமதித்தே செல்ல விரும்புகிறது. அது ஓயாமல் வேலை செய்துகொண்டேயிருக்கிறது. தன் கைகளால் ஏதாவது ஒன்றை இடைவிடாமல் செய்துகொண்டிருப்பதில் குழந்தை மகிழ்ச்சி அடைகிறது. இனி அதன் நுண்ணறிவு சும்மா இருப்பதால் வளர்ச்சி பெறுவதில்லை. அதனுடைய செயல்களுக்கு ஊக்கம் அளிக் கக்கூடிய பல பொருள்கள் அதற்குத் தேவைப்படுகின்றன. ஏனெ னில், இந்த உருவாகும் பருவத்தில் இன்னும் நடைபெறவிருக்கும் உளவியல் வளர்ச்சிகள் இருக்கின்றன.

இந்தப் பருவம், 'புனிதமான விளையாட்டுப் பருவம்' என்று வழங்கப்படுகிறது. இதைப்பற்றி மக்கள் ஒருவாறு உணர்ந்து வருகின்றார்கள். எனினும், அண்மையிலேதான் இதைப்பற்றி விஞ் ஞான முறையில் ஆராய்ச்சி செய்யத் தொடங்கியிருக்கின்றனர்.

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நாகரிக வாழ்வின் வேகம் மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள இடைவெளியை இன்னும் விரிவு படுத்திக்கொண்டே போகிறது. இதன் தேவையைச் சரிகட்டக் குழந்தைக்கு ஏராளமான பொம்மைகளைத் தருகின்றனர். குழந் தைக்கு உண்மையான தேவை வேறு வகையான தூண்டல்களாகும். இந்த வயதில் பற்பல பண்டங்களைக் குழந்தை தன் கரங்களால் தொட்டுப் பார்க்க வேண்டும். எனினும், உண்மையான பண்டம் எதுவும் அதனிடம் கொடுக்கப்படுவதில்லை. அதன் கண்களுக்குப் புலப்படக்கூடிய பெரும்பாலான பண்டங்களை அது '**தொடக் கூடாது**' என்று தடுக்கப்படுகின்றது. நவீனக் குழந்தை தங்கு தடையின்றித் தொட்டுப் பழகலாம் என்பது ஒரே ஒரு பண்டம். அதென்ன? அதுதான் மணல். குழந்தையை மணலில் விளையாட விடுவது எல்லாருக்கும் பொதுவாகிவிட்டது. சில சமயங்களில் அதைத் தண்ணீருடனும் விளையாட விடுகின்றனர். ஆனால், அவ்வளவு அதிகமாய் இல்லை. ஏனென்றால், குழந்தை சொக்காய் துணிகளை நனைத்துக்கொள்கிறது. மணலும் தண்ணீரும் கலந்துவிட்டால், ஒரே குழப்பமாகிவிடுகிறது. இதனால் ஏற்படும் தொல்லைகளைச் சரியாக்கு வதில் முதியோர்க்கு அவ்வளவு விருப்பம் இல்லை.

சில நாடுகளில் பொம்மை செய்யும் கைத்தொழில் அவ்வளவு முன்னேற்றம் அடையாமல் இருக்கின்றது. அத்தகைய நாட்டுக் குழந்தைகளின் விருப்பங்கள் வேறு விதமாய் இருக்கும். அவை மிகுந்த அமைதியுடனும் அதிக விவேகத்துடனும் மகிழ்ச்சியுற்றிருப் பதைக் காண்கிறோம். அவற்றைச் சுற்றிலும் நடைபெற்று வரும்

செயல்களில் அவை பங்கெடுத்துக்கொள்ள வேண்டும் என்பதிலேயே அவற்றின் கருத்துச் செல்கிறது. வயது வந்தவர்கள் பண்டங்களைத் தொட்டுப் பயின்று எவ்வகையில் செயல் ஆற்றி வருகின்றார்களோ, அவ்வகையிலேயே இக்குழந்தைகளும் செய்து வருகின்றன. தாய் ஏதாவது துணிமணிகளை வைத்துக்கொண்டிருந்தாலோ, அல்லது ரொட்டி பணியாரம் செய்துகொண்டிருந்தாலோ, குழந்தையும் அவ்வேலையில் கலந்துகொள்கிறது. ஏதோ பார்த்தபடியே செய்கின்ற செயலானாலும், அது தேர்ந்தெடுத்த நுண்ணறிவு கலந்த பார்த்துச் செய்தலாகும் (Imitation). இம்மாதிரி பார்த்தபடியே செய்தலால், குழந்தை வருங்கால உலகத்தில் நடந்துகொள்வதற்குத் தன்னை ஆயத்தம் ஆக்கிக்கொள்கிறது. குழந்தை தன்னுடைய நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக இக்காரியங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது என்பதற்குச் சிறிதும் ஐயம் இல்லை. இந்த நோக்கங்களும் தன் அந்தரங்க வளர்ச்சியைச் சார்ந்தவையாயிருக்கும். தேவையானவை எல்லாவற்றையும் நாங்கள் எங்கள் பள்ளிக்கூடங்களில் குழந்தைக்குக் கொடுத்து வருகிறோம். அப்பொழுது தான் குழந்தையின் இல்லத்தில் நடைபெறுகின்றவைகளையும், தன் நாட்டில் நடைபெறுகின்ற செயல்களையும் குழந்தை பார்த்துச் செய்ய உதவி புரிந்ததாய் இருக்கும். நாங்கள் குழந்தைக்கென்றே தக்க முறையில் ஆக்கப்பட்ட கருவிகளை வைத்திருக்கிறோம். அவை குழந்தையின் சிறிய உருவத்துக்கும் உடல் வலிமைக்கும் பொருத்தமான அளவு இலேசான கருவிகளாகவே இருக்கும். அந்த அறையானது குழந்தைக்கே உரியதாகும். அவ்வறையில் குழந்தை தன் விருப்பம் போல நடமாடலாம் ; பேசலாம் ; தன்னை ஆக்கிக்கொள்ள உதவி புரியும் நுண்ணறிவு கலந்த செயல்களில் ஈடுபடலாம்.

இக்காலத்தில் இவைகளெல்லாம் வெளிப்படையானவைகளாய்த் தோன்றலாம். ஆனால், முதன்முதலில் இக்கருத்தை நான் வெளியிட்ட பொழுது பொதுமக்கள் மிகவும் வியப்படைந்தார்கள். நானும் எனக்கு உதவி புரிந்தோரும் மூன்றாண்டு முதல் ஆறாண்டு வரை வயதுடைய குழந்தைகளுக்குப் பொருத்தமான மேசைகளையும் நாற்காலிகளையும், மற்றச் சாமான்களையும் ஆயத்தம் ஆக்கினோம். அந்தச் சூழ்நிலை தங்களுக்குச் சொந்தமானதென்றே அக்குழந்தைகள் கருதி வாழ முடிந்தது. இவற்றைக் கண்டோர்க்கெல்லாம் இது மிகவும் ஆச்சரியமாகவே தோன்றிற்று. சிறுசிறு மேசை நாற்காலிகள், சிறு தட்டுகள், கழுவுவதற்குச் சிறு கிண்ணங்கள் முதலியன அவற்றுக்கு அளிக்கப்பட்டன. இவற்றுடன் உண்மையான வாழ்க்கைக்குரிய செயல்களாகிய உணவுக்காகிய மேசையை ஆயத்தம் ஆக்குதல்,[1]

1. நமக்கு மணையிட்டோ, பாய் விரித்தோ, இலை போட்டோ ஆயத்தமாக்குவது மரபு.

நெருப்புக் கூட்டில் உள்ள சாம்பலை நீக்குதல், வீடு கூட்டுதல், தூசி தட்டுதல், துணிமணிகளைத் தாங்களே கழற்றி வைத்துப் பிறகு அணிந்துகொள்வதற்குத் தகுந்த ஏற்பாடுகள் போன்றவைகளைக் கண்டோர் '**கல்வித் துறையில் புதுமைக் கருத்துகள்!**' என்று வானளாவப் புகழ்ந்தனர்.

இதற்குப் பிறகு அக்குழந்தைகள் சமூக வாழ்க்கையில் கலந்து கொள்ளும் பொழுது இது வரை எதிர்பாராத விருப்பங்களும் போக்கு களும் அக்குழந்தைகளிடம் தோற்றம் அளித்தன. அவை பொம்மை களுக்குப் பதிலாகக் குழந்தைகளின் தோழமையை விரும்பின. உண்மையான சின்னஞ்சிறு செப்புப் பாத்திரங்களை விளையாட்டுச் செப்புகளுக்குப் பதிலாக விரும்பின. இத்தனைக்கும் குழந்தைகளே எங்களுக்கு விளக்கம் தந்தன.

பேராசிரியர் ஜான் டியூயி[1] என்பவர், அமெரிக்க நாட்டுக் கல் வித்துறையில் சிறந்தவர், குழந்தைகளுக்குத் தகுந்த அளவில் சிறு சிறு பாத்திர பண்டங்கள் வாங்க இயலும் என்ற கருத்துடன் நியூ யார்க்கு நகரத்தில் சுற்றித் தேடி அலைந்து பார்த்தாராம். நியூயார்க்கு நகரம் அமெரிக்க வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டான சிறந்த ஒருநகரம். இந்நகரத்தில் உள்ள கடைதோறும் சென்று குழந்தைகளே உபயோ கிக்கத் தகுந்த துடைப்பங்கள், முக்காலிகள், தட்டுமுட்டுச் சாமான் கள் முதலியவை கிடைக்குமா என்று தேடிப் பார்த்தாராம். இத் தகைய சரக்கை எங்கும் அவரால் காண இயலவில்லை. இத்தகைய சாமான்களைச் செய்ய வேண்டும் என்ற எண்ணமே கடைக்காரர் களுக்கு அது வரை இல்லை. கடையில் இருந்தவை எல்லாம் எண் ணற்ற பொம்மைகளே. அவற்றைக் கண்ட பிறகு பேராசிரியர் டியூயி, '**குழந்தைகளை மறந்தேவிட்டார்களே!**' என்று வியப் புடன் கூறினாராம்.

அந்தோ! குழந்தை இதைப் போல் பல விதங்களில் மறக்கப் பட்டிருக்கிறது. **குழந்தை மறக்கப்பட்ட குடி.**[1] இந்தக் குடிமகன் வாழ்கின்ற சூழ்நிலையில் இருப்பவை எல்லாம் மற்றவர்க்கேயன்றிக் குழந்தைக்குத் தகுந்தது எதுவும் இல்லை. இந்தக் காலியான உலகத் தில் இந்தக் குடிமகன் எந்த நோக்கமும் இல்லாமல் அலைகிறான்; அடிக்கடி துடுக்குச் செய்கிறான்; தன் பொம்மைகளை உடைக்கிறான்; தன் உள்ளச் சத்திக்கு நிறைவை வீணாகத் தேடுகிறான். இவனு டைய உண்மையான தேவைகள் என்ன என்பதைப் பெரியோர் சிறிதளவேனும் உணர்வதில்லை.

---

1. Professor John Dewey

எங்கள் பள்ளிக்கூடங்களில் இந்தத் தடையைத் தகர்த்தெறிந் தோம்; உண்மையை மறைக்கும் தீமையைக் கிழித்தெறிந்தோம்; உண்மையான உலகத்தில், உண்மையான சாமான்களைக் குழந்தைகள் உபயோகிக்கக் கொடுத்தோம். அவற்றைத் தாமே உபயோகிப்பதில் குழந்தைகளிடம் தனிக் களிப்பும் மகிழ்ச்சியும் எதிர் பார்த்தோம். ஆனால், இதற்கு மேலானதை நாங்கள் கண் டோம். **குழந்தையின் ஆளுமையின் முழுமையும் மாறிற்று.** இத னுடைய முதல் அறிகுறியானது சுயேச்சையை நிலைநாட்டுதலாகும். இது, 'எல்லாம் நானே செய்துகொள்ள விரும்புகிறேன். இப்பொழுது தயவு செய்து எனக்கு உதவி புரியாதீர்கள்,' என்று குழந்தை சொல் லிக்கொள்வது போல இருந்தது.

குழந்தை திடீரென்று கருவம் கொண்ட ஒரு பெரிய மனிதனைப் போல ஆகிவிட்டது; எந்த உதவியையும் உதறித் தள்ளிவிடுகிறது. இவையெல்லாம் அதனுடைய துலங்கல் என்று எவர்தான் எதிர்பார்த் திருப்பார்கள்! பெரியவர்கள் எட்ட நின்று பார்த்துக்கொண்டிருக்க வேண்டியவர்களன்றி வேறல்ல என்று யாராவது எதிர்பார்த்திருப்பார் களா? தன் உருவத்துக்குத் தகுந்த அளவு பண்டங்கள் நிறைந்த சூழ்நிலையில் ஒரு குழந்தை வந்தவுடன் அக்குழந்தை அவற்றைத் தானகப் பயன்படுத்த ஆரம்பித்தது. சமூக வாழ்க்கையும் குண இயல் அமைப்பும் தாமாகவே பின் தொடர்ந்தன.

எனவே, நடைபெற்றதன் பயன் குழந்தையின் இன்பம். ஆனால், குழந்தை மனிதனை ஆக்கும் பணியில் இறங்க ஆரம்பித்துவிட்டது. கல்வியின் குறிக்கோளானது இன்பம் ஒன்று மட்டுமன்று; ஒரு மனிதன் தன்னுடைய குண இயல் சத்தியில் சுயேச்சை உள்ளவனாய் இருக்க வேண்டும்; தன்னால் நடைபெறவிருக்கும் எல்லா விஷயங் களிலும் தன் உரிமையை நிலைநாட்டிப் பணி புரிய வேண்டியவனாய் இருத்தல் வேண்டும். நனவு நிலை தோன்றிக் கட்டுப்படுத்த ஆரம் பித்தவுடன் இந்த விதமாகத்தான் எங்களுக்குக் குழந்தைமை தன்னை விளக்கிக் காட்டிற்று.

---

1. The forgotten citizen, 2. Response

# 17. தன்னியல்பான செயல்

தங்களைச் சூழ்ந்துள்ள உலகில் செயலுற்ற அனுபவங்களைக் காணும்படி அவற்றின் இயலின் விதிகள் இந்த வயதுக் குழந்தை களைத் தூண்டுகின்றன. இதற்காக அவை தம் கரங்களை உபயோ கிக்கின்றன; செயல் முறை நோக்கங்களுக்கு மட்டுமன்றி, அறிவை வளர்ப்பதற்கும் உபயோகிக்கின்றன. நாங்கள் அமைத்துக் கொடுத் திருக்கும் சூழ்நிலையில் குழந்தைகளை விட்டு வைத்தோமானால், அவற் றின் இயலிலும் ஆற்றலிலும் எதிர்பாராத பதிவுகளை அவை எங்களுக்கு எடுத்துக் காட்டுகின்றன. அவை களிப்புற்றவைகளாய்க் காணப்படு கின்றன; நெடுநேரம் சலிப்படையாமல் தொழில் புரியக்கூடிய அளவு ஆழ்ந்த அக்கறையைப் பெற்றிருக்கின்றன. இது காரணமாக அவற் றின் மனம் மலர, அவை அறிவுக்காக ஆவல் கொண்டவைகளாய் மாறுகின்றன.

'எழுதுவதில் வெடிப்பு' என்ற நிகழ்ச்சிக்கு அடிப்படைக் காரணம் இதுவே. சிறு குழந்தைகளின் மன வாழ்க்கையில் இவ் வாறான சம்பவம் இது வரை எவராலும் கண்டு பிடிக்கப்படவில்லை. இந்த அதிசயம் உலகமெங்கும் பரவிற்று.

'எழுதுவதில் வெடிப்பு' என்பது தீயிலிருந்து கிளம்பின புகைக் குச் சமமாகும். உண்மையான வெடிப்பு உள்ளிருக்கும் ஆளுமை யில் தோன்றுகிறது. அந்தரங்கத்தில் நெருப்பை அடைத்து வைத் திருக்கும் மலைகள் எம் நினைவுக்கு வருகின்றன. வெளிப்படையாகப் பார்க்கும் பொழுது அம்மலைகள் வன்மையாகவும் எம்மாறுதல்களும் பெறுதவை போலவும் தோற்றம் அளிக்கின்றன. ஆனால், ஒரு நாள் திடீரென்று அதிர்ச்சி ஏற்படுகிறது. அந்தப் பிரமாண்டமான பாறைக் குள்ளிருந்து நெருப்பு வெகுண்டு வெளியே வருகிறது. இந்தத் தீயின் தன்மையைக் கொண்டும், புகையைக் கொண்டும், உள்ளிருந்து வெளியே கக்கப்படுகின்ற புதுமையான பொருள்களைக் கொண்டும், பூமிக்குள் என்னென்ன இருக்கின்றனவென்பதை அறிஞர்கள் ஆராய இயலும்.

உண்மையான வாழ்க்கை அனுபவங்களைப் பெறக்கூடிய சூழ் நிலையில் குழந்தைகளின் உருவத்துக்குத் தக்க அளவுடைய பயன் தரும் கருவிகளைத் தாங்களே உபயோகிக்கலாம் என்ற ஏற்பாட்டைப் பார்த்தவுடன் அவற்றின் உள்ளத்தில் இது வரை எதிர் பாராத செயல்கள் உயிர் பெறத் தொடங்கின. இச்சம்பவங்கள் அதிசய மானவை; தவற முடியாதவை. இவற்றின் பொருள் என்ன என் பதைத் தொடர்ந்து கவனிக்கும் முயற்சி எங்களைச் சார்ந்தது. இவை போன்ற மற்றச் சம்பவங்களையும் தோற்றுவிக்க நாங்கள் முயற்சி செய்தோம். அது காரணமாக இந்தக் கல்வி முறை பிறந்தது.

இது வரை அங்கீகரிக்கப்பட்ட எந்தக் கல்வி முறையும் இச் சம்பவங்களைத் தோற்றுவிக்கவில்லை. அதற்கு மாருக இச்சம்பவங்கள் தாமாகவே படிப்படியாய் மலர்ந்தன. இவை எங்களுக்கு வழி காட்டின; குழந்தைகளை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதை எங்களுக்குக் கற்பித்தன. குழந்தைகளுக்குத் திருத்தி அளிக்கக்கூடிய வாழ்க்கைச் சூழ்நிலைகளை அமைத்துத் தருவதில் எங்களுடைய முதல் முயற்சி தொடங்கிற்று. குழந்தைகள் தங்கள் வளர்ச்சிக்கு எவ்வித இடையூறுகளும் இராமலிருக்க வேண்டும். நாங்கள் இவற்றுக்காக ஏற்பாடு செய்திருந்த பலவகைச் செயல்களில் எதை வேண்டுமாலுைம் குழந்தைகள் தேர்ந்தெடுத்துக்கொள்ளச் சுதந்தரம் பெற்றிருந்தன. நாங்கள் செய்த ஏற்பாடுகள் எல்லா வற்ருலும் 'குழந்தையின் உள இயலைக் கண்டுபிடித்தோம்,' என்ருல், அது மிகையாகாது. அந்தச் சமயத்தில் 'பியரி'[1] என்ற பிரதேச ஆராய்ச்சியாளர் ஒருவர், வடதுருவ ஆராய்ச்சியிலிருந்து திரும்பி வந்திருந்தார். எங்களுடைய பணியைக் கண்டதும், '**இது 'மனித ஆன்மாவைக் கண்டுபிடித்தல்,'** என்று வருணித்தார். கல்வி முறை என்று வழங்குவதைவிட இவ்வாறு கூறுவது குழந்தை இயலின் உண்மையான நிலைமையை விளக்கும் என்று அவர் கருதினுர்.

தொடக்கத்திலிருந்து தெளிவாகத் தோற்றம் அளித்த இருவகை மெய்ந்நிகழ்ச்சிகள் இருந்தன. பொதுவாக எல்லாராலும் கருதப்பட்டு வந்ததைவிட இன்னும் முந்தின வயதிலேயே குழந்தையினுடைய மனம் பண்பாட்டைப் பெற இயலும் என்பது ஒன்று. ஆனல், குழந்தை அறிவைப் பெறுவது இயக்கத்தைக் கொண்ட சில வகையான செயல் களாலேதான். இந்த வயதில் செயல்களாலேதான் குழந்தை கற்க இயலும். தனது மலரும் உள்ளத்தை வளரச் செய்வதற்குக் குழந்தை ஏதாவதொன்று செய்ய வேண்டும். மூன்ருண்டிலிருந்து ஆருண்டு

1. Robert Edwin Peary—அமெரிக்க நாட்டவர்; வட துருவத்தை 1909ல் கண்டு பிடித்தவர்.

வரை குழந்தையின் ஈர்க்கும் சக்தி எவ்வளவு பெரிதென்பதை நாம் இப்பொழுது உணர்ந்திருக்கிறோம். இதைப்பற்றி இனிமேல் ஐயப்படுவதற்கு இடமேது ?

**இரண்டாவது மெய்ந்நிகழ்ச்சித் தொகையானது ஒழுக்கத்தைப் பொறுத்தது.** இதைப்பற்றி இனி வரும் அத்தியாயங்களில் எடுத்துக் கூறுகிறேன். இப்பொழுது முதல் தொகுதியைப்பற்றி ஆராய்கிறேன். சுயேச்சையான செயல்களின் மூலம் பண்பாட்டைக் குழந்தை தனக்குள் ஈர்த்துக்கொள்வதைப்பற்றி விளக்குவேன்.

இதற்கு முந்தின பருவங்களில் உட்கவர்ந்து பழக்கப்பட்ட விஷயங்களில் குழந்தைகளுக்குத் தனிப்பட்ட அக்கறை தோன்றுகிறது. இவற்றின்மேல் தம் மனத்தைச் சிரமமில்லாமல் ஊன்றச் செய்ய இயலும். எடுத்துக்காட்டாக, வெடிப்புடன் எழுதத்தொடங்குவது குழந்தையின் மொழிமேல் உள்ள தனிப்பட்ட உணர்ச்சியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. இது அக்குழந்தை பேசத் தொடங்கும் பொழுது செயல் ஆற்றும் தன்மை உடையதாய் இருந்தது. ஐந்தரை அல்லது ஆறு வயதுக்குள் இந்த உணர்ச்சிப் பருவம் மறைந்துவிடுகிறது. ஆதலால், ஊக்கத்துடனும் இன்பத்துடனும் எழுதக் கற்றுக்கொள்வதென்பது இந்த ஆறு வயதுக்கு முற்பட்டதுதான் என்பது தெளிவாகிறது. இயற்கையன்னை எழுதுவதற்கான சத்தியைக் குழந்தைகளுக்குக் கொடுத்திருக்கிறாள். இந்த வயதுக்கு மீறின குழந்தைகள் இந்தத் தனிப்பட்ட பேற்றினை இழந்துவிட்டார்கள். தானாகப் பெறுவதற்குப் பதிலாக மனத்தை வற்புறுத்தி ஒரு நிலைப்படுத்தித் தனி முயற்சிகள் செய்து கற்றுக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது.

எனவே, எளிய முயற்சியால் பெறக்கூடிய இந்த எழுதும் திறமை நம்முடைய உணர்ச்சிப் பருவங்களைப் பயன்படுத்திக்கொள்வதால் மட்டும் தோன்றிவிடவில்லை என்பதை மற்ற அனுபவங்களிலிருந்து நாம் அறிகிறோம். குழந்தைகள் முன் கூட்டியே செய்கின்ற சில பயிற்சிகளைப் பொறுத்து இருக்கிறது இந்த எழுதும் திறமை. இதற்கு முந்தின பருவத்தில் குழந்தை இப்பயிற்சிகளைச் செய்திருக்கின்றது. குழந்தை இளமையில் தன்னுடைய புலன்களைக்கொண்டு ஆராய்ந்து ஒன்றோடொன்றுக்குள்ள வேறுபாடுகளை உணர்வதற்கெனத் தேவைப்படும் துணைக் கருவிகளை மிகவும் சாக்கிரதையாக நாங்கள் அமைத்திருக்கிறோம். இக்கருவிகளைக்கொண்டு குழந்தைகள் ஏற்கெனவே பயிற்சிகள் செய்திருக்கின்றன. ஆதலால், எங்களுடைய முறையில் ஒரு புதுக்கொள்கை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு '**மறைமுக ஆயத்தம்**' (Indirect preparation) என்பது பெயர்.

இயற்கை அன்னையே இக்கொள்கையைப் பயன்படுத்திக்கொள்கிருள். கரு வளர்ச்சியில் தனிப் பேர்வழிக்கு இனி எது தேவைப்படுமோ, அதை எதிர்பார்த்துத் தக்க அங்கங்களை உருவாக்குகிறது. இந்த அமைப்புகளெல்லாம் ஏற்பட்டபிறகு இயற்கையன்னை இவற்றை இயங்கச் செய்கிருள்.

குழந்தை தன் முதற்பருவத்தில் அமைத்துக்கொண்டிருப்பதை அடிப்படையாகக்கொண்டு இரண்டாவது பருவத்தில் இன்னும் விரிவுபடுத்த முயன்ருல், இனி வரப்போவதற்கு முன் கூறியவை வழி காட்டியாய் இருக்குமெனக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, குழந்தைக்குப் பேச்சு வருவதைக் கவனிப்போம். குழந்தை தனது முதற்பருவத்தில் படிப்படியான பல பகுதிகளைக் கடக்கிறதைப் பார்க்கிரேம். இவை இலக்கணப் புத்தகத்தில் கூறப்பட்டிருக்கும் ஒழுங்கைப் போன்றவை என்பதையும் அறிவோம். குழந்தையும் தனி ஓசைகளையும் பதங்களையும் பெயர்ச்சொற்களையும், வினைச் சொற்களையும், பெயர் உரிச்சொற்களையும், வினையுரிச்சொற்களையும், உருபிடைச்சொற்களையும், கூட்டிடைச் சொற்களையும், பிறவற்றையும் உச்சரிக்கிறது. ஆதலால், இந்தத் தொடரைக் கொண்டு குழந்தையின் இரண்டாம் பருவத்தில் அதற்கு நம்மால் உதவி புரிய இயலும் என்பதை அறிகிரேம். ஆம். குழந்தைக்குத் தொடக்கத்திலிருந்தே இலக்கணம் கற்றுக்கொடுப்போம். இன்று கருதப்பட்டு வரும் போக்கில் இது பேதைமையாகத் தோன்றலாம். குழந்தைக்கு மொழி கற்பிப்பதன் முதற்படி இலக்கணப்பாடமா ! அதுவும் எழுதப் படிக்கத் தெரியாததற்கு முன் குழந்தை இவ்விலக்கணத்தைக் கற்றுக்கொள்வதா !

நாம் சற்று இவ்விஷயத்தை ஆழ்ந்து சிந்திப்போம் : பொருள் விளங்கும் பேச்சுக்கு அடிப்படை யாது ? அது இலக்கணமல்லவா ? குழந்தைகளும் நாமும் பேசும் பொழுது இலக்கணமாகத்தான் பேசுகிரேம். நான்கு வயதில் குழந்தை தனது மொழியைச் சீர்படுத்திக் கொண்டு அதற்குத் தெரிந்த சொற்களின் தொகையை இன்னும் அதிகப்படுத்திக்கொண்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் குழந்தைக்கு நாம் இலக்கண உதவி அளித்தோமானல், குழந்தையின் மொழி வளர்ச்சிக்குப் பயன் தரும் சூழ்நிலையை அமைக்கிரேம். குழந்தை தனக்குள் கவர்ந்துகொண்டிருக்கும் பேச்சு மொழியை நாம் கற்றுக் கொடுக்கும் இலக்கணத்தை இன்னும் பிழையில்லாமல் வெற்றிகரமாகக் கற்றுக்கொள்ள நாம் உதவி புரிகிரேம். சிறு குழந்தைகள் இலக்கணத்தில் ஆழ்ந்த அக்கறையைக் காட்டுகின்றன என்பது எமது அனுபவம். ஆதலால், இந்தப் பருவத்திலேதான் அவற்றுக்கு இலக்கணம் கற்பிக்க ஏற்பாடு செய்தல் வேண்டும். பிறந்ததிலிருந்து

மூன்றுண்டு வரை உள்ள முதற்பருவத்தில் இலக்கண அமைப்பை ஆக்கிக்கொண்டது நனவில்லா (unconscious) நிலையில் ஏற்பட்டது. இப்பொழுது அது நனவுடன் சீர்படுத்தப்படலாம். இதுவுமல்லாமல், வேறு ஒன்று நம் கவனத்துக்கு வருகிறது. இந்த வயதுக் குழந்தை பல புதுச் சொற்களைக் கற்றுக்கொள்கிறது. வார்த்தைகளுக்கென்ற ஒரு தனிப்பட்ட உணர்ச்சியை இந்த வயதுக் குழந்தை பெற்றிருக்கிறது. **புதுச்சொற்கள் குழந்தையின் அக்கறையை ஈர்க்கின்றன.** குழந்தை தானுகவே பல சொற்களைத் தனக்குள் அடக்கிக்கொள்கிறது.

குழந்தையின் சொல் தொகுதி மிகவும்அதிகரிப்பது இந்தப் பருவத்திலேதான் என்னும் உண்மையைப் பல பரிசோதனைகள் நிரூபிக்கின்றன.ஏதோ குழந்தைக்குச் **சொற்பசி** வந்துவிட்டது போல இருக்கிறது.அதற்கு நாம் உதவி புரியாவிடில், தன் முயற்சியால் குறியில்லாமல்நேர்ந்தபடி கற்றுக்கொள்ளும். ஆதலால், குழந்தைக்குத் தேவைப்படும் சொற்களை நாங்கள் தேடி ஒன்று சேர்த்து ஒழுங்கு முறையாக அதற்கு அளிக்கிருேம்.

இவ்வாறு செய்யும் பொழுது எங்களுடைய போக்கில் வேறொன்று தெளிவாயிற்று. அதை நிரந்தரமாக அமைத்துக்கொண்டிருக்கிருேம். முதற்பருவத்தில் எனக்குத் துணை புரிந்த ஆசிரியர்கள். மேற்படிப்பு ஒன்றும் பெருதவர்கள். அவர்கள் குழந்தைகள் படிப்பதற்கென்று பல வார்த்தைகளை எழுதினுர்கள். ஒவ்வொரு வார்த்தையையும் தனித்தனி அட்டையின்மேல் எழுதினுர்கள். ஆனுல், சீக்கிரத்தில் துணிமணிகள், வீட்டிலுள்ள பண்டங்கள், தெருவில் உள்ள பொருள்கள், மரங்கள், இன்னும் பலவற்றின் சம்பந்தமான சொற்களை எல்லாம் எழுதிவிட்டதாக அந்த ஆசிரியர்கள் என்னிடம் வந்து சொன்னுர்கள். எனினும், குழந்தைகள் இன்னும் வேண்டும் வேண்டும் என்றன. ஆதலால், நான் உயர்படிப்பிலிருந்து சொற்களைத் தேர்ந்தெடுக்கத் தொடங்கினேன். குழந்தைகள் எங்களுடைய **புலன் உணர் கருவிகளாகிய** பல கோணம் (Polygon), விஷம சதுர்புஜம் (Trapeza), பல வகை முக்கோணங்கள் ஆகிய வடிவக்கணிதம் சம்பந்தமான கருவிகளை உபயோகித்திருக்கின்றன. நான் அவற்றின் பெயர்களைத் தேர்ந்தெடுத்தேன். குழந்தைகள் அவற்றை எல்லாம் கற்றுக்கொண்டன. ஆதலால், விஞ்ஞானக் கருவிகளின் பெயர்களை எழுதிேனும். உஷ்ணமானியும் பாரமானியும் உள்ளிட்டவை இவற்றுள் அடங்கும். பிறகு தாவரநூல் சம்பந்தமான புல்லிவட்டம், அல்லிவட்டம், சூல், மகரந்தம் போன்றவைகளைக் கொடுத்தோம். அவற்றையும் அவை ஊக்கத்துடன் கற்றுக்கொண்டன; 'இன்னும் வேண்டும்,' என்று கேட்டன. ஆசிரியர்கள் குழந்தைகளை உல்லாச நடைக்கு

வெளியே அழைத்துக்கொண்டு போகும் பொழுது அக்குழந்தைகள் விதம் விதமான மோட்டார் காரின் பெயரையெல்லாம் ஆசிரியர்களுக்கு எடுத்துக் காட்டின. அவற்றைப்பற்றி அறியாத ஆசிரியர்கள் தங்களுடைய அறிவின்மைக்கு மனக்கசப்படையாமல் எங்ஙனம் இருக்க இயலும்?

இந்த வயதுக் குழந்தைகளின் சொற்பசி, தீராப்பசி. அவற்றின் கற்றுக்கொள்ளும் திறமையும் கட்டுக்கு அடங்காதது. ஆனால், இந்த உண்மை அடுத்த பருவத்தில் காணப்படுவதில்லை. அப்பொழுது வேறு சத்திகள் பிறக்கின்றன. அச்சமயத்தில் குழந்தை புது வார்த்தைகளை மிகவும் கஷ்டப்பட்டுத் தெரிந்துகொள்கிறது. இளம்பருவத்தில் இச்சொற்களைக் கற்றுக்கொண்ட குழந்தைகள் இவற்றை மறவாமல், தங்கள் மனத்தில் இருத்திக்கொண்டன. சாதாரணப் பள்ளிக்கூடங்களில் சேர்ந்தபிறகும் இச்சொற்களைத் தங்குதடையில்லாமல் சொல்ல முடிந்தது. எட்டு ஒன்பது வயதான பொழுதும் அதற்குப் பிறகும் இக்குழந்தைகள் இச்சொற்களை மறந்துவிடவில்லை. மேலே குறிப்பிட்டவை எல்லாம் நாங்கள் நேரில் கண்ட அனுபவம். ஆனால், இதே சொற்களை இளமையில் கற்பிப்பதற்குப் பதிலாக எட்டு வயதிலும் அதற்கு மேற்பட்ட வயதிலும் கற்றுக்கொடுத்தால், இதனுடைய பலன் வேறு விதமாய் இருந்தது. இதிலிருந்து என்ன முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது? **அறிவியற்சொற்களை** (Scientific words) **மூன்று வயதிலிருந்து ஆறு வயதுக்குள் கற்றுக்கொடுப்பது சிறந்ததாகும்.** ஏதோ அருத்தமில்லாமல் கிளிப்பிள்ளைக்குச் சொல்லிக்கொடுப்பது போல அன்று! அந்தந்தப் பொருள்களுடன் தொடர்புடையதையோ, அல்லது உல்லாச நடைக்குச் செல்லும் பொழுது கண்ட அறிவியற் பொருள்களைப்பற்றியோ சொல்லித்தர வேண்டும். அப்பொழுதுதான் அவற்றின் அனுபவங்களுக்குத் தக்க அளவில் அவற்றின் சொற்பெருக்கு வளரும். உதாரணமாக, ஓர் இலையின் பாகங்களையோ அல்லது பூவின் பாகங்களையோ காட்டுகிறோம்; அல்லது பூகோள சம்பந்தமான கோளத்தைக் காட்டித் தக்க சொற்களை (முனை, விரிகுடா, தீவு முலியன) எடுத்துக்கூறுகிறோம். குழந்தைகள் தாமாக எடுத்துப் பார்க்கக்கூடிய முறையில் இவற்றைப்பற்றிய உருவங்களும், படங்களும், வரைபடங்களும் இருத்தல் அவசியம். குழந்தைகளைப் பொறுத்த மட்டில் எவ்விதத் தொல்லையும் இல்லை. ஆனால், ஆசிரியர்களுக்கு இச்சொற்கள் தெரிவதில்லை; தெரிந்தாலும், எளிதில் மறந்துவிடுகின்றனர்கள்; அல்லது குழப்பிக்கொள்கின்றனர்கள்.

கோடைக்கானலில் பதினன்கு வயது சிறுவர்கள் ஒரு மலரின் பாகங்களுக்கு என்னென்ன பெயர்கள் என்பதைப்பற்றித் தடுமாறிக்

கொண்டிருந்ததைப் பார்த்தேன். மூன்று வயதுக் குட்டி ஒன்று அவர்களுக்கு உதவி புரிய வந்தது. 'சூல்' என்று சொல்லிவிட்டு அந்தக் குட்டிப்பயல் தன் வேலையில் ஈடுபடச் சென்றுவிட்டான்.

வேறொரு சமயத்தில் புத்தகத்தில் கூறப்பட்டிருந்த வேர்களின் வகைகளைப் பற்றிச் சொல்லிக்கொடுத்தோம்; படங்களையும் காட்டினோம். அந்தப் படங்கள் சுவரில் தொங்கவிடப்பட்டிருந்தன. வேறு ஒரு சின்னக் குட்டிப்பயல் 'இப்படங்கள் என்ன?' என்று கேட்டான். இவை என்ன என்பதை நாங்கள் அவனுக்கு எடுத்துக் கூறினோம். இதற்குப் பிறகு என்ன நடந்தது? தோட்டத்தில் பல செடிகள் வேருடன் பிடுங்கப்பட்டுக் கிடந்தன. நாங்கள் காட்டினது இந்தச் சிறு பயலின் மனத்தைக் கவர்ந்துவிட்டது. இவன் ஒவ்வொரு செடிக்கும் எத்தகைய வேர் இருக்கிறதென்று பார்க்கவேண்டும் என்று நினைத்தான். ஆதலால், நாங்கள் நேரடியாகப் பாடம் நடத்தலாம் என்று எண்ணினோம். ஆனால், பெற்றோர்களிடமிருந்து இதற்கு எதிர்ப்பு வந்தது. என்ன? குழந்தைகள் தத்தம் இல்லங்களுக்குச் சென்றதும் தோட்டத்தில் உள்ள பல செடிகளை வேருடன் பிடுங்கி விட்டதாகவும், அவ்வேர்களை நன்றாகக் கழுவி எத்தகைய வேர் என்று சோதித்ததாகவும் பெற்றோர்கள் முறையிட்டார்கள்.

## கற்பனை

குழந்தை மனத்தின் அடி வானம் அது பார்க்கின்ற அளவு மட்டுந்தானா? அன்று. அது காட்சிக்கு அப்பாற்பட்டதையும் எண்ணக் கூடிய மனத்தைப் பெற்றிருக்கிறது. **அதற்கு மாபெருங்கற்பனைசக்தி இருக்கிறது.**

கட்புலனுக்கு எட்டாததை மனத்துக்குள் உருவாக்கிக்கொள்ள வேண்டுமானால், உயர்ந்த தனிப்பட்ட மனச்சக்தி தேவைப்படும். ஒருவன் கண்ணுக்குத் தெரிந்ததை மட்டுமே அறிவானானால், அப்படிப் பட்டவன் உலகத்தைப் பற்றி எண்ணுவதெல்லாம் சப்பென்றுதான் இருக்கும். நம்முடைய கண்களால் மட்டும் நாம் பார்ப்பதில்லை. பண்பாடு என்பது நாம் பார்ப்பதால் மட்டும் ஏற்பட்டுவிடக் கூடிய தன்று. உலகத்தைப் பொறுத்தமட்டில் நமது அறிவென்ன? உதாரண மாக நம் கண்ணுக்குப் புலப்படும் வகையில் சுற்று வட்டாரத்தில் ஏரிகளோ உறைபனியோ இல்லை என்றால், இவற்றை நம் மனக் கண்முன் கொண்டுவரவே இயலாது. ஒரு வகையான மனத்தின் இயக்கமே இவற்றைச் சாதிக்க நமக்கு உதவி புரிகிறது.

குழந்தைகளால் எவ்வளவு மட்டும் கற்பனை செய்ய இயலும்? இதற்கு விடை தெரியாததால் ஆறு ஆண்டுக் குழந்தைகளைக்

கொண்டு பரிசோதனை நடத்த ஆரம்பித்தோம். பூகோளத்தில் அவ்வளவு பெரியன அல்லாத பகுதிகளை (ஆறு, விரிகுடா, தீவு போன்றவை) எடுத்துக்கூருமல், முழு உலகத்தையே இக்குழந்தை களுக்குக் காட்டி அதன்பயனை ஆராய்ச்சி செய்ய முயன்ரேம். நீர்ப் பகுதியும், நிலப்பகுதியும் காட்டக்கூடிய ஒரு கோளத்தை அவர் களுக்குக் காட்டினேம்.

குழந்தையினுடைய 'சூழ்நிலையிலிருந்து புலன் அறிவால் கற்பனை செய்துகொள்ளக்கூடியதன்று கோளம். இந்தக் கோளத்தைக் கற்பனை செய்துகொள்ள இயலுமானல், அது அதன் மனத்தின் அபாரமான சத்தியால் ஏற்பட்டதாகும். இந்தச் சத்திதான் கற்பனைச் சத்தி. குழந்தைகளுக்கு ஒரு சிறு பூகோளத்தைக் கொடுத்தோம். அதில் சமுத்திரம் மிருதுவான பரப்புடையதாகவும் ஆழமான நீல நிறமாகவும் தீட்டப்பட்டிருந்தது. நிலப்பகுதி சுரசுரப்பாய் இருந்தது. அதன்மேல் வெள்ளை மணலைத் தூவியிருந்தோம்.[1] இந்தக் கோளத்தின் மேல் சாதாரணமாக இருக்கும் பெயர் எதுவும் குறிப்பிடப்படவில்லை எனினும், குழந்தைகள்,

'இதோ நிலம் !
இதோ நீர் !
இங்கே பார் அமெரிக்கா !
இது இந்தியா !'

என்று பல விதமாகக் கூறத் தொடங்கின.

அந்தக் கோளத்தின்மேல் எல்லார்க்கும் ஆசை எழுந்தது. அந்த அறையில் எல்லாருள்ளத்தையும் கவர்ந்தது அந்தக் கோளமே. ஒன்ரேடு ஒன்றுக்கு உள்ள சம்பந்தத்தைக் குழந்தை தன் நுண்ணறிவால் காண்பதோடல்லாமல், நேரடியாகக் கண்ணுக்குப் புலப்படாததையும் தன் மனத்தால் கற்பனை செய்துகொள்வதற்குக் குழந்தையிடம் மேலான சத்தி இருக்கிறது. குழந்தையின் உளவியலில் கற்பனைக்கு எப்பொழுதும் மிகவும் முக்கிய இடம் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. உலகத்தில் எல்லா நாடுகளிலும் குழந்தைகளுக்கு மாயக்கதைகளைச் சொல்லி வருகிருர்கள். குழந்தைகளும் அக்கதை களைக் கேட்டு இன்புறுகின்றன. இந்த மாபெருங்கற்பனைசத்தியைக் குழந்தைகள் பயிற்சி செய்து பார்க்க வேண்டுமென்று இக்கதைகளைக் கேட்டு இன்புறுவது போலத் தோற்றுகின்றது. ஆம். கற்பனைசத்தி உயர்ந்தது என்பதற்கு ஐயமில்லை. கற்பனை செய்வதைக் குழந்தை

1. கோந்து அல்லது வருணத்தைப் பூசி அதன்மேல் மணலைத் தூவி உலரவிட்டோம். அது பிடித்துக்கொண்டது.

விரும்புகிறது என்று எல்லாரும் ஒப்புக்கொண்டிருக்கும் பொழுது ஏன் மாயக் கதைகளையும் பொம்மைகளையும் மட்டும் குழந்தைகளுக்குத் தந்து இந்த மாபெருஞ்சத்தியைப் பயிற்றப் பார்க்கிறார்கள்? ஒரு குழந்தையால் மாயக்கதைகளையும் மாய உலகத்தையும் கற்பனை செய்துகொள்ள இயலுமானால், அதற்கு அமெரிக்காவைக் கற்பனை செய்துகொள்வது கஷ்டமாய் இராது. உரையாடலில் அமெரிக்காவைப்பற்றித் தெளிவு பெறாத நிலையில் கேட்பதைவிட அதைப்பற்றித் தன் கருத்துகளைத் தெளிவுபடுத்திக்கொள்ள அக்கண்டம் காட்டப் பட்டிருக்கும் பூகோளத்தில் பார்த்தல் நலம். உண்மையைக் கண்டு பிடிப்பதற்குக் கற்பனாசத்தி ஒருசத்தி என்பதை நாம் அடிக்கடி மறந்து விடுகிறோம். மனமானது செயலற்றதன்று. அது தனக்குள் விழுங்கிக் கொள்ளும் தீ; இளைப்பாறாதது; எப்பொழுதும் இயங்கிக்கொண் டிருப்பது.

ஆறாண்டுக் குழந்தைகளுள் சில, பூகோளத்தின் முன் ஒரு நாள் நின்று உரையாடிக்கொண்டிருந்தன. அந்தச் சமயத்தில் அந்தப் பக்கமாக ஒரு மூன்றரை வயதுக் குழந்தை போய்க்கொண்டிருந்தது.

'எங்கே நான் பார்க்கிறேன்? இதுதான் உலகமா?' என்றது அது. 'ஆம்' என்றன மற்றவை. ஓரளவு வியப்புடன் அந்தக் குழந்தை, 'இப்பொழுது எனக்குப் புரிகிறது. என் சிறிய தகப்பனார் உலகத்தை மூன்று முறை சுற்றி வந்திருக்கிறார்!' என்றது.

ஆம். இது உலகத்தின் உருவந்தான் என்பதை அது உணர்ந்து தான் இருந்தது. ஏனென்றால், உலகம் பெரியது என்பது அதற்குத் தெரியும். பிறர் பேசுகின்ற உரையாடல்களைக் கொண்டு அது அதைத் தெரிந்துகொண்டிருக்கும்.

எங்கள் குழந்தைகளுள் மற்றொன்று நாலரை வயதுள்ளது. அதுவும் கோளத்தைப் பார்க்கவேண்டுமென்று கேட்டது; கோளத்தை உற்றுப் பார்த்தது; பெரிய குழந்தைகள் பேசிக்கொள்வதையும் கூர்ந்து கவனித்தது. மற்றவை அது அங்கிருப்பதை அறியாமல் ஏதோ அமெரிக்காவைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தது. அது திடீரென்று அவற்றின் பேச்சில் குறுக்கிட்டது.

அது, 'நியூ யார்க்கு எங்கிருக்கிறது?' என்றது. இதைக் கேட்ட மற்றவை ஆச்சரியப்பட்டன; ஆயினும், அது கேட்ட நகரைக் கோளத்தில் சுட்டிக் காட்டின. பிறகு அது, 'ஹாலந்து எங்கிருக் கிறது?' என்று கேட்டது. இது இன்னும் அதிக வியப்பை மற்ற வற்றிடம் தூண்டிவிட்டது. அவை ஹாலந்தைக் காட்டினவுடன், 'அப்படியானால், இதுதான் கடலா?' என்றது. இதைக் கேட்டதும்

மற்றவை அதனிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டுமென்ற நிறைந்த ஆவலுடன் கேள்வி கேட்க ஆரம்பித்தன. அது சொன்ன கதை பின் வருவது :

'என் தந்தையார் ஆண்டுக்கு இரு முறை அமெரிக்காவுக்குச் செல்கிறார் ; அங்கு நியூயார்க்கில் தங்குகிறார். அவர் சென்ற பிறகு தாயார், 'அப்பா கடலைக்கடந்து செல்கிறார்,' என்கிறார். இப்படிப் பல நாள்கள் சொல்கிறார். பிறகு, 'அப்பா நியூயார்க்குக்குப் போய்ச் சேர்ந்துவிட்டார். சில நாள்களுக்குப் பிறகு தாயார், 'அப்பா மறு படியும் கடலைத்தாண்டிக்கொண்டிருக்கிறார்,' என்கிறார். ஒரு நல்ல நாள் வருகிறது. அப்பொழுது தாயார், 'இப்பொழுது அவர் ஹாலந்தி லிருக்கிறார். நாம் ஆம்ஸ்டர்டாமில் அவரைச் சந்திக்கப்போகிறோம்,' என்றார்.'

அமெரிக்காவைப்பற்றி இந்தக் குழந்தை எவ்வளவோ கேட்டிருக் கிறது ; கோளத்தை வைத்துக்கொண்டு 'அமெரிக்கா' என்று சொன்னதைக் கேட்டதும், அதைப் பார்ப்பதற்கு உடனே நின்றது. 'நான் அமெரிக்காவைக் கண்டுபிடித்துவிட்டேன் !' என்று சொல் வது போல அதன் முகக்குறி காட்டிற்று.

இது வரை குழந்தை தன்னைச் சுற்றிலும் உள்ள சூழ்நிலையில் அது எங்கிருக்கிறது, பொருள்களுக்கும் அதற்கும் உள்ள தொடர்பு என்ன என்ற பல ஆய்வுகளுக்குப் பிறகு தன் நிலையைக் கண்டு கொண்டிருக்கிறது. அதே போல எண்ண உலகத்திலும் தன்னுடைய நிலையை அறிய வீண் முயற்சிகள் செய்து இது வரை அறியமுடியா ததை இப்பொழுது இவர்கள் சொல்லிக்கொள்வது என்ன என்று புரிந்து கொள்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டது குழந்தைக்குப் பெரிதும் ஆறுதல் அளித்திருக்கும். இது வரை அது கேட்ட சொற்களை எல்லாம் அரை குறைக் கற்பனைகளால் உருப்படுத்திக்கொண்டு வந்திருக்கிறது. இதுதான் குழந்தை செய்யவேண்டியிருக்கிறது.

செங்கற்களுடன் விளையாடுவதும், மாயக் கதைகளைக்கொண்டு தன்னுடைய கற்பனை சக்தியைப் பயன்படுத்துவதும் ஆகிய இவ் விரண்டுமே இந்த வயதுக்குழந்தைகளுக்குத் தேவையான முக்கிய மான இரண்டு என்று எல்லாரும் தொன்றுதொட்டு நம்பி வந்திருக் கின்றனர். முதலாவது, சூழ்நிலைக்கும் குழந்தைக்கும் இடையே நேரடியான தொடர்பை ஏற்படுத்தும் என்பது நம்பப்பட்டது. அப் பொழுது அது சூழ்நிலையைப் புரிந்துகொள்வதற்கும் அதைத் தன்வசப் படுத்துவதற்கும் உதவுமாம். குழந்தை, விளையாட்டுகளில் தன் கற் பனை சக்தியைப் பொழிந்தது. மேலே குறிப்பிட்ட இரண்டாவது இந் தக் கற்பனைசக்தி நிறைந்திருக்கிறது என்று நிரூபிக்க உதவும் எனக்

கருதப்பட்டது. இந்த மாபெருஞ்சத்தியைப் பயன்படுத்திக்கொள் வதற்குத் தன் கையில் ஏதாவது இருந்தால், அதற்குப் பேருதவி அளிக்கிறது என்பதை ஓரளவுக்கு ஏற்றுக்கொள்ள நியாயமிருக்கிறது. அப்பொழுது குழந்தையின் மனமும் வெளியுலகத்துடன் நேரடித் தொடர்பையும் பெறுகிறது.

இந்த வயதுக் குழந்தைகள் விஷயங்களைத் தெளிவுபடுத்தச் சொல்லி நம்மை எப்பொழுதும் தொந்தரவு பண்ணிக்கொண்டிருக்கும். எதையும் எவ்வளவு ஆவலுடன் தெரிந்துகொள்ள வேண்டுமென்று அவை இருப்பதும் ஒவ்வொருவருக்கும் தெரியும். நம்மிடம் கேள் விக்குமேல் கேள்விகளை அவை அடுக்கிக்கொண்டு போவதும் அறிவோம். இவற்றைப் பெருந்தொல்லை என்று கருதாமல், தெரிந்து கொள்ளவேண்டும் என்ற மனத்தின் ஆவல் என்று எண்ணினேமாஞல் இவை நமக்கும் நல்ல விளக்கம் தரும். இந்த வயதுக் குழந்தைக்கு நீண்ட விரிவுரைகள் விளங்கா. சாதாரணமாக நாம் அளவுக்கு மீறின விளக்கங்கள் தர முயற்சி செய்கிறோம்.

ஒரு சிறுவன் ஒரு நாள், 'தழைகள் ஏன் பசுமையாய் இருக் கின்றன ?' என்று தன் தந்தையாரைக் கேட்டான். இக்கேள்வி உயர்ந்த நுண்ணறிவுக்கு அறிகுறி என நினைத்த தந்தையார், பச்சை யத்தைப்பற்றியும் அது எங்ஙனம் சூரிய கிரணங்களை உபயோகித்துக் கொள்கிறதென்றும் நீண்ட விளக்கம் தந்தார். இதற்குப் பிறகு அச் சிறுவன், 'நான் தெரிய விரும்பியது தழை ஏன் பச்சையாய் இருக்கிற தென்பதுதான். இந்தக்குளோரோபிலைப்[1] பற்றியும் சூரிய கிரணங்களைப் பற்றியும் யார் கேட்டார்கள் ?' என்று சொல்லிக்கொண்டிருப்பதைத் தந்தையார் ஒண்டிக்கேட்டார்.

**இந்த வயதுக் குழந்தையின் இயல், விளையாட்டு, கற்பனை, கேள்வி கேட்பது.** இது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆனால், அடிக்கடி இதைச் சரிவரப் புரிந்துகொள்வதில்லை. சில சமயங்களில் கேள்விகள் கடினமானவையாயிருக்கும்.

'அம்மா, நான் எங்கிருந்து வந்தேன் ?' என்று குழந்தை கேட் கிறது. இதைப்பற்றி அது தனக்குள் குழப்பிக்கொண்டிருந்திருக்கிறது. ஒரு நாள் இல்லாவிட்டாலும் மற்றொரு நாள் இக்கேள்வியை எதிர் பார்த்த நுண்ணறிவுடைய தாய், உண்மையைச்சொல்லத் தீர்மானித் தாள். நான்கு வயதுக் குழந்தை இந்தக் கேள்வியைக் கேட்டதும், 'என் குழந்தாய், நானே உன்னை ஆக்கினேன்,' என்று விடை யளித்தாள். விடை வேகமாகவும் சுருக்கமாகவும் இருந்தது.

---

1. Chlorophyll

குழந்தை உடனே திருத்தி அடைந்தது. ஓராண்டு கழிந்த பிறகு அத் தாய் அக்குழந்தையைப் பார்த்து, 'இப்பொழுது இன்னும் ஒரு குழந்தையை ஆக்கிக்கொண்டிருக்கிறேன்,' என்ருள் ; ஆஸ்பத்திரிக்குப் போவதற்குமுன், ' நான் திரும்பி வரும்பொழுது குழந்தையுடன் வருவேன்.' என்றும் தாய் குழந்தைக்குக் கூறிச் சென்ருள். மூத்த குழந்தை ஆஸ்பத்திரிக்குப் போயிற்று. ' இவன் உன் தம்பி,' என்றும், 'உன்னை ஆக்கியது போலவே இவனையும் ஆக்கினேன்,' என்றும் கூறினுள் தாய்.

இதற்குள் குழந்தைக்கு வயது ஆருயிற்று. 'நாம் இவ்வுலகத்துக்கு எப்படி வருகிருேம் என்ற உண்மையை நீ ஏன் சொல்ல மாட்டாய் ? புரிந்துகொள்வதற்குத் தகுந்த வயது பெற்ற பெரியவனுகிவிட்டேன் நான். ஆதலால், ஏன் உண்மையைக் கூறமாட்டேன் என்கிருய் ?' என்றது. ' நான் குழந்தையை ஆக்குகிறேன்,' என்று சொன்னதிலிருந்து நான் உன்னைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறேன். ஆனல், நீ அப்படி ஒன்றும் செய்யவில்லையே !' என்றது.

உண்மையைச் சொல்வதும் (நாம் ஏதோ நினைப்பது போல) அவ்வளவு எளிதன்று. குழந்தையின் கற்பனு சத்தியைத் திருத்தி செய்வதற்குப் பெற்ருேர்களும் ஆசிரியர்களும் தனிப்பட்ட அறிவு பெற வேண்டும்.

ஆசிரியர்களுக்குப் பயிற்சி வேண்டும். ஏனென்ருல், நம்முடைய தர்க்க சாஸ்திரத்தால் இந்தப் பிரச்சினைகளைத் தீர்த்துவிட இயலாது. குழந்தைகள் எவ்வாறு வளர்கின்றன என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். முன் கூட்டிய கருத்துகளை அடியோடு அகற்றவேண்டும். மூன்று வயதிலிருந்து ஆறு வயது வரை உள்ள குழந்தைகளின் மனத்தைப் புரிந்துகொள்வதற்கு நிறைந்த நயத்திறமும் மென்மையும் வேண்டும். வயது முதிர்ந்தோரிடம் இவை தேவைப்படும் அளவு இருப்பதில்லை. **நல்ல வேளையாகக் குழந்தை நம்மிடமிருந்து தெரிந்துகொள்வதைவிடச் சூழ்நிலையிலிருந்து கற்றுக்கொள்கிறது.** நம்மால் கூடிய மட்டும் குழந்தைக்கு உதவி புரிய வேண்டுமாயின், நமக்கு **உளவியல் உட்காட்சி**[1] வேண்டும்.

## மன வளர்ச்சி

குழந்தை செயல் புரிகின்ற போக்கு இறுதி காண முடியாத வெளிப்படுத்தல் ஊற்ருக நமக்குக் காட்சி அளிக்கிறது. நம்மிடம் நிறைந்து கிடக்கும் சார்பெண்ணங்கள் குழந்தையின் உளவியலைக்

1. Psychological insight

காண முடியாதபடி தடுத்துவிட்டன. நமக்குள் முன் கூட்டியே தீர்மானம் செய்துகொண்ட கொள்கைகளை வைத்துக்கொண்டு குழந்தைக்கு வழி காட்டுவது எவ்வளவு கடினமான காரியம் என்பதும் நமக்கு இப்பொழுது விளங்குகிறது. குழந்தையின் சக்திக்கு அளவே இல்லையாதலால், நம்மால் அதற்கு வழி காட்ட இயலாது. குழந்தையைப் புரிந்துகொள்வதற்குக் குழந்தையே நமக்குக் கற்பிக்கவேண்டும்; அதுவும் அதனுடைய நடத்தையால்.

ஆயிரக்கணக்கான குழந்தைகள் தங்களுக்குப் பிடித்த ஏதோ ஒன்றைச் செய்ய வேண்டுமென்று விரும்புகின்றன. அது மட்டும் அன்றி, அதை எப்படிச் சரியாகச் செய்வது என்று காட்டச்சொல்லவும் விரும்புகிறது. **எதையும் திட்டமாகச் செய்வதில் அதற்கு ஆழ்ந்த அக்கறையுள்ளதாகக் காட்டிக்கொள்கிறது.**[1] இந்த இயல்தான் குழந்தையை ஒரு செயல் ஆற்றலில் ஈடுபடச் செய்கிறது. இவ்வாறு தன் கையாரச் செய்யும் செயல்களில் கொண்டுள்ள அக்கறைக்கு நனவில்லா நிலையில் ஒரு குறிக்கோளைப் பெற்றிருக்கவேண்டுமென்று நாம் யூகித்துக்கொள்ள வேண்டும். தன்னுடைய இயக்கங்களை ஒருமைப்படுத்தித் தன் வசப்படுத்தவேண்டும் என்ற ஓர் இயல்பூக்கம் குழந்தையிடம் இருக்கிறது.

குழந்தையிடம் நாம் கண்ட மிகவும் முக்கியமான ஓர் உண்மை இருக்கிறது. ஒரு செயலில் மனக்கவர்ச்சியுடன் குழந்தை தன்னை ஈடுபடுத்திக்கொண்டால், அந்த இயக்கத்தைப் பன்முறை செய்து செய்து பார்க்கிறது. **'தினசரி வாழ்க்கைப் பயிற்சி'**[2] என்று கூறப்படும் பயிற்சியில் நம் குழந்தைகள் ஈடுபடுவதைப்போல அவ்வளவு அற்புதமானது வேறு எதுவும் இல்லை எனலாம். குழந்தை அந்தத் தொழிலில் தன்னை முற்றும் மறந்து ஈடுபடுகிறது. எடுத்துக்காட்டாகப் பித்தளைப்பாத்திரம் ஒன்றைப் பளபளப்பாக்குவது; தனக்குச் சொல்லிக்கொடுத்த முறையில் சிறிதும் பிழையுருமல் தேய்த்துத் தேய்த்துப்பிரகாசமாக்கும்வரை சலியாமல் செய்யும்; பிறகு இளைப்பாருமல் மறுபடியும் தொடக்கத்திலிருந்து செய்யத் தொடங்கும்; ஏற்கெனவே பிரகாசமாய் உள்ள பாத்திரத்தை மறுபடியும் மறுபடியும் பிரகாசமாக்குவதற்குப் பல முறை தேய்க்கும். வெளிப்படையான நோக்கம் இதற்கு ஒரு தூண்டுதலாய் இருந்தது என்பதைக் காட்டுகிறது. ஆனல், உண்மையான நோக்கம் அந்தரங்கத்தில் குடிகொண்டுள்ள ஒரு தேவையைத் திருத்தி செய்வது. ஆதலாலேதான் இந்தச் செயல் ஆக்கும் தன்மை உடையது. ஏனென்றல், குழந்தை இம்மாதிரி பல முறைகள் செய்து செய்து பார்க்கும்பொழுது அதனுடைய நரம்பு மண்டலத்தில் முழுமையும் புதியனவான கட்டுப்பாடுகளை (Controls)

---

1. Precision, 2. Exercise of practical life

உருவாக்கிக்கொள்கிறது. தன்னுடைய தசைகளின் புதுமையான ஒருமைப்பாட்டை நிலை நாட்டிக்கொள்கிறது. இந்த ஒருமைப்படுத்தல் இயற்கையன்னையால் கொடுக்கப்பட்டதன்று. ஆனால், குழந்தையால் பெறவேண்டுவது. விளையாட்டினால் நமக்கு ஏற்படும் அனுபவமும் இதைப்போன்றதே. ஊக்கத்துடன் பலமுறை முயற்சி செய்கின்ற எல்லா விளையாட்டுகளிலும் (டென்னிஸ், ஃபுட்பால்) இதையே காண்கிறோம். பந்தைச் சரியாக உதைப்பதோ அடிப்பதோ, முக்கியமான நோக்க மன்று. இது வரை நம்மிடம் இல்லாத ஒருதிறமையை நம்மிடம் ஆக்கிக் கொள்வதற்கு நம்மைஇவ்விளையாட்டுகள் அழைக்கின்றன. இந்தச்சக்தி நம்மிடம் இது வரை காணப்படாதது. நம்முடைய திறமைகளை இன்னும் அதிகரித்துக்கொள்கிறோம் என்ற உணர்ச்சியே இவ்விளையாட்டு களிடம் தோன்றுகின்ற இன்பத்துக்கு உண்மையான மூல காரணமாகும்.

இந்தச் செயல்களில் எல்லாம் குழந்தை விளையாடிக்கொண்டிருக் கிறது என்று சொல்வது ஒருவாறு உண்மைதான். ஆனால், இத்தகைய விளையாட்டுத் தன் முயற்சி கொண்டது. குழந்தைக்கு வருங்காலத் தில் தேவைப்படும் புதுமைச் சத்திகளை ஆக்கிக்கொள்வதற்கு இவை வழி காட்டுகின்றன.

தினசரி வாழ்க்கைக்குத் தேவையானவைகளுக்குத் தன்னை அமைத்துக்கொள்ளுமாறு குழந்தையினுடைய இயல்பூக்கமானது (Instinct) விழிப்புப் பெற்றிருக்கிறது. அந்தரங்கத்தில் அமைத்துக் கொள்வதற்கு வேண்டிய அபாரமான முயற்சி வடிவத்தில் இது காட்சி அளிக்கிறது. 'காமா சோமா' என்றன்று. ஆனால், 'இப்படி இப்படி நீ அமைக்க வேண்டும். ஏனென்றால், இந்த இயக்கங்களே உனக்குத் தேவைப்படுவன ; மற்றவைகள் அல்ல,' என்று யாரோ ஒருவர் குழந்தைக்குச் சொல்லிக்கொடுத்திருப்பது போலத் தோன்றுகிறது. இம்முறையான முயற்சி குழந்தைப்பருவத்துக்குப் பொருத்தமானது. ஆதலாலேதான் குழந்தைகளிடம் காணப்படும் பின் பற்றும் இயல்பு (Imitativeness) ஒரு வகையான உயிர்ப்பூட்டுதல்(Inspiration) ஆகும். இந்த உயிர்ப்பூட்டல் பிறகு தன்னையே ஆக்கிக்கொள்கின்ற வேலை களுக்கு வழி காட்டியாக இருக்கும் என்று நான் கூறுகிறேன்.

குழந்தையின் சத்திகளை உருவாக்குவதற்கு உண்மையான இயக் கக் கொள்கையை (Dynamism) இங்கு நாம் காண்கிறோம். தன் னைச் சூழ்ந்துள்ளோர் செய்கின்ற செயல்களைக் குழந்தை பார்க்கிறது. இச்செயல்கள் குழந்தையின் செயல்களுக்குத் தூண்டுதலாகின்றன. அது இவைகளைத் தனக்குள் செய்யும்படியான சத்தியை நிலைபெறச் செய்யும் வகையில் நடந்துகொள்கிறது. அப்படியானால், நிலைபெறச்

செய்வது யாது? மொழியைக் கற்றுக்கொள்வதில் நடைபெற்றது போல ஒரு சேணியன் தறியில் முதலில் இணைக்கப்படும் பாவைப் போல இருக்கிறது. இனிமேல் நெய்யப்போகின்ற துணியைப்போல அன்று; ஆனால் அதற்கு அடிப்படையானது. இந்தப் பாவை, சொற்களின் ஒலிகளுக்கும், அவற்றின் தாள இயலுக்கும், குரலின் சுர பேதங்களுக்கும், இலக்கண உருவ ஒழுங்குக்கும் ஒப்பிடலாம். இம் மாதிரியாகவே இந்தத் தினசரி வாழ்க்கைப் பயிற்சிகளிலும் குறிப்பிட்ட ஒரு நாட்டவர்க்கோ அல்லது சாதியினருக்கோ இருக்கின்ற பொது நடத்தையின் பாவு அமைக்கப்படுகிறது. மூன்று வயதிலிருந்து ஆறு வயதுக்குள் இருக்கும் பருவத்துக்குள் துணியே நெய்யப்பட்டுப் பரிபூரணமாக்கப்படுகிறது. ஆதலால், ஆறு வயதுக்குட்பட்ட பருவம் தீர்ப்பானது. அப்பருவத்துக்குள் என்னென்ன திறமைகளைக் குழந்தை ஆக்கிக்கொள்கிறதோ, அவை அதன் வாழ்க்கை முழுமையிலும் நிலை பெற்றிருக்கும். குழந்தையின் நடைப்போக்கும், செயற்போக்கும் நிலை பெற்று அதனுடைய ஆளுமையுடன் மறையாமல் ஒன்றிவிடுகின்றன. இவை இக்குழந்தை உயர்ந்த வகுப்பைச் சார்ந்ததா அல்லது தாழ்ந்த வகுப்பைச் சார்ந்ததா என்பதைக் காட்டிவிடும். ஏனெனில், இந் நடத்தைகள் தாமே ஒரு சமூகத்தின் ஒரு பிரிவினரை மற்றொரு பிரிவினரிடமிருந்து வேறுபடுத்துகின்றன. மொழி வேற்றுமைகள் எங்ஙனம் நாடுகளைப் பிரிக்கின்றனவோ, அங்ஙனமேதான் இங்கும். இக்காரணத்தில் கீழ்ச் சமூகத்தில் பிறந்து வளர்ந்த குழந்தைகள் ஏதோ ஒரு காரணத்தால் மேற்சமூகத்துடன் நடமாட வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டால், அவை தம் இளமையில் தம்முள் ஆக்கிக் கொண்ட இழுக்கை அடியோடு அகற்ற முடியாதவைகளாகின்றன. அதேபோல ஒரு சீமான் தொழிலாளியைப்போல நடிக்க விரும்பினாலும், தன்னுடைய நடையுடை பாவனைகளில் ஏதோ ஒன்று அவனைக் காட்டிக்கொடுத்துவிடும்.

மொழியைப் பொறுத்தமட்டில் இந்தப் பருவத்திலேதான் உச்சரிப்புப் பதிவாகிறது. பல்கலைக்கழகப் பேராசிரியர் உயர்ந்த கலைச் சொற்களை உபயோகிக்கும் பழக்கமுடையவரான போதிலும், எப்படியோ தம் உச்சரிப்பினால் அவர் எந்த மாகாணத்தைச் சார்ந்தவர் என்பதைக் காட்டிவிடுவார்.

**குழந்தைப் பருவத்தில் பதியப்பட்டதை எந்த விதமான உயர்தரக் கல்வியும் மாற்ற இயலாது.** ஆதலால், சமூகக் கல்வி இப்பருவத்தில் எவ்வளவு முக்கியம் என்பதை நாம் உணர்கிறோம். முதல் மூன்று வயதுக்குள் குறுக்கீடுகளால் தோற்றுவிக்கப்பட்ட ஆளுமைக் கோணல்களைத் திருத்திக்கொள்வதற்கு இன்னும் அவகாசம் இருக்கிறது. ஏனென்றால், அது இயற்கையன்னை தன் வேலையை முடித்துக்

கொள்வதற்கு ஏற்பட்ட இடைக்காலம் ஆகும். அதே சமயத்தில் கல்வியும் விஞ்ஞான முறைப்படி நடத்தப்பட்டால், உலகத்திலுள்ள பல்வேறு நாட்டவரையும் சாதியினரையும் பிரித்து வைக்கும் வேற்றுமைகளை ஒருவாறு குறைத்துவிடலாம். இவ்வாறு செய்யும்பொழுது உலகத்தில் வாழும் மக்களுடைய வாழ்க்கையில் இன்னும் நிறைந்த ஒற்றுமை ஏற்படும். இயற்கை அன்னையால் மனிதனுக்கு அளிக்கப்பட்ட சூழ்நிலை நாகரிகத்தால் மாற்றப்பட்டிருப்பதுபோல மனிதனிடத்திலும் மாறுதல்களை நாகரிகம் தோற்றுவிக்கச் செய்ய முடியும் என்பதை இது விளக்குகிறது. மாயச்சத்திகள் மனித சமூகத்துக்கு இவ்வாறு அளிக்கப்பட்டிருக்கின்றன.

## புலன் கல்வியும் கணித மனமும்

குழந்தையின் வளர்ச்சிக்குத் தீவிர வழிகாட்டியாய் இருந்துவரும் ஆளுமையின் பகுதி குழந்தையின் எல்லாச் செயல்களிலும் காட்டிக் கொள்கிறது. எம்முடைய **புலன் ஆய்வு செய்கருவிகளைக்**[1] கொண்டு செய்துவரும் பயிற்சிகளில் இவ்வாளுமையின் வேலையை நாம் நன்றாகக் காண முடிகிறது.

புலன் கல்வியைப்பற்றி நாம் என்ன நினைக்க வேண்டும் ?

**சூழ்நிலையையும் மனத்தையும் இணைக்க வைக்கின்ற பகுதிகளே புலன்கள் ஆகின்றன.** பியானோ வாசிக்கின்ற இசைவாணர் ஒருவர் எப்படி ஒரே மெட்டைக்கொண்டு மிகவும் இனிய இசைகளை உண்டாக்கக் கற்றுக்கொள்கிறாரோ, அப்படியே இப்புலன்கள் ஏற்றுக்கொள்வதைக்கொண்டு மிக்க திறமைசாலியாகலாம். எடுத்துக்காட்டாக, பட்டு நூற்பவர்கள் தங்கள் விரலுக்கடியில் இருக்கின்ற இழை ஓரிழையா ஈரிழையா என்று தொட்டுப் பார்த்தவுடன் சொல்லிவிடக் கூடிய அவ்வளவு நுண்மையான தொடு உணர்ச்சியைப் பெற்றுவிட இயலும். வனத்தில் வாழ்கின்ற பழங்குடி மகன் நம் போன்றவர் செவிக்கு எட்டாத ஒரு பாம்பின் அசைவைக் கேட்டுவிடுகிறான்.

இந்த நுண்மையான திறமைகளெல்லாம் தினசரி வாழ்க்கையால் பெறப்படுகின்றன. இவை ஒவ்வொருவரிடமும் வெவ்வேறு விதமாகத் தோன்றலாம். முழு இயக்கத்தில் அல்லாது வேறு எவ்வகையிலும் புலன் கல்வி நடைபெறாது. அதுவும் அவ்வியக்கமோ, செயலோ, நுண்ணறிவுடன் கலந்ததாய் இருக்க வேண்டும்.

அக்கறையினால் தூண்டப்படுகின்ற அந்தரங்கப் போக்குகளை ஒட்டியிருக்கின்றன ஒருவரோடொருவருக்கிடையே காணப்படும்

1. Sensorial apparatus

வேற்றுமைகள். இவற்றையும் வெவ்வேறு அளவுக்கு மக்கள் பெற்றிருக்கின்றார்கள். நமக்கென்றே தனிப்பட்ட இயல்பு ஒன்றிருக்கிறது. நம்முடன் பிறந்து நம்மை இழுக்கின்றவை சில இருக்கின்றன. இவை நம் இயல்பைப் பின்பற்றி நம்மை வளரச் செய்கின்றன.

எம்முடைய புலன் ஆய் கருவிகளுடன் செயல் புரிந்த குழந்தை மேலான கைத்திறனைப் பெறுவதுடன் வெளி உலகத்திலிருந்து தனக்கு வருகின்ற தூண்டுதல்களைக் காண்கின்ற உயர்ந்த திறமையைப்பெற்று விடுகிறது. இந்த அளவுக்கு **வெளி உலகம் இக்குழந்தைக்கு நிறை செல்வம் படைத்ததாகிவிடுகிறது.** ஏனென்றால், மிகவும் நுண்மையான வேற்றுமைகளை இக்குழந்தை கண்டு இரசிக்கிறது. இதைப் போல உணர முடியாத வேறொரு குழந்தைக்கு அத்தகைய வேற்றுமைகள் இருப்பதாகவே தோன்று.

கவனிப்பதற்கு வழிகாட்டிபோல எம்முடைய **புலன் ஆய் கருவிகள்** பயன் தருகின்றன. ஏனெனில், அவை **ஒவ்வொரு புலனும் பெறுகின்ற பதிவுகளை வகைப்படுத்துகிறது;** நிறங்கள், இசைகள், ஒலிகள், வடிவங்கள், பருமன்கள், தொடு உணர்ச்சிகள், நாற்றங்கள், சுவைகள் ஆகியவற்றை வகைப்படுத்துகிறது. இதுவும் ஒரு வகையான பண்பாடுதான். ஏனெனில், இது நம்மையும் நம் சூழ்நிலையையும் கவனிக்குமாறு வழி காட்டுகின்றது. ஆளுமைக்கு நிறைவு ஏற்படவும் அதனுடைய இயல்பான சத்திகள் இன்னும் சிறப்படையவும் செய்விக்கின்ற பண்பாட்டு வகைகளுள் இதுவும் ஒன்றாகும். இது பேச்சையும் எழுத்தையும்விட எவ்வகையிலும் பண்பாட்டு வளர்ச்சியில் குறைந்ததன்று.

**உலகத்தைக் கண்டுபிடிப்பவை புலன்கள். அவை அறிவுக்கு வழி திறந்துவிடுகின்றன. எம்முடைய புலன் ஆய் கருவிகள் குழந்தைக்கு ஒரு திறவுகோலை அளிக்கின்றன. உலகத்தை ஆய்ந்தறிவதற்கு ஒரு கருவி வழி காட்டியாகிறது.** இருட்டில் இருக்கின்ற பொருள்களைக் காண முடியாது. அவற்றின்மேல் வெளிச்சம் பட்டால் அவை தெளிவாகப் புலனாகின்றன. அதேபோல, இப்புலன் ஆய்கருவிகள் இதுவரை காணாததையும் இம்மாதிரிக் கல்வி பெறாதவரால் காண முடியாததையும் இக்கல்வி பெற்ற குழந்தைகள் பல பொருள்களில் மிக நுண்மையாகக் காண இயல்கின்றது.

அதே சமயத்தில் குழந்தையின் மேலான சத்திகளுடன் சம்பந்தப்பட்டவை எல்லாம் ஒரு தூண்டுதலாகித் தன் கிரியா சத்திகளைச் செயலாற்றத் தூண்டிப் பலவற்றையும் ஆய்ந்தறிய வேண்டுமென்ற தன்னுடைய மனத்தின் அக்கறைகளையும் விரிவாக்குகின்றன.

சாதாரணப் பள்ளிக்கூடங்களில் இப்பொழுதெல்லாம் பொருட் பாடம் [1] என்னும் ஒன்று வைத்திருக்கின்றனர். ஒரு பொருளின் பல் வேறு பண்புகளை அக்குழந்தை எடுத்துக் கூறவேண்டும். உதாரண மாக அதன் வண்ணம், வடிவம், இழையமைப்பு [2] ஆகியவற்றை எடுத்துக்கூற வேண்டும். ஆனால், உலகத்தில் இருக்கும் பொருள் களின் எண்ணிக்கை அளவு கடந்தது. ஆனால், அவற்றிடம் காணப் படும் பண்புகளோ, சிலவே. இப்பண்புகள் நெடுங்கணக்கைப் போன்றவை. இவை எண்ணற்ற சொற்களை உண்டாக்குவதைப் போன்றவை.

இந்தப் பண்புகளுள் ஒவ்வொன்றும் தனித்தனியாகக் காட்டக் கூடிய பொருள்களைக் குழந்தைகளுக்கு நாம் எடுத்துக் காட்டுவது அவற்றின் முன் ஆராய்வதற்கு நெடுங்கணக்கைப் படைத்தது போல ஆகும் ; அறிவுக் கதவுகளைத் திறப்பதற்குத் திறவுகோல் கொடுத்தது போலாகும். பண்டங்களின் பண்புகளை ஒழுங்கு முறையில் பாகு படுத்துவதுடன் படிமுறையாக்கப்பட்டிருப்பதையும் உணர்ந்த ஒரு வன், தன்னைச் சுற்றிலுமுள்ள சூழ்நிலையிலும் இயற்கையின் காட்சி அளிக்கும் பண்டங்களையும் ஒன்று விடாமல் காண இயல்கிறது.

இந்த வெளியுலகு நெடுங்கணக்குக்கு அளவு கடந்த மதிப் புண்டு. நாம் மேலே குறிப்பிட்டது போலப் **பண்பாடு என்பது ஏதோ பல செய்திகளைச் சேகரித்துக்கொள்வதன்று. ஆளுமையை விரிவுபடுத்துவதை அது குறிக்கும்.** புலன்களைப் பயன்படுத்தக் கற்ற குழந்தைக்குப் போதிப்பது வேறு, அவ்வாறு புலன்களைப் பயன் படுத்தாது வளர்ந்து வந்த குழந்தைக்குப் போதிப்பது வேறு. ஏதாவது ஒரு பொருளைக் காட்டினுலும், ஒரு கருத்தை வெளியிட்டோ மானுலும், ஏதாவதொன்றைக் கூர்ந்து கவனிக்குமாறு வேண்டினு மானுலும், புலன் பயிற்சி பெற்ற குழந்தை அதை அக்கறையுடன் வர வேற்கிறது. இலை வடிவங்களில் உள்ள வேற்றுமைகள், மலர்களின் வண்ணங்கள், பூச்சிகளின் வெவ்வேறு வகை உடல்கள் போன்றவை களைப்பற்றி அக்குழந்தை தன் உணர்ச்சியை முன்னமே பெற்றிருக் கிறது. எதுவும் நுட்பமாகப் பார்ப்பதிலும், அக்கறை எடுத்துக் கொள்வதிலும் இருக்கிறது. நல்ல ஆசிரியரைக்காட்டிலும் ஆயத்த மாக்கப்பட்ட மனத்தைப் பெறுவது மிகவும் சிறப்பானதாகும்.

நான் கூறியபடி நாங்கள் உண்டாக்கியிருக்கின்ற ஆய்கருவி களில் வகைப்படுத்துதல் என்பது ஒன்று இருக்கிறது. அது பண்டங் களின் பண்புகளை வகைப்படுத்துதல். அதிலிருந்து மனத்தை

1. Object lesson, 2. Texture

ஒழுங்குபடுத்திக்கொள்வதற்கு மிகவும் பயன் தரக்கூடிய ஓர் உதவி யைக் குழந்தை பெறுகிறது.

பண்டங்களை அவற்றின் பண்புகளிலிருந்து பிரித்துணர்வது இயற்கையே. வருணங்கள், இசைகள், வடிவங்கள் ஆகியவற்றில் ஒன்றுக்கும் மற்றொன்றுக்குமுள்ள வேற்றுமைகளை ஒவ்வொருவரும் காண்கின்றனர். இதற்குத் தனிப்பட்ட கல்வி ஒன்றும் தேவை யில்லை. மனிதனுடைய மனத்தின் வடிவத்துடன் இது சம்பந்தப்பட் டிருக்கிறது என்பது தெளிவு. நெருங்கி இல்லாத பொருள்களைக் கற்பனை செய்துகொள்வது மனிதனுடைய மனத்தின் இயல்பு. இது மட்டும் அன்று; அது மனத்தில் உள்ளவைகளை ஒன்று சேர்க்கவும் வேறு விதமாக அடுக்கவும் சத்தி பெற்றிருக்கிறது. அது வெளியுலகத் தில் காண்கின்ற எண்ணற்ற பொருள்களின் பண்புகளிலிருந்து ஒரு வகையான நெடுங்கணக்கை வடித்து எடுத்துக்கொள்கிறதென்று கருதலாம். குழந்தை தன்னிடம் இருக்கின்ற அருவ எண்ணங்களைப் பெற்ற சத்தியால் இதைச் செய்கிறது. நெடுங்கணக்கைக் கண்டு பிடித்தவர்கள் இந்தச் சத்தியைப் பயன்படுத்திக்கொண்டார்கள். எல்லாச் சொற்களும் ஆக்கப்படுகின்ற சில ஒலிகளைத் தேர்ந் தெடுத்துத் தனித்தனியாகப் பேசினார்கள். நெடுங்கணக்கு ஓர் அருவமுறை எனலாம். மனிதனால் பேசப்பட்டுப் பொருள் விளங்கக் கூடிய ஒலிகள் வார்த்தைகளே. கற்பனை செய்து அருவப்படுத்தா விட்டால் மனிதன் நுண்ணறிவு படைத்தவனாக மாட்டான்; அல்லது அவனுடைய நுண்ணறிவு விலங்குகளுள் உயர்ந்தவற்றுக்கிருப்பது போலத்தான் இருக்கும்; குறிப்பிட்ட ஒரு வகையில் நடந்துகொள் வதற்கென்றே நெளிவற்று வரம்புக்குள் சிக்குண்டதாய் இருக்கும். அவ்வாறிருந்தால், அந்த நுண்ணறிவு விரிவடைய இயலாது.

எனவே, அருவ எண்ணங்களின் எண்ணிக்கை சிலவே. ஆனால், நாம் சந்திக்கின்ற பொருள்களோ, எண்ணற்றவை. இந்தக் குறிப் பிட்ட சிறு அளவுடைய பொதுமை பிரித்தலும் இதன் நுண்மையும் வளரவளர அதிக மதிப்பும் பெறுகின்றன. மனத்தின் உலகில் இவை ஒரு தனிப்பட்ட உறுப்பைப் போல மதிப்புப் பெறுகின்றன; எண்ணத் தின் ஒரு கருவியாகி, நாம் எங்கிருக்கிறோம் என்ற நிலை அறிதலை அளிக்கின்றன. 'இப்பொழுது நேரம் என்ன?' என்பதை நமக்குக் கடிகாரம் எவ்வாறு காட்டுகிறதோ, அவ்வாறே நம் நிலையையும் காட்டுகிறது.

மனத்துக்குள்ள இரண்டு சத்திகள் கற்பனையும், பொதுமை பிரித்தலும் ஆகும். இவை நம்முன் தோற்றமளிக்கும் பொருள்களைக் காண்டல் மட்டுமன்றி, அதற்கப்பாலும் செல்கின்றன. மனத்தில்

அடங்கியுள்ளதை ஆக்கிக்கொள்வதற்கு இவ்விரு சத்திகளும் இணைந்துகொள்கின்றன. ஒரு மொழியை உருவாக்குவதற்கு இவ்விரண்டும் தேவைப்படுகின்றன. சரியான நெடுங்கணக்கும் இலக்கண விதிகளும் சேர்ந்து சொற்களின் செல்வத்தை அளவுக்கு மீறிச் சேர்த்துக்கொள்ள அனுமதிக்கின்றன. வார்த்தைகளை உபயோகித்து ஒரு மொழியை மேம்படுத்த வேண்டுமானல், ஒலிகளின் அடிப்படையை ஒட்டியதாயும் இலக்கண ஒழுங்குடன் கூடியதாயும் இருத்தல் வேண்டும். மொழியை ஆக்குவதில் எது நடைபெறுகிறதோ, அதுவே தான் மனத்தை ஆக்குவதிலும் நடைபெறுகிறது.

'அதோ போகிருர் தெளிவற்ற மனத்தை உடையவர். அவர் கெட்டிக்காரர்தான். ஆனல், வரையறையற்றவர்,' என்று சொல்லும் பொழுது அவர் மனம் நிறைந்த கருத்துகளை உடைய மனம் என்பதையும், ஒழுங்குபடுத்துவதால் பிறக்கும் தெளிவு அவரிடம் இல்லை என்பதையுமே நாம் குறிப்பிடுகிருேம். 'அவரது மனம் படம் போன்றது,' என்று வேருெருவரைக் குறிப்பிடுகிருேம். 'அவருடைய தீர்ப்பும் நேர்மையாய் இருக்கும்,' என்றும் குறிப்பிடுகிருேம்.

எனவே, எங்களுடைய ஆராய்ச்சியில் துல்லியமாக[1] அமைக்கப்பட்டிருக்கும் இம்மனப் பகுதிக்கு நாங்கள் ஒரு பெயர் கொடுத்திருக்கிருேம். அதுதான் '**கணித மனம்**'. ஃபிரெஞ்சு தத்துவ ஞானியாரும், பௌதிகசாஸ்திர வல்லுநரும், கணித நிபுணருமான **பாஸ்கல்**[2] என்பவர் பயன்படுத்திய சொல்லை இங்கு நான் எடுத்துக்கொள்கிறேன். **'மனிதனுடைய மனமானது இயல்பாகவே கணித இயல்புடையது. அறிவும் முன்னேற்றமும் திருத்தமான உற்று நோக்கு முறையால் ஏற்பட்டன,'** என்று அவர் கருதுகிருர்.

நெடுங்கணக்கின் ஒலிகளும், சொற்களை அடுக்கும் விதிகளும், எவ்வாறு ஒரு மொழியின் அமைப்பைத் தருகின்றனவோ, அவ்வாறே மனிதனது மனவமைப்பும் உருவாக்கப்படுகிறது. மனம் ஒரு நெசவுப் பாவைப் போன்றது. **பாவில்** குறுக்கும் நெடுக்கும் இழை சென்று துணியை உருவாக்குவது போல, **புலன் காட்சி**[3] **கற்பனை**[4] ஆகியவற்றின் நிறைசெல்வங்களையும் மனமாகிய பாவில் இணைப்பதென்பதும் அடிப்படையில் ஒழுங்கைப் பொறுத்திருக்கிறது. மனிதனுக்கு உதவிபுரியும் வகையில் கண்டு பிடிக்கப்பட்ட **புதுவனபுனைதல்களை**[5]ப் பற்றி ஆராய்ந்தோமானல், அவற்றின் தொடக்கம் எப்பொழுதும்

---

1. Exactitude, 2. Pascal, 3. Perception,
4. Imagination, 5. Inventions

கண்டுபிடிப்போர் மனத்தில் ஒழுங்காகவும் துல்லியமாகவும் தோன்றினதால், புதுமை ஒன்றை அவர்களால் ஆக்க முடிந்தது என்கின்ற உண்மை நமக்குப் புலப்படும்.[1] செய்யுள் இசை ஆகியவற்றின் கற்பனை உலகத்திலும் அடிப்படையான ஓர் ஒழுங்குமுறை இருக்கிறது. இதை 'அலகு' அல்லது 'அளவு' என்று கூறுகிறோம்.

ஆதலால், கல்வி முறையில் இந்த இரு மனச் சத்திகளை நாம் நினைவில் இருத்திக்கொள்ள வேண்டும். ஒரு தனி ஆளுமையில் இவ்விரு பண்புகளுள் ஒன்று ஒன்றை மீறியிருந்த போதிலும், இவ்விரண்டும் கட்டாயமாக இருந்தே தீர வேண்டும். இவ்விரண்டும் ஒன்றியே பணியாற்றவும் வேண்டும். கற்பனையை மட்டும் வளரச் செய்கின்ற முயற்சி சமநிலை இழத்தலுக்கு வழி கோலும்; நடைமுறை வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கு ஒரு முட்டுக்கட்டையாகவும் நேரிடும்.

எம்முடைய சின்னஞ்சிறு குழந்தைகள் தங்களுக்குக் கணக்கின் மேலுள்ள மனச்சார்பைப் பல அற்புதமான சுயேச்சை விதங்களில் காட்டிக்கொள்கின்றன.

ஒரு காரியத்தை இவ்வாறுதான் செய்ய வேண்டும் என்று துல்லியமாகக் காட்டினோமானால், இந்தத் துல்லியமே அவர்களுடைய அக்கறையைக் கவர்வது போலிருக்கிறது. இந்தச் செயல் ஆற்றப்படுவதன் உண்மையான நோக்கத்தைப் பெறுவதற்கு இதுதான் முதல் நிபந்தனை ஆகிறது. ஆனால், துல்லியமாக அதைச் செய்வது என்பது துணையாகிக் குழந்தையின் முயற்சிகளில் தளராமல் ஒரு நிலையாய் நின்று அதன் வளர்ச்சியில் முன்னேற்றத்தைப் பெறச் செய்தது. பள்ளிக்கூடத்தில் தன்னியல்பான தொழில்களுக்கு **ஒழுங்கும் சரிநுட்பமும்**[2] இரண்டு சாவிகள் என்பதைக் கண்டோம்.

இப்பொழுது எம்முடைய புலன் ஆய்கருவிகளைக் கவனிப்போம்: மூன்று ஆண்டிலிருந்து நான்கு ஆண்டு வரை உள்ள குழந்தைகளின் ஒரு முனைப்பை[3]த் தூண்டிவிடும் சத்தி பெற்றவை இவை. இவற்றைக் கவனிக்கும் பொழுது இந்த ஆய்கருவிகள் சூழ்நிலையைத் துருவி ஆராய்வதற்கு உதவி புரிவதுடன் கணித மனத்தையும் வளரச் செய்கின்றன என்பதற்கு ஐயமில்லை. பள்ளிக்கூடப் பாடத்திட்டத்தில் சாதாரணமாகக் கணக்கு ஒரு பெரிய இன்பமாகக் கருதுவதற்குப்

1 Advanced Montessori, Vol. I, கற்பனை பற்றிய அத்தியாயங் காண்க. 2. Order and precision, 3. Concentration

பதிலாகப் பெரிய துன்பமாகவே எண்ணப்பட்டு வருகிறது. ஆனால், எங்கள் அனுபவத்தில் இதற்கு நேர் விரோதமானதையே நாங்கள் கண்டிருக்கிறோம். இந்தப் பாடத்தின்மேல் பெரும்பாலார் ஒரு மனத்தடையை அமைத்துக்கொண்டிருக்கின்றனர். ஆம்; எல்லாம் எளியவைதாம். ஆனால், இவற்றின் வேர்கள் உட்கவர் மனத்தில் ஊன்றப்பட்டிருக்க வேண்டும்.

சிறு குழந்தையின் சூழ்நிலையில் **கணிதச் சரிநுட்பம்**[1] பொருந்திய பண்டங்கள் சாதாரணமாகக் காணப்படுவதில்லை. மரங்களையும், மலர்களையும், விலங்குகளையும் இயற்கை அன்னை அவற்றுக்கேற்ற சூழ்நிலையில் படைத்தருளியிருக்கிறாள். ஆனால், இவற்றைப் (சரி நுட்பப் பொருள்கள்) படைக்கவில்லை. தகுந்த வாய்ப்புகள் இல்லாத காரணத்தால், குழந்தையின் கணித உளப் போக்குகள் பாதிக்கப் படலாம்; வருங்காலத்தில் முன்னேற்றத்தையும் பாதிக்கலாம். ஆதலால், எம்முடைய புலன் ஆய்கருவிகள் **உருவெடுத்த அருவங்கள்**[2] அல்லது **அடிப்படைக் கணிதம்**[3] என்று கருதுகிறோம். கணித அறிவைப் புகட்டுவதற்காக வேறு இரு நூல்களில் விரிவாக யான் எழுதியுள்ளேன். இந்தத் துறையில் கற்றுக்கொள்ளப்படும் தனி உளவியல் விளக்கங்கள் என்றும் இவ்விரு நூல்களையும் கருதலாம்.[4]

## இளஞ்சூல் கோலம்[5]

குழந்தையின் முதல் வளர்ச்சிப் பருவம் சேணியனது பாவைப் போன்ற ஒன்றை விரித்து வைக்கிறது. அதனுள் குழந்தை தன் சூழ்நிலையின்மேல் செயலாற்றிப் பெற்ற வெற்றிகள் அடங்கியிருக்கும். இது உண்மையாக இளஞ்சூல் வகையின் சம்பவமாகும். ஏனெனில், இளஞ்சூல் முன்கூட்டியே இருந்த ஒரு கோலத்தின் பயனாகும். ஜீன்களில் பதிந்தது போல எதிர்காலத்து ஸ்தூல உடல் உறுப்புகள் சம்பந்தப்பட்ட கோலமானாலும் சரி, அல்லது **காக்ஹில்** (Coghill) கண்டு பிடித்தது போலக் குழந்தையின் நடத்தையைப் பற்றியதானாலும் சரி, இது உண்மையாகும்.

மறுபடியும் மொழிச் சம்பந்தமாகக் குழந்தை மற்றொரு பாவை விரித்துவிடுகிறது. இந்தப் பாவு நிலை பெற்றது; சரி நுட்பமானது. ஏனென்றால், இதில் ஒலிகளும், சொற்கோவையின் ஒழுங்கும்

1. Precise
2. System of Materialised Abstraction
3. Basic Mathematics
4. Maria Montessori: 1. Psico-arithmetica, 2. Psico-geometrica casa Editorial Araluce, Barcelona, 1934.
5. The Embryonic Pattern

அமைந்திருக்கின்றன. இயற்கையில் இதற்கு முன்பு இந்த ஒலிகளும் இந்தச் சொற்கோவை ஒழுங்கும் இருந்ததில்லை. இவற்றை ஏதோ ஒரு மனிதக் குழு உருவாக்கியிருக்கிறது. சொற்களும் அவற்றின் பொருள்களும் எங்ஙனம் தோன்றின? அவை ஒருவரையொருவர் புரிந்துகொள்ள வேண்டுமென்று மக்களால் ஒப்புக்கொண்ட ஓர் ஒப்பந்தத்தால் பிறந்தவைதாமே?

சமூகக் குழுக்களால் மற்றவையும் நிலைநாட்டப்படுகின்றன. இதற்கு எடுத்துக்காட்டு, பழக்க வழக்கங்களாகும். இவை இறுதியில் நன்னெறியின் சக்தியாகக் கலந்துவிடுகின்றன. பரிணாமக் கொள்கையில் கருதி வந்தது போல இந்தப் பழக்க வழக்கங்கள் எல்லாம் வாழ்க்கையை எளிதாக்குவதற்காக ஏற்படுவனவல்ல என்பதைக் கவனிக்கும் பொழுது வேடிக்கையாகத்தான் இருக்கிறது. சமூக விதிகள் இக்கருத்துக்கு மாறான சாயலைப் பெற்றிருக்கின்றன. தற்காப்பூக்கம்[1] என்பது, வாழ்க்கைக்குரிய மிகச் சிறப்பான ஏதுக்களையே தேடுவதில்லை. இதற்கு மாறாக, வாழ்க்கையில் கட்டுப்பாடுகள் தோன்றி, உடன் பிறந்த தியாக ஊக்கம் ஒன்று இருப்பதாக நினைவூட்டுகிறது. உருவமற்ற கல்லில் ஒன்றை உருவாக்க வேண்டுமானால், சில பகுதிகளைவெட்டி எறிய வேண்டித்தான் இருக்கிறது. அதாவது, சிலவற்றைத் தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது. இந்த உருவகம் இங்குப் பயன்படுகிறது. பழங்காலக் குடிமக்களின் பழக்க வழக்கங்களை ஆராயும் பொழுது அவர்களுடைய விலங்குகளும், தடைகளும், உடலை வருத்திக்கொள்வதும் எல்லாக் குழுவினரிடமும் நடைபெறுவது விளங்கும்.

சிலர் இயற்கைக்கு விரோதமான வழிகளில் உடலை வருத்தித் திருத்தி அமைத்துச் சில சமயங்களில் அழகைப் பெறுகின்றனர். இவை மிகவும் கொடிய தியாகத்தினால் அடிக்கடி பெறப்படுகின்றன. பண்டைச் சீனப் பெண்களின் பாதங்கள் சிறியனவாக இறுக்கப்பட்டு வந்தமை நம் நினைவுக்கு வருகிறது. அது மட்டுமா! இந்திய நாட்டவர் மூக்குத்தியும் காதணிகளும் பூணுவதற்காகத் துளையிட்டு இவ்வுறுப்புகளை பின்னப்படுத்துவதும் நாம் காண்கிறோம்.

ஆனால், உணவில் மிகவும் முக்கியமான கட்டுப்பாடுகள் ஏற்படுகின்றன. அண்மையில் கோடிக் கணக்கான இந்தியர்கள் பஞ்சத்தால் இறந்தார்கள். அவர்கள் வாழ்ந்த பகுதியில் மற்ற உலகத்தில் உள்ளவை போல ஏராளமான ஆடு மாடுகள் வாழ்ந்தன. ஆயினும், அவர்கள் அம்மிருகங்களைக் கொன்று தம் பசி ஆற்றிக்கொள்ள முன்வரவில்லை. ஏன்? வயிறு வளர்ப்பதற்காக விலங்குகளைக் கொல்

---

1. Instinct of self preservation

லாமை அவர்களுடைய பழக்கத்தில் ஊறிக்கிடக்கிறது. இறத்தலை விட இப்பழக்கம் வலிவுடையதாய் இருந்தது.

எனவே, அறநெறி என்பது சமூக வாழ்க்கையின் மேற்கட்டடம். இந்த வாழ்க்கையில் இவை உறுதியான உருவத்தில் நிலை பெறச் செய்யப்படுகின்றன. இந்த உருவங்களும் பொது ஒப்பந்தத்தினடியாகவே நிலைபெற வேண்டும் என்பதை நாம் மறந்துவிடலாகாது. இந்தப் பொது ஒப்பந்தமும் அவர்களுடைய செல்வாக்கு எவ்வளவு செல்லுமோ, அதைப் பொறுத்திருக்கிறது.

சமயத்தைப் பற்றியும் இதையேதான் கூற வேண்டியிருக்கிறது. விக்கிரகமும் பொது மக்களின் அங்கீகாரத்தைப் பெறவேண்டியிருக்கிறது. சில கருத்துகளின் அடியாகத் தோன்றி மக்களிடையே ஏற்பட்ட ஒப்பந்தமே சமயம். எனினும், இவை மனித இனத்துக்கு வேண்டிய தெய்விகத் தேவைகள் காரணமாக ஓர் எதிர்ப்பும் இல்லாமல் தோன்றியவையாகும். இந்தத் தேவைகள் போற்றுதலைத் தோற்றுவிக்கின்றன; சில நம்பிக்கைகளை ஏதோ நுண்ணறிவால் ஏற்றுக்கொள்வன அல்ல. பழங்குடி மகன் இயற்கையின் அற்புதங்களைக் கண்டு அதிசயித்தான்; உணர்ச்சியூட்டும் அதன் பகுதிகளை வாழ்த்தினான். அவன் கண்ட அதிசயத்துக்குத் தன் அச்சத்தையும் நன்றியையும் காட்டினான். சில நிகழ்ச்சிகளிலும் சம்பவங்களிலும் ஆழ்ந்த ஓர் உட்பாட்டுத் துலங்கல் தோன்றி, அது பொதுவாக எல்லார் ஒப்பந்தத்தையும் பெற்று இந்தக் குழுவுக்கே புனிதமாகி விடுகிறது.

அவை வெறுங்கற்பனையைத் தூண்டிவிடுகிறவையல்ல. ஆனால், மனமே அவற்றைப் பற்றிக்கொள்கிறது. அவற்றிலிருந்து அதனுடைய சொந்தத் தொகுத்தலைப் பெறுகிறது. புலன்களால் ஏற்படும் பதிவுகளிலிருந்து மனமானது தன்னுடைய அருவக் கருத்துகளை எவ்வாறு பெறுகிறதோ, அதற்கு இதை ஒப்பிடலாம். ஒரு பொருளின் பண்புகள் மனத்தின் அடிப்படையான இயலால் பிரித்தறியப்படுகின்றன. ஆனால், இங்கு நனவிலா நிலை வேலை செய்கிறது. இது பல அனுபவங்கள் கூடி இறை வணக்கத்தில் முடிவு பெறுகிறதைப்போன்றிருக்கிறது. அருவ நிலை வெளியீட்டு நிலையை நாம் அடைகிறோம். அவற்றின் ஆள் திறமாக்குதல்[1] சில அடையாளங்களை உபயோகிப்பதால் பெறப்படுகின்றது. சமூகச் சின்னங்கள் ஆகவேண்டுமானால், அந்த அடையாளங்கள் பொது மக்களால் ஒப்புக்கொள்ளப் படவேண்டும். அடையாள உருவங்களின் வெளியீடாக நாம் பூசை

---

1. Personification

செய்வதன் செயல்களைக் காண்கிறோம். ஆதலால், சடங்குகள் இந்தக் குழுவினரிடம் நிலையுள்ள பகுதியாகிவிடுகின்றன.

இவைகளெல்லாம் பல நூற்றாண்டுகள் கழிவதற்குள் நிலை நிறுத்தப்படுகின்றன. இவை நன்னெறி போன்ற ஒரு நிலையான முறை தோன்றுவதுடன் மக்களுக்கு இடையே ஒன்றுபட்டு வாழ்வதற்கு ஆரம்பமும் ஆகின்றன. வேறு குழுவினரிடமிருந்து பிரித்துக்காட்டுவது போல இவை ஒன்றோடொன்று ஒன்றிவிடுகின்றன ; ஒரு குழுவினரை மற்றொரு குழுவினரிடமிருந்து வேறுபடுத்துவதற்கு அவற்றை ஒன்றாக இணைக்கின்றன. மனிதக் குழுவினரிடையே காணப்படும் இந்தச் சமூக வேற்றுமைகள் தாவர விலங்கினங்களுக்கிடையே காணப்படும் வேற்றுமைகளுக்கு நிகராகும். இனங்களில் மரபு நிலையாக இவ்வேற்றுமைகள் தோன்றுகின்றன. அங்ஙனமே இந்த உளவியல் தோற்றங்கள் ஒரு பரம்பரையிலிருந்து அடுத்த பரம்பரைக்கு அளிக்கப்படுகின்றன.

எனவே, இந்தக் குழுவின் சிறப்புக் கூறுகள் எல்லாம் கற்பனையாலேயே திட்டமிட்டு அங்கீகரிக்கப்பட்டு நிலைநாட்டப்படுவன என்று கொள்வதற்கில்லை. கற்பனையுடன் கலந்த ஆன்மிகத்தேவையும் இதற்குக் காரணமாயிருக்கின்றது. ஆன்மிகத் தேவை[1] இதற்கு வேண்டியவைகளை ஒன்று சேர்க்கிறது. புலன்கள் வேறு ஒரு மட்டத்தில் சேகரிப்பது போல, அருவநிலை குறுக்கிட்டு எல்லாவற்றையும் எளிமையாக்கி இணைத்துவிடுகிறது. அவ்வாறு செய்யப்படும் பொழுது அளவு கடந்த பிரமாண்டமானவைகளை மனமானது வெளிக்காட்டுவதில் வெற்றி பெற இயல்கிறது.

இந்த அமைப்புகள் சரி நுட்பமானவை ; நிலைபெற்றவை. இவை எளிமையான உருவங்களாய் இக்குழுவினருடன் ஒன்றிவிடுகின்றன. அவர்களும் இவற்றை விடாமல் பிடித்துக்கொள்கின்றார்கள். இந்த உருவங்களினடியாக நிலைபெற்ற நடத்தை பிறக்கிறது. இதனுடைய சரிநுட்பம் பெரும்பாலும் கணிதம் போன்ற துல்லியமுடையது. எனவே, வழி வகுக்கும் மனத்தின் கணிதச் சத்திகளால் கற்பனையும் ஆன்மிகப் பதிவுகளும் பற்றப்பட்டுத் தெளிவுள்ள வகையில் நிலைநாட்டப் படுகின்றன.

ஒரு குழந்தை ஓரினத்தாரின் பழக்க வழக்கங்கள், அறநெறி, மதம் முதலியவற்றை உட்கவரும் பொழுது அது உண்மையாக உட்கவர்வது என்ன ?

---

1. Spiritual need

மொழியில் நடைபெறுவதை ஒப்புமைக்கு எடுத்துக்கொண்டால், சிறு குழந்தை பல கோலங்களைத் தன மனத்துக்குள் வாங்கிக்கொள் கிறது. அருவநிலையிலிருந்து பெறப்பட்ட சரி நுட்பங்களையும், நிலை யுள்ளவற்றையும், கணித மனம் ஒழுங்குபடுத்துகிறது. இவற்றைக் குழந்தை ஏற்றுக்கொள்கிறது. உயிருடைய அமைப்புகள் கருவாழ் வில் எங்ஙனம் ஒன்றிவிடுகின்றனவோ, அங்ஙனமே இந்தக் கோல அமைப்புகளும் குழந்தையுடன் ஒன்றிவிடுகின்றன. இந்த அமைப்பு கள் சத்தி வாய்ந்தவை; புதுமையை ஆக்கும் திறமையுடையவை; ஆளுமைக்கே உருவம் அளிப்பவை. ஜீன்களால் மரபு வழியாக உடல் அமைப்பு உருவெடுப்பது போலவும், நரம்பு மையங்களின் மேல் பதிப்பிக்கப் பெற்ற நடத்தைக் கோலங்களைப் போலவும் இவை இருக்கின்றன.

குழந்தையின் சூல் புற வாழ்க்கையில்[1] அல்லது அதன் கருவாழ் வின் உளவியல் பருவத்தில் தன்னைச் சூழ்ந்துள்ள உலகத்தின் குறிப் பிட்ட குழுவினருடைய சமூக வாழ்க்கைக் கோலங்களை உட்கவர்ந்து கொள்கிறது. அதாவது, அந்த இனத்தின் மனச் செல்வத்தை அப் படியே தொடக்கத்தில் உட்கவர்ந்துகொள்வதில்லை. ஆனால், அவற் றின் அடியாகப் பிறந்த கோல அமைப்புகளையே உட்கவர்ந்துகொள் கிறது. குழந்தை உட்கவர்வது அடிப்படைப்பகுதி அல்லது தொகுக்கப்பட்ட பகுதியாகும்; சரிநுட்பமான பகுதி ஆதலால் மக்கள் பழக்கங்களில் பல முறை அனுசரிக்கப்பட்டிருக்கின்றது. சுருங்கச் சொல்லின், கணிதப் பகுதியை அது உட்கவர்கிறது எனலாம். இந்தக் கோலங்கள் குழந்தையின் உள்ளத்தில் நிலை பெற்றுவிட்டால், இவை தாய் மொழியைப் போல மாருத சிறப்பியல்புகளாக நிலை பெற்று விடுகின்றன.

பிறகு ஒருவன் தன் போக்கில் அளவு கடந்த முறையில் வளர்ச்சி அடையலாம். ஆனால், அவை எல்லாம் எப்பொழுதும் இந்த அடிப் படையில் தோன்றினவையாகவே இருக்கும். இதே போல, அத னுடைய தாய் மொழியும் இன்னும் அளவு கடந்த முறையில் சிறப்பாக் கப்படலாம். ஆனால், அவை சூல் புற வாழ்வில் ஏற்பட்ட ஒலிகளும் இலக்கண விதிக்கோலங்களின் அடிப்படையைப் பொறுத்தே இருக்கும்.

கணித மனம் தொடக்கத்திலிருந்தே சுறுசுறுப்பானது. குழந்தை செய்கின்ற ஒவ்வோர் இயக்கத்திலும் துல்லியம் ஏன் பங்கு எடுத்துக் கொள்கின்றது என்பதை நாம் குறிப்பிட்டோம். இது மட்டுமன்று,

1. Post natal

குழந்தையின் ஆரம்ப வாழ்க்கையில் ஒழுங்குத் தேவையானது எவ்வளவு ஆளும் கவர்ச்சி என்பதையும் நாம் உணர்கிறோம். சூழ்நிலையில் ஒன்றேடொன்று எந்த ஒழுங்கமைப்பில் வைக்கப்பட்டிருக்கின்றன என்ற உணர்ச்சி எளிய புலன் காட்சியுடன்[1] தொடர்பு கொண்டது. அதாவது, சூழ்நிலையிலிருந்து மனத்துக்குள் ஏற்றுக்கொள்ளக் கூடிய முதல் பதிவுகளைக் குறிக்கும். மேலும், குழந்தை வேண்டுமென்று செய்கின்ற இயக்கங்களிலும் இப்படியே செய்ய வேண்டும் என்ற ஒரு போக்கு இருந்தால்தான் அவற்றை நிலை பெறச் செய்ய இயலும். வேறு எந்த வகையிலும் **ஒரு முனைப்பும் இயக்கத்தில் மாருமையும்**[2] குழந்தையால் பெற இயலாது.

குழந்தை ஆளுமையின் அடிப்படை மனப்பகுதி ஆக்கத்தைப் பற்றிய ஒரு கருத்தை மேற்கூறியவை எல்லாம் நமக்குள் தோற்றுவிக்கின்றன. ஓர் உளவியல் உயிரி[3] தன்னைத்தானே உருவாக்கிக் கொண்டிருக்கிறது. அதுவும் முன் கூட்டியே நிலை நாட்டப்பட்ட ஒரு கோலத்தை ஒட்டியே உருவாகிறது. இதனுல் இல்லாவிட்டால் குழந்தையின் மன அடிவானம்[4] அதன் பகுத்தறிவாலும், மனவுறுதியாலும் அமைக்கப்பட வேண்டியிருக்கும். அதாவது, இது வரையும் பெருமல் இனிமேல் பெறப் போகும் சத்திகளால் இதை ஆக்கிக் கொள்ள வேண்டி வரும். இது பொருத்தமற்றதென்று நாம் தள்ளி விட வேண்டுவதுதான்.

ஒரு மனிதன் எவ்வாறு தர்க்கப் பகுத்தறிவினுல் தன் உடலை உருவாக்கிக்கொள்வதில்லையோ, அப்படியே தன் மனத்தின் வடிவத்தை உருவாக்கிக்கொள்ளும் பொழுதும் ஒரு வழக்கு முறையைப் பின் பற்றுவதில்லை. 'உருவாக்குதல்' என்பது ஆரம்பத்தில் தோன்றுகின்ற அந்த மாயமான சம்பவங்களைக் குறிக்கிறது ; முதலில் இல்லாததை உருக்கொள்ளச் செய்கிறது. இதுவும் எதிர்காலத்தில் ஒரு ஜீவாதார விதிப்படி வளரக் கூடியதாகும். எல்லா உயிர்களும் ஓர் அண்டத்திலிருந்து பிறக்கின்றன என்னும் உண்மையைப் போல எல்லாம் ஆரம்பத்திலிருந்தே உருவாகின்றன.

எனவே, உருவாக்குதல் என்ற அடிப்படையில் மனித மனம் ஆக்கப்படுகிறது. அதுவும் பிறந்த பிற்பருவத்தில் இவ்வாறு ஆக்கப்படுகிறது. ஏனென்றால், வெளியுலகத்திலிருந்து ஏற்றுக்கொள்பவற்றை வைத்துக்கொண்டு மனித மனம் தன்னைத்தானே அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஓர் அடிப்படையை அமைத்துக்

1. Simple perception, 2. Concentration and constancy.
3. Organism, 4. Mental Horizon

கொள்வதற்காக இதைக் குழந்தை தன்னுள் தோற்றுவித்துக்கொள்கிறது ; அவ்வாறு செய்யும் பொழுது அந்தக் குழுவினர்க்குரிய பண்புகளைப் பெற்ற ஒரு தனிப் பேர்வழியாகிவிடும்படி செய்கிறது ; பல ஆண்டுகளாக ஓர் இனத்துக்கும் மற்றோரினத்துக்கும் நடையுடை பாவனைகள் வழிவழியாக வந்திருக்கின்றன. இம்மரபுகள் வழிவழியாக நிலைபெறச் செய்து வருவதும் குழந்தையாலேதான்.

இயற்கை அன்னையால் நிச்சயமாக நிலைநாட்டப் பெறுததும், சமூகக் கோலமாக மெதுவாக உருவாகிக்கொண்டிருப்பதுமான எதையும் நிலைபெறச் செய்ய வேண்டுமானால், அக்குழுவில் பிறக்கின்ற குழந்தை தன் சூழ்நிலையில் இருப்பவைகளைத் தன் மயம் ஆக்கிக்கொள்ளக்கூடிய சக்தி ஒன்றைப் பெற்றிருத்தல் வேண்டும். இது குழந்தையின் உண்மையான உயிருடைச் செயலாகும். இந்தத் திறமைதான் சமூக முன்னேற்றத்துக்குக் காரணமாயிருக்கிறது. இது ஓர் ஆக்கும் தொழில். நம்முடைய கட்டுப்பாட்டுக்குள் வரக்கூடியது என்ற காரணத்தினால் நமக்கு ஓர் அளவு கடந்த முக்கியத்துவத்தை அளிக்கிறது.

# 18 குழந்தைமையில் சால்பும் அதன் குறைபாடுகளும்

நாம் இப்பொழுது மெய்ந்நிகழ்ச்சிகளின் இரண்டாம் பகுதியைப் பற்றி ஆராய்வோம். இவை குழந்தையின் முதல் ஆண்டுகளில் முக்கியமானவை; குழந்தையின் சால்பையும் அது உருவாவதையும் பற்றிய சம்பந்தமுடையவை.

பழைய கல்வி முறை சால்பு வளர்ச்சிக்காக முக்கிய இடம் எப்பொழுதும் கொடுத்தே வந்திருக்கிறது. 'சால்பு' என்பது என்ன என்றோ, அல்லது அது எவ்வாறு பயிற்சி அளிக்கப்பட வேண்டுமென்றோ பழைய முறை சொல்லத் தவறிவிட்டது. அது சொன்னதெல்லாம் என்ன? நுண்ணறிவு, கைத்தொழில் சம்பந்தமான கல்வியைப் புகட்டுதல் மட்டும் போதாது. ஆனால், என்ன என்பது தெளிவாகத் தெரியாத இது பாடத்திட்டத்தில் ஒன்றாகச் சேர்க்கப்பட வேண்டுமென்று கருதி வந்தது. ஆயினும், இது ஓரளவுக்கு உட்காட்சியைக்[1] காட்டுகிறது. மனிதனுடைய ஆளுமையின் முக்கியப்பகுதிகளைக் கல்வி அறிஞர்கள் வெளிப்படுத்த முயற்சி செய்வது புலனாகிறது. சில நற்குணங்களைச் சிறப்பாக எப்பொழுதும் கருதி வந்திருக்கின்றனர். எடுத்துக்காட்டாக, அஞ்சாமை, தளராமை, கடமை, பிறருடன் நன்னெறித் தொடர்பு, எப்பொழுதும் நெறிக்கல்வி ஆகியவற்றிற்கு உயர்ந்த நிலை கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது.

இவ்வளவு இருந்தும், சால்பு என்பது என்ன என்பதைப் பல நாடுகளிலும் இன்னும் தெளிவாகப் புரிந்துகொள்ளவில்லை.

தத்துவ ஞானிகளும் உயிர்நூல் வல்லுநரும் இதைப்பற்றி ஆதி காலத்திலிருந்து வாதாடியிருக்கின்றனர். ஆனால், தெளிவான ஒரு முடிவுக்கும் அவர்களால் வர இயலவில்லை. கிரேக்கர் காலத்திலிருந்து

---

1. Insight

இக்காலம் வரையிலும் தியோஃபிராஸ்தஸ் (Theophrastus) என்பவர் முதல் ஃப்ராய்டு (Freud), யுங் (Jung) என்பவர் வரையிற் பலர் இந்தப் பிரச்சினையை ஆய்ந்திருக்கின்றனர். ரூம்கி (Rumke) என்பவர், 'நாம் எப்பொழுதும் தாற்காலிக நிலையிலேயே இருக்கிறோம்,'[1] என்று சரியாகச் சொல்லியிருக்கிறார்.

எல்லாரும் ஒப்புக்கொள்ளும்படி முடிவு கட்டின **பொதுமைக் கருத்து**[2] ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை. எனினும், உள்ளுணர்வால்[3] சால்பு என்னும் பல குணங்களின் தொகையைப்பற்றி ஒவ்வொருவரும் தெரிந்திருக்கின்றனர்.

மிகவும் அண்மையில் சால்பைப்பற்றி ஆராய்ந்த பொழுது, அதில் ஸ்தூல உடல், நெறி, நுண்ணறிவு தொடர்புள்ளவை, மனவுறுதி, ஆளுமை, மரபு போன்ற பல அடங்கியிருப்பது தெரிகிறது. பான்சென் (Bahnsen) என்பவர் 1876-ஆம் ஆண்டில் முதன்முதலாகச் 'சால்பியல்' (Charecterology) என்னும் பதத்தை உபயோகித்தார். அதிலிருந்து சால்பைப்பற்றி ஆய்வதற்கென்று ஒரு புது விஞ்ஞானத் துறை படிப்படியாய் வளர்ந்துகொண்டே போகிறது. ஆழ்ந்தாராய்ந்து விரிவுபடுத்தலைக்[4] கையாண்டு—சரிநுட்பமான அறிவுக்குப்பதிலாக—இக்கால மாணவர்களும், புதிதமைப்போரும்[5] தங்களுடைய ஆராய்ச்சி முடிவுகளை எடுத்துக்கூறி வந்திருக்கின்றார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால், எல்லாரும் வயது வந்தவர்களைக் கொண்டே தமது ஆராய்ச்சியைத் தொடங்கியிருக்கின்றனர்; வயது வந்தோரை அருவ நிலையிலோ, அல்லது வளரும் பேர்வழி என்றோ ஆய்ந்து வந்திருக்கின்றனர். ஆய்வாளர் அனுபவக் கண்கொண்டோ, அறநெறித்துறைகொண்டோ கல்வியைக் கவனித்து வந்திருக்கின்றனர். மரபைப்பற்றியும், சூலின் முற்கால வாழ்வைப்பற்றியும் அவர்கள் எவ்வளவோ பேசினபோதிலும், பொதுவாகச் சின்னஞ்சிறு குழந்தையை மறந்துவிடுகின்றார்கள். இதன் பயன் என்ன? மரபிலிருந்து முதியோர் பருவத்துக்கு ஒரு தாவுதலால், எதிர் பாராத வகையில் இடைவெளி ஏற்பட்டுவிடுகிறது. இந்த இடைவெளியை நிறைப்பதற்கு ஒரு சிலரே முயற்சி செய்திருக்கின்றனர்.

எனவே, இந்த இடைவெளியைக்கொண்டே நமது ஆராய்ச்சியும் தொடங்கியிருக்கிறது. நம் குழந்தைகள் தாமாக—சுயேச்சையாக—அளித்த உண்மைகளால் இந்தத் தெளிவு பெறாத பிரச்சினையைப்

---

1. H. C. Rumke: Introduction to Charecterology, Harlem, 1937, 2. Concept, 3. Intuition,
4. Speculative elaboration, 5. Innovators

பற்றிப் புது வழிகளில் சிந்தனை செய்ய நாங்கள் உந்தப்பெற்றோம். சால்பின் வளர்ச்சியை உருப்படுத்த எங்களுக்கு உதவி புரிந்தவை, குழந்தையின் சொந்த முயற்சிகளால் இயற்கையாகத் தொடர்ந்து நடைபெறும் சம்பவங்கள். அவை வேறு எந்த வெளி ஏதுக்களுக்கும் தொடர்பில்லாமல் அக்குழந்தையின் உயிர்ப்புள்ள கிரியாசத்தியைப் பொறுத்தும், அது தினசரி வாழ்க்கையில் சந்திக்கும் தடங்கல்களைப் பொறுத்தும் இருக்கின்றன. இயற்கை அன்னை மனிதனுடைய உள வியற்பகுதியை ஆக்கிக்கொண்டிருப்பதில் எம் அக்கறை திருப்பப் பட்டு, நாங்கள் அதைக்கூர்ந்து கவனிப்பதிலும், இயற்கை அன்னை யின் வேலையை விளக்குவதிலும் ஈடுபடுகிறோம். இதைச் செய்ய வேண்டுமானால், பிறப்பிலிருந்தே தொடங்க வேண்டும். அப்பொழுது சால்பும் ஆளுமையும் பூச்சியம் என்றே கருதப்படவேண்டும். இந்த நிலையிலிருந்து இவை தம்முருக்காட்டும் பருவம் வரை நாம் ஆராய வேண்டும். ஏனெனில், நனவிலா மனத்தில் இயற்கை விதிகள் சந் தேகமில்லாமல் ஆழமாகப் பதிந்திருக்கின்றன. இவை உளவியல் வளர்ச்சியை நிலைபெறச் செய்கின்றன. எல்லா மனிதருக்கும் இது பொதுவாகும். வேற்றுமைகளுக்குக் காரணம், செல்வத்தாலும் வறு மையாலும், விபத்துகளாலும், பின் வாங்குதலாலும், பின்னேக்கத் தாலும்[1] மனம் பாதிக்கப்படுவது. இவைகளெல்லாம் தனிப் பேர்வழி யின் போக்கில் குறிக்கப்படுகின்றன. இவற்றை எல்லாம் அவன் எதிர்க்க வேண்டியிருக்கிறது.

இது போன்ற ஒரு கோட்பாடு[2] குழந்தைமையிலிருந்து முதியோர் பருவம்வரை தோன்றும் சால்பிற்குப் பொருள் காண உதவி புரியலாம் என்பதற்கு ஐயமில்லை. ஆனால், இப்போது குழந்தையின் மலரும் வாழ்க்கையை அடிப்படையாக எடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு வரிடமும் பற்பல மாறுதல்களைக் காண்கிறோம். இவைகளெல்லாம் இவற்றை எவ்வாறு அமைத்துக்கொள்வதென்று குழந்தைகள் செய்து வந்த முயற்சிகள் அடியாகத் தோன்றியவையாகும்.

இந்த நோக்கத்தில் காணும்பொழுது சால்பைப்பற்றியவை எல் லாம் மனித நடத்தைக்குட்பட்டவையென நாம் கருதவேண்டியிருக் கிறது. நான் மேலே கூறியது போல, ஒரு பேர்வழியின் 0-18 ஆண்டு வாழ்வை மூன்று பிரிவுகளாகக் கொள்ளலாம்: 0—6; 6—12; 12—18 ஆண்டுகளாகப் பிரிக்கலாம். (இந்த நூல் இதைப் பற்றியே பேசுகிறது.) இம்மூன்றும் தமக்குள் இரு கூறுகளாகவும் பிரிகின்றன. இந்தப் பருவங்களைத் தனித்தனியாக ஆய்ந்தோமானல், ஒவ்வொரு பருவக் குழந்தையின் மாதிரியான மனப்போக்கும் வெவ் வேறு விதமாகத் தோற்றமளிக்கின்றது. இது, 'இவை, வெவ்வேறு

1. Regression, 2. Theory

பேர்வழியுடைய போக்கு; ஒருவருடையது அன்று போலும்!' என்ற ஐயத்தை உண்டாக்கிவிடுகிறது.

முதற்பருவம் ஆக்கும் பருவம் என்பதை முன்பே கண்டிருக்கிறோம். பிறக்கும்பொழுது குழந்தைக்குச் சால்பு எதுவும் இல்லாவிட்டாலும், சால்பின் வேர்கள் இப்பருவத்திலேதான் ஊன்றியிருக்கின்றன. 0—6-ஆண்டு வரை உள்ள பருவம், வாழ்க்கையில் முக்கியமான பருவம். இது சால்பு வளர்ச்சிக்கும் பொருந்தும். கைக்குழந்தையை எடுத்துக்காட்டாலும், வெளிப்படையான கட்டாயத்தாலும் பாதிக்க முடியாது என்பதை அனைவரும் அறிவர். ஆதலால், சால்பின் அடிக்கல்லை நாட்டுபவள் இயற்கை அன்னையாகத்தான் இருக்க வேண்டும். பச்சைக் குழந்தைக்கு 'இது சரி; இது தவறு,' என்று ஒன்றும் தெரியாது. நாம் நன்னெறி என்று கருதுவதற்கு அப்பால் குழந்தை தன் வாழ்க்கையை நடத்தி வருகிறது. குழந்தையை நாம் தீயதென்றோ, அயோக்கியமானது என்றோ கூறுவதில்லை; 'போக்கிரி' என்கிறோம். அதாவது, அவனது நடத்தை சிறு பிள்ளைத்தனம் என்று சொல்கிறோம். ஆதலால், நல்லவன், கெட்டவன், அறநெறியோன் என்ற பதங்கள் இந்நூலில் பயன்படுத்தப்படமாட்டா. குழந்தை தனது இரண்டாம் பருவமாகிய ஆறுண்டு முதல் பன்னிரண்டு ஆண்டு வரையில் உள்ள பருவத்திலேதான் 'இது சரி; இது தவறு,' என்கின்ற வேற்றுமைகளை உணரத் தொடங்குகிறது. இது தன்னுடைய செய்கைகளைப் பொறுத்தமட்டிலன்று; பிறர் செய்கைகளைப் பற்றியும் கருதுகிறது. இந்தப் பருவத்தில் சரி தவறு என்னும் பிரச்சினைகள் தோன்றுவது இயல்பு. அறநெறி உணர்வு தோன்ற ஆரம்பிக்கிறது. இது வருங்காலத்தில் சமூக உணர்வைத் தூண்டி விடுகிறது. பன்னிரண்டாம் ஆண்டு முதல் பதினெட்டாமாண்டு வரையுள்ள பருவம், நாட்டுப் பற்றுத் தோன்றும் பருவமாகும். ஒரு நாட்டு மக்களின் குழுவைச் சேர்ந்ததாக ஓர் உணர்ச்சி தோன்றுகிறது. அந்தக் குழுவின் மானத்தைக் காப்பதில் கவலையுறும் பருவமும் இதுவேயாகும்.

ஒவ்வொரு பருவமும் அடிப்படையில் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருந்த போதிலும், ஒவ்வொரு பருவமும் அதைத் தொடரும் பருவத்துக்கு அடிகோலியாய் இருக்கிறது. இரண்டாம் பருவத்தில் இயல்பாக வளரவேண்டுமானால், முதற்பருவத்தில் இயல்பாக வளர்ந்திருக்க வேண்டும். வண்ணத்துப் பூச்சியின் புழுவையும் பூச்சியையும் பாருங்கள். அவை தம் நடத்தையில் வெவ்வேறாகக் காட்சி அளிக்கின்றன. இது, 'இவை வெவ்வேறு பூச்சிகளோ!' என்னும் ஐயத்தை உண்டாக்கலாம். எனினும், வண்ணத்துப் பூச்சியின் வண்ணம் புழுப் பருவத்திலிருந்து வந்திருக்கிறது. வேறொரு வண்ணத்துப்

பூச்சியைப் பார்த்து, 'நானும் உன்னைப்போல ஆகப்போகிறேன்,' என்று முயலும் எந்த முயற்சியாலும் அந்த வண்ணம் தோன்றப்போவதில்லை. 'நாம் நிகழ் காலத்தைப் பாதுகாப்பதால் எதிர்காலத்துக்குத் தொண்டாற்றுகிறோம்.' எவ்வளவுக்கெவ்வளவு ஒரு பருவத்தின் தேவைகள் முழுமையையும் நாம் நிறைவேற்றுகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அடுத்த பருவமும் வெற்றி பெறும்.

கருத்தரித்ததிலிருந்தே வாழ்க்கை ஆரம்பிக்கிறது. குடியும், தீய நடத்தையுமில்லாத உடல் நலமுள்ளவர் இருவர் கூடுவதால் கருத்தரிப்பு ஏற்படின், அது காரணமாகப் பிறக்கும் குழந்தையிடம் சில தீய குறைபாடுகள் தோன்றுமலிருக்கும். கருத்தரிக்கும் சமயத்தில் நடைபெறும் சில நிபந்தனைகளை ஒட்டியே கருவளர்ச்சியும் நடைபெறும். இதன் பிறகு கரு ஒருவாறு பாதிக்கப்படலாம். ஆனால், அது தன் சூழ்நிலையைப் பொறுத்திருக்கிறது. அதாவது, கரு வளர்ச்சிப் பருவத்தில் தாயின் சூழ்நிலை சௌகரிய அசௌகரியங்களைப் பொறுத்திருக்கிறது. கர்ப்பத்திலுள்ள குழந்தையின் நிலைமை அனுகூலமுள்ளதாய் இருப்பின், பிறக்கும் குழந்தை திடமாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கும். ஆதலால், கருத்தரித்தலும், கர்ப்ப வாழ்வும் சூலின் பின் வாழ்வைப் பாதிக்கின்றன.

பிறப்பச்சத்தைப் பற்றியும் இதனால் ஏற்படக்கூடிய பின்னேக்கு[1] அபாயங்களைப் பற்றியும் நாம் குறிப்பிட்டிருக்கிறோம். இந்தப் பின்னேக்கங்களின் இயல் ஆபத்துள்ளதாய் இருக்கலாம். ஆனால், இவை குடிவெறியாலும் காக்கை வலி போன்ற மரபு வழி நோய்களாலும் சூலின் முன்வாழ்வைப் பாதிப்பதைப் போல அவ்வளவு விபத்தானவையல்ல.

பிறப்புக்குப் பிறகு இது வரை நாம் ஆராய்ந்து வந்த மிகமுக்கியமான பருவம் தொடங்குகிறது. முதல் இரண்டுமூன்று ஆண்டுகளுக்குள் குழந்தை தனது முழு வாழ்க்கையே பாதிக்கப்படக் கூடிய சில சம்பவங்களுக்கு ஆளாகலாம். அது காயப்பட்டிருந்தாலோ, கொடுமைக்குட்பட்டிருந்தாலோ, இந்தப் பருவத்தில் கடுமையான தடைகளுக்குள்ளாகியிருந்தாலோ, ஆளுமையில் பல கோணல்கள் தோன்றலாம். இதிலிருந்து விளங்குவது என்ன? இந்தப் பருவத்தில் ஏற்பட்ட தடைகளைப் பொறுத்தும், தன் வளர்ச்சிக்குகந்த சுதந்தரம் பெற்றதைப் பொறுத்தும், குழந்தையின் சால்பு வளர்கிறது என்பது தெளிவாகிறது. கருத்தரிக்கும் பொழுதும், கரு வளர்ச்சிக்காலத்தும், பிறக்கும் பொழுதும், பிறப்புக்குப் பிறகு தோன்றும் பருவத்திலும், குழந்தை விஞ்ஞான முறைப்படி நடத்தப்பட்டிருந்தால், அது மூன்றுண்டில் எடுத்துக்

---

1. Regression

காட்டான பேர்வழியாய் இருக்க வேண்டும். ஆனால், இந்தக் குறிக்கோள் எப்பொழுதும் நடைபெறுவதில்லை. ஏனென்றால், மற்றக் காரணங்கள் ஒரு புறமிருக்க, பல தடைகள் குறுக்கிடுகின்றன. மூன்றாண்டுக்குள் ஒவ்வொரு குழந்தையும் ஒன்றைப் போல மற்றொன்றில்லாமல், மாறிவிடுகிறது. இந்த மாறுதல்கள் முக்கியத்துவத்தில் வேறுபடுகின்றன. இந்த வேறுபாடுகள் குழந்தை பெற்ற அனுபவங்களின் கொடுமையைப் பொறுத்தவை மட்டுமல்ல;இவை எந்த வயதில் நடைபெற்றன என்பதைப் பொறுத்தும் இருக்கின்றன. பிறப்புக்குப் பிறகு[1] ஏற்படும் தொல்லைகளால் உருவாகும் மாறுதல்கள் கர்ப்பவாழ்வில் ஏற்படும் குறைபாடுகளடியாகத் தோன்றும் மாறுதல்களைவிடச் சிறிது கடுமையாகவே இருக்கும். இவை இரண்டிலும் ஏற்படக் கூடிய மாறுதல்கள் கருத்தரிக்கும் தறுவாயில் ஏற்பட்ட தகாத சம்பவங்களடியாகத் தோன்றிய மாறுதல்களைவிட என்றுமே மிகக்குறைந்த அளவு கடுமையாய் இருக்கும். சோதிடம் கூறுவது போல, அல்லது குழந்தைகளின் குறைபாடுகளைத் திருத்தமுடியும் என்றநம்பிக்கையால் 0—3 ஆண்டு வரை உள்ள சூல், பின் வளர்ச்சியில் ஏற்பட்ட குறைபாடுகளை 3—6 ஆண்டுப் பருவத்தில் நடைமுறையில் நாம் சீர்திருத்திக்கொள்ளலாம். ஏனென்றால், இந்தப் பருவத்தில் இயற்கை அன்னை புதியனவாகப் பெற்ற பல புதிய சத்திகளைப் பின்னும் சீர்படுத்திக் கொள்ளும் பணியில் ஓயாமல் தொழிலாற்றி வருகிறாள்.

எம்முடைய பள்ளிக்கூடங்கள் குறிப்பிடத்தக்க முறையில் பல அனுபவங்களைப் பெற்றிருக்கின்றன. இந்தப் பருவத்தில் பெற்ற அனுபவப் பலன்களை வைத்துக்கொண்டு நாங்கள் பொருத்தமான உதவி அளிக்க இயலும். அதாவது, இது சம்பந்தமான கல்வியைப் புகட்ட இயலும். ஆனால், கவனியாமையினாலோ, அல்லது தவறாக நடத்தினதாலோ குறைபாடுகள் 0—3க்குள் திருத்தப்படாது விடப் பட்டிருந்தால், அவை அப்படியே நின்றுவிடுவதோடு பின்னும் மோசமாகியும்விடும். ஆறாண்டுக் குழந்தையிடம் மூன்றாண்டில் பெற்ற குறைபாடுகளும் அப்பருவத்துக்குப் பிறகு ஏற்பட்டவைகளும் கூடியிருக்கலாம். ஆறாண்டுக்குப் பிறகு இவை வாழ்வின் இரண்டாவது முக்கியப் பருவத்தையும் பாதிக்கலாம் ; நியாயம் அநியாயம் என்ற பண்புகளை உணரும் சத்தியையும் பாதிக்கலாம்.

இந்தக் குறைபாடுகளெல்லாம் மன வாழ்க்கையையும் நுண்ணறிவையும் பாதிக்கின்றன. தங்களுடைய சத்திகள் மலர விடாத அளவுக்கு முற்பருவங்கள் எதிரிகளாய் இருந்தால், அப்படிப்பட்ட குழந்தைகள் கற்றுக்கொள்வதற்குச் சங்கடப்படுகின்றன. ஆதலால்,

---

1. Post-natal

ஆருண்டுக் குழந்தையிடம் தனக்குச் சொந்தமல்லாத பல சிறப் பியல்புகளின் தொகையைக் காணலாம். இவை முந்தின பருவத்தில் துரதிருஷ்டவசமாக ஏற்பட்டவை. ஆறிலிருந்து பன்னிரண்டு வய துக்குள் அறநெறி உணர்ச்சியைப் பெற்றிருக்க வேண்டும்; அல்லது நுண்ணறிவு ஓரளவு குறைந்திருக்கலாம். இதற்கெல்லாம் காரணம், முன் பருவத்தில் ஏற்பட்ட குறைபாடுகளேயாம். சில குழந்தைகள் சால்பற்றனவாகவும், கற்றுக்கொள்ள இயலாதவையாகவும் இருப்ப தைக் காண்கிறோம். இறுதிப் பருவத்தில் இவற்றுடன் அதனுடைய தாழ்வுச் சிக்கல் வேறு சில குறைபாடுகளையும் இணைத்துவிடும். இவன் அயோக்கியனுகிவிடுவான். இவனு இதற்குப் பொறுப்பாளி!

எம் பள்ளிக்கூடங்களிலும், பிற பள்ளிக்கூடங்களிலும் இப்பொழு தெல்லாம் ஒவ்வொரு குழந்தையின் உடல் இயல், உளவியல் சம்பந்த மான விஷயங்களைப் பற்றிக் குறிப்பிடும் அட்டவணை ஒன்று உண்டு. இது ஆசிரியர்களுக்கு நல்ல வழி காட்டியாகலாம். ஏனென்ருல், ஒவ்வொரு பருவத்திலும் என்னென்ன விபத்துகள் நடைபெற்றிருக் கின்றன என்பதை அறிந்தோமாஞல், அவற்றின் நிலைமையும் சிகிச்சை அளித்தால் இந்த அளவுக்குத் திருந்தும் என்றும் ஓரள வுக்கு யூகிக்கலாம். இந்த அட்டவணையில் பெற்றோர் நம்மிடம் கூறிய தம்முடைய மரபு நோய்களையும் குறிப்பிடுகிறோம். குழந்தை பிறக்கும் பொழுது பெற்றோரின் வயதையும், கரு வாழ்வின் பொழுது தாயின் வாழ்க்கையைப் பற்றியும் (இது மிக்க திறமையுடன் பெறப் படவேண்டும்) அவளுக்கு ஏதாவது விபத்து நேர்ந்ததா, அல்லது கீழே விழுந்ததுண்டா என்பவைகளைக் கேட்டுத் தெரிந்து குறித்துக் கொள்ள வேண்டும். 'குழந்தை சுகப் பிரசவமா? பிறக்கும் பொழுது குழந்தை நல்ல உடல் நலத்துடன் பிறந்ததா? அல்லது மூச்சு வாங்காமல் சிறிது நேரம் தாமதித்ததுண்டா?' என்பவைகளைக் குறித்துக்கொள்ள வேண்டும். மற்றக் கேள்விகள் குழந்தையின் வீட்டு வாழ்க்கையைப் பொறுத்தவையாகும். பெற்றோர்கள் குழந்தை யைப்பற்றி அளவுக்கு மீறின கவலைப்படுகிருர்களா, அல்லது மிகவும் கண்டிப்பாய் இருக்கின்றுர்களா? குழந்தை எதைக் கண்டாவது அஞ்சியிருக்குமா? அல்லது வேறு ஏதாவது அதிர்ச்சிகளை அடைந் திருக்குமா? குழந்தை தொல்லை கொடுக்கக்கூடியதாயிருந்தாலோ, அல்லது ஸ்திர புத்தியில்லாததாய் இருந்தாலோ, இவற்றுக்கு மூல காரணத்தை இதற்கு முந்தின பருவத்தில் நாம் தேடுகிறோம். மூன்று வயதில் குழந்தைகள் நம்மிடம் வருகின்றன. அவ்வாறு வருபவை களுள் பெரும்பாலன ஏதாவது ஓர் **இயல்பிகந்த**[1] நெறியுடையன வாய் இருக்கும். இந்தக் குறைபாடுகள் நல்ல வேளையாய்த் திருந்தக் கூடியவைகளே. நாம் சாதாரணமாகக் காணக்கூடிய விலக்கங் களின்[2] வகைகளைச் சுருக்கமாக விமரிசனம் செய்வோம்.

1. Abnormal, 2. Deviation

குழந்தைகளின் குணக்கேடுகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு ஆராய்வது சாதாரணப் பழக்கமாயிருந்து வருகின்றது. ஒவ்வொரு குணக்கேட்டினையும் வேறு தனிப்பட்ட ஒரு முறையை அனுசரிப்பதால் நிவாரணம் செய்துவிடலாம் என்பது நம்பப் படுகிறது. இந்தக் குறைபாடுகள் பலவாயிருந்தபோதிலும், இவற்றை இரண்டு எளிய தலைப்புகளில் பிரிப்பது சாலச் சிறந்ததெனக் கருது கிறோம். அவையாவன, முதல் வகைக்குழந்தைகள், **வலிவுடைக் குழந்தைகள்.** (இவை தம்முன் தோன்றும் தடைகளை எதிர்த்து வெற்றி பெறுகின்றன.) இரண்டாவது வகைக் குழந்தைகள், **வலுவற்ற குழந்தைகள்.** (இவை அனுகூலமற்ற நிலைகளுக்கு ஆளாகிவிடுகின்றன.)

## வலுவுள்ள குழந்தைகளின் குறைபாடுகள்

முதல் இனத்தில் ஸ்திரபுத்தி இராது; கொடுமை செய்யும் போக்கு இருக்கும்; அடிக்கடி கோபம் வரும்; கீழ்ப்படியாது; எதையும் பல வந்தப்படுத்தும். கீழ்ப்படியாமை என்பது தெளிவாகக் காட்சி அளிக் கும். எதையும் பாழாக்கும் இயல்பூக்கம்[1] தலை எடுக்கும். எல்லாம் தன்னுடைமையாக்கும் இயல் பொதுவாகக் காணப்படுகிறது. இது சுயநலமாகவும் பொறுமையாகவும் வருங்காலத்தில் மாறும். பொறுமை என்பதைத் தெளிவாக வெளிப்படையில் காட்டாவிட்டா லும், பிறருடைய பொருள்களைக் கைப்பற்றுவதில் இவ்வியல் தோன்றுகிறது. குறிக்கோளில் ஒரு நிலை இல்லை. (இளமை யில் இது பொதுவாகக் காணப்படுகிறது.) அக்கறையை ஒரு விஷயத்தின்மேல் ஒரே நிலையாக இருக்க வைக்காமை, ஒரு முனைப் பின்மை, கையின் இயக்கங்களை ஒன்றுபடுத்த இயலாமையால்பண்டங் கள் சுலபமாகக் கீழே தவறி விழுந்து உடைந்து போதல், மனத்துக் குள் குழப்பம், கட்டுக்கு மீறின கற்பனைகள் ஆகியவை தோன்றும். இந்த வகைக் குழந்தைகள் சத்தமிடும்; கீச்சுக் குரலில் இரையும்; பொதுவாக இரையும்; மற்றவர்களைத் தொந்தரவு செய்து வம்புக் கிழுக்கும்; மெலிந்த குழந்தைகளிடமும் விலங்குகளிடமும் அனேக மாக அன்பு காட்டமாட்டா; சாப்பிடும் பொழுது பேராசை வெளி யாகும்.

## வலுவற்ற குழந்தைகளின் குறைபாடுகள்

வலுவற்ற குழந்தைகள் இயல்பாகவே **செயலற்றனவாய்**[2] இருக் கின்றன. இவற்றின் குறைபாடுகள் **எதிர்மறை**[3]**யானவை.** உடம்பு வளையாது; சோம்பல் தோன்றும். தங்களுக்கு வேண்டியவற்றுக்காக

1. Destructive instinct, 2. Passive, 3. Negative

அழும் ; தங்களுக்கு எல்லாம் செய்யப் பிறர் காத்திருக்கும்படி முயற்சி செய்யும். எப்பொழுதும் பிறர் இவற்றை மகிழ்ச்சியுறச் செய்யவேண்டும். இவை சுலபமாகச் சலிப்படைந்துவிடும். இவற்றுக்கு எதைக் கண்டாலும் அச்சம் தருவதாகத் தோன்றுகிறது. இவை பெரியவர்களை விடாமல் ஒட்டிக்கொள்கின்றன ; அடிக்கடி பொய் பேசும்; (இது தங்களைக் காத்துக்கொள்வதற்குச் செயலற்ற நிலையின் ஒரு வகை.) திருடும்; (இது உளவியலில் குறைவு ஏற்பட்டதை நிறைவுபடுத்தும் வகையில் ஒரு விதம்.) இப்படியே இன்னும் பிற உள.

இவை உடல் நலக் குறைபாடுகளால் துன்புறுவதும் உண்டு. இவை உளவியல் காரணமாகத் தோன்றினவையாகும். எடுத்துக் காட்டாக, இவை பசிக்கவில்லை என்று உண்ண மறுக்கலாம் ; அல்லது புத்தியில்லாமல் அளவுக்கு மீறி உண்டு அசீரணக் கோளாறுகளை அடையலாம். இரவில் தூக்கத்தில் வீரிடுவதையும், இருளைக் கண்டு அஞ்சுவதையும், சரிவரத் தூங்காமையையும், உடல் நலத்தைக் கெடுத்துப் பாண்டுரோகத்தையும் (இரத்தம் இன்மை) உண்டு பண்ணலாம். (சில வகைப் பாண்டு ரோகமும், கல்லீரல் கோளாறுகளும் நிச்சயமாக உளவியல் தொடக்கங் கொண்டவை களே.) நரம்புக் கோளாறுகளும் இருக்கின்றன. உளவியல் காரண மாக இவ்வாறு தோன்றுகின்ற இக்குறைபாடுகளெல்லாம் மருத்து வத்தில் தெரிந்த சாதாரண முறைகளால் சிகிச்சை செய்ய இயலாத வையாகும்.

## சால்பும் அறநெறியும்

ஊனங்களும் குறைபாடுகளும் ஆளுமையில் தோன்றுவதற்குக் காரணம், குழந்தையின் நேர்மை வளர்ச்சிக்கு விரோதமான ஏதுக்களாகும். இக்குறைபாடுகள் இருப்பதால் அறநெறி நடத்தை யும் அதன் தொடர்பாகச் சால்பும் மிகவும் சிக்கலடைந்துவிடுகின்றன என்பது தெளிவாகிறது.

குழந்தைகளுள் பெரும்பாலனவற்றை — வலிய குழந்தைகளை — வீட்டிலுள்ளவர்கள் கொடுத்து வைத்தவை என்று கருதுவதில்லை. அவற்றின் பெற்றோர் எப்படியாவது அவற்றை விலக்கப் பார்க்கின்ற னர் ; ஆயாக்களிடம் ஒப்படைக்கின்றனர் ; அல்லது பள்ளிக்கூடங் களில் தள்ளிவிடுகின்றனர். பெற்றவர்கள் இருக்கும் பொழுதே அக் குழந்தைகள் அனாதைகள் ஆகிவிடுகின்றன. அவை நோய்வாய்ப் படுகின்றன; எனினும், நல்ல உடல் நலம் பெற்றிருக்கின்றன ; இது காரணமாகக் கெட்ட நடத்தையில் ஈடுபடுகின்றன. அவற்றை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று பெற்றோர் திகைக்கின்றனர்.

சிலர், ஆலோசனை தேடுகின்றனர். வேறு சிலர், தாமே தீர்மானம் செய்கின்றனர்; சில சமயங்களில் கண்டிப்பாக நடக்கத் தீர்மானிக்கின்றனர்; இதை அனுசரித்தால், எல்லாம் சரியாகிப் போய்விடும் என்று நம்புகின்றனர். என்னென்ன விதங்களை எல்லாம் உபயோகிக்கின்றனர்! குழந்தைகளை அறைகின்றனர்; திட்டுகின்றனர்; பட்டினியாய்த் தூங்கச் செய்கின்றனர். ஆனால், குழந்தைகள் இன்னும் மோசமாகின்றன; இன்னும் அதிகமான போக்கிரிகள் ஆகின்றன. அல்லது அதே குறைபாடுகளுக்குச் செயலற்ற உருவங்களை அனுசரிக்கின்றன. இதற்கடுத்தபடியாகச் சிலர் குழந்தையிடம் சாதுரியமான முறையை அனுசரிக்கின்றனர்; இசையச்செய்து பார்க்கின்றனர்; அவற்றுடன் நியாயங்கூறி வழக்காடுகின்றனர். அவற்றின்மேலுள்ள அன்பைக் காட்டி மன்றுடுகின்றனர்; 'அம்மாளை ஏன் இவ்வளவு துன்புறுத்துகிறுய்?' என்கின்றனர்.

இறுதியில் பெற்ருேர் தோல்வியுறுகின்றனர்; கவலைப்படுவதை நிறுத்திவிடுகின்றனர்.

இயல்பாகவே செயலற்ற[1] குழந்தைகள் அல்லது பின் வாங்கும் குழந்தைகள் என்று கருதப்படுகின்றவை, பெரியவர்களின் அக்கறையை அவ்வளவாகப் பெறுவதில்லை. இவற்றினுடைய நடத்தை சிக்கலானதன்று. குழந்தை கெட்டது எதையும் செய்யாததால், 'நல்ல குழந்தை, கீழ்ப்படியும் குழந்தை' என்று பெற்ற தாய் நினைக்கிருள்; தன்னை இடைவிடாமல் பற்றிக்கொண்டிருப்பதைக் குழந்தையின் அன்பென்று கருதுகிருள். 'இவனுக்கு என்னிடத்தில் என்ன பற்றுதல்; நானில்லாவிட்டால், தூங்கவே மாட்டான்,' என்று கருதுகிருள்! ஆனுல், வரவர இக்குழந்தையின் இயக்கமும் பேச்சும் வளர்ச்சியில் பிற்போக்கானவை என்பதை உணர்கிருள்; அது நடக்கும் பொழுது தடுமாறுகிறது; 'இதன் உடல் நலம் நன்ருகத்தான் இருக்கிறது,' என்கிருள்; ஆனுல், 'இது மிகவும் உணர்ச்சி உள்ளது,' என்றும் கூறுகிருள். எதுவும் அதனை அச்சுறுத்திவிடுகிறது. உணவிலும் அதற்கு அக்கறை இல்லை. 'இது உண்மையாகவே ஒரு தெய்விகக் குழந்தை! சாப்பிட வைக்க வேண்டுமானுல், நான் இதற்குக் கதை சொல்ல வேண்டும். நிச்சயமாக இது ஒரு துறவியோ, கவியோ ஆகப் போகின்றது,' என்றெல்லாம் எண்ணுகின்ருள்; இறுதியில், 'இல்லை; இதற்கு உடம்பு சரியாய் இல்லை,' என்ற முடிவுக்கு வருகிருள்; வைத்தியருக்கு ஆள் அனுப்புகிருள். இந்த மனக் கோளாறுகளினுல் குழந்தை வைத்தியர் ஏராளமாகச் சம்பாதித்து விடுகிருர்.

---

1. Passive

## சிக்கலை விடுவித்தல்

ஒவ்வொரு குழந்தையும் இயற்கையாக நடத்திவைக்க வேண்டிய ஆக்கும் இயக்கங்களின் வட்டத்தை இன்னதென்று பெரியவர்களாகிய நாம் புரிந்துகொண்டோமானால், மேலே குறிப்பிட்ட எல்லாச் சிக்கல் களையும் விடுவிக்கலாம். குழந்தையும் ஆரம்பப் பருவத்தில் தவறுதலான வழியில் நடத்தப்படுவதால், சால்பின் ஒவ்வொரு குறைபாடும் தோன்றியிருக்கிறது என்பது இப்பொழுது புலனாகும். இந்த இளம் பருவத்தில் குழந்தைகள் கவனிக்கப்படாமல் இருந்தால், அவற்றின் மனம் காலியாய் (வெற்றிடமுள்ளதாய்) இருக்கும். ஏனென்றால், மனத்துக்குள் நிறைக்க வேண்டுவதை ஆக்குவதற்கு அவற்றுக்குச் சிறிது அவகாசமும் கிட்டவில்லை. இது பட்டினிகிடந்த மனம். இதைப் பற்றி உளவியலார் தமது முழுக்கவனத்தையும் செலுத்தி வருகின்றனர். இந்தப் பட்டினி மனமே பல கெடுதல்களுக்கும் அடிப்படைக் காரணமாயிருக்கிறது. சிருஷ்டித் தூண்டுதலால் திருப்பப்படுகின்ற சுயேச்சையான இயக்கங்கள் இல்லாதிருந்ததும் இதற்கு மற்றொரு காரணமாகும். முழு வளர்ச்சிக்குத் தேவையான நிபந்தனைகளை ஒரு சில குழந்தைகளே பெற முடிகிறது. அனேகமாக இக்குழந்தைகள் தூங்க வைப்பதைத் தவிர வேறு எந்த விதத்திலும் உதவி புரியாமல் தனியாக விட்டுவிடப்படுகின்றன. அல்லது இவற்றுக்குத் தேவையானவைகளை எல்லாம் வயது வந்தவர்களே செய்துவைத்திருக்கலாம். குழந்தைகளின் சொந்தச் செயல் வட்டங்களைத்[1] தாங்களே செய்யவொட்டாமல் பெரியவர்கள் தடுத்து வந்திருக்கலாம். - இதன் பலன் என்ன? செயலற்றிருத்தல்,[2] இருந்தது இருந்தபடியே இருத்தல்.[3] குழந்தைகள் எதை எடுத்துப் பார்க்க வேண்டுமானாலும் பெரியவர்கள் அதை வெடுக்கென்று பிடுங்கிவிடுகின்றார்கள். எதையும் குழந்தைகளின் கையால் சோதிக்க இயலாது போயிற்று. எத்தனையோ விஷயங்களை அவை விரும்பியும் பார்த்தும் இருந்த போதிலும், அவற்றின் கரங்கள் அப்பொருள்களைத் தொட்டுப் பயில இயலாமல் போயின. எப்படியோ கடைசியில் ஒரு பூவையோ, அல்லது ஒரு பூச்சியையோ குழந்தை தன் கையால் தொடுவதில் வெற்றி பெற்றாலோ, அதை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று தெரியாததால், அதைச் சின்ன பின்னமாகப் பிய்த்தெறிந்துவிடுகின்றது.

பகுத்தறிவுக்கு எட்டாத[4] அச்சங்களும் இந்தத் தொடக்கப் பருவத்தில் தோன்றக் காரணமாயிருக்கலாம்.

எங்களுடைய பள்ளிக்கூடங்கள் பரவுவதற்குப் பல காரணங்களுள் ஒன்று, எமது பள்ளியில் சேர்ந்த குழந்தைகளிடம் இந்தக்

---

1. Cycles of activity, 2. Passivity, 3. Inertia,
4. Irrational

குறைபாடுகள் நீங்கப் பெற்றதேயாகும். சூழ்நிலையில் உள்ள பொருள்களைக் கொண்டு இயக்கங்களைத் தாமே ஆற்றக்கூடிய ஓரிடம் கிடைத்தவுடன், தங்களுடைய கட்டுப்பாடற்ற பயிற்சிகளால் தோன்றும் சக்தி தங்கள் மனத்தைப் போக்க வல்லதாகிறது. சூழ்நிலையில் அக்கறையூட்டும் பண்டங்கள் எம் பள்ளிக்கூடங்களில் இருந்தன. இவற்றைக் கண்டு ஒரு முனைப்பிலிருந்து மற்றொரு முனைப்புக்கு மனம் சென்றது. ஒரு முறை இந்த நிலையைக் குழந்தைகள் அடைந்த பிறகு, குழந்தைகளுக்கு உண்மையாக விருப்பமானவற்றின்மேல் தம் கவனத்தைத் திருப்பிவிடும் பொழுது, இந்தக் குறைபாடுகளெல்லாம் தாமாகவே விலகின. ஒழுங்கில்லாதவன் ஒழுக்கம் பெற்றான். செயலற்றவன் செயலாற்றுபவனானான். வம்புக்காரனாய்த் தொந்தரவு செய்கிறவன், வகுப்பில் உதவி புரிபவனாய் மாறிவிட்டான். இந்தப் பலன்கள் எல்லாம், இதற்கு முன் தோன்றிய குறைபாடுகளெல்லாம், கூடப்பிறந்தவை அல்ல என்பதையும் இடையில் புகுந்தவை என்பதையும் நாங்கள் புரிந்துகொண்டோம். இது மட்டுமன்று. இவை ஒருவரிடம் தோன்றினதைவிட மற்றவரிடம் தோன்றியதில் அவ்வளவு வேறுபாடுகளும் இல்லை என்பதும் விளங்கிற்று. ஒருவன் பொய் பேசுவதும், மற்றொருவன் கீழ்ப்படியாததும், வெவ்வேறென்று கருத வேண்டுவதில்லை. இந்த அமைதி கலைவுகளெல்லாம் ஒரே காரணத்தால் தோன்றினவைகளே. மனத்தின் வாழ்வுக்குத் தேவையான உணவுக் குறைவாலேயே இக்குறைபாடுகள் தோன்றியிருக்கின்றன.

## தாய்மாருக்கு அறிவுறுத்துதல்

தாய்மாருக்கு அறிவுறுத்துதல் என்பது என்ன? அவர்களுடைய குழந்தைகள் அவற்றின் அக்கறையைப் பெறக்கூடிய தொழில்களில் ஈடுபடல் வேண்டும். தேவை இல்லாததற்கெல்லாம் அவற்றுக்குப் பிறர் உதவி புரிவது ஆகாது. அவற்றின் செயலில் குறுக்கிடுதலும் ஆகாது. நுண்ணறிவு கலந்த ஒன்றை அவை தொடங்கிவிட்டால், பெரியவர்கள் அவற்றைக் கலைக்கக்கூடாது. மிட்டாய்களும், கடுமையும், மருந்தும் மனப்பசியுடன் இருக்கும் குழந்தைக்கு ஒன்றும் செய்ய இயலாது. உண்ண உணவில்லாமல் பட்டினி கிடப்பவனை 'முட்டாள்' என்று வழங்குகிறோமா? அல்லது நன்றாகப் புடைக்கிறோமா? அல்லது அவனுடைய நல்லுணர்வுகளுக்காக மன்றாடுகிறோமா? அவனுக்குத் தேவையானது உண்ண உணவு. வேறு எதுவும் பயனில்லை. அதைப் போன்றதுதான் இதுவும்; கடுமையாவது, பரிவாவது சிக்கலைத் தீர்க்க இயலாது. மனிதன் ஒரு நுண்ணறிவுப் பேர்வழி. அவனுக்கு **உடல் உண்டியைவிட மன உண்டி** தேவைப்படுகிறது. விலங்குகளைப் போலல்லாமல், மனிதன் தன்

நடத்தையைத் தானே ஆக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது. தன் நடத்தையைத் தானே அமைத்துக்கொண்டு தன் மனவாழ்வைத் தானே உருவாக்கிக்கொள்ளும் வழியில் குழந்தை விடப்பட்டால், எல்லாம் நல்லனவாகவேமுடியும்; அதனுடைய தொந்தரவுகளெல்லாம் நீங்கும்; இரவில் தோன்றும் கெட்ட கனவுகளும் அவை காரணமாகத் தானே கூச்சல் இடுவதும் விலகும். அதன் சிரணம் நேர்மையாகிவிடும்; உண்டியிலும் மற்றவைகளிலும் உள்ள பேராசை தணியும். அதன் மனம் நேர்மையாக்கப்பட்டதால் உடல் நலமும் முன் போலச் செம்மையாக்கப்பட்டுவிடுகிறது.

ஆதலால், இவைகளெல்லாம் அறநெறிக்கல்வி சம்பந்தப்பட்டவையல்ல. இவை சால்பு ஆக்கத்தைப் பொறுத்தவை. சால்பின்மையும் சால்பில் குறைபாடுகளும் பெரியவர்களின் போதனை இல்லாமலும், அவர்களின் எடுத்துக்காட்டில்லாமலும் தாமாகவே மறைந்துவிடுகின்றன. மிரட்டவோ கொஞ்சவோ தேவையில்லை. குழந்தை வாழ்கின்ற சூழ்நிலையின் **நிபந்தனைகளை நேர்மையாக்கினால்,**[1] அது போதும்.

---

1. Normalise the conditions

# 19. சமூகத்துக்குக் குழந்தையின் கொடை—இயல்பாக்கம்[1]

சென்ற அத்தியாயத்தில் வலுவுள்ள குழந்தை, வலுவற்ற குழந்தை ஆகிய இரண்டின் குறைபாடுகளைப் பற்றியும் விளக்கம் தந்தோம். இவ்வாறு குழந்தையிடம் காணப்படும் குறைபாடுகள் கெட்டவை என்று எப்பொழுதும் பொது மக்களால் கருதப்படுவதில்லை; சிலவற்றை மதிப்பாகவும் கொள்கின்றார்கள் ; செயலற்ற குழந்தைகளின் போக்கை நல்லதென்று கருதுகின்றார்கள். தெளிவான மனக் கற்பனையுடன் கூச்சலிடும் ஊக்கம் நிறைந்த குழந்தைகள் மிகவும் புத்திசாலிகள் என்றும், மற்றவைகளைவிடச் சிறப்பானவைகள் என்றும் கருதப்படுகின்றன.

சமூகம் அவற்றை இம்மாதிரி பாகுபடுத்துவதாகக் கொள்ளலாம்.

1. திருத்தப்பட வேண்டிய குறைபாடு உடையவை
2. செயலற்று இருப்பவை, எடுத்துக்காட்டாகக் கருதப்படுபவை, நல்லவை
3. மிகவும் சிறப்பானவை

இரண்டாமவையும் மூன்றாமவையும் விரும்பத் தக்க கூட்டத்தைச் சேர்ந்தவை என்று கருதப்படவேண்டும். பெற்றோர் இவற்றைக் கண்டு பெருமைப்படுகின்றனர். மூன்றும் வகையினைப் போல முதலாம் இரண்டாம் வகையின தோழமைக்கு அவ்வளவாக விரும்பத்தக்கவை அல்ல. இந்த உண்மையை நான் வற்புறுத்திக் கூறி இந்தப் பாகுபாட்டின்மேல் அக்கறை செலுத்தச் சொல்கிறேன். ஏனென்றால், இது பல நூற்றாண்டுகளாக நடைபெற்று வந்திருக்கிறது. குழந்தை

---

1. Normalisation

களுக்கு விருப்பமான ஒரு வேலையில் ஈடுபட்டவுடன் இந்தக் குறைபாடுகள் மறையத் தொடங்கின. இதை நாங்கள் எம் சொந்தப் பள்ளிக்கூடங்களிலும், அவற்றைத் தொடர்ந்து தோன்றிய பிற பள்ளிகளிலும் நேராகப் பார்த்தோம். கெட்டவை என்ற குணங்களும், நல்லவைகளுடனும் மிகச் சிறப்பென்று கருதப் பட்டவைகளுடனும் எல்லாம் விலகின. எஞ்சி நிற்பது ஒரே ஒரு வகைக் குழந்தைதான். அதனிடத்தில் முன்னிருந்த எக்கெட்ட குணமும் இருப்பதில்லை.

இதிலிருந்து தெரிவது என்ன? குழந்தையின் சால்பில் எது நல்லது, எது கெட்டது, எது இவற்றுக்கு மீறினது என்பதை உலகம் இன்னும் பகுத்தறிய இயலவில்லை என்பது தெளிவாகிறது. எது சிறப்பென இது வரை கருதி வந்தோமோ, அது தவருய் முடிகிறது. உள்ளுணர்வுத் தத்துவப்பழமொழி ஒன்று என் நினைவுக்கு வருகிறது. ‘ உன்னிடமிருப்பது தவிர வேறு உண்மையில்லை ஆண்டவனே ! மற்றவை, எல்லாம் மாயை.’ எங்கள் பள்ளிக்கூடங்களில் பயிற்சி பெற்ற குழந்தைகள் எப்பொழுதும் தொழில் புரிவதே தங்களுடைய உண்மையான விருப்பம் என்பதை நிலை நாட்டிவிட்டன. இந்த உண்மையில் இது வரை எவரும் சந்தேகப்பட்டதும் இல்லை. இதற்கு முன் எவரும் குழந்தை தானுகவே தனக்குத் தேவையான ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் என்ற உண்மையை எப்படிக் கண்டு பிடிக்கவில்லையோ, அப்படியே அந்தரங்கத்தில் இருக்கும் ஒரு வழி காட்டியைப்’ பின்பற்றி ஏதோ ஒன்றைப் பற்றி அது இடைவிடாமல் தொழில் புரிந்துகொண்டு இருந்தது. இது ஒவ்வொருவருக்கு ஒவ்வொருவிதத் தொழிலாய் இருந்தது. இது எல்லோரும் ஒன்றையே செய்தனர் என்பதன்று. இவ்வாறு செய்யும் பொழுது குழந்தைகள் அமைதியும் ஆனந்தமும் பெற்றன.

அடுத்தபடியாக மற்ருென்று நடைபெற்றது. இதை எந்தக் குழந்தைக் குழுவிலும் இதற்கு முன் கண்டதில்லை. இது **தானுகத் தோன்றிய கட்டுப்பாடு.**[1] மற்றவைகளை எல்லாம்விட இந்த ஒன்று பொது மக்களின் மனக்கற்பனையைத் தூண்டிவிட்டது. இது வரை விடுவிக்க முடியாத ஒரு சிக்கலைச் சுதந்தரத்தில் தோன்றிய கட்டுப்பாடு விடுவித்துவிட்டதாகத் தெரிந்தது. சுதந்தரம் அளித்துக் கட்டுப்பாட்டைப் பெறுவதில் விடை இருந்தது. சுதந்தரத்தில் ஒவ்வொரு குழந்தையும் தன் வேலையைத் தேடிற்று. ஒவ்வொன்றும் தனித்தனி வேலையில் ஈடுபட்டது. எனினும், எல்லாம் ஒரே குழுவினைச் சேர்ந்தனவாய் இருந்தன. இது பார்க்கும் பொழுது பரிபூரணமான கட்டுப்பாடெனக் காட்சி அளித்தது. கடந்த நாற்பது ஆண்டுகளாக இவ்வுண்மை பல்வேறு நாடுகளிலும் நிலை நாட்டப்பெற்றிருக்கின்றது.

1. Spontaneous discipline

ஒழுங்கான செயல்களைச் செய்ய அனுமதிக்கப்படும் சூழ்நிலையில் குழந்தைகள் விடப்பட்டால், அவை இந்தப் புதுப்பண்பைப் பெறு கின்றன. அதாவது, மனிதக்குலத்துக்கே பொதுவான ஓர் உளவியல் உருவத்தை வளர்க்கின்றன. இது குழந்தையின் சிறப்பியல்புகளுக்குப் பொருந்தாதவைகளால் இது வரை மறைந்து கிடந்தது.

ஒரே மாதிரியான உருத்தோற்றத்தை உண்டாக்குகின்ற இந்த மாறுதல் படிப்படியாக நடை பெறுவதில்லை; ஆனால், திடீரென்று தோன்றுகிறது. எந்தக் குழந்தையிடத்திலும் ஒரு தொழிலின்மேல் கண்ணும் கருத்துமாய்ச் செயலாற்றுகின்றதிலிருந்து இது தொடர்ந்து தோன்றுகிறது. ஒரு சோம்பல் குழந்தையை 'இது செய்,' என்று ஆசிரியை உந்த வேண்டுமென்பதில்லை. குழந்தைக்காகக் காத்துக் கொண்டிருக்கின்ற பயன் தரும் செயல்களைச் சூழ்நிலையில் அமைத்து, அவற்றுடன் குழந்தைக்குத் தொடர்பு ஏற்படச் செய்வதே ஆசிரியை யின் பணியாகும். தனக்குகந்த வேலையைப் பெற்றவுடன் குழந்தை யின் குறைபாடுகள் விலகிவிடுகின்றன. குழந்தைகளுடன் வாதாடு வதில் பயனில்லை. வெளிப்படையாக உள்ள செயல்களில் ஒன்றிக் கொள்ளுமாறு ஏதோ குழந்தையின் உள்ளத்திலிருந்து திடீரென்று தோன்றுகிறது. இது குழந்தையின் சக்திகளை ஈர்க்கிறது. மாறுத செயலில் இது இடை விடாது ஈடுபடுகிறது; பல முறை செய்து செய்து இன்புறுகிறது.

மனிதன் என்பவன் ஒரு முழுமையான பேர்வழி. இந்த முழுமை ஆக்கப்பட வேண்டும். உண்மையான உலக அனுபவங்களில் ஈடு பட்டு அந்த அனுபவங்களால் இது ஆக்கப்பட வேண்டும். இயற்கை யின் விதிகள் இவ்வாறு செய்வதற்கு வழி காட்டுகின்றன. கரு வளர்ச் சியின் தொடக்கத்தில் ஒவ்வொரு பகுதியும் தனித்தனியாய் வளர்ந்து அதே மாதிரி மூன்று ஆண்டுகள் வரையும் நடைபெறுகின்றது. இப் பருவத்தின் இறுதியில் இவை எல்லாம் ஒன்றுபடுத்தப்பட வேண்டும். தனிப் பேர்வழியின் சேவைக்காக இவற்றுள் ஒவ்வொன்றும் இணக் கம் பெறும்படியாக ஒழுங்கு பெறுகின்றது. அடுத்த பருவமாகிய 3—6 ஆண்டு வரையில் இதுவே நடைபெறுகிறது. அப்பருவத்தில் மனம் வழி காட்டக் கை தொழில் ஆற்றுகிறது.

இந்த ஒருமைப்பாட்டைப் பெறுவதற்கு வெளி நிலைமைகள் தடையாயிருந்தால், அதே சக்திகள் இன்னும் முழுமையாக வளர்ச்சி பெருத தனித்தனி பகுதிகளை மற்றவைகளைப்பற்றிக் கருதாமல் தத்தம் தொழிலை நடைபெறும்படி உந்துகின்றன. இதன் பலன் என்ன? இது தகுதியான குறிக்கோள்களினின்று பிறழ்ந்த சமமில்லா வளர்ச்சியாகும்.




**குழந்தைகளின் நேர்மையும் கோணலுமான பண்புகள்**

**(Normal and Deviated Character-traits in Children)**




**உயர்வானதும் தாழ்வானதுமான சமூகவாழ்வு வகைகளின் ஈர்ப்பு வட்டங்கள்.**

(Circles of attraction for Superior and Inferior Social Types)

கரங்கள் ஒரு நோக்கமுமில்லாமல் இயங்குகின்றன. மனம் உண்மைக்கு அப்பால் அலைகிறது. மொழி அதன் போக்கிலே இன்புறுகிறது. உடல் இசைவற்று இயங்குகிறது. இந்த வெவ்வேறு சத்திகள், தங்களுக்குத் திருத்தி அளிப்பதற்கு ஒன்றும் கிட்டாததால் எண்ணற்ற குறைபாட்டு இணக்கங்களையும் கோணல் வளர்ச்சிகளையும் தோற்றுவித்து, **போராட்டத்துக்கும்**[1] மனமுறிவுக்கும் மூல காரணமாகின்றன.

இத்தகைய கோணல்களுக்கெல்லாம் ஆளுமையே காரணம் என்று முடிவு கட்டிவிட இயலாது. ஆளுமையைச் சரிவர ஒழுங்கமைக்காத காரணத்தால் இவை தோன்றுகின்றன.

இந்தக் கோணல்கள் அல்லது விலக்கங்கள் அற்பாயுளுள்ள சிறப்பியல்களெனினும், இவை திருத்த முடியாதவை. ஒரு பேர்வழியின் குறிக்கோளுக்குச் சேவை புரியும் வகையில் எல்லாச்சத்திகளும் வேலை செய்யும் பொழுதுதான் இவற்றைத் திருத்த இயலும்.

ஆனால், புதுச் சூழ்நிலை குழந்தைகளை ஈர்த்து ஆக்கும் இயக்கங்களுக்குத் தேவையான ஊக்கங்களை அளிக்கும் பொழுது எல்லாச் சத்திகளும் ஒன்று கூடுகின்றன. அப்பொழுது இந்தக் கோணல்களை விலக்க இயலும். ஒரு புது வகையான குழந்தை உருவாகிறது. அது புதுமைக்குழந்தை. உண்மையாக நடைபெறுவது என்னவென்றால், குழந்தையின் மெய்யான ஆளுமை தன்னைத்தானே உருவாக்கிக் கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டிருப்பது.

பதினொன்றும் படத்தில் வலப்புறத்தில் நமக்கு இது வரை தெரிந்த குழந்தையின் சிறப்பியல்புகள் காட்டப்பட்டிருக்கின்றன. விசிறி நரம்புபோல விரிந்துசெல்லும் பச்சைக்கோடுகள் இவற்றைக்குறிக்கும். மத்தியில் செங்குத்தாகக் காட்டப்பட்டுள்ள தடித்த நீலப்பட்டைக் கோடு, ஏதோ குறிப்பிட்ட ஒரு பொருளின்மேல் காட்டப்படும் ஒருமுனைப்பைக் குறிக்கிறது. இது **நேர்மையின் கோடு**. குழந்தைகள் தங்களுடைய கவனத்தை ஓர் இயக்கத்தில் ஈடுபடச்செய்யத் தொடங்கினவுடன் மத்திய பட்டைக்கோட்டிற்கு வலப்புறம் உள்ள கோடுகளெல்லாம் மறைந்துவிடுகின்றன. எஞ்சி நிற்பது ஒரே ஒரு வகைதான். இதனுடைய சிறப்பியல்புகளை இடப்பக்கமுள்ள செங்கோடுகள் காட்டுகின்றன. வெளிப்படையான இந்தக் குறைபாடுகளெல்லாம் பெரியவர்களால் அகற்றப்படவில்லை. ஆனால், குழந்தை தானே அகற்றிக்கொண்டிருக்கிறது. இதன் நிலையை மத்தியில் உள்ள பட்டையான நீலக்கோடு காட்டும். இதிலிருந்து குழந்தையின் நேர்மை அடைதல் பெறப்பட்டிருக்கிறதென்பது விளங்கும்.

---

1. Conflict

எம் பள்ளிக்கூடங்களில் சமூகப் பிரிவுகளில் உயர்வு தாழ்வுக் குழந்தைகளும், வெவ்வேறு சாதிக் குழந்தைகளும், நாகரிகம் பெற்ற குழந்தைகளும் இருக்கின்றன. இவை யாவற்றிடமும் இதே உண்மை சிறிதும் குறையாமல் மறுபடியும் மறுபடியும் காட்சி அளிப் பதைக் கண்டோம்.[1]

எங்களுடைய முழு ஆராய்ச்சிகளில் மிகவும் முக்கியமான தனிப் பலன் இது ஒன்றேயாகும்.

ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறுவதெல்லாம் கைகளால் செயலாற்றப்பட்ட ஒரு தொழிலைப் பின் தொடர்ந்தே தோன்றியிருக் கின்றன. அதுவும் உண்மையான பண்டங்களை வைத்துக்கொண்டு மன முனைப்புங்கொண்டு கரங்கள் தொழில் புரியும்பொழுது இம்மாற்றங் கள் நடைபெற்றிருக்கின்றன.

வயது வந்தவர்களின் உளக்கோளாறுகள் உளப்பகுப்புகளால்[2] குணம் அடைகின்றன. இதே உளவியல் சம்பவத்தைக் குழந்தை யிடம் கண்ட பொழுது அதற்கு '**நேர்மைப்படுத்தல்**' அல்லது '**இயல்பாக்கப்பெறுதல்**'[3] என்ற புதுக்கலைச் சொல்லைக் கற்பனை செய்திருக்கிறோம்.

பல ஆண்டுகளுக்குப் பிறகும் பல பரந்த அனுபவங்களுக்குப் பிறகும் இதன் உண்மை நிலைநாட்டப்பட்டிருக்கிறது. குழந்தைக்கு வழிகாட்டும் நோய் பேணகங்கள் (Child Guidance Clinics) தொல்லைக் குழந்தைகளின் நோயைப் போக்குவதற்காகப் பல இடங்களில் அமைக்கப்பட்டு வருகின்றன. இங்கு நடைபெறுவதென்ன ? செய லைத் தூண்டும் வசதிகளுடன் நிறைந்த சூழ்நிலை குழந்தைக்கு அளிக் கப்படுகிறது. அது தனக்கு விருப்பமான பொருளை எடுத்து உபயோ கிக்கலாம். இப்படித் தேர்ந்தெடுப்பதில் எந்த ஆசிரியர் கட்டுப்பாடும் இல்லாமலும், பொதுவாக எந்த முதியோர் கட்டுப்பாடுமில்லாமலும் குழந்தையின் சுயேச்சை விருப்பம்போலச் செயலாற்றி வரும். **விளை யாட்டு மருத்துவம்**[4] கூடக் குழந்தையின்முன் பல பொம்மைகளையும் கற்பனை விளையாட்டுகளையும் தனி இல்லத்தார் அளிக்க முடியாத அள வுக்குப் பல வகைகளில் ஏற்பாடு செய்கிறது. குழந்தை தனக்கு வேண்டுவதைக் கையாளலாம்.

குழந்தைகளின் நடத்தையை உளவியல் அறிஞர் குறித்துக் கொண்டு இதன் மூல காரணங்கள் என்னவாயிருக்கலாம் என்று

---

1. Secret of Childhood—**குழந்தைமை இரகசியம்**
2. Psycho analysis, 3. Normalisation,
4. Play-therapy

பெற்ருேர்க்கு யோசனை கூறுவார்கள். அது காரணமாகப் பெற்ருேரும் தம் இல்லத்தில் குழந்தையை நல்ல முறையில் நடத்துவர். அப்பொழுது குழந்தையின் சார்பில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. அவற்றிடம் மற்றக் குழந்தைகளுடன் சமூக வாழ்வை நடத்துவதில் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பதையும் மறக்க இயலாது.

ஆனல், இந்தப் பேணகங்களடியாகத் தோன்றக்கூடிய பலன் மிகவும் குறைந்ததாகத்தான் இருக்க இயலும். நோயாளிகளுக்கு நோய் பேணகங்கள் இருப்பது போல, இந்த விளையாட்டு மருத்துவ அகங்களும் குணப்படுத்தும் இடங்களாகத்தான் இருக்க இயலும். சுதந்தரமும் தொழிலும் வளர்ச்சிக் கோளாறுகளைக் குணப்படுத்த இயலும் என்பது உண்மையாயின், குழந்தையின் நேர்மையான வாழ்வுக்குச் சுதந்தரமும் தொழிலும் தேவைப்படுகின்றன என்னும் உண்மையை எல்லாரும் பொதுவாகப் புரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது.

உண்மையாக என்ன நடைபெறுகிறது? நோய் குணமான பிறகோ, அல்லது ஓரளவு சீர்திருந்திய பிறகோ, திரும்பவும் பழைய சூழ்நிலைக்குக் குழந்தைகள் செல்கின்றன. அந்தச் சூழ்நிலையில் புது மாற்றம் எதுவும் நடைபெறவில்லை. இவற்றிடையே நேர்மைக்கு விரோதமானவை முன் இருந்தது போலவே இன்றும் இருந்து வருகின்றன. அங்குத் திரும்பின குழந்தைகள் நேர்மையாக நடந்து கொள்வதற்குத் தேவையான சத்தியையோ அல்லது அவகாசங்களையோ பெருத காரணத்தால், அவை பெற்ற முன்னேற்றமெல்லாம் தாற்காலிகமாய் இருக்கின்றன.

சில நாடுகளில் சுதந்தரத்தையும் செயலாற்றலையும் பள்ளிக்கூடங்களிலும் அனுசரிக்க முயற்சி செய்து வருகின்றனர். ஆனல், சுதந்தரத்தையும் செயலையும் பற்றி அவர்கள் கொண்டுள்ள கருத்துகள் அவ்வளவு ஆழமானவை அல்ல.

சுதந்தரம் என்பதற்கு மிகவும் சாதாரண முறையில் பொருள் கொண்டிருக்கின்றனர் ; அது ஏதோ வலுவாகப் பிணைக்கப்பட்ட ஒரு தடையிலிருந்து உடனடியாக விடுதலை பெறுவதென்று கருதுகின்றனர் ; அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியாமையும், திருத்தங்களை ஏற்க மறுத்தலும் சுதந்தரம் என்று நினைக்கின்றனர். இந்தக் கருத்து எதிர்மறையானதும். கொடுமையை விலக்குவதுமாகும். இதிலிருந்து பெரும்பாலும் எதிர்மறையான ஒரு நடத்தை தோன்றுகிறது. கட்டுக்கடங்காத உணர்ச்சிகள் ஒழுங்கற்ற முறையில் வெளிப்படுகின்றன. இதுவரை இவைகளெல்லாம் பெரியவர்களின் மனவுறுதியால் கட்டுப்படுத்தப்பட்டு வந்தன ; இப்பொழுது கட்டுக்கு மீறித் தோற்றம் அளிக்கின்றன. குழந்தைக்குக் கட்டுப்பாடு என்ற எந்தச்சத்தியும் இன்னும்

வளரவில்லை. இந்த நிலைமையில் குழந்தையைத் தன் விருப்பம்போலச் செய்ய விடுவது சுதந்தரத்தின் தத்துவத்தையே காட்டிக்கொடுப்பதாகும்.

இவ்வாறு செய்வதன் பலன் என்ன? இதற்கு முன் ஒழுங்கு என்பது பிறருடைய அதிகாரத்தினால் நிலைநாட்டப்பெற்றிருந்தது. இத்தகைய குழந்தைகள் ஒழுங்கற்றவைகளாயின. இதற்கு முன் கட்டாயப்படுத்தி வேலை செய்விக்கப்பட்ட குழந்தைகள், இப்பொழுது சோம்பேறிகள் ஆயின. இதற்கு முன் பலவந்தமாகக் கீழ்ப்படிய வைக்கப்பட்ட குழந்தைகள், இப்பொழுது கீழ்ப்படிய மறுத்தன.

உண்மையான சுதந்தரம் என்பது என்ன? அது வளர்ச்சியின் பயனாகத் தோன்றுவது. கல்வியின் உதவி பெற்று இதுவரை மறைந்து கிடந்த வழி காட்டிகள் வளர்ச்சி பெறுவதால் சுதந்தரம் வளர்கிறது. வளர்ச்சி என்பது சுறுசுறுப்பானது; செயலுற்றது. இது ஆளுமையை ஆக்குவதாகும். ஒருவரது சொந்த முயற்சியின் அனுபவங்களால் ஆக்கப்படுவது ஆளுமை. இது முதிர்ச்சியை அடைவதற்குக் குழந்தை நடந்து செல்ல வேண்டிய நெடிய சாலையாகும்.

வலுவற்றவரையும், பணிந்து போவோரையும் எவர் வேண்டுமானாலும் அடக்கி ஆள இயலும். ஆனால், வேறெவரும் ஒருவரை வளர வைக்க இயலாது; வளர்ச்சி என்பதைக் கற்பிக்க இயலாது.

குழந்தைகள் தங்கள் விருப்பம் போல எதையும் செய்வதும், எப்பொருளை எவ்வகையில் வேண்டுமானாலும் உபயோகிப்பதும், தவறுதலான முறைகளிலும் உபயோகிப்பதும் சுதந்தரம் என்று கருதினோமானால், அவற்றின் கோணல்களே கட்டுக்கடங்காமல் வளரும்; அவற்றின் நேர்மையிலிகள் பெருகும்.

ஒரு தொழிலின்மேல் கருத்தைச் செலுத்திச் செயலாற்றுவதால் நேர்மைப்படல் உருவாகிறது. இதை உருவாக்க வேண்டுமானால், **'செயல் ஊக்கிகள்'**[1] தரப்பட வேண்டும். இச்செயல் ஊக்கிகள் குழந்தையின் அக்கறைக்குப் பொருத்தமானவையாய் இருத்தல் வேண்டும். அப்பொழுது குழந்தையின் ஆழ்ந்த அக்கறையை இவை தூண்டிவிடும். இந்தப் பொருள்கள் எதற்கென்று வைக்கப் பட்டிருக்கின்றனவோ, அதற்காக இவை உபயோகப்பட வேண்டும்; அப்பொழுது குழந்தையின் **மனவொழுங்குக்கு**[2]ப் பயனளிக்கும். அப்பொழுது செய்யப்பட்ட முயற்சியும் வெற்றி பெறும். இவற்றைச்

---

1. Motives of activity, 2. Mental order

சாக்கிரதையாகவும் திட்பமாகவும்[1] பயன்படுத்தினல், இவை குழந்தைகளின் 'இயக்க ஒருமைப்பாட்டுக்கு'[2] வழி காட்டும்.

மன ஒழுங்கும், இயக்க ஒருமைப்பாடும் விஞ்ஞான தரத்துடன்[3] வழி காட்டப்பட்டால் உன்னிப்பு ஆயத்தமாகிறது. இது ஒரு முறை தோன்றிவிட்டால், குழந்தையின் செயல்களில் விடுதலை பெறுகிறது. அதனுடைய குறைபாடுகளைக் குணப்படுத்திக்கொள்ள அதற்கு வழி ஏற்படுகிறது. ஒரு முனைப்பு[4] என்றோம்; **ஏதோ வெறுந்தொழில்**[5] என்று கூறவில்லை. ஏனென்றல், குழந்தைகள் ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளுக்கு அசட்டையாகச் சென்றல், அப்பொருள்களை எல்லாம் முறையாகப் பயன்படுத்தினலும், அவற்றின் குறைபாடுகளை நீக்க அவை போதா.

முக்கியமான விஷயம் என்னவென்றல், குழந்தையின் முழு ஆளுமையும் ஈர்க்கப்படுமளவுக்கு அந்தத் தொழில் குழந்தையின் அக்கறையைத் தூண்டிவிட வேண்டும் என்பது.

எங்களுடைய பள்ளிக்கூடங்களில் குணமாகும் தருணம், வந்து சேரும் சமயம் அன்று. கஷ்டமான குழந்தைகளுக்கு நோய் பேணகங்கள் நடைபெறுவது இதற்கு மாறனது. எங்கள் பள்ளியை விட்டுக் குழந்தைகள் விலகும் பொழுது குணம் பெற்றுவிடுகின்றன. விலகும் பொழுது **செயலில் சுதந்தரம்**[6] ஒன்று கூடி வலிமை பெற்றுக் குழந்தையின் ஆளுமை வளர்கிறது.

**தானே தோன்றும் ஒழுக்கம்,**[7] தொடர்ந்த **இன்பமூட்டும் தொழில்,**[8] பிறருக்கு உதவி புரிதலும் பரிவு காட்டுதலுமான சமூகப் பண்புகள் என்றெல்லாம் நாம் வருணிக்கிறோம். இந்தச் சத்திகள் எல்லாம் நேர்மையாக்கப்பட்டுச் சூழ்நிலையால் உதவி பெற்ற குழந்தைகளே இவற்றை எதிர்காலங்களில் பெறுகின்றன.

தாங்களாகத் தேர்ந்தெடுக்கும் செயல்கள் அவற்றின் வாழ்வில் சாதாரணமாகிவிடுகின்றன. இந்தப் புதுமை வாழ்வுக்குத் தலை வாயில் அவற்றின் குறைபாடுகளைக் குணப்படுத்தலேயாகும்.

---

1. Precision, 2. Co-ordination of movements,
3. Standard, 4. Concentration, 5. Just occupation,
6. Freedon of action, 7. Spontaneous discipline,
8. Continuous and happy work

அதனுடைய அடிப்படைச் சிறப்புக் கூறு[1] என்றும் மாறுவதில்லை. அது தொழிலில் ஈடுபடுவதாகும். அக்கறையூட்டும் ஒரு தொழிலைத் தானாகவே தேர்ந்தெடுத்தால், அதுவும் சலிப்பைத் தோற்றுவிக்காமல் ஒரு முனைப்பைத் தூண்டுவிக்கும் ஆற்றலுடையதாயிருந்தால், அது குழந்தையின் சத்திக்கும் மன அளவுக்கும் அதிக வலுவைக் கொடுத்துத் தன் தலைமையைப்[2] பெற உதவுகிறது.

எனவே, இத்தகைய வளர்ச்சியைப் பெறுவதற்கு ஏதோ இங்கொன்றும் அங்கொன்றுமாகப் பண்டங்களைத் தேடிவைப்பது போதாது. முன்னேற்றமான கவர்ச்சி நிறைந்த ஓருலகத்தை நாம் ஆக்கி வைக்கவேண்டும். குழந்தை வளர்ச்சி உளவியலின் அடிப்படை சம்பந்தப்பட்ட ஒரு கல்வி முறை தோன்றுகிறது.

எங்களுடைய பள்ளிக்கூடங்களில் சால்பு வலுப்பெற்றது மட்டுமன்று. அறிவைத் தேடுவதில் குழந்தைகளின் நுண்ணறிவு வாழ்வு சலிப்படைவதே இல்லை. தன் நிறைவாற்றலை[3]க் கண்ட பிறகு அந்தரங்க ஆன்மாவின் உயரத்தை எட்டிவிட்டது போலக் குழந்தைகள் தெய்விகப் பயிற்சிகளையே செய்கின்றனவோ என்று கூறுமாறு அது நம்மைத் தூண்டுகிறது.

இந்திய மெய்யறிவு நூலாகிய கீதையில் கூறப்படும் கொள்கைகளை இக்குழந்தைகளின் தொழிலும், அதன் வளர்ச்சியும் நினைவுபடுத்துகின்றன.

தக்க தொழில் கொடுக்கப்பட வேண்டுவது மிகவும் முக்கியமானது. இடைவிடாது தொழில் புரிய வேண்டுமென்கிறது மனம். எப்பொழுதும் அதை நல்ல செயல்களில் ஈடுபடச் செய்வது தெய்விக வளர்ச்சியாகும். சோம்பல் மனத்துள் சனி நுழைகிறது. சோம்பேறியால் ஆன்மிகமாக இருக்க இயலாது.

எமது கொள்கையும் '**வெளிப்படுத்தப்பட்ட அன்பே தொழில்**'[4] என்று கிப்ரன் கூறிய சொற்களுக்கு இணங்கி இருக்கின்றன.

---

1. Feature, 2. Self mastery,
3. Self perfectionment 4. 'Work is love made visible'— Kahlil Gibran, *The Prophet*. (Heineman, Great Britain and Knopj, New York, 1948, Page 33)

# 20. சால்பாக்குதல் குழந்தையின் சொந்தச்செயல் அல்லது சொந்த அடைவு

முன் அத்தியாயத்தில் விளக்கினதுபோலக் குழந்தைகளே தங்களுடைய சால்பை உருவாக்கிக்கொள்கின்றன; நாம் மெச்சிக் கொள்ளும் பண்புகளைத் தமக்குள் அமைத்துக்கொள்கின்றன. நமது எடுத்துக்காட்டினுல் இப்பண்புகள் உருவாவதில்லை; நம் எச்சரிக்கையாலும் உருவாவது இல்லை. மெதுவாகவும் நெடிதாகவும் தொடர்ச்சியாகவும் நடைபெறுகின்ற இயக்கங்களாலேதான் இப்பண்புகள் உருவாகின்றன. இந்த இயக்கங்களை 3 வயதிலிருந்து 6 வயதுக்குள் குழந்தையே செய்வதால் இக்குணங்கள் தோன்றுகின்றன.

இந்தச் சமயத்தில் சால்புக்குள் பொதிந்து கிடக்கும் பண்புகளை எவராலும் கற்பிக்க இயலாது. விஞ்ஞான அடிப்படையில் கல்வியை ஏற்படுத்துவது ஒன்றைத்தான் நம்மால் செய்ய இயலும். குறுக்கே தொந்தரவு செய்யாமலும், அல்லது வளர்ச்சியில் தடை செய்யாமலும் இருக்கும் நிலையில் குழந்தைகள் பயனுடன் செயலாற்ற இயலும்.

தர்க்கவாதம் செய்தும், ஊக்கமளித்தும் குழந்தையின் மனத்தை நேரடியாகப் பாதிக்க இயலாது. ஆறுண்டு வரை நாம் அதற்கு அறநெறிப்போதகர்களாக இயலாது. ஏனென்ருல், ஆறுண்டிலிருந்து பன்னிராண்டு வரைப் பருவத்திலேதான் மனச்சாட்சி என்பது செயலாற்றத் தொடங்குகிறது; நல்லது கெட்டது என்பவற்றின் பாகுபாட்டைக் குழந்தையால் காண இயல்கிறது. இதைவிட அதிகமாகப் பன்னிராண்டிலிருந்து பதினெட்டாண்டுவரைப் பருவத்தில் சாதிக்க இயலும். அப்பருவத்தில் சிறுவர்கள் தேச பத்தி, சமூகம், மதம் போன்றவைகளின் குறிக்கோள்களைப் பெறத் தொடங்குகின்ருர்கள். முதியோரைப் போல இவர்களிடமும் அப்பொழுது நாம் அறநெறிப் போதகர்கள் ஆக இயலும். ஒரு சங்கடம் என்னவென்ருல், ஆறுண்டுக்குப் பிறகு

குழந்தைகள் தாங்களே சால்பையும் அது சார்ந்த பண்புகளையும் உருவாக்கிக்கொள்ள இயலாது. அறநெறிப் போதகர்களும் முழு நிறைவு பெற்றவர்கள் அல்லாத காரணத்தால், இவர்களைத் திருத்துவதில் பல இடையூறுகளைக் காண்கின்றார்கள். அவர்கள் நெருப்புக்குப் பதிலாகப் புகையைப் பயன்படுத்தப்பார்க்கின்றார்கள். இளைஞர்களின் ஆசிரியர்கள் அடிக்கடி முறையிடுகின்றார்கள். விஞ்ஞானம், இலக்கியம் போன்ற பாடங்களை அவர்கள் போதிக்க முடிந்தாலும், அவர்கள் முன்னே இருக்கும் மாணவர்கள் கற்றுக் கொள்ளத் திறமையற்றவர்களாய்க் காணப்படுகின்றார்கள். அது அவர்கள் நுண்ணறிவுக் குறைவாலன்று; சால்பில்லாக் குறைவாலேயே அவர்கள் கற்றுக்கொள்ள இயலுவதில்லை என்று முறையிடுகின்றார்கள். சால்பில்லாவிட்டால் பேருக்கம் இராது. இளமையில் அகங்காரமும் தவறாக நடத்தப்பட்டதும் அனுபவித்திருந்த போதிலும், சால்பில் சிலவற்றையோ அல்லது சால்பின் அடிப்படைப் பண்புகளையோ எந்தெந்தக் குழந்தைகள் தம்முள் வைத்திருப்பதற்கு வெற்றி பெற்றிருக்கின்றனவோ, அவற்றிடந்தான் ஏதோ ஓரளவு ஆளுமை நிலைத்திருக்கிறது. பெரும்பாலாரிடம் ஆளுமை இல்லாதிருப்பது அரிதன்று.

அவர்களை, ' ஒரு முனைப்புடன் இருங்கள்,' என்று சொல்வது பயனற்றது. ஏனென்றால், அவர்களால் முயற்சி செய்யமுடியாத சத்திகளுள் ஒன்றாகும் இந்த ஒரு முனைப்பு. கவனமும் பொறுமையும் அவர்களிடம் இல்லாத கொடையானால், அவர்களை எப்படிக் கவனமாகவும் பொறுமையாகவும் இருந்து செயலாற்றும்படி எதிர் பார்க்கலாம்?

கால்களில்லாதவனை, 'ஒய்யாரமாக நட,' என்று சொன்னால், அது எப்படி இருக்கும்? இத்தகைய குணங்களைப் பயிற்சியினாலேதான் அளிக்க இயலும்; அதிகாரத்தினால் என்றும இயலாது.

அப்படியானால் என்ன செய்வது? இதற்குச் சமூகம் தரும் விடை, ' இளைஞருடன் பொறுமையாய் இருங்கள். நம்முடைய நல்லெண்ணத்தினாலும் எடுத்துக்காட்டுகளாலுமே அவர்களைத் திருத்த இயலும்,' என்பது. காலம் செல்லச்செல்லப் பொறுமையுடன் இருந்தால் ஏதோ ஒன்றை நிலைபெறச் செய்யலாம் என்பது எதிர்பார்க்கப்படுகிறது. பார்க்கப்போனால், மெய்யாக ஒன்றுமே நிலைபெறச் செய்ய இயல்வதில்லை. காலம் கழியக்கழிய நாமும் வயதில் பெரியவர்களாகிவிடுகிறோம். அதனால் ஒன்றும் வருவதில்லை. தாமாகக் காலமும் பொறுமையும் ஒன்றையும் சாதித்துவிட இயலாது. ஆக்கும் பருவத்தில் அளிக்கப்படும் சந்தர்ப்பத்தைக்கொண்டே நாம் இலாபம் அடைய வேண்டும்.

மனிதர்களை முழுமையாகக் கவனித்தோமானால், மற்றொன்று தெளிவாகிறது: முக்கியமாகக் குறைபாடுகளில் பெரியவர்களும் குழந்தைகளைப் போல ஒருவர்க்கொருவர் வேறுபடுகின்றனர். ஆனால், எல்லாருக்கும் பொதுவானதொன்று அவற்றின் இருதயத்தில் ஆழமாய் மறைந்திருக்கிறது. தங்களை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்னும் கருத்து எல்லாருக்கும் தெளிவில்லாமலோ நனவிலா நிலையிலோ இருந்துவருகிறது. பலர் ஏதோ தெய்விக நிலை ஒன்றைப் பெற விரும்புகின்றனர். சால்புக் குறைபாடுகளின்மேல் இந்தப் போக்கு எத்தக் குறைந்த அளவில் செயலாற்றினாலும், சால்பு விருத்தியில் இன்றோ நாளையோ ஓரளவுக்குச் சீர்மையாக்கும் உந்துதல் ஏற்படாமல் போவதில்லை. தனிப்பேர்வழியும் சமூகமும் இதைப் பொதுவாகப் பெற்றிருக்கின்றனர். முன்னேற்றம் அடைய வேண்டும் என்ற உளப்போக்கு இடைவிடாமல் இருந்து வருகிறது. வெளி நிலையிலானாலும் சரி, . உள் நிலையிலானாலும் சரி, மனிதனுடைய நனவிலாப் பகுதியில் ஒரு சிறு ஒளிக்கற்றை இருக்கிறது. இது இன்னும் சிறப்பானதற்கு வழி காட்டுகிறது. அதாவது, மனிதனுடைய நடத்தையானது விலங்குகளைப் போல மாறாத ஒரு நிலைப்பட்டதன்று. அது முன்னேற்றம் பெற இயலும். முன்னேற்றமடையத் தூண்டும் சக்தியை உணர்வது மனிதனுக்கே இயல்பானது.

பன்னிரண்டாவது படத்தில் நடுவில் ஒரு சிவப்பு வட்டம் இருக்கிறது. இது நிறைவின் மையத்தைக் குறிக்கும். இதைச் சுற்றிலும் நிலப் பரப்பு இருக்கிறது. இன்னும் வலுவுள்ளதாகச் சமநிலை கண்ட மனிதர்கள் குறிக்கோளுக்கு ஏறத்தாழப் பொருந்தியவர்கள் அல்லது நேர்மையானவர்களை இந்நிலப் பரப்புக் குறிக்கும். இதைச் சூழ்ந்துள்ள வெள்ளைப் பகுதி பொதுமக்களைக் குறிக்கும். இப்பொதுமக்கள் பலவித அளவுகளில் நேர்மையைப் பெற்றிராதவர்கள். வட்டத்தின் வெளியில் சிறு சிவப்பு வட்டத்தைக் காண்கிறோம். நேர்மையாக்கப்படாத மக்களை இவ்வட்டம் குறிக்கும். **நெறி பிறழ்ந்தவர்,**[1] **கூடிவாழும் தன்மையற்றவர்,**[2] **கூடி வாழ்தலையெதிர்ப்பவர்கள்**[3] (பித்தர்கள்) ஆகியவர்கள் இவ்வட்டத்தைச் சேர்ந்தவர்கள். பித்தர்களும் குற்றவாளிகளும் கூடி வாழும் வகையில் தாங்கள் இணங்கும் திறன் அற்றவர்களாகவே இருக்கின்றார்கள். மற்றவர்களெல்லாம் சற்று ஏறத்தாழ இவ்விணங்கும் திறன் பெற்றிருக்கின்றார்கள். இவ்வாறு இணங்கும் திறனுக்குட்பட்டவர்களைப் பற்றியே கல்விப் பிரச்சினை தோன்றுகிறது.

ஒருவனைச் சுற்றிலுமுள்ள உலகத்துடன் இணங்குவது என்பது முதல் ஆறுண்டுகளுக்குள் நடைபெறுகிறது. எனவே, சால்பின்

---

1. Delinquent, 2. Extra Social, 3. Anti Social

தொடக்கத்தை இங்கேதான் தேட வேண்டியிருக்கிறது. இந்த இணங்குந்திறன் என்பது எவ்வளவு பிரமாண்டமான சிக்கலாய் இருக்கிறது! நீல வட்டம் சுமாரான நிறைவு பெற்றவர்களையும் அதனுள் அடக்கும். இவர்களே இருப்பவர்களுள் தனிமிகு வலிமை பெற்றவர்கள். இதற்குக் காரணம், மிகவும் உயிர்ப்புப் பெற்ற சத்திகளைப் பெற்றிருந்திருக்கலாம்;[1] அல்லது அவர்கள் தங்களுடைய சூழ்நிலை அமைப்புகளில் கொடுத்து வைத்தவர்களாய் இருந்திருக்கலாம். வெண்மைவட்டத்தில் உள்ளவர்கள் குறைந்த சத்தியைப் பெற்றிருந்தவர்களாய் அல்லது பெருந்தொல்லைகளுக்கு ஆளானவர்களாய் இருந்திருக்கலாம். சமூக வாழ்வில் முதல் வகையானவர்கள் வலிமையுற்ற சால்புடையவர்களெனக் கருதப்படுகின்றனர்கள். வெள்ளை வட்டத்தைச் சேர்ந்தவர்கள் வலிமையற்றவர்களெனக் கருதப்படுகின்றனர்கள். முதல் வகையார் நிறைவை நாடி மையத்துக்கு இயற்கையாகவே ஈர்க்கப்படுவதாக உணர்கின்றனர். இரண்டாம் வகையினர்கள், கூடி வாழ் தன்மையற்றவர்களும், கூடிவாழ்தலையெதிர்ப்பவர்களும் போல நடந்துகொள்ளும் வகையில் தங்கள் நிலையிலிருந்து நழுவுகின்றனர்கள். இவர்கள் எப்பொழுதும் மயக்கப்படுவது போல உணர்கின்றனர்கள். இவர்கள் இடைவிடாமல் முயற்சி செய்யாவிடில், தாங்கள் இன்னும் தாழ்ந்த நிலையை அடைவார்கள் என்று நினைக்கின்றனர்கள். ஆதலால், மயக்கத்திற்கு இடங்கொடாதிருப்பதற்கு இவர்கள் அறநெறி ஆதரவை வேண்டுகின்றனர்கள். அது இன்பத்தைத் தேடும் கவர்ச்சி அன்று. குற்றவாளியோ, பித்தனோ ஆக வேண்டும் என்னும் கருத்தை எவர்தான் மகிழ்ச்சியுடன் ஏற்பர்? ஆனால், அது தடுக்க முடியாத ஒரு சத்தியாகும். அது புவியின் ஈர்ப்பைப் போன்றதென லாம். அது எப்பொழுதும் தற்காப்பையும் இடைவிடா முயற்சியையும் எதிர்பார்க்கிறது.

தீயதைத் தடை செய்யும் முயற்சி நற்குணம் என்று கருதப்படுகின்றது. ஏனென்றால், இம்முயற்சி மெய்யாக நம்மைத் தீநெறிக் குழியில் விழாதபடி தடுக்கிறது. அவ்விதம் விழாமல் இருப்பதற்கு இது சம்பந்தப்பட்டவர் சட்டங்களையும் விதிகளையும் தாமே தம்மேல் சுமத்திக்கொள்கின்றனர்; தம்மைவிட மேலானவர்களுடன் தம்மை இணைத்துக்கொள்கின்றனர்; தமது உள்ளத்தில் தோன்றும் தகாத ஆசைகளைத் தடுக்கும்படி ஆண்டவனை வேண்டிக்கொள்கின்றனர். மேலும் மேலும் தம்மைச் சுற்றிலும் நற்குணங்களைப் போர்த்திக் கொள்கின்றனர். ஆனால், இது கஷ்டமான வாழ்க்கை. தவம் என்பது இன்பமா? மலையேறுகின்ற ஒருவன் தன் நிலை தவறிவிடாமலிருப்பதற்காகச் சாய்ந்து நிற்கும் ஒரு பாறையைப் பிடித்துக்கொள்வதைப் போலிருக்கிறது இவனது முயற்சி. இந்தச் சூனிய நிலைக் கொடுமையை இளைஞர் உணர்கின்றனர். கல்வி கற்பிப்போன் எடுத்

துக்காட்டாலும் இணங்குவிப்பதாலும் இளைஞனுக்கு உதவி செய்ய முயல்கிருன் ; தன்னை ஓர் எடுத்துக்காட்டாக அவனுக்குப் படைக்கிருன் ; இளைஞனைப் போல அதே உணர்ச்சியையும் கொடுமையையும் அடிக்கடி உணராமற்போவதில்லை. எத்தனையோ முறை அக் கல்வி புகட்டுவோன் தனக்குள், 'நான் நல்ல எடுத்துக்காட்டாய் நடந்துகொள்ள வேண்டும். அல்லாவிட்டால் என் மாணவர்களுடைய நிலை என்னுகும் ?' என்று சொல்லிக்கொள்கிருன். இது ஒரு பெருஞ் சுமையாய் அவன் தோள்மேல் இருக்கிறது. ஆசிரியனும் மாணவனும் நற்குணமுடையோரைச் (வெள்ளை வட்டம்) சேர்ந்தவர்கள். இன்று அறநெறி போதிப்பதும், சால்பைப் பழக்குவதும் இந்தச் சூழ்நிலையில் இருந்து வருகின்றன. இதைவிட வேறு முறை தெரியாத காரணத்தால், இதுதான் சரி என்று அங்கீகாரம் பெற்றிருக்கிறது. பொதுவாகப் பெரும்பாலார் இந்த வரம்புகளுக்குள் எப்பொழுதும் வாழ்ந்து வருகின்றனர். தற்காப்பை அனுசரிப்பது இயற்கையானது என்று மக்கள் பொதுவாகக் கருதுகின்ருர்கள்.

நீல வட்டம், நிறைவால் ஈர்க்கப்படுபவர்களாகிய வலிமையுற்ற வகையினரைக் குறிக்கிறது. இங்கு மேலே குறிப்பிட்டது போல, புவியிழுப்புச் சத்தி எதுவுமில்லை. இங்கு இருப்பது முன்னிலும் மேன்மையடைய வேண்டுமென்ற மெய்யான ஒரு விருப்பம் ஆகும். முழு நிறைவையும் பெற முடியுமா என்ற எதிர்கால வாய்ப்பை எதிர்பாராத ஆசை ஒன்று இருக்கின்றது. எனவே, இத்தகையோர் நிறைவு நோக்கி ஈர்க்கப்படுகின்றனர். இயற்கையாகவும் முயற்சியில்லாமலும் இது நடைபெறுகிறது. சிறைச்சாலையின் அச்சத்தால் இவர்கள் திருடுவது நிறுத்தப்படுவதில்லை. பிறருடைய பொருளை அபகரிக்கலாமா வேண்டாவா என்ற மனப்போர், வெற்றியைப் பெறுவதில்லை. அல்லது நற்குண நடிப்பினுல் பலாத்காரச் செய்கைகளில் இறங்காமல் தங்களைத் தடுத்துக்கொள்வதுமில்லை. இவர்கள் பிறர் பொருளை விரும்புவதில்லை. பலாத்காரத்தைக் கண்டாலே இவர்கள் வெறுக்கின்ருர்கள். நிறைவு இவர்களை ஈர்க்கிறது. ஏனென்ருல், அது இவர்களின் இயல்பு. இதை இவர்கள் தேடுவது ஏதோ தியாகம் போன்றதன்று ; ஆனுல், இவர்களுடைய ஆழ்ந்த ஆசைகளைத் திருத்தி செய்வதற்கென்று பின்பற்றப்படுகிறது.

புலால் உண்போர்க்கும் உண்ணுதோர்க்கும் உள்ள வேற்றுமை போன்ற வேற்றுமையை இங்குக் காணலாம். புலால் உண்போருள் பலர் ஒரு வாரத்தில் சில குறிப்பிட்ட நாள்களில் அதை விலக்கி விடுகின்றனர். 'லென்ட்'[1] என்ற கிறித்தவப் பண்டிகை நாற்பது

---

1. From Ash Wednesday to Easter eve

நாள்கள் கொண்டாப்படும். இவர்கள் அந்த நாற்பது நாள்கள் உண்ணு விரதம் பூண்பார்கள் ; அல்லது புலாலையும் மற்ற இன்பப் பொருள்களையும் ஒதுக்கிவிடுவார்கள் ; இதை ஒரு கடுந்தவமாகக் கருதுகின்றார்கள் ; இது ஆசையைத் தடுக்கும் நற்குணம் என்று நினைக்கின்றார்கள்.

இவர்கள் பிறர் ஆக்கித்தந்த விதிகளை நிறைவேற்றுகிறவர்கள். அல்லது இவர்களுடைய மத ஆசாரியார்களால் அளிக்கப்பட்டதை இவர்கள் நிறைவேற்றுகின்றார்கள். ஆனால், நீல வட்டம் இவர்களை அடக்காது. இது புல்லாலால் கவரப்படாத சைவ உணவுக்காரர்களும், வானுளோரும் இருக்கும் வட்டமாகும். இவர்கள் புலாலை விலக்குகின்றார்கள். இவர்களுக்கு மத போதகர் எவரும் தேவை இல்லை. ஏனெனில், இவர்கள் ஆழ்ந்த உள்ளத்தில் உறையும் சட்டங்களை மனமாரத் தாங்களே பின்பற்றி வருகின்றார்கள்.

மற்றோர் எடுத்துக்காட்டை உடல் நலம் உற்றவர்களிடமும் உடல் நலம் அற்றவர்களிடமும் காணலாம். உதாரணமாக, நாட்பட்ட மூச்சுக்குழல் அழற்சியால் துன்புறுவோர், தம் நெஞ்சைக் கம்பளிச் சட்டையால் காத்துக்கொள்ள வேண்டும் ; வெந்நீரில் குளிக்க வேண்டும் ; நல்ல இரத்தவோட்டக் குறைவிராமல் உடலைப் பிடித்து விட வேண்டும். பார்வைக்கு ஒன்றும் இல்லாதவர் போலத் தோற்றம் அளிப்பினும், அவர்கள் எப்பொழுதும் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டியிருக்கிறது. ஒரு வேளை அவர்களுடைய சீரணச் சத்தி மோசமாய் இருக்கலாம். நடமாடிக்கொண்டிருப்பதற்காகக் காலாகாலங்களில் தனிப்பட்ட உணவைப் புசிக்க வேண்டியிருக்கும். இவ்வகையினர் மற்றவர்களுடன் ஒத்து வாழ்கின்றனர். ஆனால், இது மிகவும் சாக்கிரதையாக வாழ்வதாலேதான் முடிகிறது. மருத்துவ விடுதி அச்சம், அல்லது இறப்பின் பயம் இவர்களுடைய நெஞ்சத்தில் எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறது. இவர்கள் எப்பொழுதும் மருத்துவர் துணையைத் தேடுகின்றார்கள்; அல்லது ஒரு ‘நர்சை’ அமைத்துக்கொள்கின்றார்கள்; அல்லது தம் குடும்பத்தாரிடமிருந்து அடிக்கடி உதவியைக் கண்டித்துப் பெறுகின்றார்கள். நல்ல உடல் நலம் பெற்றவர்களைப் பார்ப்போம் : அவர்கள் தங்களுக்கு விருப்பமானதெதையும் உண்கின்றார்கள் ; விதிகளைப்பற்றிப் பொருட்படுத்துவதில்லை ; எவ்வகைத் தட்பவெப்ப நிலைகளிலும் வெளியேறுகின்றார்கள் ; பனிக்கட்டியை விலக்கி நீச்சலடிக்கின்றார்கள். பாவம் ! மற்றவர்கள் அதே சமயத்தில் என்ன செய்கிறார்கள் ? தங்கள் தலையையும் வெளியே நீட்ட அஞ்சி, வீட்டுக்குள்ளேயே கிடக்கின்றார்கள். வலுவற்றவர்களின் வெள்ளை வட்டத்தில் ஒவ்வொன்றுக்கும் அறநெறி யோசனையாளர் தேவைப்படுகிறார். ஆசையும் சீரழிவும் ஆகிய

சரிவில் நழுவிவிடாமல் தடுப்பதற்கு இவர்கள் தேவைப்படுகின்ருர்கள். ஆனுல், நீல வட்டத்தில் உள்ளவர்களுக்கு இதே அளவுக்கு அத்தகைய உதவி தேவைப்படுவதில்லே. மற்றவர்களால் கனவிலும் எதிர்பார்க்க இயலாத இன்பங்கள் இவர்கள்முன் நடமாடுகின்றன.

நிறைவு வட்டமாகிய மைய வட்டத்தைப் பற்றிச் சற்றுச் சிந்திப்போம்: மெய்ந்நிகழ்ச்சி[1]யின் அடிப்படையில் சால்பை ஆராய்ச்சி செய்ய முயல வேண்டும். நிறைவு[2] என்பது என்ன? உயர்ந்த அளவில் எல்லா நற்குணங்களேயும் பெறுவதா? அப்படியானுல், எதை அடைவதற்காக அவ்வாறு பெறுவது? இங்கும் நாம் சற்றுத் தெளிவுபடுத்திக்கொள்ள வேண்டும். முன்னேற்றம் அடைவதற்காக நனவுநிலே இல்லாத போதிலும், உந்தப்படுகின்ற மனிதப் போக்கை நாம் சால்பு என்று கொள்கிருேம். இதுதான் பொதுவான போக்கு. ஆண்டவன்மேல் இயற்கையான ஒரு பற்று இருக்கிறது. ஆனுல், இங்கு மனித முன்னேற்றத்தில் நிறைவு பெற்ற மையத்தைப்பற்றி நாம் சிந்திப்போம். யாரோ ஒருவர் ஒரு புதுமையைக் கண்டுபிடிக்கிருர். சமூகம் அந்த வழியைப் பின்பற்றி முன்னேறுகிறது. இதைப் போலவே தெய்விக வாழ்விலும் நடைபெறுகிறது. ஒருவர் உயர்ந்த நிலேயை அடைகிருர்; சமூகத்தை முன்னேறும்படி உந்திவிடுகிருர். அறநெறியைப்பற்றி நாம் பேசுவதும், வெளிப்படையாகக் காண்பதும் எல்லாம் யாரோ ஒருவருடைய சாதனேயாகும். சரித்திரம், பூகோளம் ஆகியவற்றைப்பற்றி நமக்குத் தெரிந்ததை ஆராய்ந்தோமானுல், இந்த இடைவிடா முன்னேற்றத்தைக் காண்கிருேம். ஏனென்ருல், ஒவ்வொரு காலப் பிரிவிலும் நிறைவு வட்டத்துக்கு எவரோ ஒருவர் ஒரு புதுப் புள்ளியைக் கூட்டியிருக்கிருர். இந்த வட்டம் அவரைக் கவர்ந்து, செயல் புரிய அவரை உந்தியிருக்கிறது. அவர் நீல வட்டத்தைச் சேர்ந்தவர்; தம்மைப் பொறுத்த மட்டில் ஒரு சந்தேகமும் கொள்ளாதவர்; ஆதலால், ஆசையுடன் போராடுவதில் தம் சத்திகளே வீணுக்கத் தேவை இல்லாதவர். தங்களுடைய இழிவான உள்ளங்களுடன் போராடிக்கொண்டிருப்பவர்களால் சாதிக்க இயலாதென்று ஐயப்பட்டவைகளே இவர்களுடைய இதே சத்திகள் சாதிக்கப் பயன்படுமாறு திருப்பிவிடலாம். தென்துருவத்தை ஆராய்வதற்காக அட்மிரல் பயர்டு[3] (கப்பல் தலேவர் பயர்டு) என்பவர் நிதி திரட்டும் இழிவான பணியை ஏற்றுக் கொண்டார்; துருவ ஆராய்ச்சியின் பல இடையூறுகளுக்கும் தம்மை ஆளாக்கிக்கொண்டார். இவர் உணர்ந்ததென்ன? இதற்கு முன் செய்யப்படாத ஒன்றைச் சாதிக்கவேண்டும் என்ற கவர்ச்சி. ஆதலால்,

---

1. Fact, 2. Perfection, 3. Admiral Byrd

நிறைவு மண்டலத்தில் இதற்கு முன் எத்துணையோபேர் தம் கொடியை நாட்டியிருக்கின்றனர். இவரும் தம் கொடியை அங்கு நாட்டிவிட்டார்.

சால்பைப் பொறுத்தமட்டில் மனிதச் சமுதாயம் வெள்ளை வட்டத்தைச் சேர்ந்தவர்களை மிகுதியாகப் பெற்றிருக்கிறதென்று நாம் இறுதியாகக் கூறலாம். தம்மைத் தாங்குவதற்குக் கைத்தாங்கல் வேண்டுபவர் பலர். இப்பொழுது நடைபெற்று வருவதுபோல உலகம் கல்வியை நடத்திவந்தால், மனித சமுதாயம் இன்னும் தாழ்ந்த நிலைக்குள் பதிந்துவிடும்.

வெள்ளை வட்டத்திலிருந்து ஒரு மதபோதகர் வந்து நீலவட்டத்திலுள்ள குழந்தைகளுக்குப்போதிக்கிருர் என்று வைத்துக்கொள்வோம். 'புலால் உண்பதை நீக்குங்கள். அவ்வாறு உண்பது பாவத்தை விளைக்கும்,' என்று அவர் எடுத்துரைக்கலாம். அதற்குக் குழந்தைகள் விடுக்கும் பதில், 'அதெல்லாம் நியாயமே. எங்களுக்குப் புலாவின்மேல் விருப்பமே இல்லையே !' என்பது. போதகர் வேருெரு குழுவைப் பார்த்து, 'அந்த ஆடைகளை அணிந்துகொண்டிருந்தீர்களானுல், சளி பிடிக்கும். நல்ல கம்பளிச்சட்டைகளை அணிந்துகொள்ளுங்கள்,' என்று அறிவுறுத்துகிருர் என்று கற்பனை செய்வோம். இதற்கு வரும் மறுமொழி என்னவாகும் ? 'குளிர் எங்களை ஒன்றும் செய்யாது. எங்களுக்குப் போதிய வெப்ப உடையை அணிந்துகொண்டுதான் இருக்கிருேம்,' என்பதே. வெள்ளை வட்டத்திலிருக்கும் ஆசிரியர்கள் குழந்தைகளை நிறைவு வட்டத்தை நெருங்கச்செய்வதைவிட அவற்றின் தரத்தை இன்னும் தாழ்த்திவிடுகின்ருர்கள். பள்ளிக்கூடங்களில் இதைச் செய்யலாம் என்று சிபாரிசு செய்யப்படும் தொழில் திட்டங்களை ஆராய்ந்தோமானுல், அவற்றின் வறுமையும் ஊக்கமின்மையும் உடனே விளங்கும். இக்காலக் கல்விமுறை மானக்கேடானதாய் இருக்கிறது. அது தாழ்வு மனச்சிக்கலைத் தோற்றுவித்து மனிதனுடைய சத்திகளைச் செயற்கை முறையில் தாழ்த்துகிறது. கல்வியின் முறை செய்தலே இயற்கையான அளவைவிடத் தாழ்ந்த அளவுக்கு அறிவைப் பெறும்படி வரம்பு கட்டிவிடுகின்றது ; வலுவான பாதங்களால் வேகமாக ஓடக்கூடியவர்களுக்குக் கைத்தாங்கல் அளிக்கிறது மனிதனுடைய தாழ்ந்த சத்திகளை அடிப்படையாகக் கொண்டிருக்கும் கல்வி முறை ; மனிதனுடைய உயர்ந்த சத்திகளின் அடிப்படையில் தோற்றுவித்ததன்று. மனிதர்களுள் பெரும்பாலார் தாழ்ந்தவராய் இருப்பின், அது மனிதருடைய குற்றமேயாகும். ஏனென்ருல், ஆக்கப்பருவத்தில் சால்பு ஆக்கப்படாமல் தடை செய்யப்பட்டிருக்கிறது. குழந்தைகளின் இயல்பான சத்திகளைப் பயன்படுத்துவதை விட்டு மனிதனுடைய மெய்யானமட்டத்தைப்பெறுவதற்கு நாம்முயற்சிசெய்ய வேண்டியிருக்கிறது. அந்த நிலையில் நிறைவைக் குறிக்காத நீலவட்டம் நிறைவைப்போல ஆகப்பார்க்கும் தற்காப்புக்குப் பதிலாக வெற்றி

பெற வழி தேடும் ; வெள்ளைப் பரப்பு முழுமையும் ஆக்கிரமிக்கப் பார்க்கும். மனித வாழ்வின் முழுமையிலும் மனத்தை ஆக்கும் பருவம் இருந்தால், அதுவும் அத்தருணத்தில் நடைபெறுமல் இருந்தோ, அல்லது குறைபாடுகள் காரணமாகச் சற்றுக்கேவலமாகவோ உருவானல், மனிதர்க்குள் பெரும்பகுதியினர் குறைந்த வளர்ச்சி பெற்றிருக்கிருர்கள் என்ருல், அது வியக்கத்தக்கதன்று. ஆனல், சால்பு இயற்கையான போக்கில் அமைய விடப்பட்டிருந்தால், நாமும் அறநெறிச் சொற்பொழிவுகள் நடத்தாமல் இயற்கையான முறையில் ஆக்கு முறையை அனுசரிக்க அவகாசம் ஏற்பட்டிருந்தால், அப்பொழுது உலகத்துக்குத் தேவைப்படும் கல்வி வேறுவிதமானதாகும்.

செயற்கை வகையான கட்டுப்பாடுகள் அன்றே ஒழிந்துவிடும் ! செய்ய இருக்கும் பல பெருங்காரியங்களின்மேல் மனிதர் கண்ணேட்டம் திரும்பும் முழுச் சரித்திரத்தையும் முழுத்தத்துவ நூலையும் வேண்டுமானல் ஒருவரால் படிக்க இயலும். அப்படியிருந்தும், சத்தியற்றவர்களாகவே அவர்கள் இருப்பார்கள். ஆனல், பெருமுயற்சிகளைத் தூண்டும் வசதிகளைக் கொடுத்தால் பலன் மிகவும் வித்தியாசம் உள்ளதாகத் தோன்றும். இதைப் பெறவேண்டுமானல், மனிதனைத் துலங்கச் செய்யும் பொருள்களை நாம் உபயோகப்படுத்த வேண்டும். எந்தக் குணங்கள் ஆக்கும் பருவத்தில் தோன்றுமோ, அந்தக் குணங்களையே நாம் ஊக்குவிக்க வேண்டும். ஆனல், அந்தப் பருவத்தில் அவை நிலைபெறச் செய்துகொள்ள முடியாமற்போயின், அக்குணங்கள் பிற் காலத்தில் ஏற்படா. உபதேசங்களோ, அல்லதுஎடுத்துக்காட்டுகளோ இவை புத்துயிர் பெறப் பயன்படா.

பழைய கல்விக்கும் புதிய கல்விக்கும் இதுதான் வேறுபாடு. தக்க பருவத்தில் தன் ஆக்கத்துக்கு நாம் உதவி புரிய வேண்டும். அப்பொழுது மனிதச்சமுதாயம் மாட்சி பெற்றதை நோக்கி முன்னேற இயலும். சமூகம் மதில்களையும் தடைகளையும் அமைத்துக்கொண்டிருக்கிறது. புதுமைக்கல்வி இவற்றைத் தகர்த்தெறிந்து சுதந்தரத்தோடு வானத்தை வெளிப்படுத்த வேண்டும். புதுமைக் கல்வி ஒரு புரட்சி ; ஆனல், பலாத்காரம் அற்றது. அது சாத்துவிகப் புரட்சி. அதற்குப் பிறகு அது வெற்றி பெற்ருல், பலாத்காரப் புரட்சி என்றும் தலைதூக்க இயலாமற் போய்விடும்.

# 21. குழந்தைகளின் உடைமை உணர்ச்சியும் அதன் மாற்றமும்

எங்களுடைய பரிசோதனைகளுக்கிடையில் வெளியான மெய்ந் நிகழ்ச்சிகளைப்பற்றிப் பொதுவாக ஒருவாறு ஆராய்ந்த பிறகு இப் பொழுது ஒவ்வொன்றாக ஆய்ந்து, அவற்றைப் பற்றி எமது **பொருள் காணலை**[1] வெளியாக்குவோம். குழந்தைகளின் வயதும் அவைகாட்டும் ஆழ்ந்த அக்கறையும் நமக்கு மிகச்சிறப்பான விஷயங்களை எடுத்துக் காட்டுகின்றன. மனித இனத்தின் மிக உயர்ந்த சிறப்பியல்புகளுக்கும், இக்குழந்தைகளின் செயல்களுக்கும் நெருங்கிய பொதுமை இருப்ப தால், அது இன்னும் சிறப்படைகிறது. **இந்தத் தோற்ற நிலைகளில்**[2] எல்லாம் ஆக்கும் செயல் முறை ஒன்று நடந்துகொண்டிருப்பதைப் பார்க்கலாம். பட்டுப் புழு தன் வளர்ச்சியில் ஒரு பக்குவம் அடைந்த வுடன் வேறு விதமாக நடந்துகொள்கிறது. அதற்கு நேராக இதையும் ஒப்பிடலாம். புழுக்கள் இது வரை இலைகளின் இடையில் ஊர்ந்து கொண்டிருந்தன. அவை இப்பொழுது இரு தண்டுக்கவைகள் பிரியு மிடத்தில் நிற்கின்றன. பிறகு அவற்றுக்கே மாயமான ஓர் அற்புதச் செயலைத் தொடங்குகின்றன. சற்றுப்பொறுத்தால், சிறு மங்கலான தெளிந்த நுண்மை நூலால் போர்த்தப்பட்டிருக்கும் கூட்டுப் புழுவின் முதல் தொடக்கம் இது. இதே போலக் குழந்தைகளிடமும் முதலில் எங்கள் கவனத்தை ஈர்த்தது, ஏதோ ஒரு பொருளின்மேல் ஒரு முனைப்பான ஒரு தோற்ற நிலையாகும். மூன்றரை வயதுச் சிறுமி எங்களுடைய பள்ளிக்கூடத்துக்கு வந்து போய்க்கொண்டிருந்தாள். இந்த ஒரு முனைப்பின் வலிமை மிகவும் ஆச்சரியகரமாயிருந்தது. தன்னைச் சுற்றிலும் அக்கறையை ஈர்க்கக்கூடிய பல பொருள்கள் இருந்தும் அவளுடைய வேலையின் ஒரு முனைப்பைக் கலைக்க இயலாமற் போயிற்று. இத்தகைய ஆழ்ந்த ஒரு முனைப்பு, இளமையில் சாதாரண மாகக் காணப்படுவதில்லை; பெரியவர்களிடமே; அதுவும் சில அபூர்வப் பேர்வழிகளிடமே தோற்றமளிக்கின்றது. அதே அளவு தீவிரமாக இந்தச் சிறு குழந்தையிடமும் இருக்கும் என்று

1. Interpretation, 2. Phenomenon

எதிர்பார்ப்பது இயற்கையன்று. ஆனால், பல்வேறு குழந்தைகளிடமும் எப்பொழுதும் இக்குணம் இருப்பதைக் கண்ட பிறகு இது அடிப்படையானது என்பது நாங்கள் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. ஒரு வட்டம் வரையும்பொழுது காம்பஸின் முனையை முதலில் நிலைபெறச் செய்த பிறகே நம்மால் வட்டம் வரைய இயல்கிறது. அதே போலக் **குழந்தையின் ஆக்கத்திலும் அதன் ஒரு முனைப்பை ஒன்றின் மேல் திருப்புவது இனிமேல் தோன்றப்போவதற்கெல்லாம் அடிப்படையாகிறது.** இதே மாதிரிதான் நிலைபெறவேண்டும் என்றோ அதே பண்டங்களின்மேல் ஒரு முனைப்பைக் காட்டவேண்டும் என்றோ எவரும் கூறுவதில்லை. ஆனால், இந்த விதமாக ஏதாவது ஒன்றின் மேல் நிலைநாட்டாவிடில், உருவாதல் தொடங்க இயலாது. ஒரு முனைப்பு இல்லாவிட்டால், சுற்றிலும் உள்ள பொருள்கள் குழந்தையை உடைமையாக்கிவிடுகின்றன. ஒவ்வொரு பண்டமும் தன்னை அழைக்கிறது. அதனால், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போகிறது. ஆனால், ஒருதரம் தன்னுடைய ஒரு முனைப்பு ஒன்றின்மேல் பதிந்துவிட்டவுடன் அவன் தனக்கே தலைவனாகிவிடுகிறான், அப்பொழுதுதான் உலகத்தின் மேல் ஆதிக்கம் செலுத்தலாம். பெரியவர்கள் வாழ்க்கையில் எவன் ஒருவன் தன் தொழிலை அடிக்கடி மாற்றிக்கொண்டேயிருக்கிறானோ, அவன் ஒரு பொறுப்பான பதவிக்குத் தக்கவனாக இயலாது என்பதை நாம் எல்லாரும் அறிவோம். ஆனால், எவனுடைய குறிக்கோள் தெளிவாக்கப்பட்டிருக்கிறதோ, எவன் தன் வேலையை ஒழுங்கமைப்புச் செய்யத் தெரிந்துகொண்டிருக்கிறானோ, அவன் நிச்சயமாக வெற்றி பெறுவான். இதற்கு நாங்கள் நிறைந்த முக்கியத்துவம் அளிக்கிறோம். பல்கலைக்கழக மாணவர்களிடமும் நாங்கள் இதை எடுத்துக் கூறுவதில் சலிப்படைவதில்லை. அவர்கள் ஒன்றின்மேல் தங்கள் ஒரு முனைப்பைச் செலுத்தினார்களானால், அதைக்கண்டு நாங்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைவோம் என்று சொல்வதில் சலிப்படைவதில்லை. ஆனால், அதனால் ஏதாவது சிறு மாறுதலாவது ஏற்படுமா! நல்ல புத்திமதி மாத்திரம் போதாது. இது வயது வந்தவர்களுக்குப் பொருந்துமானால், மூன்றரை வயதுக் குழந்தையிடம் ஒரு முனைப்பை எந்த ஆசிரியரால் தூண்டிவிட எதிர்பார்க்க இயலும்! ஒன்று மட்டும் நிச்சயம் : மனவுறுதியாலேயே எந்தக் குழந்தையும் ஒரு முனைப்புக் காட்டுவதில்லை.

எனவே, எம் குழந்தைகள் வெளிக்காட்டின ஒரு முனைப்பு, குழந்தை உளவியலில் ஒரு புதுமைக் கருத்தை வெளியாக்குகிறது ; சால்பு ஆக்கத்தை இயற்கை எவ்வாறு உருவாக்குகிறது என்பதைக் காட்டுகிறது. இயற்கையின் முறை எது? இயற்கைத்தாய் குழந்தைகளுக்குத் தனிப்பட்ட அக்கறைகளை ஊட்டுகிறாள். குழந்தையின் வளரும் ஆளுமையின் ஒவ்வொரு பகுதிக்கும் தேவைப்படும் விசேஷ

ஆக்கத்தொழிலைச் சிறப்பான அக்கறையுடன் இயற்கை அன்னை அளிக்கிருள்.

ஒரு முனைப்புக்குப் பிறகு விடாமுயற்சி தோன்றும். இது சால்பின் மற்ருெரு சிறப்பியல்பாகும். குழந்தைகள் திரும்பத்திரும்பச் செய்கின்ற செயல்களைப்பற்றி நான் முன்னமே எடுத்துக் கூறியிருக்கிறேன். இவ்வாறு செய்வதில் வெளிப்படையான நோக்கம் எதுவும் இல்லாததால், அந்தரங்க நோக்கம் ஏதாவது ஒன்று இருக்கவேண்டும் என்பது தெளிவு. முதல் ஒரு முனைப்புக்குப் பிறகு இந்தத் திரும்பச் செய்தல் நடைபெறுகிறது. இதனடியாகத் **தேற்றல்**[1] தோன்றுகிறது. மனிதச்சால்பு ஆக்கத்தில் இது இன்றும் ஒரு நிலை[2] யைக் குறிக்கிறது. இங்கு நடைபெறுகிற **மனவுறுதி**[3] குழந்தையினுடையதன்று. அது இயற்கையன்னையின் மனவுறுதியாகும். தாங்கள் ஏற்றுக்கொண்ட செயல் திட்டங்களை[4] நிறைவேற்றும் சத்தியை இயற்கையன்னை மக்கள் உள்ளத்தில் இதன் மூலமாக உருவாக்கிவிடுகிருள். மெய்யாகப் பார்க்கப் போனுல், இந்த ஒரு செயலைத்திரும்பச் செய்வதுடன் குழந்தை வேருென்றையும் காட்டுகிறது ; ஆரம்பித்த ஒன்றைக் கடைசி வரையிலும் செய்கின்ற ஒரு திறன்தான் அது. எமது பள்ளிக்கூடக் குழந்தைகள் தமக்கு விருப்பமான ஒரு தொழிலைச் சுதந்தரத்துடன் தாங்களே தேர்ந்தெடுக்கின்றன ; இந்தச் சத்தியில் ஒரு மாருட்டமில்லாமையைக் காட்டுகின்றன ; இதைத் தினந்தோறும் பல ஆண்டுகள் பயின்று வருகின்றன. முதியோர் உலகத்தில் தங்களுக்குத் தேவை இது என்று அறியாதவர்கள் நடுவில் நாம் இருந்தோமானுல், அவர்களுக்கு மனவுறுதி இல்லை என்று கூறுவோம். ஆனுல், தங்களுக்கு இது தேவை என்று உணர்ந்தவர்கள், இன்ன முறைகளைப் பின் பற்ற வேண்டும் என்ற தெளிவுக் கருத்துக்கொண்டவர்களைப் பார்த்து அவர்கள் வலிய மனவுறுதி பெற்றவர்கள் என்றும் செயலாற்ற வல்லவர்களென்றும் கூறுகிருேம்.

இயற்கையான விதிகளின் தூண்டுதல்களால் குழந்தைகள் தங்களுடைய செயல் இப்படித்தான் இருக்கவேண்டுமென்று நிச்சயப் படுத்திக்கொள்கின்றன. வயது வந்தோர் இதை எண்ணிப்பார்த்துத் தீர்மானிக்கின்றனர். குழந்தை இந்தச் சத்தியைப் பயன்படுத்த வேண்டுமானுல், வேறு யாரோ ஒருவருடைய நுண்ணறிவு இதைச் செய் என்று அதன் வாழ்வில் ஒவ்வொரு நிமிடமும் தூண்டிக்கொண்டிருக்க வேண்டுவதில்லை என்பது தெளிவாகின்றது. அச்சத்திகள் அதன் தேர்வைப்பாதிக்கின்றன; இந்த அச்சத்தி வழி காட்டியை வேருெருவர் புகுந்து ஒதுக்கிவிட்டால், மனவுறுதியையும் ஒரு

1. Consolidation, 2. Stage, 3. Will, 4. Project

முனைப்பையும் குழந்தையிடம் வளர விடாது தடை ஏற்படுகிறது. ஆதலால், இந்தச் சிறப்பியல்புகளைக் குழந்தை பெற வேண்டுமானால், முதியோரிடமிருந்து குழந்தை சுதந்தரம் பெற வேண்டுவது முதல் விதியாகும். இதல்லாமல், குழந்தையின் ஆழமான இயல்பூக்கம் என்னவென்றால், பெரியவர்களின் ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்வதாகும். இதனால் விளையக்கூடியதைப்பற்றி ஆய்ந்தோமானால், இது தர்க்க ரீதியில் உண்மையாய் இருக்கிறது. ஆனால், குழந்தை தர்க்க ரீதியில் எதையும் செய்வதில்லை; இயற்கையாய் நடந்துகொள்கிறது. குழந்தை எப்பாதையைப் பின் பற்ற வேண்டும் என்று தீர்மானிப்பவள் இயற்கையன்னையேயாவள். விலங்குகளின் வாழ்க்கைக்கும் மனித வளர்ச்சிக்கும் உள்ள அதிசய ஒற்றுமையைப் பாருங்கள். விலங்குகளுக்குப் பின்பற்ற வேண்டிய பாதை ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அவை தம்மினத்தின் பெரியவற்றிடமிருந்து விடுதலை பெற்றுக்கொண்டு தமக்கென்று ஏற்பட்ட பாதையில் முன்னேறுகின்றன. வளர்ச்சிக்கும் உருவாக்குதலுக்கும் வழி காட்டுகின்ற இயற்கையான விதிகளே அவை. ஒருவன் தன்னுடைய அக வாழ்வையும் சால்பையும் ஆக்கிக்கொள்ள வேண்டுமானால், இந்தத் தனிப் பேர்வழி இந்த **விதிகளை**[1] ப் பின் பற்றித் தீரவேண்டும்.

மனிதனுடைய மனப்போக்கின் ஒவ்வொரு தனித்தனி போக்கும் உருவாவதற்கு நாம் காத்திருக்கலாம். நடைபெறுவதெல்லாம் கல்வியாலேயே நடைபெற்றுவிடுவதில்லை என்பது நம் ஆய்வினால் விளங்கும்; அண்டம் முழுவதையும் நடத்தி வைக்கின்ற ஒன்றின் பரந்த சிக்கலான சத்தியால் தோன்றுகிறது என்பது தெரியவரும்: அது இயற்கையன்னையின் மனவுறுதி; நம் செயலன்று. அது சிருஷ்டியின் ஒரு பகுதியாகும்; கல்வியின் பகுதியன்று. நாம் பார்த்தவைகளின் தொடர்பாய் வருகின்ற ஒரு சிறப்பான மாறுதலால் இது நன்றாக எடுத்துக்காட்டப்படுகிறது. முழு வளர்ச்சி பெறாது தடுக்கப் பட்ட குழந்தைகள் அடிக்கடி பல சால்புச் சிறப்பியல்புகளைக் காட்டுகின்றன. தொழிலால் இவை நேர்மையடையும் பொழுது இச்சிறப்பியல்புகள் மறைந்துவிடுகின்றன.

சாதாரணமாகக் காணப்படுவது உடைமை உணர்ச்சியாகும். நேர்மையாக்கப்பட்ட குழந்தை எல்லா வகைப் பொருள்களின்மேலும் தன் அக்கறையைக் காட்டும் சுதந்தரம் பெற்றிருக்கிறது. இந்த அக்கறை, பண்டங்களின்மேல் கவனம் செலுத்துவதுடன் நிற்பதில்லை. அவற்றினின்று அது பெறக்கூடிய அறிவின்மேல் ஒரு முனைப்பைக் காட்டுகிறது. ஆதலால், எதையும் தனக்கென்னும் உடைமை

---

1. Laws

உணர்ச்சி ஒரு மாறுதல் அடைகிறது. இது வரை ஏதாவது ஒரு பொருளைத் தனதாக்கிக்கொள்ள வேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்த குழந்தை, அது தனக்குக் கிடைத்தவுடன் அதைத் தொலைத்துவிடுவதோ அல்லது முரித்துவிடுவதோ என்ன விந்தையாய் இருக்கிறது பாருங்கள்! தன் உடைமை உணர்ச்சிப் பசியுடன் அளிக்கும் மனவெழுச்சியும் தொடர்ந்து வருகிறதுபோல இருக்கிறது. எந்தப் பொருளும் என்றும் நிலைத்திருப்பதில்லை என்பதை நாம் நினைவுபடுத்திக்கொண்டோமானால், மேலே குறிப்பிட்டதைச் சுலபமாகப் புரிந்துகொள்ளலாம். அதன் கவர்ச்சி எல்லாம் சிறிதளவு நேரத்திற்குப் பிறகு ஒரு பக்கம் வைக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு கடிகாரத்தை எடுத்துக்கொள்ளுங்கள். காலத்தை நமக்குக் காட்டுவதற்கென்று இது ஆக்கப்பட்டிருக்கிறது. இதனுடைய உண்மையான மதிப்பு அதுதான். மணி என்பது இன்னதென்றே அறியாத சிறு குழந்தை இதைப் புரிந்துகொள்ள இயலாது. ஆதலால், ஒரு கடிகாரம் தன் கைக்கு அகப்பட்டால், அது அனேகமாக அதை உடைத்தேவிடுகிறது. வயது வந்த குழந்தை—கடிகாரம் இன்னதென்று அறிந்த குழந்தை—அது எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறதென்பதில் தன் மனத்தை ஈடுபடுத்தலாம். அக்குழந்தை அதை மிகவும் சாக்கிரதையாகத் திறக்கிறது. அதை ஓட வைக்கும் சக்கரங்களையும் மிண்டிகளையும் (Levers) பார்க்க வேண்டும் என்று கடிகாரத்தைத் திறக்கிறது. அப்படியானால், அதற்கு இப்பொழுது கடிகாரத்தின்மேல் அக்கறை இல்லை. கடிகாரத்தின் சிக்கலான யந்திரத்தின்மேலேதான் அதன் அக்கறையெல்லாம் இப்பொழுது செல்கிறது. அது வேண்டுவது அந்தப் பொருள் அன்று; ஆனால், அந்தப் பொருள்களைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதே.

இங்கு இரண்டாவது வகையான தன் உடைமையைப் பார்க்கிறோம். **ஒன்று, பொருள்கள் எவ்வாறு வேலை செய்கின்றன என்று அறிந்துகொள்வதில் ஓர் அக்கறை.** இதைப் பல வகைகளில் பார்க்கலாம். சும்மா வேண்டுமென்று மலர்களைப் பறித்த குழந்தைகள் அடுத்த நிமிடத்தில் அவற்றை எறிந்துவிடுகின்றன; அல்லது அவற்றைப் பிய்த்து எறிந்துவிடுகின்றன. தங்களுடைய தாக்க வேண்டுமென்ற வீறும்[1] உடனே அழிக்க வேண்டும் என்ற வீறும் தொடர்ந்து செல்கின்றன. ஆனால், குழந்தைக்கு ஒரு மலரின் பாகங்களெல்லாம் தெரிந்திருந்தால், அச்செடியில் காணப்படும் பல வித இலைகள், அல்லது தண்டு கிளை விடுதலின் வகைகள் ஆகியவைகளைத் தெரிந்திருந்தால், அத்தகைய குழந்தைக்கு அதைப் பறிக்கலாம் என்றோ, சின்னபின்னப்படுத்தலாம் என்றோ தோன்றாது.

1. Mania

அதற்கு அதைப் பற்றி ஆய வேண்டும் என்று தோன்றும். அதன் அக்கறை எல்லாம் நுண்ணறிவு சம்பந்தப்பட்டதாகிவிடுகின்றது. அதன் உடைமை உணர்ச்சி, அறிவு உருவமாக மாறிவிடுகிறது. இதே போல, அக்குழந்தை தன் உடைமையாக்கிக்கொள்வதற்காக ஒரு வண்ணத்துப் பூச்சியைக் கொல்லலாம். ஆனால், அது பூச்சி வாழ்க்கையில் அக்கறை கொண்டிருந்தால், பூச்சிகள் இயற்கையில் தொண்டாற்றும் பகுதியைத் தெரிந்திருந்தால், அதனுடைய அக்கறை வண்ணத்துப் பூச்சியின்மேல் போகும். அது அப்பூச்சியைக் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்பதற்கேயாகும்; அதை வீணுகப் பிடிப்பதற்கோ, கொல்வதற்கோ, அன்று. இந்த நுண்ணறிவு உடைமை என்பது, தன்னைப் பல வழிகளில் காட்டிக்கொள்கிறது: தன் சூழ்நிலையால் மிகவும் சத்தியுடன் இழுக்கப்படுகிறது. குழந்தை அதன்மேல் காதல் கொண்டிருக்கிறது என்றுகூடச் சொல்லிவிடலாம். சூழ்நிலையின்மேல் காதலானது குழந்தைச் சூழ்நிலையை நிறைந்த கவனத்துடன், அதில் காணப்படும் ஒவ்வொரு பண்டத்தையும் வெகு சாக்கிரதையாகத் தொட்டுப் பழகவும் செய்துவிடுகிறது. நுண்ணறிவின் அக்கறையால் தூண்டப்பட்ட உடைமை ஆசை, அதனுடைய நிலையில் ஒரு படி உயர்த்தப்பட்டிருக்கிறதென்று கருதலாம். இது குழந்தையை அறிவு நாடி வழி காட்டும். இந்த உயர்ந்த அக்கறையில் உடைமைக்குப் பதிலாக அறிவு, அன்பு, சேவை ஆகியவைகளின்மேல் ஆசை செல்கிறது. அம்மாதிரியே, ஒன்றைப் பற்றி ஆய்வதை **அறியும் ஆர்வம்**[1] என்கிறோம். ஒரு பொருளின் மகிமையைப் பற்றிக் குழந்தை ஒரு முறை உணர்ந்துவிட்டால், மற்ற எல்லாப் பொருள்களையும் காப்பாற்றுவதில் பேருக்கம் கொள்கிறது. எங்களுடைய பள்ளிக்கூடக் குழந்தைகளிடம் தோன்றிய மாறுதல்களால் அவை எங்ஙனம் உடைமை உணர்ச்சியிலிருந்து அவற்றிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த பொருள்களின்மேல் எவ்வளவு அன்பும் ஆதரவும் காட்டின என்பதை அறிந்துகொண்டோம். அவை எழுதி வந்த நோட்டுப் புத்தகங்களின் பக்கங்களில் ஒரு கசங்கலோ, மடிப்போ உண்டா! ஒரு மைக்கறையோ, அல்லது அழித்த அடையாளமோ இருக்குமா! அவை அப்பழுக்கு இல்லாமல் ஒழுங்காகவும், அனேகமாக அழகு பெறவும் வைக்கப்பட்டிருந்தன.

சரித்திரமும் பரிணமமும் காட்டுகின்ற வகையில் மனிதனுடைய மாட்சிகளைப் பற்றிச் சிந்திக்கும் பொழுது, உயர்ந்ததைச் சாதிக்க வேண்டும் என்ற ஆற்றல் அவனுடைய இயல்பின் ஒரு பகுதி என்பதை நாம் உணர்கிறோம். ஒவ்வொரு வகையிலும் மனிதன் வாழ்க்கையைப் புரிந்துகொள்ள முயல்கிறன். அவ்வாழ்வைக் காத்து அதை மேம்படுத்துவதே அவனுடைய நோக்கமாகும். இறுதியில்

1. Curiosity

உயிர் வாழ்வனவற்றுக்குத் தன் நுண்ணறிவு உட்காட்சியால்[1] உதவி புரிகிருன். குடியானவன் செடி கொடிகளையும் விலங்குகளையும் பாது காப்பதிலே தன் காலமெல்லாம் போக்குவதில்லையா ? விஞ்ஞானி தன் சூட்சுமதரிசனிகளுடனும் லென்ஸ்களுடனும் பழகுவதில் தன் காலத்தைக் கழிப்பதில்லையா ? மனிதக்குலம் பற்றுவதிலும், அழிப்பதிலும் தொடங்கித் தன் நுண்ணறிவால் அன்பும் சேவையும் செய்து முடிக்கிறது. தோட்டத்தில் வளர்ந்த செடிகளைப் பிடுங்கிப் பிய்த்தெறிந்த குழந்தைகள், இப்பொழுது அவற்றின் வளர்ச்சியைக் கவனித்து வருகின்றன ; இலைகளை எண்ணி வருகின்றன ; உயரத்தை அளந்து வருகின்றன. 'என் செடி' என்று அவை இப்பொழுது பேசுவதில்லை. 'செடி.'[2] என்றே பேசுகின்றன. இந்தத் **தூய்மை செய்தலும்**[3] இந்த அன்பும் அவற்றின் மனத்தில் பிறந்த ஒரு நனவு நிலையால் ஏற்பட்டிருக்கின்றன. **அழிக்கும் உணர்ச்சியை உபதேசத்தால் நாம் குணப்படுத்த இயலாது.** தனக்கே வேண்டுமென்றே, அல்லது பிறருக்குக் கூடாதென்றே ஒரு குழந்தை நினைக்கும் பொழுது நாம் அதற்குமுன் நீண்ட யோசனைகளைப் பொழிந்தோ, அல்லது அதனுடைய நல்ல எண்ணங்களுக்கு முன் மன்றாடியோ, முயற்சி செய்தோமானுல், ஒரு சில நிமிடங்கள் வரை அவ்வாறு செய்யாமல் நிறுத்தலாம். ஆனுல், அவை உடனே மறுபடியும் தொடங்கிவிடும். **தொழிலும் ஒரு முனைப்புமே அறிவையும் அன்பையும் கூட்டும்** ஒரு மாறுதலைத் தூண்டிவிடும் ; இதற்கு முன் மறைந்து கிடந்த தெய்விக மனிதனை உருக்காட்டுவிக்கும்.

**அறிவு, அன்பு, தொண்டு** ஆகிய இம்மூன்றுமே எல்லா மதங்களின் மூவுறுப்புச் சேர்ப்பாகும்.[4] ஆனுல், நமது தெய்விகத் தன்மையை மெய்யாகப் படைப்பது சிறு குழந்தையே. நம்முடைய போக்குக்கும் சால்புக்கும் உருக்கொடுக்கும் வகையில் குழந்தை நமக்கு இயற்கையின் திட்டத்தைப் போதிக்கிறது. அந்தத் திட்டத்தின் வயது, தொழில் முதலியவற்றின் ஒவ்வொரு நுட்பமும் சுதந்தரத்தின் முக்கியமும், வாழ்வின் விதிப்படி நிறைந்த செயல்களும் குழந்தையால் நமக்கு அறிவிக்கப்படுகின்றன. பௌதிக நூல், தாவர நூல், கைத்தொழில்கள் ஆகியவை முக்கியமானவை அல்ல. முக்கியம் எவை ? மனவுறுதியும், தொழிலால் தம்மையே ஆக்கிக்கொள்கின்ற மனித சத்தியுமே முக்கியமானவை. **குழந்தையே மனிதக் குலத்தினுடைய தெய்விகப் படைப்பாளி.** அதனுடைய தடையில்லா வளர்ச்சியில் குறுக்கிடுபவைகளெல்லாம் மனித ஆன்மா அடைபட்டுக் கிடக்கும் சிறைச்சாலைச் சுவரின் கற்கள் ஆகும்.

---

1. Insight, 2. The Plant, 3. Sublimation, 4. Trinomial

# 22. சமூக வளர்ச்சி

## சூழ்நிலை

குழந்தையின் வளர்ச்சிக்கு வேண்டுவனவற்றில் முதன்மை யானது ஒரு முனைப்பு. அதனுடைய சால்புக்கும் நடத்தைக்கும் அடிப்படையை அமைப்பது ஒரு முனைப்பே. எப்படி ஒரு முனைப்புடன் இருக்கவேண்டும் என்பதைக் குழந்தையே கண்டுபிடிக்க வேண்டும். இதற்காக எதன்மேல் ஒரு முனைப்பைச் செலுத்த வேண்டுமோ, அப்பண்டம் தேவைப்படுகின்றது. இதிலிருந்து அதனுடைய சூழ்நிலையின் முக்கியத்துவம் விளங்குகிறது. ஏனென்றால், வெளியிலிருந்து குழந்தையைத்தூண்டிவிட்டு அதனுடைய ஒரு முனைப்பைப்பெற இயலாது. அதன் அகவாழ்வை அதுதான் ஏற்பாடு செய்ய இயலும். குழந்தைக்காக நாம் எவரும் ஏற்பாடு செய்ய இயலாது. எங்கள் பள்ளிக்கூடங்களின் முக்கியம் இதிலேதான் காணப்படுகிறது. இம் மாதிரி செய்துகொள்வதற்கு. அவகாசம் அளிக்கும் தொழில்கள் நிறைந்த இடங்களே எம் பள்ளிகளாகும்.

அடைபட்ட எந்த இடமும் ஒரு முனைப்புக்குத்துணையாய் இருக்கும். உலகெங்கும் யாராவது ஒருவர் ஒரு முனைப்புடன் இருக்க விரும்பினால், அதற்கென்று ஒதுக்கப்பட்ட இடத்தைத் தேடுகின்றனர். கோவிலிலோ, அல்லது பூசை அறையிலோ, நாம் என்ன செய்கிறோம்? ஒரு முனைப் புக்கு உதவி அளிக்கும் வகையில் இவை ஒரு சூழ்நிலையை உருவாக்கு கின்றன. சால்பு வளர்ச்சிக்கு இவை நிர்ப்பந்தப்படுத்தும் இல்லங் களாகும். சாதாரணமாக ஐந்து வயதுக்கு முன் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களில் சேர்த்துக்கொள்வதில்லை. இந்த வயதுக்குள் உருவாக்கும் முக்கியப் பருவம் தாண்டிவிடுகிறது. ஆனால், எம் பள்ளிகளில் சிறுகுட்டிகளுக்குப் புகலிடம் அளிக்கப்படுகிறது. இங்குச் சால்பின் முதற்பகுதிகள் உருவாகலாம். இதன் ஒவ்வொரு பகுதியும் அதனதன் முக்கியத்தையும் பெற்றிருக்கிறது.

குழந்தைகளின் தேவைகளுக்குப் பொருத்தமான சூழ்நிலையின் பெருமதிப்பைப் பற்றி முதலில் நான் எடுத்துக் கூறிய பொழுது அந்தக்

கருத்து, சிற்பிகள், ஓவியர், உளவியலார் ஆகியோரிடம் நிறைந்த அக்கறையைத் தூண்டிவிட்டது. அவர்களுள் சிலர் என்னுடன் ஒத்துழைத்து, குழந்தைகளுக்கு எந்த அளவு அறைகள் இருக்க வேண்டும், ஒரு முனைப்பை விரும்பும் பள்ளிக்கூடங்களில் எத்தகைய ஓவிய அலங்காரங்கள் இருத்தல் வேண்டும் என்றெல்லாம் ஆய்ந்தார்கள். அத்தகைய கட்டடம் பாதுகாப்பு நிலையம் மட்டுமன்று. அதை 'உளவியலகம்' என்றுகூடச் சொல்லிவிடலாம். எனினும், அதனுடைய மதிப்பு அளவிலும் அலங்காரத்திலும் மட்டும் பொருந்தியிருக்க இயலாது. இவை மட்டும் போதா. குழந்தைகளின் உபயோகத்துக்கென்று அளிக்கப்படும் பொருள்களையும் பொறுத்திருக்கிறது. குவிலென்ஸ் ஒளிக்கற்றையைக் குவியச் செய்வது போல ஒரு முனைப்பைக்குவிக்கக் குழந்தைதன் கரங்களால் தொட்டுப்பழகும்பண்டங்கள் அதன் சூழ்நிலையில் இருக்கவேண்டும். இந்தப் பண்டங்களும் எப்பேர்ப்பட்டவைகளாக இருக்க வேண்டும் என்பதும் விதிகளுக்கு அப்பாற்பட்டதாகவும் தன்னிஷ்டப்படியும் தீர்மானிக்கப்படவில்லை; **குழந்தைகளிடம் நீண்ட காலம் பரிசோதனைகள் செய்த பிறகே இப்பண்டங்கள் இப்போதைய நிலைமைக்கு உருவாயின.**

ஒவ்வொன்றிலும் சிறிதளவு குழந்தைகளின் சூழ்நிலையில் ஏற்பாடு செய்யத் தொடங்கினேம். குழந்தைகள் தங்கள் விருப்பம் போல அவைகளைத் தேர்ந்தெடுக்க விட்டோம். அவை சிலவற்றையே தேர்ந்தெடுத்தன. மற்றவை, உபயோகிக்கப்படாமல் அப்படியே கிடந்தன. இவற்றைக் கண்ட நாங்கள் உபயோகிக்காதனவற்றை ஒதுக்கினேம். எங்களுடைய இரண்டொரு பள்ளிக்கூடங்களில் ஒதுக்கப்பட்டவை போக மீதியிருப்பவையே இப்பொழுது எமது முறையில் கையாண்டுவரும் துணைக்கருவிகள் என்று எண்ணிவிடக் கூடாது. உலகத்தின் பல்வேறு நாடுகளிலும் பயிற்சி செய்து பார்த்த பிறகே நாங்கள் இம்முடிவுக்கு வந்திருக்கிறேம். ஆதலால், இந்தப் பண்டங்கள் குழந்தைகளாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டவை என்று கூசாமல் சொல்லிவிடலாம். எல்லாக் குழந்தைகளாலும் விரும்பப்பட்ட பொருள்களும் இருப்பதைக் கண்டோம்; இவற்றை முக்கியமான பொருள்கள் என்று கருதினேம். குழந்தைகள் ஏதோ ஒரு சமயத்தில் மட்டும் பயன்படுத்திய பொருள்களும் இருந்தன. இவை பெரும்பாலாரான முதியோர் நம்பிக்கைகளுக்கு மாறுகத் தோன்றின. இதுவும் எல்லா நாடுகளிலும் நடைபெற்றது. எங்களுடைய நேர்மையாக்கப்பட்ட குழந்தைகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும்படி எங்கெங்கு அனுமதித்தார்களோ, அங்கங்கெல்லாம் ஒரே விதப் பலனைப் பெற்றேம். சில பூச்சிகள் இருக்கின்றன. அவை தமக்குத் தகுந்த குறிப்பிட்ட மலர்களுக்கே எப்பொழுதும் செல்கின்றன. இத்தகைய பூச்சிகள் என் நினைவுக்கு வந்தன. இவற்றிலிருந்து இப்பொருள்கள்

குழந்தைகளுக்குத் தேவைப்படுகின்றன என்பது எனக்கு நன்ருகத் தெளிவாயிற்று. **தன்னை ஆக்க உதவி அளிக்கும் பொருள்களையே ஒரு குழந்தை தேர்ந்தெடுக்கிறது.** முதலில் நாங்கள் பல பொம்மைகளை வைத்திருந்தோம். ஆனுல்,குழந்தைகள் எப்பொழுதும் அவற்றை விலக்கியே வந்தன. அவற்றின் கருத்து அப்பொம்மைகளின்மேல் அவ்வளவாகச் செல்லவில்லை. பல நிறங்களைக் காட்டுவதற்கும் பல ஏற்பாடுகள் அவர்கள் முன் வைக்கப்பட்டிருந்தன. ஆனுல், அவற்றுள் ஒரு வகையையே, அதாவது இக்காலத்தில் எங்கும் உபயோகத்திலிருக்கும் பட்டு நூல் சுற்றப்பட்ட பட்டைகளையே தேர்ந்தெடுத்தன. அது அப்படித்தான் என்பது ஒவ்வொரு நாட்டிலும் உறுதிப்படுத்தப்பட்டது. 'பொருள் எந்த உருவத்தில் இருக்க வேண்டும்? வண்ணத்தின் செறிவு எத்தகையதாயிருக்க வேண்டும்?' என்பவற்றையெல்லாம் குழந்தைகளின் வழி காட்டலுக்கு விட்டு விட்டோம். குழந்தைகளுக்கு இவ்வாறு குறிப்பிட்ட அளவு பண்டங்கள் அளிக்கப்படுவதால் வகுப்பின் சமூக வாழ்வுடனும் அவை தொடர்பு கொண்டிருக்கின்றன. அளவுக்கு மீறின பண்டங்கள் இருந்தாலோ, அல்லது முப்பது நாற்பது குழந்தைகளுக்கு ஒரு **முழு அடுக்கு**[1] அதிகப்படியாக இருந்தாலோ, அது குழப்பத்தை உண்டு பண்ணும். **பல குழந்தைகள் இருந்தாலும் நாங்கள் மிகக் குறைந்த சாமான்களையே வைத்திருக்கிறோம்.**

**ஒவ்வொரு பொருளிலும் ஒரே ஒரு மாதிரிதான் இருக்கிறது.** ஒரு குழந்தைக்கு வேண்டிய பொருளை மற்றொரு குழந்தை உபயோகித்துக்கொண்டிருந்தால், இந்த இரண்டாம் குழந்தை நேர்மையாக்கப்பட்ட குழந்தையாய் இருந்தால், அந்தப் பொருளைக்கொண்டு முதல் குழந்தை தன் வேலையை முடித்துக்கொள்ளும் வரை காத்திருக்கும். இதனுல் முக்கியமான சமூகச் சால்புகள், அல்லது கூடிவாழ் சால்புகள் பிறக்கின்றன. **மற்றவர்களுடைய தொழிலை நாம் மதிக்க வேண்டும்** என்பதைக் குழந்தை உணர்கிறது. 'இப்படி நீ மதிக்க வேண்டும்,' என்று யாரோ ஒருவர் சொன்னதாலன்று; ஆனுல், அதனுடைய அன்றாட வாழ்க்கையின் அனுபவங்களால் இவ்வுண்மையை உணர்கின்றது. பல குழந்தைகளுக்கும் சேர்ந்து ஒரே ஒரு மாதிரிதான் இருக்கிறது.[1] ஆதலால், காத்திருப்பதைத் தவிர வேறு வழியில்லை. இம்மாதிரி ஒரு நாளின் ஒவ்வொரு மணியிலும், இப்படிப் பல ஆண்டுகள் நடந்து வருவதால், மற்றவர்களை மதிப்பதும், தன்னுடைய முறை வரும் வரை காத்திருப்பதுமாகிய எண்ணம் வாழ்க்கைப் பழக்கமாகி, வரவர இன்னும் முதிர்ச்சி பெறுகிறது.

இதிலிருந்து ஒரு மாறுதல், ஓர் **இணங்கு திறன்**[2] தோன்றுகிறது. சமூக வாழ்வே பிறப்பெடுப்பதைத் தவிர வேறென்ன இது?

---

1. Complete set, 2. Adaptability

அவரவர் விருப்பத்தை ஒட்டியே சமூக வாழ்வு நிலைபெற்றிருப்ப தில்லை; ஆனால், ஒன்றாக இணைக்கப்பட வேண்டிய பல செயல்களின் கூட்டால் நடைபெறுகிறது. தங்களுடைய அனுபவங்களிலிருந்து மற்றொரு நற்குணம் குழந்தைகளிடம் வளர்கிறது. அது பொறுமை. உள் தூண்டுதலை உள் துடிப்பால் தடுக்கின்றதே பொறுமையாகும். எனவே, நற்குணங்கள் என்று வழங்கப்படும் சால்பின் பண்புக் கூறுகள் தம்மியல்பாகத் தோன்றுகின்றன. இம்மாதிரியான நன் னெறியை மூன்றாண்டுக் குழந்தைகளுக்கு நம்மால் கற்பிக்க இயலாது; ஆனால், அனுபவத்தால் இயலும். மற்றச் சூழ்நிலைகளில் நேர்மை யாக்கப்படுவது தடைபடுகின்றமையால், குழந்தைகள் தங்களுக்கு வேண்டிய சாமான்களுக்காக ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொள்வதையே பொதுமக்கள் பார்த்திருக்கின்றார்கள். அக்காரணத் தால் எங்கள் குழந்தைகள் பொறுமையாய்க் காத்துக்கொண்டிருந்தது அவர்களுக்கு அதிசயமாய் இருந்தது. 'அது சரி. இந்தச் சிறு குழந்தைகள் எவ்வளவு ஒழுங்காக நடந்துகொள்கின்றன! இந்தச் சிறு பிள்ளைகளுக்குக் கட்டுப்பாட்டை எப்படிப் போதிக் கிறீர்கள்?' என்று பலர் கேட்டிருக்கின்றனர். நானா போதித்தேன்? அதிக கவனத்துடன் நாங்கள் ஆயத்தப்படுத்திய சூழ்நிலையும் அதில் குழந்தைகள் கண்ட சுதந்தரமும் இவற்றுக்குப் போதித்தன. இந்த ஏதுக்களால் மூன்றாண்டிலிருந்து ஆறாண்டு வரையுள்ள குழந்தை களுள் இது வரை காணப்படாத குணங்கள் தாமாகவே தோற்ற மளிக்கலாயின.

சமூக வாழ்வுக்கு ஆயத்தமாகும் இந்த முதற்பகுதியில் முதிர்ந் தோர் குறுக்கிடும் பொழுது அநேகமாகப் பிழை செய்கின்றனர். குழந்தைகள் கோட்டின்மேல் நடந்துகொண்டிருக்கும்[1] பொழுது மற்றக் குழந்தைகளுக்கு எதிர்முகமாக ஒரு குழந்தை நடக்கலாம். ஒருவரோடொருவர் மோத வேண்டிய நிலைமை ஏற்படுகிறாற்போலத் தோன்றலாம். நம்முடைய உள் தூண்டுதல் என்ன? அந்தக் குழந் தையைப் பற்றித் திரும்பிப் போகச் செய்வதாகும். ஆனால், அக் குழந்தை தன்னை நல்ல முறையில் கவனித்துக்கொள்கிறது; சிக்கலை விடுவித்துக்கொள்கிறது. எப்பொழுதும் ஒரே மாதிரியாக அன்று; ஆனால், எப்பொழுதும் திருத்திகரமாக. அத்தகைய சிக்கல் ஒவ்வோர் அடியெடுப்பிலும் நிறையாய் இருக்கிறது. இவற்றைச் சரிக்கட்டு வதில் குழந்தைகளுக்கு நிறைந்த இன்பம் தோன்றுகிறது. நாம் குறுக்கிட்டோமானால், அவற்றுக்கு எரிச்சல் கிளம்பிவிடுகின்றது. அவற்றின் போக்கிலே விட்டுவிட்டால், அதற்கு ஒரு வழி கண்டு பிடித்துக்கொள்கின்றன. இவையெல்லாம் சமூக அனுபவங்கள்.

---

1. மான்டிசோரி முறையில் குழந்தைகள் தரையில் கோட்டின் மேல் அடிமேல் அடி வைத்துச் செல்வது ஒரு பயிற்சி.

எந்த ஆசானாலும் அமைத்துக் கொடுக்க இயலாத நிலைமைகளில் ஒழுக்கபடி நடந்துகொள்ள இந்த அனுபவம் அடிக்கடி பயிற்சி அளிக்கிறது. சாதாரணமாக இதற்கு விரோதமாக ஆசிரியை குறுக்கிடுகிறாள். ஆனால், அவளுடைய பரிகாரம் குழந்தைகளுடையதற்கு விரோதமானது. அது அந்தக் குழுவினையே கலைத்துவிடுகிறது. ஏதோ தனிப்பட்ட இரண்டொரு விஷயங்களைத் தவிர, பொதுவாகக் குழந்தைகளை அப்படியே தொந்தரவு பண்ணாமல் விட்டுவிட வேண்டும்; அவைகளே தங்கள் சிக்கல்களைத் தீர்த்துக்கொள்ள விட்டுவிட வேண்டும். அப்பொழுது அவை எவ்வாறு நடந்துகொள்கின்றன என்பதைப் புறத்திருந்து கவனிக்க இயலும். இதைப்பற்றி மிகக் குறைவான அளவுதான் வெளியாகியிருக்கிறது. இம்மாதிரிப் பல தினசரி அனுபவங்களாலேயே சமூக ஒழுக்கம் என்னும் ஒன்றும் உருப்பெறுகிறது. நேர்முறை[1]யை அனுசரிக்கின்ற ஆசிரியர்களால் சமூக நடத்தை எவ்வாறு மான்டிசோரி பள்ளிக்கூடத்தில் வளர்க்கப் படுகிறதென்பதைப் புரிந்துகொள்ள இயலாது. இந்தப் பள்ளிகளில் கல்விக்குகந்த சாதனங்கள் அளிக்கப்படுகின்றதோடு, கூடி வாழ்தலுக்குகந்த சாதனங்களும் அளிக்கப்படுகின்றன என்பதை அவர்கள் எண்ணுகிறதில்லை. 'குழந்தை எல்லாம் தானே செய்துகொண்டால் பிறகு கூடி வாழ்வதெங்கே?' என்று அவர்கள் கேட்கின்றார்கள். கூடி வாழ்வதென்ன? சமூகச் சிக்கல்களைத் தீர்ப்பதுதானே? எல்லாருக்கும் ஏற்றவையான குறிக்கோள்களைப் பின் பற்றுவதும் நல்ல முறையில் நடந்துகொள்வதுந்தானே கூடி வாழ்வது என்பது? மேலே குறிப்பிட்டவர்களுக்குச் சமூக வாழ்வு, கூடி வாழ்வு என்பனவெல்லாம் பக்கம் பக்கம் உட்கார்ந்துகொண்டு வேறொருவர் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருப்பது போலும்! ஆனால், கூடி வாழ்வது என்பது அதற்கு நேர் மாறானது.

சாதாரணப் பள்ளிக்கூடங்களில் விளையாட்டு நேரங்களிலும் உல்லாசப் பிரயாணங்களின் போதுந்தான் குழந்தைகளுக்குக் கூடி வாழ அவகாசம் கிட்டுகிறது. ஆனால், எங்கள் குழந்தைகள் சதா செயல் ஆற்றி வரும் ஒரு சமுதாயத்துடன் எப்பொழுதும் வாழ்ந்து வருகின்றன.

## கூடி வாழ்தல்

வகுப்புகள் ஓரளவுக்குப் பெரியவையாய் இருக்கும் பொழுது சால்பு வேற்றுமைகள் மிகவும் தெளிவாகக் காட்சி அளிக்கின்றன. அப்பொழுது அகன்ற அனுபவங்களைப் பெறலாம். சிறு வகுப்புகளில் இது அவ்வளவு சுலபமன்று. கூடி வாழ்தலாலேயே நிறைவின் உயர்மட்டங்கள் உருவாகின்றன.

1. Direct method

இக்குழந்தைச் சமூகத்தின் உறுப்பமைதி[1] என்ன? அது எப்படியோ உருப்பெற்றிருக்கிறது. ஆனால், தற்செயலானதன்று. இந்தச் சிறு உலகத்துக்குள் குடியேறியிருக்கும் குழந்தைகள் ஒரே வயதினவல்ல. மூன்றாண்டிலிருந்து ஆறாண்டு வரையுள்ளவை இங்குக் கூடியிருக்கின்றன. சாதாரணப் பள்ளிக்கூடங்களில் இம் மாதிரி நடைபெறுவதில்லை. முதிர்ந்தவன் ஒருவன் அறிவில் குறைந்தவனாய் இருந்தால், ஒரு வேளை கலந்திருக்கலாம். சாதாரணமாக வகுப்பு வாரியாகப் பிரிப்பது, அடிப்படையில் வயதைப் பொறுத்திருக்கும். எங்களுடைய பள்ளிகளில் காணப்படும் செங்குத்து வகைப் படுத்தல் (நிறுதிட்ட வகைப்படுத்தல்)[2] ஏதோ ஒரு சில வேறுபள்ளிகளில் காணலாம். ஒரு வயதுக்கு ஒரு வகுப்பு என்று எங்களுடைய ஆசிரியர்கள் ஏற்பாடு செய்ய முனைந்தபொழுது இதனால் என்னென்ன தொல்லைகள் விளைந்தன என்பதைக் குழந்தைகளே காட்டின. வீட்டிலும் அப்படியேதான். ஆறு குழந்தைகளைப் பெற்ற தாய்க்கு அவற்றை மேலாண்மை செய்வது எளிதாய் இருக்கிறது. ஆனால், இரட்டைப் பிள்ளைகள் இருக்கும் பொழுதோ, அல்லது அதே வயதுடைய வேறு குழந்தைகள் சேர்க்கப்பட்ட பொழுதோ, பிரச்சினைகள் நிறைந்த தொல்லையுடையனவாய் மாறின. அதே சமயத்தில் ஒரே பொருள் வேண்டும் என்று வம்பு செய்யும் குழந்தைகளை வைத்துக் கொண்டு இருப்பதற்குள் சலிப்புத் தட்டிவிடும். ஒரே குழந்தையையுடைய தாயைவிட ஆறு குழந்தைகளையுடைய தாய் எவ்வளவோ மேலாய் இருக்கிறாள். குழந்தைகளை மேலாண்மை செய்வது வம்பானதாய் இருக்கிறது, அவற்றைக் கெடுத்துவிட்டதாலன்று. அவற்றுக்குத் தோழமை இல்லாததால் அவை வம்புக்காரர்களைப் போலத் தோன்றுகின்றன. பின் பிறந்த குழந்தைகளைவிட முதல் குழந்தையால் பெற்றோர் அதிக துன்பம் அடைகின்றனர். இதற்குக் காரணம், தமக்குள்ள அனுபவக்குறைவு என்று சொல்லிக்கொள்கின்றனர். ஆனால், உண்மையான காரணம் என்னவென்றால், பின் பிறந்த குழந்தைகளுக்குத் தோழர் இருக்கின்றனர் என்பதே.

கூடி வாழ்வதில் ஒரு மகிமை என்னவென்றால், அதில் பல வகை மக்கள் கலந்திருப்பதேயாகும். முதிர்ந்தோர்க்கென்ற ஓர் இல்லத்தை விடச் சலிப்புத்தட்டுவதுவேறெதுவும்இருக்க இயலாது. வயதுப்பிரகாரம் பிரித்து வைப்பதைப் போலக் கொடுமையானதும் மனிதத் தனமல்லாததும் வேறெதுவும் இருக்க இயலாது. குழந்தைகள் விஷயத்திலும் அது பொருந்தும். அது கூடி வாழ்வின் கட்டை அறுத்தெறிகிறது. வளர்ச்சிக்குரிய உணர்வைத் தடை செய்கிறது. பெரும்பாலான பள்ளிக்கூடங்களில் ஆண் பெண் என்று முதல் பிரிவினை செய்கின்றனர். பிறகு வயதுக்குத் தகுந்த அளவில் ஏறத்தாழ ஒவ்வொரு

1. Constitution, 2. Vertical classification

வயதுக்கு ஒவ்வோர் அறை என ஒதுக்கிவிடுகின்றனர். இது அடிப்படையான ஒரு தவறுதல் ஆகும். இது பல கெடுதல்களைத் தோற்றுவிக்கிறது. இது செயற்கைப் பிரிவினை. இது கூடி வாழுமுணர்ச்சிகளை வளரவொட்டாமல் தடுக்கிறது. எம் பள்ளிகளில் ஆண் பெண் என்று பிரிக்கப்படாமல், இருவரும் கலந்திருப்பர். ஆனால், சிறுவர்களையும் சிறுமிகளையும் ஒன்றாகச் சேர்த்தல் அவ்வளவு இன்றியமையாததன்று. வேண்டுமானால், வெவ்வேறு பள்ளிக்கூடங்களுக்கு அவர்கள் போகலாம். முக்கியம் எதுவென்றால், வயதுக் கலப்பு. வெவ்வேறு வயதுடைய குழந்தைகள் ஒன்றுக்கொன்று உதவி செய்துகொள்கின்றன என்பதை எம் பள்ளிகள் எடுத்துக்காட்டியிருக்கின்றன. பெரியவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று சிறியவர்கள் பார்க்கிறார்கள். அவர்களிடம் விளக்கம் கேட்கின்றார்கள். விளக்கமும் உடனே தரப்படுகிறது. போதனையும் நல்ல பலனளிக்கக் கூடியது. நம் மனத்துக்கும் மூன்றாண்டுக் குழந்தையின் மனத்துக்கும் உள்ள இடைவெளியைவிட ஐந்தாண்டுக் குழந்தையின் வயதுக்கும் மூன்றாண்டுக் குழந்தைக்கும் உள்ள இடைவெளி மிகக் கம்மியானது. நாம் அக்குழந்தைக்குப் போதிப்பது கடினமாய் இருக்கிறது. ஆனால், ஐந்தாண்டுக் குழந்தைக்கு அப்படியன்று. இருவர்க்குமிடையில் (மூன்று வயதுக்கும் ஐந்து வயதுக்கும் இடையில்) ஒரு தொடர்பும் **இசைவும்**[1] இருக்கின்றன. இத்தகையவற்றைச் சிறு குழந்தைக்கும் பெரியவர்களுக்கும் இடையில் காண்பது அரிது.

மூன்று வயதுக் குழந்தைக்குச் சொல்லித்தர ஆசிரியரால் இயலாதவை எத்தனையோ இருக்கின்றன. ஆனால், ஐந்து வயதுக் குழந்தை இதைச் சுலபமாகப் புகட்டிவிடும். அவ்விருவருக்கிடையிலும் இயற்கையான மனவீர்ப்பு[2] இருக்கிறது. மேலும், ஐந்தாண்டுக் குழந்தையின் செயலில் மூன்றாண்டுக்குழந்தைக்கு அக்கறை ஏற்படும். ஏனென்றால், தன் சத்திகளுக்கு அது அவ்வளவாக எட்டாததன்று. பெரிய குழந்தைகள் இளைய குழந்தைகளுக்கு வீரர்களும் ஆசிரியர்களும் ஆகிவிடுகின்றன. சிறிய குழந்தைகள் வயதில் சற்றுப் பெரிய குழந்தைகளைக் கண்டு மகிழ்ச்சி கொள்வனவாகிவிடுகின்றன. சிறியன பெரியனவற்றிடமிருந்து **உயிர்ப்பூட்டுதலை**[3] எதிர்பார்க்கின்றன. பிறகு தத்தம் வேலைகளில் ஈடுபடுகின்றன. எல்லாக் குழந்தைகளும் ஒரே வயதில் இருக்கும் மற்றப் பள்ளிக்கூடங்களில் நுண்ணறிவில் மேம்பட்டவர்கள் சுலபமாக மற்றவர்களுக்குச் சொல்லிக்கொடுக்க இயலும். ஆனால், இதை ஒரு பொழுதும் ஆசிரியர் அனுமதிப்பதில்லை. அறிவில் குறைந்தவர்களால் முடியாதபோது ஆசிரியர் வினாக்களுக்கு இவர்கள் விடையளிப்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய இயலாது. இதன் பலன் என்ன ? இவற்றின் நுண்ணறிவு பிறரிடம் பொறாமை

1. Harmony, 2. Mental osmosis, 3. Inspiration

யைத் தூண்டிவிடுகிறது. சிறு குழந்தைகளிடம் பொருமை இருப்பது அரிது. தன்னைவிடப் பெரிய குழந்தைக்கு அதிகம் தெரிகிறதென்று சிறிய குழந்தை வெட்கப்படுவதில்லை. ஏனென்ருல், இவைகளும் பெரியனவாகும்பொழுது தாங்களும் அத்திறமைகளைப் பெறும் என்று கருதுகின்றன. இருபக்கத்திலும் அன்பும் போற்றுதலும் இருக்கின்றன. இது மெய்யான சகோதரதத்துவம் அல்லவா ? பழையமாதிரிப் பள்ளிக்கூடங்களில் வகுப்பின் தரத்தை உயர்த்துவதற்கு வெல்லு முயற்சி[1] ஒன்றுதான் இருந்தது. ஆனுல், இதுவும் உட்குழிவும்[2] கூடிய வாழ்வுக்கு விரோதமானதுமான அழுக்காறு, வெறுப்பு, மனத் தாழ்மை ஆகியவற்றை அடிக்கடி தோற்றுவித்துவிடுகிறது. நல்லறிவு படைத்த குழந்தைகள் தற்பெருமை தோன்றியதால் மற்றவற்றை அடக்கி ஆண்டன. ஆனுல், எங்கள் பள்ளிக்கூடங்களிலோ, ஐந்து வயதுக்குழந்தை இளைய குழந்தைக்குப் பாதுகாப்பென எண்ணிக் கொள்கிறது. நடைமுறையில் இந்தப்பாராட்டும் பாதுகாப்புச் செய லும் எவ்வளவு ஆழமானவை என்பதைப் பார்த்து நம்மால் நம்பக்கூட இயலாது. அன்பினுல் பிணைக்கப்பட்டு இவ்வகுப்பு ஒரு குழுவாகி விடுகிறது. முடிவில் குழந்தைகள் ஒவ்வொன்றின் சால்புகளையும் தெரிந்துகொண்டு அதனதன் மதிப்புக்குத்தக்க உணர்ச்சி காட்டி வரு கின்றன. பழைய முறைப் பள்ளிக்கூடங்களில் அடிக்கடி சொல்லிக் கொள்வதென்னவென்ருல், 'இன்னுர் முதல் பரிசு பெற்ருர்,' அல்லது 'இந்தப் பையன் பூஜ்ய மதிப்பெண் பெற்ருன்,' என்பது, இந்த வகை யில் உண்மையான தோழமை வளர்ச்சி பெருது. எனினும், குழந்தை யின் சூழ்நிலையை ஒட்டிக் கூடி வாழும் சால்புகளும் கூடி வாழாச் சால்புகளும் வளரும் பருவம் இதுவேயாகும். அவற்றின் தொடக்கம் இங்கிருந்துதான் ஆரம்பமாகிறது.

ஐந்து வயதுக் குழந்தை மற்ருெரு குழந்தைக்குப் பாடம் சொல் லிக்கொடுத்தால், மூத்த குழந்தையின் வளர்ச்சி தடைபடும் என்று மக்கள் பொதுவாக அஞ்சுகின்ருர்கள். முதலாவது, அக்குழந்தை எந்நேரமும் பாடம் கற்பிக்கிறதில்லை. அதன் சுதந்தரம் மதிக்கப்படு கிறது. மேலும், கற்பிப்பதனுல் தனக்குத் தெரிந்தது இன்னும் நல்ல தெளிவுடன் தனக்கு விளங்குகின்றது. மற்றக் குழந்தைக்குச் சொல்லிக்கொடுப்பதற்கு முன் மூத்த குழந்தை தனக்குத் தெரிந்த அறிவைப் பாகுபடுத்தித் திருத்தியமைக்கவேண்டியிருக்கிறது. ஆத லால், அதனுடைய தியாகம் பயன் தாராமல் போவதில்லை.

மூன்று வயதிலிருந்து ஆறு வயது வரையுள்ள குழந்தைகளின் வகுப்பு ஏழு ஒன்பது வயதுக் குழந்தைகளின் வகுப்பிலிருந்து எல்லை தாண்ட இயலாதபடி பிரிக்கப்பட்டிருப்பதில்லை. இம்மாதிரி மேல்

1. Emulation, 2. Depression

வகுப்பிலிருந்து ஆருண்டுக் குழந்தைகள் புதுக் கருத்துகளைப் பெற லாம். ஒன்றுக்கொன்று பிரிக்கப்படும் சுவர்கள் எல்லாம் குழந்தைக்கு இடுப்புயரந்தான் இருக்கும். ஒரு வகுப்பிலிருந்து மற்ருென்றுக்கு எளி தாகப் போகக்கூடியபடி வழிகளும் உண்டு. ஓர் அறையிலிருந்து மற்ருேரறைக்குக் குழந்தைகள் ஒரு தடையுமின்றிச் செல்லலாம். மூன்ருண்டுக் குழந்தை ஏழெட்டொன்பது வயதுக் குழந்தைகளின் அறைக்குட்சென்ருல், அது அங்கு அதிக நேரம் தங்குவதில்லை. ஏனென்ருல், தன்க்குப் பயனளிப்பது எதுவும் அங்கிருப்பதாக அதற்குத் தோன்றுவதில்லை. வகுப்புகளுக்கு வரம்புகளுண்டு; ஆனல், தடை இல்லை. அதனல், எல்லாக் குழுக்களும் ஒன்ருே டொன்று தொடர்பு கொள்ளலாம்.

ஒவ்வொரு குழந்தைக்கும் குறிப்பிட்ட இடம் இருக்கிறது. ஆனல், அது தனியாக ஒதுக்கி வைக்கப்படுவதில்லை. ஒரு நுண் ணறிவு உல்லாச நடைக்கு ஒவ்வொரு குழந்தையும் வேண்டுமானல் போகலாம். சதுர மூலத்தைக் கண்டுபிடிப்பதற்காக ஒன்பதாண்டுக் குழந்தை மணிகளை உபயோகித்துக்கொண்டிருப்பதை மூன்ருண்டுக் குழந்தை பார்க்கலாம். இரண்டாம் குழந்தை என்ன செய்துகொண் டிருக்கிறது என்று சிறு குழந்தை அதைக் கேட்கலாம். மூத்த குழந் தையின் விடைக்குத் தனக்குப் பொருள் விளங்காவிடின், இதைவிட அக்கறையூட்டும் பொருள்கள் நிறைந்த தன் அறைக்கே அது திரும்பி வந்துவிடுகிறது. ஆனல், ஆருண்டுக்குழந்தை ஒன்பதாண்டுக் குழந்தை செய்துகொண்டிருப்பதை ஓரளவுக்குப் புரிந்துகொள்ளலாம்; கவனிப்பதற்காக அங்கேயே சற்றுத் தங்கியிருக்கலாம். அதி லிருந்து ஏதோ சிறிது தெரிந்துகொள்ளலாம். இத்தகைய சுதந்தரம் ஒவ்வொரு நிலையிலும் புரிந்துகொள்வதன் அளவு என்ன என்பதைக் கவனிக்கின்றவர் அறிந்துகொள்ள உதவி புரிகிறது. பன்னிரண்டு பதினன்கு ஆண்டுக் குழந்தைகள் சதுரமூலம் கண்டுபிடிப்பதில் ஈடு பட்டிருப்பதை எட்டு ஒன்பது வயதுக்குழந்தைகள் பார்த்துப் புரிந்து கொள்ள இயலும் என்பதை நாங்கள் நம்பும்படி இச்சம்பவங்கள் செய் தன. அதே போல எட்டாண்டுக்குழந்தைகளால் பீஜ கணிதத்தைப்[1] புரிந்துகொள்ள இயலும் என்று அவை எங்களை உணரவைத்தன. ஒரு குழந்தையின் வளர்ச்சி முன்னேற்றம் அதன் வயதைப் பொறுத் ததுமட்டுமன்று. தன்னைச் சுற்றிலும் நடைபெறுவதைக் காணும் சுதந்தரத்தையும் பொறுத்திருக்கிறது.

எங்களுடைய பள்ளிக்கூடங்கள் உயிருள்ளவை. தங்களைவிடப் பெரியவைகள் செய்து வரும் தொழில்கள் இவையனவற்றின் உள்ளங்

1. Algebra

களை ஊக்கத்தால் நிறைத்துவிடுகின்றன. தங்களுக்குத் தெரிந்ததை இளையவற்றுக்குச் சொல்லிக்கொடுப்பதில் மூத்தவை மகிழ்ச்சி அடை கின்றன. தாழ்வு மனப்பான்மை அல்லது தாழ்வுச் சிக்கல் எதுவு மில்லை. தெய்விகச்சத்தியை ஒன்றேடொன்று பரிமாறிக்கொள்வதனுல் நல்வாழ்வான ஒரு நேர்மையை ஒவ்வொன்றும் பெறுகின்றது.

இதுவும் இதைப்போன்ற இன்னும் பலவும் எங்கள் பள்ளிக்கூடங் களில் மிக ஆச்சரியகரமாய் இருப்பன போல முதலில் தோன்றியவை எல்லாம் இயற்கையான வழிகளின் தொழிலால் ஏற்பட்டவை என்ற உண்மை வெளியாயிற்று.

இக்குழந்தைகளின் நடத்தையையும், சுதந்தரச் சூழ்நிலையில் இவை ஒன்றேடொன்று தொடர்பு கொள்ளும் வகையையும் கூர்ந்து கவனிக்கும்பொழுது சமூகத்தின் இரகசியங்கள் வெளிப்படுகின்றன. இவைகளெல்லாம் மென்மையும் நயமும் பொருந்திய மெய்ந்நிகழ்ச்சி கள். இவற்றை ஆய்தற்கு ஒரு வகைத் தெய்விகச் சூட்சுமதரிசினி தேவைப்படுகிறது. ஆனுல், இவற்றின் அக்கறை அளவு கடந்தது. மனிதனின் உண்மையான நிலையை இவை நமக்குக் காட்டுகின்றன. ஆதலால், எங்களுடைய பள்ளிக்கூடங்களை உளவியல் ஆராய்ச்சி நிலையங்கள் என்று நாங்கள் நம்புகிறேம். ஆராய்ச்சிக்கூடம் என்று சாதாரணமாகக்கொள்வது போலன்று ; குழந்தைகளைக் கூர்ந்து கவ னிப்பதற்கு இவை தனிப்பட்ட முறையில் தகுந்தவைகளாய் இருக் கின்றன. இன்னும் சில கவனிக்கத்தக்க மெய்ந்நிகழ்ச்சிகள் பின் வருவன :

நாம் எடுத்துக்கூறியது போலக் குழந்தைகள் தங்கள் சிக்கல் களைத் தாங்களே தீர்த்துக்கொள்கின்றன. ஆனுல், எவ்வாறு என் பதற்கு இன்னும் விளக்கம் தரவில்லை. குறுக்கிடாமல் நாம் அவற் றைக் கவனித்து வந்தோமானுல், பார்வைக்கு ஏதோ ஒரு புதுமை யானது தோற்றமளிக்கிறது. நாம் செய்துகொள்வது போல அவை ஒன்றுக்கொன்று உதவி புரிந்துகொள்வதில்லை. பளுவான ஒரு பொருளை ஒரு குழந்தை எடுத்துக்கொண்டு போனுல், வேறு எவரும் ஓடிப்போய் அதற்கு உதவி புரிவதில்லை. அதனதன் முயற்சிகளை அவை மதிக்கின்றன ; தேவைக்கு அவசியமிருந்தால் மட்டும் உதவி புரிகின்றன. இது நல்ல விளக்கம் தருகிறது. ஏனென்றுல், அவசிய மில்லாமல் குழந்தைமையில் பிறர் உதவி செய்யக்கூடாதென்பதை உள்ளுணர்வால் அவை மதிக்கின்றன என்பது விளங்குகிறது. ஒரு நாள் ஒரு சிறு குழந்தை க்ஷேத்திர கணித அட்டைகளையும், மர உரு வங்களையும் தரைமேல் பரப்பி வைத்திருந்தது.[1] அந்தப் பள்ளிக்கூட

1. அவை மொத்தத்தில் நூறு இருக்கும்

ஜன்னலுக்கு நேராகக் கீழே தெருவில் ஓர் ஊர்வலத்தின் முன் சிலர் பாண்டு வாத்தியம் இசைத்துக்கொண்டு சென்றனர். இதைத் தவிர மற்றக் குழந்தைகள் எல்லாம் வேடிக்கை பார்க்க ஓடிவிட்டன. இத் தனை வேலையும் அப்படியப்படியே கிடக்க விட்டுவிடுவதென்று இக் குழந்தை கனவிலும் விரும்பாது. இவைகளெல்லாம் அதனதன் இடத்தில் ஒழுங்காக வைக்கப்பட வேண்டும். அந்தச் சமயத்தில் வேறெவரும் இதற்குத் துணைபுரிய முன்வருவதாகக் காணப்படவில்லை. அந்த ஊர் வலத்தைக் காண வேண்டுமென்ற ஆவலில் இதன் கண் களில் நீர் கலங்கலாயிற்று. மற்றவர் இதைக் கவனித்தவுடன் பலர் திரும்பி இதன் உதவிக்கு ஓடி வந்தனர். ஒரு நெருக்கடியான நிலை மையைப் பகுத்து உணரக்கூடிய இம்மென்மையான சத்திகள் வயது வந்தவர்களிடம் காணப்படுவதில்லை. பெரியவர்கள் பெரும்பாலும் தேவைப்படாதவைகளுக்கெல்லாம் உதவி புரிகின்றார்கள். நற்பழக் கம் என்ற பெயரில் எத்தனை பெரியவர்கள் மேசையின் அருகே உட் காரப் போகின்ற மகளிருக்கு நாற்காலியை அருகில் தள்ளிக்கொடுக்க முன் வருகிறார்கள் ! அவ்வம்மையார் தாமே செய்துகொள்ளத்தக்க உடல் நலம் பெறாதவரல்லர். படிக்கட்டு இறங்கும் பொழுது தம் கையை நீட்டி அம்மையாருக்கு உதவி புரியச் சிலர் வருவதையும் காண்கிறோம். அவருக்கு அவ்வுதவி ஒன்றும் தேவையில்லைதான். ஆனால், உண்மையான தேவை எற்படும்பொழுது எல்லாம் மாறிவிடு கின்றன. அவசியமான தேவை ஏற்படும் பொழுது எவரும் உதவி புரிய ஓடி வருவதில்லை. ஆனால், தேவை இல்லாத பொழுது ஒவ் வொருவரும் உதவி புரிகின்றனர். இந்த விஷயத்தில் பெரியவர்களிட மிருந்து கற்றுக்கொள்வதற்குக் குழந்தைகளுக்கு ஒன்றுமில்லை. குழந் தைமையில் மிக்க முயற்சியைக் குழந்தை பயன்படுத்தியிருப்பதை எப்படியோ நனவிலா நிலையில் குழந்தை உணர்கிறதுபோலும்! அதை ஆழ்ந்த தேவை எனக் கருதலாம். அதனாலேதான்போலும் தன்னுதவி ஓர் இடைஞ்சலாய் இருக்கும் பொழுது மற்றவர்களுக்குக் குழந்தை உதவி புரிவதில்லை.

வகுப்பில் தொந்தரவு செய்கின்றவர்களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பது குழந்தைகளிடம் காணப்படும் அக்கறை யூட்டும் விஷயமாகும். எடுத்துக்காட்டாக, இன்னும் நேர்மைப் படுத்தப்படாமல் எங்கள் பள்ளியில் சேர்க்கப்பட்ட ஒரு புதுக் குழந்தை, இன்னும் இச்சூழ்நிலைக்குப் பொருந்தும் வகையில் நடந்து கொள்ளத் தெரியாத குழந்தை, படபடப்பாகவும், ஒவ்வொருவருக் கும் தொல்லை கொடுத்துக்கொண்டுமிருக்கின்றதென்று வைத்துக் கொள்வோம். சாதாரணமாக ஆசிரியர் என்ன செய்வார்? 'இதெல் லாம் முடியாது. இது நன்றாகவே இல்லை,' என்றோ, அல்லது, 'நீ ஒரு போக்கிரிப் பயல்,' என்றோ கண்டிப்பார்.

ஆனுல், இக்குழந்தையின் தோழர்கள் வேறுவிதமாக இதனிடம் நடந்துகொள்கிருர்கள். புதிய குழந்தையிடம் ஒரு குழந்தை நெருங்கலாம். 'உண்மைதான்; நீ போக்கிரிதான்; ஆனுல், அதைப் பற்றிக் கவலைப்படாதே; நாங்களும் வந்து சேர்ந்த பொழுது முதலில் இப்படித்தான் இருந்தோம்,' என்ற அளவுக்கு எடுத்துக் கூறலாம்.

இது புதிய குழந்தையிடம் பரிவு கண்டிருக்கிறது; ஒழுங்கீனமான நடத்தையை ஏதோ காலக் கோளாறு என்று கருதுகிறது; அக்குழந்தைக்கு ஆறுதல் அளிக்க முயல்கிறது; அக்குழந்தையிடம் காணப்படும் எல்லா நற்குணங்களையும் வெளிப்படுத்த முயற்சி செய்கிறது.

பொல்லாங்கு செய்தோரிடம் பரிவு காட்டப்படுமாயின், உலகம் எம்மாறுதல் அடையாது! நோயாளியிடம் காட்டப்படுகின்ற பரிவு நிலையைக் குற்றவாளிகளிடமும் காட்டி, அவர்களுக்கு ஆறுதலளித்தால் எப்படியிருக்கும்! மேலும், கெடுதல் செய்யுமெல்லாவற்றுக்கும் காரணம் உளநோய். அதற்கு வீட்டில் காணப்படும் நிலைமை காரணமாயிருக்கலாம்; பிறக்கும்பொழுது ஏற்பட்ட விபத்தாய் இருக்கலாம்; அல்லது வேறேதாவது ஒரு விபத்தாய் இருக்கலாம். இதைக் கண்டு மற்றவருக்கு உதவிபுரிய வேண்டும் என்ற ஆசையும் அன்பும் துடிக்க வேண்டாவா? இந்த ஒன்றே நம்முடைய சமூகத்தின் உள்ளமைப்பை உயர்த்திவிடாதா?

பூச்சாடி உடைந்து விடுவது போன்ற ஏதாவது ஒரு விபத்து ஏற்பட்டால், எம் குழந்தைகளில் நழுவவிட்ட குழந்தை மிகவும் மனக் குழப்பம் அடைகிறது. பண்டங்களை உடைப்பதில் அதற்கென்ன மகிழ்ச்சியா? 'நழுவவிடாமல் சாக்கிரதையாக எடுத்துச் செல்லவில்லையே!' என்று அது வெட்கப்படுகிறது.

பெரியவர்களுடைய உள்ளுணர்வு யாது? உடனே கத்துவது. 'இப்பொழுது அதை உடைத்துவிட்டாய். இந்தச் சாமான்களைத் தொடவேண்டாவென்று எத்தனை தரம் உனக்குச் சொல்லியிருக்கிறேன்?' என்பார்கள். அல்லது, 'உடைந்த துண்டுகளைப் பொறுக்கு,' என்று சொல்லி இம்மாதிரி கண்டிப்பதால் குழந்தையின் உள்ளத்தில் நன்னடக்கை நன்ருகப் பதியும் என்று நம்புகின்ருர்கள்.

ஆனுல், எம் குழந்தைகள் என்ன செய்கின்றன? எல்லாம் அதற்கு உதவி புரிய அருகில் ஓடுகின்றன. அவற்றின் சிறு குரலில் ஆறுதல் அளிக்கும் வகையில், 'பரவாயில்லை; இன்னெரு பூச்சாடி

நாங்கள் கண்டுபிடித்துவிடுகிறோம்,' என்று சொல்லுகின்றன. அதே சமயத்தில் வேறு சில, உடைந்த சில்லுகளைப் பொறுக்குகின்றன. வேறு சில, கீழே சிந்தின தண்ணீரைத் துடைத்துவிடுகின்றன. வலிமையில்லாதவர்களுக்குத் துணை புரிய வேண்டும் என்ற இயல் பூக்கம் அவற்றிடம் இருக்கிறது. அவற்றை ஊக்குவித்தும், ஆறு தலளித்தும் துணை நிற்கின்றன. இது கூடி வாழ்வின் முன்னேற் றத்துக்கும் உண்மையான ஓர் இயல்பூக்கமாகும்.

மருத்துவக்கலை முழுதும் இந்த ஒரு கொள்கையின் அடிப்படை யில் உருவாகியிருக்கிறது. ஆதலால், நம்மிடம் பரிவு நிலையைத் தூண்டும் வலிமையில் தளர்ந்தவர்களுக்கு மட்டுமன்றி, மனிதக் குலத்துக்கே நாம் உதவி புரிய வேண்டும். வலிமையில்லாதவர்களை யும் தாழ்ந்தவர்களையும் ஊக்குவிப்பது தவறு அன்று. அது கூடி வாழும் பொது வளர்ச்சிக்கு அளிக்கும் ஒரு நன்கொடையாகும். நேர்மைப்படுத்தப்பட்டவுடனே குழந்தைகள் தம்மிடம் இந்த நல்ல உணர்ச்சிகளைப் பெற்றிருப்பதை வெளியாக்குகின்றன. இவற்றை ஒன்றுக்கொன்று காட்டுவதோடு நின்றுவிடாமல், விலங்குகளிடத் திலும் காட்டுகின்றன.

விலங்கு வாழ்க்கையில் அன்பு காட்டல் சொல்லிக்கொடுக்க வேண்டிய விஷயம் என்பது பொதுவாகவே நம்பப்படுகிறது. ஏனென் ருல், குழந்தைகள் இயல்பாகவே விலங்குகளிடத்துக் கருணை யற்றவைகளென்றோ, அல்லது உணர்ச்சியற்றவைகளென்றோ நம்பப் படுகின்றன. ஆனால், இது மெய்யன்று. நேர்மைப்படுத்தப்பட்ட குழந்தைகளிடம் இயற்கையான சிவகாருணியம் இருக்கிறது. லேரன் என்ற ஹாலந்து நாட்டு நகரத்தில் எங்கள் பள்ளிக்கூடத்தில் ஓர் ஆடு வளர்க்கப்பட்டது. அதற்குத் தினந்தோறும் நான் தீனி கொடுப்ப துண்டு. அதன் தீனியை உயரத்தில் பிடிப்பேன். ஆடு தன் பின்னங் கால்களால் நின்று தலையை உயரத்தில் நீட்டித் தீனியைக்கௌவுவது வழக்கம். இந்த மாதிரி நிற்கக் கற்றுக்கொள்வது என் அக்கறையைக் கவர்ந்தது. அதுவும் இந்த நடத்தையால் தனக்கே வேடிக்கை தந்தது போல ஆடு நடந்துகொண்டது. ஆனால், ஒரு நாள் ஒரு சிறு குழந்தை அங்கு வந்தது; தன் கைகளால் அதன் அடி வயிற்றைத் தழுவிப் பிடித்து, அது விழாமல் தாங்கி உதவி புரிந்தது. இரண்டு கால்களில் நிற்கின்ற முயற்சி அதற்கு அதிகம் என்று கவலையுடன் கருதுவதாகச் சிறு குழந்தையின் முகங்காட்டிற்று. இது இயல்பாகக் காட்டப்பட்ட அன்பு கலந்த எண்ணம் என்பதற்கு ஐயமுண்டா?

சாதாரணமாகக் காணப்படாததொன்றை எம் பள்ளிகளில் காணலாம். அது மிகச்சிறந்ததைக் கண்டு மகிழ்ச்சியுறுவது. இக் குழந்தைகளிடம் பொறாமை இல்லாததுடன், ஏதாவது ஒன்று நல்ல

முறையில் செய்யப்பட்டால், அதை மற்றவை ஊக்கத்துடன் புகழ்வதுண்டு. அது இப்பொழுது பெருமை பெற்ற 'எழுதுவதில் வெடிப்பு' என்ற செயகையில் நடைபெற்றது. அவற்றில் முதல் வார்த்தையை எழுதிய குழந்தை ஒன்றைக் கண்டதும் மற்றவைகளிடம் பெரு மகிழ்ச்சியும் சிரிப்பும் தோன்றின. எழுதின குழந்தையை மற்றவை எல்லாம் பாராட்டும் கண்களுடன் பார்த்தன. அவ்வாறு தாங்களும் அந்தக் குழந்தையைப் பின் பற்றவேண்டுமென்பதை உணர்ந்தன. 'நானும் அதைச் செய்ய முடியும்,' என்று மற்றவை கத்தின. ஒரு குழந்தை பெற்ற வெற்றி அந்தக் குழுவையே தூண்டிவிட்டது. அதே போலவே நெடுங்கணக்கிலும் நிகழ்ந்தது. உப்புக்காகித எழுத்துகளுள் ஒவ்வொன்றையும் கொடி போல ஏற்றிக்கொண்டு அந்த வகுப்பே குதூகலத்துடன் வலம் வந்தது. அவற்றின் மகிழ்ச்சியும், எழுப்பிய பாராட்டுச் சத்தமும் கேட்ட கீழ் மாடிக்காரர், 'என்ன! என்ன!' என்று கேட்டுக்கொண்டே மாடிக்கு ஓடி வந்தனர். எழுத்துகளைக் கற்றுக்கொள்வதில் அவை அவ்வளவு மகிழ்ச்சியடைந்திருக்கின்றன என்று வந்தவர்களுக்கு ஆசிரியை விளக்கிக் கூற வேண்டியதாயிற்று.

குழந்தைகளிடம் ஒரு சமுதாய உணர்ச்சி இருக்கிறதென்பதற்குச் சான்றிருக்கிறது. இது மிக உயர்ந்த உணர்ச்சிகளின் அடிப்படையில் தோன்றுகிறது. இது அந்தக் குழுவில் ஓர் ஒற்றுமையை உண்டு பண்ணுகிறது. குழந்தைகளின் ஆளுமை நேர்மைப்படுத்தப்படும் பொழுதும், சில சூழ்நிலை வாயிலாக உள்ளுணர்வு வாழ்க்கை உயர்ந்த நிலை அடையும் பொழுதும், ஒரு வகையான கவர்ச்சி இருப்பதாக நமக்குக்காட்ட இந்த எடுத்துக்காட்டுகள் சாலும். சிறு குழந்தைகளிடத்தில் அவற்றைவிடப் பெரிய குழந்தைகள் ஈர்க்கப்படுவது போலவும், பெரிய குழந்தைகளிடம் சிறிய குழந்தை ஈர்க்கப்படுவம் போலவும்,' நேர்மையாக்கப்பட்ட குழந்தைகள் புதிது புதிதாகச் சேர்ந்திருக்கும் குழந்தைகளிடம் ஈர்க்கப்படுகின்றன. புதியவையும் ஏற்கெனவே நேர்மையாக்கப்பட்டவைகளிடம் ஈர்க்கப்படுகின்றன.

# 23. கூடிவாழ் குழுவில்[1] பிணைவு[2]

இத்தகைய கூடிவாழ் குழுவானது நனவுள்ள மனத்தைவிட உட்கவர் மனத்தால் ஒன்றுபடுத்தப்படுவது போலத் தோன்றுகிறது. அதன் ஆக்கு முறையை உற்று நோக்க இயலும். ஓர் உடலுறுப்பின் வளர்ச்சியில் சிற்றறைகள்[3] தொழில் புரிவதை இதற்கு ஒப்பிடலாம். ஒரு கூடிவாழ் குழு இளஞ்சூல் நிலையைக் கடந்து செல்கிறதென்பது தெளிவாகிறது. இந்த நிலையைச் சிறு குழந்தைகளின் வளர்ச்சியில் தொடர்ந்து காணலாம். இக்குழந்தைகள் படிப்படியாக இம்மாதிரி நடந்துகொள்கின்றகூடிவாழ் குழு ஒன்றை உருவாக்குவதைஉணர்ந்து வருவது அக்கறையூட்டுவதாகும். தம்முடைய செயல்கள் அளிக்கப் படுகின்ற ஒரு குழுவில் தாமும் ஒரு பங்குடையவை என்று அவை உணரத்தொடங்குகின்றன. அவை இதில் ஓர் அக்கறை எடுத்துக் கொள்வது மட்டுமல்லாமல், தம் நெஞ்சாரச் சிறப்பாக இதற்குப் பணியாற்றியும் வருகின்றன. இந்த மட்டத்தை அடைந்த பிறகு குழந்தைகள் ஒருபோதும் எண்ணுமல் நடந்துகொள்வதில்லை; ஆனால், குழுவை முன் வைத்து அதன் நன்மைக்காகப் பாடு படுகின்றன.

கூடிவாழ் உணர்வின்[4] முதற்படி, குடும்பம் அல்லது இனத்தின் சத்தியை நினைவூட்டுகிறது. அது நமக்கெல்லாம் நன்ருகத் தெரிந்திருக்கிறது. இவற்றில் தனிப்பேர்வழி தன் குழுவை மதித்து, அதை நேசித்து, தன் வாழ்க்கையின் இலட்சிய முடிவாக அதைக் காக்கிறது. இந்தத் தோற்றத்தின் முதல் அறிகுறிகள் எங்களை வியக்கச் செய்தன. ஏனென்ருல், அவை நாங்களில்லாமலும், எங்கள் செல்வாக்கில்லாமலும், நடைபெற்றன. குறிப்பிட்ட வயதில் குழந்தைக்கு எப்படித் திடீரென்று பல் முளைக்கிறதோ, அப்படியே வளர்ச்சியும் நடந்துகொண்டிருக்கிறதென்பதை அறிவிக்கும் வேறு எவ்வகைச் சான்று போலவும் இவை திடீரெனத்தோன்றின. இந்த

---

1. Social group, 2. Cohesion, 3. Cells,
4. Social consciousness

ஒற்றுமை குழந்தைகளிடமிருந்து பிறக்கிறது. தானாகத் தேவைப் படுவதால் இது தோன்றியிருக்கிறது. நனவிலாச்சத்தியால் வழி காட்டப்பட்டுக் கூடிவாழ் சத்தியால் உயிரூட்டப்பட்டிருக்கும் இத் தோற்றத்துக்கு ஒரு பெயர் தேவைப்படுகிறது. இதை நான் '**கூடி வாழ் குழுவில் ஒரு பிணைவு**' என்று வழங்குகிறேன்.

இக்கருத்துக் குழந்தைகளின் தன்னியல்பான செயல்களால் எம்மிடம் தோற்றுவிக்கப்பட்டது. நாங்கள் இதைக் கண்டு பேச இயலா மல் வியப்படைந்தோம். இதற்கோர் எடுத்துக்காட்டைத் தருகிறோம். ஆர்ஜன்டைன் நாட்டுத்தூதர், எங்கள் பள்ளியிலுள்ள நான்கைந்து ஆண்டுக் குழந்தைகள் தாங்களே தொழில் புரிந்து எழுதவும் படிக்க வும் பழகுகின்றன என்றும் அதிகாரத்தால் திணிக்கப்படாத ஓர் அற்புத ஒழுக்கத்தைப் பெற்றிருக்கின்றன என்றும் கேள்விப்பட்டவர். இவற்றை அவர் நம்பவில்லை; முன்னறிவிப்பில்லாமல் எங்களுடைய பள்ளியை வந்து பார்க்கவேண்டுமென்று எண்ணினார். துரதிருஷ்ட வசமாக அன்று விடுமுறை நாளாய் இருந்தது. ஆதலால், அவர் பள்ளிக்கூடம் மூடியிருந்ததைக் கண்டார்; இதற்குக் **குழந்தை இல்லம்**[1] என்பது பெயர். இது தொழிலாளிகள் வசிக்கும் இல்லங் களின் நடுவில் இருந்தது. குழந்தைகள் தங்கள் பெற்றோருடன் இங்கு வாழ்ந்து வந்தன. தற்செயலாக ஒரு குழந்தை முற்றத்தில் இருந்தது. குழந்தை தூதருடைய சலிப்பைக் கேட்டவுடன் அவர் பள்ளியைப் பார்க்க வந்தவராய் இருப்பர் என்று யூகித்து, 'பள்ளிக்கூடம் மூடி யிருப்பதைப் பற்றிக் கவலைப்பட வேண்டா. காவற்காரரிடம் சாவி இருக்கிறது. நாங்களெல்லோரும் இங்கேதான் இருக்கின்றோம்,' என்றது. கதவு உடனே திறக்கப்பட்டது. குழந்தைகளெல்லாம் உள்ளே சென்று அவற்றின் வேலைகளைத் தொடங்கின. குழுவுக் காகப் பணி ஆற்றுவதற்கு இங்கு ஒரு சான்றிருந்தது. எவ்விதமான பரிசையும் எதிர்பாராமல் ஒவ்வொரு குழந்தையும் தனது பகுதியைச் செய்தது. தம்முடைய குழுவின் கௌரவத்திற்காக அவை ஒத்துழைத்தன. அடுத்த நாளன்றுதான் குழந்தைகளின் ஆசிரியர் இந்நிகழ்ச்சியைப் பற்றிக் கேள்விப்பட்டார். போதனையால் தூண்டப் படாத ஓர் **ஒருமுகப்பாடு**[2] இது. **வெல்லு முயற்சியோ**[3] போட்டியோ அல்லது தன்னலமோ எதுவும் இல்லாதது இவ்வொருமைப்பாடு. இது இயற்கையன்னையின் நன்கொடை. எனினும், தம் சொந்த முயற்சியால் அக்குழந்தைகள் இந்த நிலையை அடைந்திருந்தன. காக்ஹில்[4] என்பவர் தம் நூலில், 'குழந்தையின் இளமை நடத்தையை இயற்கை

---

1. The children's house, 2. Solidarity, 3. Emulation,
4. C. E. Coghill, Anatomy and the Problem of Behaviour, Cambridge University Press, 1929

அன்னேயே தீர்மானித்துவிடுகிருள்; ஆனல், குழந்தையைச் சூழ்ந்துள்ள உலகத்துடன் தொடர்பு கொண்டே இது நடைபெறும்,' என்று கூறுகிருர். கூடிவாழ் வாழ்க்கையும், ஆளுமையும் இப்படித்தான் அமைக்கப்பட வேண்டும் என்ற ஒரு திட்டத்தை இயற்கையன்னே வகுத்திருக்கிருள் என்பது தெளிவாகிறது. குழந்தைகளின் செயல்களாலேதான் இந்தத் திட்டம் நிறைவு பெறும். இதன் நிறைவுக்குத் தக்க சூழ்நிலேயில் அவை அமைக்கப்படும் பொழுது அவை நடைபெறும். கூடி வாழ்வது இயற்கையாகத்தன்னே மலர்விக்கவேண்டிய கட்டங்களே இச்செயல்களால் குழந்தைகள் நமக்கு விளக்கிக்காட்டுகின்றன. கூடிவாழ் குழுவை ஒன்றுபடுத்தும் கூட்டு வாழ்வு,[1] அமெரிக்கக்கல்வியாளர் **வாஷ்பர்ன்**[2] என்பவர் கூறும் **கூடிவாழ் ஒருமைப்பாடு**[3] என்பதற்கு ஓரளவு ஒத்திருக்கிறது. கூடிவாழ் சீர்திருத்தத்துக்கு இதுதான் திறவுகோல் என்றும், எல்லாக் கல்விக்கும் இது அடிப்படையாக ஆக்கப்படவேண்டுமென்றும் அவர் கருதுகிருர். ஒருவன் தான் சேர்ந்த குழுவுடன் தன்னே ஒன்றுபடுத்திக் கொள்ளும்பொழுது கூடிவாழ் ஒருமைப்பாடு நடைபெறுகிறது. இது நடைபெறும்பொழுது தனியாள் தன் தனி வெற்றியைவிடத் தன் குழுவின் வெற்றியையே மேலானதாகக் கருதுகிருன்.

இதை விளக்கும் வகையில் வாஷ்பர்ன் ஆக்ஸ்ஃபர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலேக்கழகப் படகுப் போட்டிகளே எடுத்துக்கூறுகிருர். ஒவ்வொருவரும் தம்மாலான முயற்சி செய்து படகை ஓட்டுகின்றனர். இதனுல், தனக்கு என்று தனியான பரிசோ மதிப்போ வாராது என்பதை உணர்ந்தும், அவர்கள் இவ்வாறு செய்து வருகின்றுர்கள். கூடிவாழ் திட்டம் ஒவ்வொன்றிலும் இதே விதி அனுசரிக்கப்பட்டால், எப்படி இருக்கும்! சாதாரணமான எளிய கைத்தொழிலிலிருந்து நாடு முழுவதையும் பாதிக்கக்கூடிய செயல் வரைக்கும் தனக்கு வரும் பெருமையைவிடத் தன் குழுவுக்கு வரும் பெருமையே சிறந்ததெனக் கருதினல், அப்பொழுது முழு மனிதக் குடும்பமே புதிதாகப் பிறக்கும். தன் குழுவுடன் தனியாள் ஒருமைப்பாடு அடைவதைப் பள்ளிக்கூடங்களில் வளர்க்க வேண்டும். ஏனென்ருல், இதுதான் நமக்கு இல்லாத ஒரு குறைபாடு. நம் நாகரிகத்தின் தோல்விக்கும் அழிவுக்கும் இக்குறைபாடே காரணமாயிருக்கிறது.

இந்த ஒருமைப்பாட்டில் குறைவில்லாத கூடிவாழ் மனிதக் குழுவை இங்கு எடுத்துக் காட்டுவோம். அதுதான் சிறு குழந்தைகளின் கூடிவாழ் குழு. அது இயற்கையன்னேயின் மந்திர சத்தியால்

---

1. Corporate life, 2. Carleton Washburn,
3. Social integration

வழி காட்டப்படுகிறது. அதை மதித்து நாம் காப்பாற்ற வேண்டும். ஏனெனில், சால்பும், **கூடிவாழ் பற்றும்**[1] எந்த ஆசிரியராலும் அளிக்க இயலாதவை. அவை வாழ்க்கையின் விளைபொருள்.

மனிதனது முடிவை ஆளுவதற்கு வயது வந்தோர் அமைத்துக் கொள்ளும் சங்கத்தை இந்த இயற்கையான கூடிவாழ் ஒருமுகப் பாட்டுடன் குழப்பிக்கொள்ளக்கூடாது. அது குழந்தைகள் மலர்ச்சி யின் கடைக்கட்டம். அது கூடிவாழ் இளஞ்சூலின் அற்புதத் தெய்விக ஆக்கமாகும்.

## ஒழுங்கமைந்த கூடிவாழ் குழு

ஆறாண்டு நிறைந்தவுடன் குழந்தையின் வளர்ச்சியில் மற்றொரு கட்டம் தொடங்குகின்றது. இக்கட்டம் இளஞ்சூற்பருவத்திலிருந்து அன்று பிறந்த கூடிவாழ் குழுவைக் குறிக்கும் வகையில் இருக்கிறது. மற்றொரு வகையான வாழ்க்கை தானாகத் தோன்றுகிறது. இந்த நிலையில் அக்குழு முழுமையான நனவு நிலையால் ஒழுங்கமைக்கப்படு கிறது. குழந்தைகள் மனிதர்களின் நடத்தைகளைக் கட்டுப்படுத்து வதற்கென்று மனிதன் அமைத்துக்கொண்டிருக்கும் வழக்கங்களையும் விதிகளையும் தெரிந்துகொள்ள விரும்புகின்றன; குழுவைக் கட்டுப் படுத்துவதற்கு ஒருவரைத் தேடுகின்றன. தலைவர்க்குப் பணிவதும் விதிகளுக்குப் பணிவதும் கூடிவாழ் குழுவின் **பொருந்து திசுக்கள்**[2] போல்வன. இந்தக் கீழ்ப்படியும் திறம் இதற்கு முந்தின இளஞ்சூல் பருவத்தில் ஆயத்தம் ஆக்கப்பட்டது என்பதை நாம் அறிவோம்

ஐந்தாறு ஆண்டு நிறைவுக்குள் நம் சிறு குழந்தைகள் ஏற் கெனவே அமைத்துக்கொண்டிருக்கும் கூடிவாழ் குழுவைப்பற்றி ஆங்கில உளவியலாராகிய **மாக்டூகால்**[3] என்பவர் வருணித்திருக் கிறார். தங்களைவிட வயதில் பெரியவர்களுக்குச் சிறு குழந்தைகள் கீழ்ப்படிகின்றன. இது அவைகளே செய்துகொள்வது. ஏதோ ஓர் இயல்பூக்கம் அவற்றைக் கீழ்படியுமாறு உந்துகிறது, இதை மாக்டூகால் **குழுவூக்கம்.**[4] என்கிறார் திக்கற்ற குழந்தைகள் தங்களைக்குழுக்களாக அமைத்துக்கொள்கின்றன; பெரியவர்கள் ஏற்படுத்திய சட்டதிட்டங் களையும் அதிகாரத்தையும் எதிர்க்கின்ற குழுவாகத் தங்களை அமைத் துக்கொள்கின்றன. இந்த இயற்கையான தேவை பெரும்பாலும்

---

1. Social sentiment, 2. Connective tissues,

3. Mc Dougall, 4. Gregarious instinct : William Mc Dougall-An Introduction to Social Psychology, Methuen, London, 1948, Revised Edition.

புரட்சிப் போக்கிலே முடிகிறது. சாரண இயக்கத்தால் இது ஒரு வகையில் **தூய்மை செய்யப்படுகிறது.**[1] சிறுவர்களும் காளைப் பருவத்தவரும் ஆகிய இரு சாராரிடமும் இயல்பாகக் கூடிவாழ் வளர்ச்சியின் உண்மையான தேவைகளுக்குச் சாரண இயக்கம் விடையளிக்கிறது.

குழந்தைப் பருவச் சங்கத்தில் புதைந்து கிடக்கின்ற பிணைவுச் சத்தி வேறு, மாக்டுகால் கூறும் குழுவூக்கம் வேறு. பின் தோன்றிய கூடிவாழ் உருவங்களெல்லாம் குழந்தைப் பருவத்திலிருந்து முதியோர் பருவம் வரை வளர்ச்சியடைகின்றன. இவைகளெல்லாம் நனவு நிலையில் ஒருங்கமைக்கப்படுகின்றன. ஒரு மனிதனோ, ஒரு தலைவனோ அளிக்கின்ற சட்டங்களை இக்குழு விரும்புகின்றது. இவன் தன்னை எல்லாரும் மதிக்கும்படியும் செய்துகொள்கிறன்

தொடர்புடன் வாழ்கின்ற வாழ்க்கை என்பது இயற்கையான ஒரு மெய்ந்நிகழ்ச்சி. ஆதலால், அது மனிதப் போக்கைச் சேர்ந்ததாகும். அது ஓர் **உயிரி**[2] போல வளர்கிறது; தன் வளர்ச்சிப் போக்கில் படிப்படியான சிறப்பியல்புகளைக் காட்டுகிறது. இந்தியக் கிராம இல்லங்களில் கைத்தறியாளர் அனுசரிக்கும் தொழிலை இங்கு விளக்கம் தரும் ஒப்புமையாகக் கொள்ளலாம்.

முதலில் வெள்ளைப் பருத்தியைப்பற்றிக் கவனிப்போம்: பருத்திக் கொட்டையைச் சுற்றிலும் பஞ்சு படர்ந்திருக்கிறது. கூடிவாழ் வாழ்க்கையில் முதலில் குழந்தையைப் பற்றியும் அது பிறந்திருக்கும் இல்லத்தைப் பற்றியும் கவனிக்க வேண்டும். பருத்திக்கு முதலில் செய்ய வேண்டுவது, செடியிலிருந்து பறித்ததும் பஞ்சில் ஒட்டிக்கொண்டிருக்கும் கொட்டைகளை நீக்குதல். காந்தியாருடைய பள்ளிக்கூடங்களில் குழந்தை செய்கின்ற முதல் தொழில் இதுவேயாகும். இது நாம் குழந்தைகளைப் பல்வேறு இல்லங்களிலிருந்து ஒன்றுகூட்டி, அவர்களுடைய குறைகளைத் திருத்தி, ஒரு முனைப்பை வளர்க்கவும் நேர்மைப்படுத்தவும் உதவி புரிவதற்கு ஒத்திருக்கிறது.

இப்பொழுது நூற்பதைப்பற்றிச் சிந்திப்போம்: ஆளுமை வளர்ச்சிக்கு இதை ஒப்பிடலாம். இது தொழிலாலும், ஒரு குழுவாய் வாழ்வதாலும் தோற்றம் பெறுகிறது. இது எல்லாவற்றிற்கும் அடிப்படை. நூல் உறுதியாகவும் நன்றாகவும் முறுக்கப்பட்டால், அத்தகைய நூலைக்கொண்டு நெய்யப்பட்ட துணியும் உறுதியாய் இருக்கும். நாம் நெய்கின்ற துணியின் குணம் அதற்கு உபயோகிக்கின்ற நூலின் குணத்தைப் பொறுத்திருக்கும்.[1] முதலில் நாம் தெளிவு

---

1. Sublimated, 2. Organism,
3. 'நூலைப்போலச் சேலை,' என்பது பழமொழி.

படுத்திக்கொள்ள வேண்டுவது இதுதான். ஏனென்றால், உறுதியற்ற நூல்களால் நெய்யப்பட்டது பயனற்றதாய் இருக்கும்.

இதற்குப் பிறகு நூலெல்லாம் ஒரு சட்டத்தின்மேல் பரப்பி ஒன்றோடொன்று தொடாமல் ஒரு போக்காகச் சிறு கொக்கிகளால் பக்கங்களில் நிலைபெறச் செய்யப்படுகின்றன. துணிக்கு இது நெசவுப் பாவாகிறது. இந்தப் பாவு நூல் இன்னும் துணியாகவில்லை. எனினும், பாவு நூலில்லாமல் துணியை நெய்ய இயலாது. நூல்கள் அல்லது இழைகள் அறுந்தாலோ, அல்லது இடம் விட்டுப் பெயர்ந்தாலோ, அதே திக்கில் உறுதியாக இழுத்துக் கட்டப்படாமலிருந்தாலோ, நூல் நாழி அதற்குள் நுழைந்து போக இயலாது. இந்தப் பாவு நூல் கூடிவாழ் பிணைவுக்கு ஒப்பாகும். மனித சங்கத்துக்கு முன் கூட்டிய ஆயத்தம் குழந்தையின் செயலின் அடிப்படையைப் பொறுத்திருக்கிறது. குழந்தைகள் குறுகிய உலகத்தில் அவற்றின் போக்குக்குத் தேவைகளால் உந்தப்படுகின்றன. இது அந்த அச்சுக்கு ஒப்பாகும். எல்லாரும் ஒரே குறிக்கோள்களைப் பெற்றவர்களாக ஒன்று சேர்வதில் முடிகிறார்கள்.

இப்பொழுது உண்மையான நெசவு தொடங்குகிறது. நாடா இழைகளுக்கு இடையே சென்று அவைகளைப் பிணைக்கிறது. தார் நூலால் அவை எல்லாம் உறுதியாக்கப்படுகின்றன. இந்தப் பகுதியை மனிதனுடைய ஒழுங்குபடுத்தப்பட்ட கூடி வாழ் குழுவுக்கு ஒப்பிடலாம். இக்குழு, சட்டங்களால் ஆளப்படுகிறது; சர்க்கார் ஒன்றால் கட்டுப்படுத்தப்படுகிறது. அதற்கு மற்றவர் எல்லாரும் பணிந்து கீழ்ப்படிகின்றனர். நல்ல துணியானால், அது தறியிலிருந்து நீக்கின பிறகு கலையாத உருவத்தில் இருக்கிறது, அத்தகைய சேலை தனியாக இருக்க இயலும். அதை நாம் உபயோகிக்கலாம். அதை அளவுகடந்த வகைகளில் உண்டாக்கலாம். தனியாளின் குறிக்கோள்களை வைத்துக்கொண்டும், எம் பள்ளிக்கூடங்களில் ஒவ்வொரு குழந்தையும் தன் விருப்பம் போலத் தனித்தனி செயல்கள் புரிவதைப் போல மனிதர் கூடி வாழ் குழுவை அமைப்பதில்லை. மனித சங்கத்தின் இறுதி உருவம் முறை செய்தலை [1] அடிப்படையாகக் கொண்டது.

எனினும், இரண்டும் ஒன்றுக்குள் ஒன்றாய்ப் பின்னிக்கிடக்கின்றன. கூடிவாழ் குழுவானது முறை செய்தலையே முழுமையும் எதிர்பார்ப்பதில்லை. அது பிணைவைப் பொறுத்தும் இருக்கிறது. இவ்விரண்டில், (முறை செய்தலும் பிணைவும்) பிணைவுதான் அடிப்படையானது. இது முறை செய்தலுக்கு அடித்தளமாகிறது. நல்ல சட்டங்களும் நல்ல அரசாங்கமும் மனிதர்களை ஒன்றாக இணைக்க இயலாது; ஒன்றாக

---

1. Organisation

நடந்துகொள்ள வைக்க இயலாது. இதை நடத்தி வைப்பது தனிப்பேர் வழிகளாலேதான் இயலும். அதுவும் ஒருமுகப்பாட்டைக் கொடுத்து ஒரு தனிக்குழுவாக்கும் வகையில் இவர்கள் தாமாகவே தெளிவு பெற்ருலொழிய இந்த இணைப்பு உருவாக இயலாது. இந்தக்குழுவில் அமைந்த தனித்தனியாருடைய வளர்ச்சி மட்டத்தையும் அக நிலையையும் ஆளுமையையும் பொறுத்த அளவுக்குப் பொது மக்களும் ஏறத்தாழ வலிவு பெற்றுச் சுறு றுறுப்பாகச் செயல்புரிய வல்லவர்களாய் இருப்பார்கள்.

ஆளுமை அமைப்பை அடிப்படையாகக் கொண்டு கிரேக்கர்கள் தங்களுடைய சமுக அமைப்பை நிறுவினுர்கள். அவர்களுடைய தலைவரான அலெக்ஸாந்தர் என்பவர், வீரர் ஒரு சிலரை வைத்துக் கொண்டே பாரசீக நாடு முழுவதையும் வெற்றி பெற்ருர். மகமதிய உலகமும் திறமையான ஒற்றுமையைக் காட்டுகிறது; அதனுடைய சட்டங்களாலும் தலைமை தாங்குவதாலும் அன்று. ஆனுல், பொது வான குறிக்கோள் ஒன்று இருத்தலால் அவர்கள் ஒற்றுமையை நிலை நாட்ட முடிந்தது. காலாகாலங்களில் அவர்கள் கூட்டங்கூட்டமாக மெக்காவுக்கு யாத்திரை செல்கின்றுர்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் முன் பின் தெரியாதவர்கள். அந்த யாத்திரிகர்கள் தங்களுக்கென்று எந்தச் சொந்தப் பேராசையையும் குறிக்கோளாகக் கொண்டாரில்லை. வேறு எவரும் அவர்களுக்குக் கட்டளை இடவில்லை; அவர்களை உந்தவும் இல்லை. எனினும், அவர்களே வேண்டிக் கொண்டதை நிறைவேற்றும் வகையில் தியாகம் செய்யும் சத்தி அவர்களிடம் கட்டுக்கு மீறி இருக்கிறது. அந்த யாத்திரிகர்கள் பிணைவுக்கு ஓர் எடுத்துக்காட்டாவார்கள்.

ஐரோப்பியச் சரித்திரத்தில் இடைக்காலத்தில்[1] வியக்கத் தகுந்தது ஒன்றைக் காண்கிருேம். இக்காலத்தில் போரால் துன்புற்ற நம் தலைவர் எல்லாரும் அதைப் பெற வீண் முயற்சிகள் செய்கின்றனர். அதாவது, ஐரோப்பிய நாடுகளை ஒன்ருக இணைப்பது. அது எவ்வாறு செய்யப்பட்டது? அதன் வெற்றிக்குக் காரணம் அவர்களுடைய மதக் கொள்கையில் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை. பல சாம்ராஜ்யங்களில் இருந்தவர்களின் நெஞ்சை இக்கொள்கைகள் கவர்ந்தன; ஐரோப்பிய சாம்ராஜ்யங்களனைத்தையும் அளவு கடந்த சத்தியால் ஒன்றுபடுத்தி இணைத்துவிட்டன. அக்காலத்தில் மன்னருள் ஒவ்வொருவரும் தத்தம் வழியில் நாட்டை ஆட்சி புரிந்து வந்தனர். எனினும், அனைவரும் கிறிஸ்தவ மதத்துக்குக் கீழ்ப்படிந்து அதன் சத்தியையே நம்பியிருந்தனர்.

---

1. Middle ages

கூடி வாழ்வதற்குப் பிணைவு ஒன்றே போதாது. உலகத்தில் நடைமுறையில் அந்தக் கூடி வாழ் குழு நாகரிக எண்ணத்தையும் தொழிலையும் தூண்டிவிட இயலாது. இக்காலத்தில் யூதர்களைப் பாருங்கள். இவர்கள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பிணைவினால் ஒன்றுபடுத்தப்பட்டவர்களே. ஆனால், இப்பொழுதான் ஒரு தனி நாட்டினராய் உருவாகியிருக்கின்றார்கள். இவர்கள் பாவு நூலைப் போன்றவர்கள். இனிமேல்தான் மக்கள் குழு நெய்யப்படவேண்டும். அண்மைச் சரித்திரம் மற்றோர் எடுத்துக்காட்டை நமக்குக் காட்டுகிறது. புதுச் சமுதாயத்தை நிரந்தரமாக நிலை நாட்டவேண்டுமானால், அதற்காகக் குழந்தைப் பருவத்திலிருந்தே பழக்க வேண்டும் என்ற உண்மையை உணர்ந்த முதல் தேசத் தலைவர்கள் முசோலினியும் ஹிட்லரும் ஆவார்கள்.

அவர்கள் குழந்தைகளையும் இளைஞர்களையும் ஆண்டுக்கணக்கில் உடற்பயிற்சியில் ஈடுபடுத்தினார்கள்; ஒற்றுமை என்ற இலட்சியத்தை வெளியிலிருந்து அவர்கள் மேல் திணித்தார்கள். அக்கொள்கையின் நெறியைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைத்த போதிலும், அது விஞ்ஞான முறையும், தர்க்கமுறையும் கொண்ட நடவடிக்கையாகும். அந்தத் தலைவர்கள் பிணைவுள்ள ஒரு கூடி வாழ் குழுவின் அடிப்படையில் மற்றவைகளை அமைக்க வேண்டுமென்பதை உணர்ந்தார்கள்; அதற்காக வேர்களைத் தக்க முறையில் ஊன்றச் செய்தார்கள்.

ஆனால், பிணைவுள்ள கூடி வாழ் குழு என்பது, இயற்கையான ஒரு மெய்ந்நிகழ்ச்சி. இயற்கையின் ஆக்கும் சக்தித் தூண்டுதலால் அது தானாகவே வளர்க்கப்பட வேண்டும். கடவுளுக்குப் பதிலாக வேறு எதையும் எவராலும் மாற்ற இயலாது. அவ்வாறு செய்ய முயற்சி செய்கின்றவன் ஒரு பேய்[1] ஆகின்றான். குழந்தை ஆளுமையின் ஆக்கும் சக்திகளை வயது வந்தவர் ஒருவர் அடக்கி ஒடுக்கி ஆள்வது எப்படியோ, அப்படியே வயது வந்தவர்களிடம் காணப்படும் பிணைவுச் சக்தியும் ஒரு குறிக்கோளின்மேற்கொண்ட பற்றுதலால் வழி காட்டப்படவேண்டும்; அதாவது, ஒருமுறை செய்யப்பட்ட குழுவோடு நின்றுவிடாமல், அதற்குமேற் செல்லும் வகையில் இருக்க வேண்டும். ஒன்றோடொன்று பிணைக்கப்பட்ட இரண்டு கூடிவாழ் குழுக்கள் இருக்க வேண்டும். அதாவது, மனிதனுடைய ஆக்கும் மனப்பகுதியின் நனவிலா நிலையில் வேரூன்றியது ஒரு குழு. மற்றொன்று, நனவுடைய கூடி வாழ் உலகத்திலிருந்து வரவேண்டும். ஒன்று, குழந்தைமையில் தொடங்குகிறது; மற்றொன்று, அதன்மேல் முதியோர் கைப்பட நிலை பெறச் செய்கிறது. இந்நூலின் தொடக்கத்தில் நாம் கண்டது போலக்

1. Devil

குழந்தையின் உட்கவர்மனமே ஓர் இனத்தின் சிறப்பியல்புகளை ஏற்றுக்கொள்ள வல்லதாய் இருக்கிறது. **தெய்விகக் கருவாய்**[1] வாழும் பொழுது குழந்தையின் சிறப்பியல்புகள் எல்லாம் நுண்ணறிவால் கண்டுபிடிக்கப்பட்டவை அல்ல ; மனிதச்செயலால் ஆக்கப்பட்டவையும் அல்ல. ஆனால், கூடிவாழ் குழுவில் காணப்படும் பிணைவுப்பகுதிகளே அவை. குழந்தை அவற்றை ஒன்று சேர்த்துத் தன்னுள் புதிதாகப் பிறப்பித்துக்கொள்கிறது. இந்த முறையில் குழந்தை தனது ஆளுமையையும் ஆக்கிக்கொள்கிறது. குறிப்பிட்ட ஒரு மொழியையும், குறிப்பிட்ட ஒரு மதத்தையும், குறிப்பிட்ட கூடிவாழ் குழுவின் பழக்கவழக்கங்களையும் பெற்ற மனிதனாகக் குழந்தை மாறிவிடுகிறது. கூடிவாழ் குழுவில் அடிப்படையாய் நிலைத்திருப்பதும் அடிக்கடி புரட்சிகரமாக மாற்றப்படுவதுமானவைகளெல்லாம் பிணைவுப் பகுதியைச் சார்ந்தனவாகும். குழந்தையை வளர விடுகிறோம். கண்ணுக்குத் தெரியாத சிருஷ்டி வேர்களைக்கொண்டு அது உருவாக்கி, இனிமேல் வரப்போகும் மனிதனைப் படைத்துக்கொள்கிறது. இவ்வாறு நடைபெறும்பொழுது நமது தனிப்பட்ட வலிமையும் கூடிவாழ் குழுவின் வலிமையும் எதை ஒட்டி இருக்கின்றன என்ற இரகசியத்தை நாம் அறியலாம்.

இதற்குப் பதிலாக நாம் என்ன செய்கிறோம் ? நம்மைச் சுற்றிலும் கவனித்தோமானால், அது விளங்கும். மனிதர் முறை செய்யப்பட்ட கூடிவாழ் குழுவின் நனவுப் பகுதியைச் சீர்தூக்கித் தம் வாழ்க்கையைத் திருத்திக்கொள்கின்றனர் ; கூடிவாழ் குழுவின் அமைப்பை வலுவாக்க விரும்புகின்றனர். அதை ஆக்குகின்றவர் இவர்களைத் தவிர வேறு எவருமே இல்லை என்பது இவர்களுடைய நம்பிக்கை போலும் ! தவிர்க்க இயலாத அமைப்பின் அடிப்படையை அவர்கள் எண்ணுவதேயில்லை. அதற்குப் பதிலாக அதைக் கட்டுப்படுத்தும் மனிதனைப்பற்றிக் கருதுகின்றார்கள். அவர்களுடைய பேராசை என்னவென்றால், தக்க தலைவரைத் தேடுவதாகும்.

எத்தனை பேர் ஒரு புது உலக குருவை நம்பியிருக்கின்றனர் ! எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு முறை செய்யக்கூடிய ஒரு மேதை கிடைக்கமாட்டாரா என்று எத்தனை பேர் தேடுகின்றனர் ! முதல் மகா யுத்தத்துக்குப் பிறகு தலைவர்களைப் பயிற்றும் ஒரு நிலையத்தை ஏற்பாடு செய்யவேண்டும் என்ற கருத்து ஒன்று வெளியிடப்பட்டது. எதற்கு ? வருங்காலச் சம்பவங்களுக்குத் தலைமை தாங்க அக்காலத்திலிருந்த எந்தத் தலைவரும் தக்க சத்திகளைப் பெற்றவராகத் தோன்றவில்லை. உயர்ந்த பேர்வழிகளைத் தேடித் தேர்ந்தெடுக்கின்ற முயற்சியும் நடைபெற்றது. மனச் சோதனைகள் நடத்தப்பட்டன. பள்ளிக்கூடங்

---

1. Spiritual life

களில் நல்ல திறமையைக் காட்டி வந்தவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களை ஆஞ்ஞா பீடங்களுக்குக் கொண்டுபோனார்கள். ஆனால், அந்தந்த ஸ்தானங்களுக்குத் தக்கவர்கள் இல்லாவிடில் அவர்களுக்கு யாரால் கற்பிக்க இயலும் ?

தலைவர்கள் அல்லர் இக்காலம் குறைவாகத் தோன்றுபவர்கள். பிரச்சினை இதனுடன் நின்றுவிடுவதில்லை. பிரச்சினை இதைவிடப் பன்மடங்கு விரிந்தது. நமது நாகரிகத்தில் மக்கள் திரள் கூடி வாழ்வுக்கு ஆயத்தமாய் இல்லை. ஆதலால், பிரச்சினை என்னவென்றால், மக்கள் திரளைக் கற்பித்தலும் தனிப் பேர்வழிகளின் குணங்களைத் திருத்தி அமைத்தலும், ஒவ்வொருவர் உள்ளத்திலும் புதைந்துகிடக்கும் புதையல்களை ஒன்று சேர்த்துக் காப்பதும், அவற்றின் மதிப்பை இன்னும் விருத்தி ஆக்குவதும் போன்றவைகளாகும். எவ்வளவு பெரிய மேதையானாலும் எந்த ஒரு தனித் தலைவராலும் இவற்றை நிறைவேற்ற இயலாது. வளர்ச்சி பெறாத கோடிக்கணக்கானவர்களுள் எவராலும் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க இயலாது.

நம் காலத்தில் இது மிகவும் சிக்கலானதும் மிகவும் அவசரமானதுமான பிரச்சினையாய் இருக்கிறது. மக்கள் திரளில் பெரும்பகுதியினர் தாம் இருக்க வேண்டிய நிலைமைக்குத் தாழ்ந்தே இருக்கின்றனர். கவர்ச்சிகரமான இரண்டு சக்திகளின் படத்தை நாம் அப்பொழுதே பார்த்திருக்கிறோம். ஒன்று மையத்துக்கு இழுக்கிறது ; மற்றொன்று வெளி வட்டத்துக்கு இழுக்கிறது. நேர்மையைப் பெறுவதும் பெற்றதைக் காத்தலுமே கல்வியின் பெரும்பாடாகும். இந்த நேர்மைப்படுதல் என்பது தன் இயல்பாக நிறைவைக் குறிக்கும் மையத்துக்குச் சாய்கிறது. இன்று இதற்குப்பதிலாகநாம் செய்வதெல்லாம் செயற்கை முறையில் நேர்மையற்ற் வலிமையற்ற மன நோய்களுக்குப் பலியாக்கி வெளி வட்டத்துக்குச் சாயாதபடி இடையறாது மேல்தணிக்கையைத் தேவைப்படும் மக்களை உருவாக்குவதே. ஒருமுறை இவர்கள் வெளிக்கோட்டுக்குச் சாய்ந்தார்களானால், இவர்கள் கூடிவாழ்வில் தீண்டாதவர்களாகின்றார்கள். இன்று நடைபெறுவது மனிதக் குலத்துக்கே இழைத்த சதிக்குற்றமாகும், அதனுடைய விளைவுகள் நம்முள் ஒவ்வொருவரையும் அழித்துவிடும். உலகத்தில் பாதிப்பேர் எழுதப்படிக்கத் தெரியாதவர். இந்தப் பெரும்பகுதியினர் உண்மையாகக் கூடி வாழ் குழுவுக்குப் பாரமாகத் தோன்றவில்லை. பளுவாகத் தோன்றுவது என்னவென்றால், இதைப்பற்றித் தெரியாமலே மனிதன் உருவாக்கப்படுவதை நாம் ஒதுக்கி வைப்பது ; செல்வங்களின்மேல் மிதித்து நசுக்குவது. இந்தச் செல்வங்களை,இறைவர் ஒவ்வொரு குழந்தையிலும் அமைத்திருக்கிறார். உலகம் முழுவதையும் முன்னிலும் உயர்ந்த மட்டத்துக்குக் கொண்டு வரத் தகுந்த நன்னெறி இலட்சியங்களும்

நுண்ணறிவு இலட்சியங்களும் ஆகியவற்றின் மூலம் இங்கே தான் இருக்கின்றது. நாம் காலன் வரும் பொழுது கூப்பாடு போடுகிறோம்; அழிவிலிருந்து மனிதக் குலத்தைக் காப்பாற்ற ஆசைப்படுகிறோம். ஆனால், சாவிலிருந்து காப்பதன்று முக்கிய மானது; ஆனால், நம்முடைய தனிப்பட்ட முன்னேற்றம். மனித னுடைய குறிக்கோள் எதுவோ, அதை நம் மனத்திற்கொள்ள வேண்டும். இறப்பைக் கண்டு அஞ்சுவதன்று நம் சங்கடம்; நாம் இழந்த மோட்சத்தைப்பற்றிய அறிவே நம் சங்கடமாக இருக்க வேண்டும்.

நமது அறியாமையிலேதான் பேராபத்து இருக்கிறது. சிப்பிக்குள் முத்தையும், மலைக்குள் தங்கத்தையும், பூமிக்குள் நிலக்கரியையும் தேடுவது எப்படி என்பது நமக்குத் தெரியும். ஆனால், மனித இனத் தைப் புதுப்பிக்க நம் உலகத்தில் தோன்றும் சிறு குழந்தைக்குள் தெய்விக வித்துகள் நிறைந்த **சிருஷ்டித் தாராகணங்கள்**[1] இருக்கின் றன என்பதைக்கூட நாம் உணர்வதில்லை.

சாதாரணப் பள்ளிக்கூடங்களில் நாம் இது வரை விளக்கிக் கொண்டு வந்த **தன் இயல்பான முறை செய்தல்**[2] நடைபெறுமாயின் பெரிய அற்புதங்களைத் தோற்றுவிக்கும். இதற்கு மாறாகக் குழந்தை கள் சுறுசுறுப்பாகக் கற்பவை என்று நம்புவதே இல்லை. குழந்தைகளை அவர்கள் விரட்டுகின்றார்கள்; வேலையில் ஊக்கம் பிறப்பதற்காகப் பரிசும் தண்டனையும் அளிக்கின்றார்கள்; முயற்சியைத் தட்டி எழுப்பப் போட்டியைப் பயன்படுத்துகின்றார்கள். தீமையைத் தேடி அதை வெல்வதற்கு எல்லாரும் உந்தப்படுகின்றனர் என்று கூறலாம். முதியோருடைய சாதாரண மனப்பான்மை என்னவென்றால், பழிச் செயலைத் தேடி அதை ஒடுக்குதலாகும். ஆனால், குற்றங்களைத் திருத்துதல் என்பது அனேகமாக ஊக்கத்தைக் கெடுத்து இழிவு படுத்துதலாகும். இந்த அடிப்படையில் கல்வி நிலை பெறுகின்ற காரணத்தால், கூடிவாழ் குழுவின் தரம் பொதுவாகத் தாழ்த்தப்படு கிறது. இன்றைய பள்ளிக்கூடங்களில் மற்றொருவன் பாடத்தை வேறெவனும் 'காப்பி'யடிக்க இயலாது. ஒருவன் மற்றொருவனுக்குப் பாடத்தில் உதவி புரிந்தால், அது குற்றமாகக் கருதப்படுகிறது. உதவி பெறுவது எவ்வளவு குற்றமோ, உதவி அளிப்பதும் அவ்வளவு குற்றம் ஆகும். ஆதலால், நாளும் கூறி வந்த ஒற்றுமை என்பது

---

1. Creative nebulae, 2. Spontaneous organisation

உருவாக முடியாமற் போய்விடுகிறது. **நேர்மையான தரம்**[1] அடியோடு நீக்கப்பட்டு அதற்குப் பதிலாகக் காரணமில்லாத சட்டம் ஒன்று திணிக்கப்படுகிறது. திரும்பின பக்கம் எல்லாம், 'இங்குமங்கும் விளையாடாதே; சத்தம் போடாதே; மற்றவர்கள் கற்க வேண்டிய பாடத்துக்கு உதவி புரியாதே; உன்னுடன் பேசினுலொழியப் பேசாதே,' என்பவைகளையே நாம் கேட்கிறோம். எப்பொழுதும் கட்டளை எதிர்மறைதான்.

இந்த நிலையில் என்ன செய்ய இயலும்? தன் வகுப்பை உயர்த்த வேண்டும் என்று ஆசிரியை முயற்சி செய்த போதிலும், குழந்தைகள் செய்வது போல அவள் என்றும் செய்வதில்லை. அதிகப்படியாக அவள் சொல்வதானுல், எப்படியிருக்கும்? 'உன்னைவிட வேறொருவர் நன்ருகச் செய்தாரானுல், அதைக் கண்டு நீ பொருமைப்படாதே; உனக்குத் தீங்கு விளைப்போர்க்கு எதிர் தீங்கு விளைக்காதே,' என்பதும் எதிர்மறையைத் தவிர வேறென்ன? எல்லாரும் கோணலாயிருப்பதாகவும், நம்மால் கூடிய வரை அவர்களை நேர்படுத்தவேண்டுமென்பதாகவும் பொதுவாகக் கருதப்பட்டு வருகிறது. கல்வியாளன் கனவிலும் இயலும் என்று நம்ப முடியாதவைகளை அடிக்கடி குழந்தைகள் செய்கின்றன. தங்களைவிடச் சிறப்பாகச் செய்கின்றவர்களைக் குழந்தைகள் பாராட்டுகின்றன. வெற்று அழுக்காறு கொள்வதைவிட இது இன்னும் மேலானது. ஏற்கெனவே இல்லாத சில **தெய்விக அடைவுகளை**[2] விழிப்புறச் செய்விக்க இயலாது. ஆனுல், அவை இயற்கை உணர்வாயிருந்தால், அவற்றைப் பண்படுத்தி வளரச் செய்ய ஊக்கம் அளிப்பது அவசியமாகிறது. இதே போலப் பழிவாங்காதிருப்பதைப் பற்றியும் சொல்லலாம். தன் விரோதியுடன் குழந்தை அடிக்கடி நேசம் கொள்கிறது. ஆனுல், 'இவ்வாறு நடந்துகொள்,' என்று எவராலும் செய்விக்க இயலாது. கெடுதல் செய்பவனிடத்தில் பரிவும் அன்பும் ஒருவர் காட்டலாம். ஆனுல், எவராலும் 'பிறரிடம் பரிவைக் காட்டு,' என்று வற்புறுத்த இயலாது. தன்னைவிட முட்டாளாய் இருக்கும் ஒருவனுக்கு மற்ருெரு குழந்தை உதவி புரிய விரும்பலாம். ஆனுல், இதை வலுக்கட்டாயப்படுத்த இயலாது. இந்த இயல்பான பற்றுகளில் மேலே குறிப்பிட்டது போல ஊக்கம் அளிக்கப்பட வேண்டும். அடிக்கடி இவை பலனற்றவைகளாக்கப்படுகின்றன. பள்ளிக்கூடத்தின் எல்லா வேலைகளும் தாழ்ந்த மட்டத்திலிருந்து வளர்கின்றன. அதாவது, இவை எல்லாம் வெள்ளை வட்டத்தில் (படம் 12) காணப்படுகின்றன. கூடி வாழ்வதற்கு எதிரியும் தீண்டப்படாதவரும் நிறைந்த வெளி வட்டத்துக்கு மக்கள் ஈர்க்கப்படுகின்ருர்கள். 'இது குழந்தையால் இயலாது. கற்பிக்கப்பட வேண்டுவது,' என்று ஆசிரியை முதலில் நம்புகிருள்.

---

1. Normal standard, 2. Spiritual attainments

'இதைச் செய்யாதே; அதைச் செய்யாதே,' என்று சொல்லிக் கொண்டிருப்பது நல்லது என்று அவள் கருதுகிருள். 'வெளி வட்டம் நோக்கி நழுவிவிடாதே,' என்று சொல்லிக்கொண்டிருப்பது நல்ல தென்று கருதுகிருள் ஆசிரியை. ஆனுல், நேர்மையாக்கப்பட்ட குழந்தைகள் நல்லதைக் கண்டு வலிவுள்ள ஈர்க்கும் சத்தியைக் காட்டுகின்றன. '**தீயதை விலக்கு,**' என்பதை அவர்கள் அனுசரிக் கத் தேவையில்லை.

மற்ருேர் எதிர்மறைச் செயல் என்னவென்ருல், தினசரி நிகழ்ச்சி நிரலில் குறிப்பிட்ட நேரங்களில் குறுக்கிடுவதாகும். 'ஒரே விஷயத் தில் அதிக நேரம் உன் கருத்தைச் செலுத்தாதே. அதனுல் உனக் குச் சலிப்புத் தட்டிவிடலாம்,' என்று முதியோர் குழந்தைக்கு எடுத்துக்கூறலாம். எனினும், தன்னுடைய முழு முயற்சியையும் உப யோகிக்கவேண்டிய ஒரு தேவையைக் குழந்தை வெளிப்படுத்துகிறது. இக்காலத்தில் இருக்கும் பள்ளிக்கூடங்கள் குழந்தைகளின் **ஆக்கும் இயற்கை உணர்வுகளை**[1] வளரவிட இயலாது. குழந்தைகள் தங்களுக் குள் செய்கைகளின்மேல் உள்ள உண்மையான ஆனந்தத்தைக் காட்டுகின்றன. உண்மையில் கடினமான வேலையில் அவை மகிழ்ச்சி அடைகின்றன; வேலையின் அழகைக் கண்டு இன்புறுகின்றன; துன்புற்றவர்களைத் தேற்றுவதில் மனநிறைவு கொள்கின்றன; தம் மிலும் எளியவர்க்கு உதவி புரிவதில் பேராவல் கொள்கின்றன.

சாதாரணப் பள்ளிக்கூடங்களுக்கும் நேர்மையாக்கப்பட்ட குழந் தைகளிருக்கும் பள்ளிக்கூடங்களுக்கும் உள்ள ஒற்றுமையைக் கிறித் தவமதம் பழைய ஏற்பாட்டிற்கும் புதிய ஏற்பாட்டிற்குமுள்ள ஒற்றுமை யுடன் ஒப்பிட நான் விரும்புகிறேன். பழைய ஏற்பாட்டின் பத்துக் கட்டளைகளில், 'நீ கொல்லாதிருக்கக்கடவாய்; களவாடாதிருக்கக் கடவாய்,' என்பன போன்ற பிறவற்றிலும் சட்டங்களின் எதிர் மறையே எடுத்துக் கூறப்பட்டது. அக்கால மக்களின் மனம் குழப்ப மடைந்து இருண்டிருந்ததால், இந்தச் சட்டங்கள் அவர்களுக்குத் தேவைப்பட்டன. ஆனுல், புதிய ஏற்பாட்டில் குழந்தைகளைப்போல் ஏசுநாதர் உடன்பாட்டு நேர்நிலைக் கட்டளைகளை இடுகிருர்; 'உன் பகைவனுக்கு அருள் புரி,' என்கிருர். சட்டத்தை நிறுவி, தங்கள் பெருமையைப் பிறர் கொண்டாட வேண்டுமென்றும், தாங்கள் மற்ற வர்களைவிட உயர்ந்தவர்களென்றும் நினைத்தவர்களுக்கு, 'பாவிகள் அனுதாபம் அடைவதற்கே நான் வந்திருக்கிறேன்,' என்ருர்.

எனினும், இந்தக் கட்டளைகளை மக்களுக்குக் கற்பித்தல் போதாது. '**பகைவனுக்கருள்வாய்,**' என்பதைப் போர் முகத்தில்

---

1. Creative instinct

காட்டாமல் மாதாகோவிலில் மட்டும் முணுமுணுத்தலால் பயனென்ன? போர்க்களத்தில் இதற்கு எதிர்மறையன்றோ நடைபெறுகிறது? 'நீ கொல்லாதிருக்கக் கடவாய்,' என்று கூறும்பொழுது நம் ஒருமுனைப் பெல்லாம் நம்மைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்னும் தீமையின் மேலேதான் செல்கிறது. நன்மை என்பது ஏதோ நடைமுறையில் சாதிக்க இயலாதது போலும்! ஒருவனுடைய பகைவனை நேசிப்பது அரிது போலத் தோற்றுகிறது. அக்காரணத்தால் அது முழுமையும் வீணான குறிக்கோளாகவே நின்றுவிடுகிறது.

ஏன்? மனிதன் உள்ளத்தில் நன்மையின் வேர் ஊன்றியில்லை; ஒரு வேளை ஏதோ ஒரு சமயத்தில் இருந்திருக்கலாம்; ஆனால், இப்பொழுது அழிந்து புதைந்துவிட்டது. போட்டி, ஊக்கம், பேராசை என்பவை, கல்விப்பருவம் முழுவதிலும் தூண்டிவிடப்பட்டிருந்தால், அந்தச் சூழ்நிலையில் வளர்ந்துவந்த மனிதர்கள் இருபது முப்பது வயதில் நல்லவர்களாவார்கள் என்று எவ்வாறு எதிர்பார்க்க இயலும்? யாரோ ஒருவர் நன்னெறியைப்பற்றிப் போதித்தாலே நன்னெறி தோன்றிவிடுமா? இது நடைபெறுவது இயலாது என்பதை நான் உறுதியாகக் கூறுவேன். ஏனென்றால், ஆன்ம வாழ்வுக்குத் தக்க ஆயத்தம் எதுவும் ஏற்படுத்தப்படவில்லை.

போதனைகளன்றி, ஆக்குகின்ற இயற்கை உணர்வுகளே முக்கியமாகத் தேவைப்படுகின்றன. ஏனென்றால், அவைகளே **உள்பொருள்களாகும்.**[1] குழந்தைகள் தங்கள் இயல்புகளை ஒட்டி நடந்துகொள்கின்றன. ஆசிரியர்கள் ஊக்குவித்தலால் அவை அவ்வாறு நடந்துகொள்வதில்லை. **பரிமாற்ற**[2] உபகாரத் தன்மையால் நன்னெறி பிறக்க வேண்டும். தெய்விகப் பிணைவால் பெறப்பட்ட ஒற்றுமையிலிருந்து பிறர்க்குதவும் பண்பு தோன்ற வேண்டும். குழந்தைகளால் எங்களுக்குக் காட்டப்பட்டதாகிய பிணைவால் ஆக்கப்பட்ட இந்தக் கூடிவாழ் குழுவானது எல்லாக் கூடிவாழ் சீரமைப்புகளுக்கும் அடிப்படையானது. இக்காரணத்தால் வயது வந்தோர் 3—6 வயது குழந்தைகளுக்குப் பாடம் கற்பிக்க இயலாது என்று உறுதியாகக் கூறுவேன். அவற்றை நுண்ணறிவுடன் கூர்ந்து கவனித்து அவற்றின் தினசரி வாழ்வில் ஒவ்வொரு மணியிலும் நடைபெறும் எண்ணற்ற செயல்களைக் குறித்து வரலாம். **குழந்தைகளுக்கு இயற்கையால் அளிக்கப்பட்டவை தொழிலால் வளர்ச்சி அடைகின்றன.** ஆனால், எந்தத் துறையிலாவது முன்னேற வேண்டுமானால், இடையறாத அனுபவமும் முயற்சியும் தேவைப்படுகின்றன. இவை இல்லாமல் எவ்வளவு உபதேசம் செய்தாலும், பயன் இல்லை. வளர்ச்சி, செயலால் நடை

1. Realities, 2. Reciprocal

பெறுகிறது. நுண்ணறிவால் புரிந்துகொள்வதிலிருந்து வளர்ச்சி தோன்றிவிடாது. ஆதலால், சிறு குழந்தைகளின் கல்வி மிகவும் முக்கியமானது. அதிலும் மூன்று வயதிலிருந்து ஆறு வயது வரையுள்ள பருவம் மிகவும் முக்கியமானது. ஏனென்ருல், சால்பும் கூடிவாழ் குழுவும் வளர்வதற்கு இதுதான் இளஞ்சூல் பருவம் ஆகும். பிறப்பிலிருந்து மூன்ருண்டு வரையுள்ள பருவம், மனத்தை உருவாக்கும் பருவம் போலவும், உடல் உருவாவது பிறப்புக்கு முந்தின பருவம் போலவும் இந்த 3-6 வயதுப் பருவம் இருக்கிறது. குழந்தை மூன்று வயதிலிருந்து ஆறு வயது வரை என்னென்ன சாதிக்கிறதோ, அவையெல்லாம் கொள்கை அல்லது **கோட்பாட்டை**[1]ப் பொறுத்தவையல்ல. ஆனுல், ஒரு தெய்விகத் தூண்டுதல் குழந்தையின் உள்ளம் ஆக்கும் தொழிலில் ஈடுபட வழி காட்டுகிறது. மனித நடத்தைக்கு இவைகளே தொடக்க வித்துகளாகும். இவற்றைச் சுதந்தரமும் ஒழுங்கும் கூடிய தக்க சூழ்நிலையிலேதான் வளரச்செய்ய இயலும்.

---

1. Doctrine

# 24. பிழையும் பிழை திருத்தமும்

எங்களுடைய பள்ளிக்கூடத்தில் உள்ள குழந்தைகள் சுதந்தரம் பெற்றவை. அப்படியென்றால், **முறைசெய்தல்**[1] இல்லையென்பதன்று. முறை செய்தல் என்பது அவசியமானது. குழந்தைகள் தங்கள் இச்சை போலச் செயல் புரிய வேண்டுமானால், மற்றப் பள்ளிக் கூடங்களில் இருப்பதைவிட அங்கு முறை செய்தல் குறைகளில்லாமல் இருக்க வேண்டும். எங்கள் சூழ்நிலையில் குழந்தை நல்ல அனுபவங்களைப் பெறுகிறது; ஆதலால், தன்னை இன்னும் நிறைவுபடுத்திக் கொள்கின்றது. ஆனால், அது செய்ய வேண்டிய தனி விஷயங்கள் இன்றியமையாதவை. ஒரு தரம் ஒரு முனைப்புத் தொடங்கிவிட்டால், பல வகையான தொழில்களில் அந்த ஒரு முனைப்பை நிலைக்கச் செய்யும். குழந்தை எவ்வளவுக்கெவ்வளவு தொழில் புரிகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஆசிரியைக்குக் குறைந்த அளவு வேலை இருக்கிறது. அனேகமாக ஆசிரியை ஒதுங்கி நின்றே காலம் போக்குவது போல இருக்கும்.

நாம் ஏற்கெனவே குறிப்பிட்டபடி இந்த வழியைப் பின் பற்றுகிற குழந்தைகள் கூடி வாழ்குழுவாக ஒன்றுபடுத்தப்படுகின்றன. அது நமது குழுவைவிட எவ்வளவோ மேலான முறையில் இருக்கிறது. அதைக் காணும்பொழுது குழந்தைகள் பெரியவர்களின் குறுக்கீடு இல்லாமல் சுதந்தரத்துடன் விடப்படவேண்டும் என்று தோன்றுகிறது. அவர்களுடைய ஒன்றுபட்ட வாழ்வு ஒரு **சீவத் தோற்றப் பாடாகும்**.[2] இது இளஞ்சூலில் வாழ்க்கை எவ்வளவு மென்மையாய் இருந்ததோ, அவ்வளவு மென்மையானது. இது கெட்டுப் போகாமல் இருப்பதை நாம் கவனித்துக்கொள்ள வேண்டும். குழந்தையின் வளர்ச்சிக்குத் தேவைப்படும் பொருள்களை நாம் குழந்தையின் சூழ்நிலையில் ஒருதரம் அமைத்துவிட்டோமானால், இந்தத் தோற்றத்தை உண்டாக்குவதற்கு வேண்டுபவைகளை ஏற்பாடு செய்தவர்களாகிவிடுகிறோம்.

---

1. Organisation, 2. Vital Phenomenon

இந்தப் புதுமை உலகத்தில் ஆசிரியைக்கும் குழந்தைக்கும் இடையில் சரி நுட்பமான உறவு ஏற்படுகிறது. ஆசிரியையின் வேலை என்ன என்பது வேறோர் அத்தியாயத்தில் விளக்கப்படும். ஆனால், அவள் செய்யக்கூடாதது ஒன்று உளது. அதாவது, குழந்தையின் செயலைப் பெருமைப்படுத்துவதிலோ, பிழையால் தண்டித்தலிலோ, அல்லது பிழைகளைத் திருத்துதலிலோ எந்த விதத்திலும் குறுக்கிடக் கூடாது. இது முட்டாள்தனமாகத் தோன்றலாம். இது பெரும் பாலாருக்குப் பெருந்தடையாய் இருக்கிறது. ‘குழந்தையின் பிழை களைத் திருத்தாவிட்டால், குழந்தை எப்படி வளரும்?’ என்று அவர்கள் கேட்கலாம். எப்போது பார்த்தாலும் குறை கூறுவது அவர்களுடைய முக்கியமான கடமை என்று ஆசிரியர்களுள் பெரும் பாலார் எண்ணுகின்றனர். அறநெறி விஷயங்களை எவ்வாறு செய்து வருகிறார்களோ அவ்வாறே ஆசிரியர்கள் கற்றலிலும் செய்து வருகின் றார்கள். **குழந்தையின் பழக்க வழக்கங்களின் பயிற்சி பரிசுகளும் தண்டனைகளுமாகிய இரண்டு கடிவாளங்களுக்குள் அமைந்திருக் கின்றன என்று கருதுகின்றார்கள்.**

ஒரு குழந்தைக்குப் பரிசும் தண்டனையும் அளிக்கப்பட வேண்டு மானால், அதற்குத் தனக்குத்தானே வழி காட்டிக்கொள்ளச் சத்தி இல்லை என்பதாகிறது. ஆதலால், இதை ஆசிரியை வழங்க வேண்டி யிருக்கிறது. அதற்குப் பதிலாகக் குழந்தையே தன் வேலையைச் செய்துகொள்கிறதென்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது பரிசுகளும் தண்டனைகளும் தேவையில்லை. அவை இருப்பது குழந்தையின் சத்திச் சுதந்தரத்தை அவமதிப்பது போலாகிறது. எம் பள்ளிக்கூடங்களில் குழந்தைகள் இயல்பாகச் செய்யும் சத்தியைப் பாதுகாத்து வருகிறோம்; குழந்தைகளை விடுதலை செய்து வைக்கிறோம். ஆதலால், இத்தகைய பள்ளிக்கூடங்களில் பரிசுக்கும் தண்டனைக்கும் இடமில்லை. தன் வேலையைத் தடையின்றித் தானே தேர்ந்தெடுக்கும் குழந்தைக்கு இவை முழுமையும் முக்கியமல்லாதவைகளாய்க் காண்கின்றன.

பரிசுகளை அதிக எதிர்ப்பில்லாமல் ஒரு வேளை நாம் நீக்கிவிட் டிருக்கலாம். பார்க்கப் போனால், இது சிக்கனமானதுங்கூட. ஒரு சில குழந்தைகளையே இது பாதிக்கிறது. அதுவும், ஆண்டுக்கு ஒரு முறைதானிருக்கும். தண்டனையோ! இது ஒரு தனிக்கதை. இது தினந்தோறும் அளிக்கப்படுகின்றது. பயிற்சி நோட்டுப் புத்தகங் களைத் திருத்துவதன் பொருள் என்ன? அது அவற்றுக்கு 0 முதல் 10 வரை மதிப்பெண் கொடுத்தல். ஒருவரது குற்றத்தை ஒரு பூச்சி யம் எப்படித் திருத்த இயலும்? ஆசிரியை பிறகு என்ன சொல்கிறாள்?

'பிழையைச் செய்துகொண்டே இருக்கிருயே! நான் சொல்வதைக் கவனித்துக் கேட்பதில்லேயே! இந்த மாதிரி இருந்தால் நீ பரீட்சையில் வெற்றி பெற மாட்டாய்!' என்கிருள்.

குழந்தைகளின் நோட்டுப் புத்தகங்களில் குறிப்பிட்ட திருத்தக் குறிகளும் அவளுடைய வசவுகளும் குழந்தையின் சத்திகளையும் அக்கறைகளையும் இன்னும் அதிகப்படியாகத் தாழ்த்திவிடுகின்றன. ஒரு குழந்தையைப் பார்த்து, 'நீ பெரிய முட்டாள், அல்லது போக்கிரி,' என்று சொல்வது குழந்தையை இழிவுபடுத்துவதாகும்; அதைத்தாக்கி நிந்திக்கிறதேயொழிய, வேறு எவ்விதத்திலும் அதை விருத்தி அடைவிப்பதில்லை. குழந்தை பிழை செய்வதை நிறுத்திவிடவேண்டுமானுல், அது இன்னும் அதிகமான திறமை பெற்றதாகிவிட வேண்டும். அதனுல், இதை எப்படி நிலை நாட்ட இயலும்? ஏற்கெனவே அது தாழ்ந்திருக்கிறது. பற்றுததற்கு ஊக்கமும் கொடுக்கப்படுகிறது. முன் காலத்தில் முட்டாள் குழந்தைகளுக்குக் கழுதையின் நீள் செவி வடிவங்களை மாட்டிவிடுவது வழக்கமாய் இருந்தது. கையெழுத்து மோசமாயிருந்தால், அக்குழந்தைகளின் விரல்களை நொறுக்கிக் கொண்டுமிருந்தனர். கழுதைச் செவிகளைச் செய்வதற்கு உலகத்திலுள்ள எல்லாக் காகிதத்தையும் உபயோகித்தார்களென்ருலும், பிஞ்சு விரல்களைப் பொடியாக்கினுலும், இவற்ருல் புதுச் சத்திகளைத் தோற்றுவிக்க இயலாது. **ஒரு குறைபாட்டைத் திருத்துவன பயிற்சியும் திறமையுமே ஆகும்.** தேவைப்படும் பல வகைத் திறமைகளையும் பெறுவதற்கு நெடுநாட்பயிற்சி தேவைப்படுகிறது. ஒழுங்கில்லாக் குழந்தை மற்றக் குழந்தைகளின் தோழமையில் வேலை செய்யும் பொழுது ஒழுங்கைப் பெறுகிறது; 'நீ போக்கிரி,' என்று கூறப்படுவதால் அன்று. 'ஒன்றைச் சாதிப்பதற்குத் தேவையான திறமை உன்னிடத்தில் இல்லை,' என்று ஒரு குழந்தையிடம் எடுத்துக் கூறினேமானுல், அது ஒரு வேளை நம்மைப் பார்த்து, 'பிறகு ஏன் அதைப் பற்றிப் பேச வேண்டும்? அதை நானே பார்த்துக்கொள்வேன்,' என்று பதிலுரைத்தாலும் உரைக்கும்.

இது திருத்துவதன்று. இது ஒரு மெய்ந்நிகழ்ச்சியைப் பற்றிய அறிக்கை. குழந்தை நெடுநேரப் பயிற்சியைத் தானுகச் செய்துவரும் பொழுது முன்னேற்றமும் பிழை திருத்தமும் ஏற்படும்.

மெய்யாகத் தனக்குத் தெரியாமலே குழந்தை ஒரு பிழை செய்திருக்கலாம். ஆனுல், ஆசிரியையும் நனவிலா முறையில் பிழை செய்திருக்கலாம். நல்ல எடுத்துக்காட்டாக இருக்கவேண்டுமென்று தாங்கள் ஒரு பிழையும் செய்யக்கூடாது என்ற கருத்து எப்படியோ ஆசிரியைகளிடையே காணப்படுகிறது. ஆதலால், ஆசிரியை தவறி

ஏதோ பிழை செய்துவிட்டால், அதை நிச்சயமாகக் குழந்தையிடம் ஒப்புக்கொள்ளமாட்டாள். அவளுடைய கௌரவம் எப்பொழுதும் பிழை செய்யாமலிருப்பதில் நிலைத்திருக்கிறது. ஆசிரியை பிழை செய்யாதவளாய் இருக்க வேண்டும். இது முற்றிலும் ஆசிரியைகளின் குற்றமன்று. பொய்யான அடிப்படையின்மேல் நிற்கும் பள்ளிக்கூட முறையையே குற்றம் கூற வேண்டியிருக்கிறது.

பிழை என்னும் நிகழ்ச்சியை நாம் ஆராய்ச்சி செய்தோமானால், ஒவ்வொருவரும் பிழை செய்கிறார் என்பது வெளிப்படையாகிறது. இது வாழ்க்கையின் உண்மைகளுள் ஒன்றாகும். இதை ஒப்புக்கொள்வது முன்னேற்றப் பாதையில் ஓர் அடி எடுத்து வைத்தது போலாகும். குறுகலான பாதையாகிய மெய்யை நாம் பின் பற்ற வேண்டுமானாலும், உண்மைப் பொருளில் நம் பற்றுதலை இருத்திக்கொள்ள வேண்டுமானாலும், நாம் எல்லாரும் தவறிழைக்கிறோம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். அல்லாவிடில், நாம் எல்லாரும் உத்தமர்களாய் இருப்போம். ஆதலால், பிழையினிடத்தில் ஒரு நேச பாவத்தை நமக்குள் வளரச் செய்துகொள்ள வேண்டும். நம் வாழ்க்கையிலிருந்து பிரிக்க இயலாத தோழன் என்றும், ஏதோ ஒரு குறிக்கோளைப் பெற்றிருப்பதாகவும்—ஆம் அதற்கு ஒரு குறிக்கோள் உண்டு—நாம் கருதி வர வேண்டும்.

வாழ்க்கையில் செல்லச் செல்லப் பல பிழைகள் தாமாகவே திருத்தம் பெறுகின்றன. சின்னஞ்சிறு குழந்தை நடக்கத் தொடங்கும் பொழுது தட்டித்தடுமாறுகிறது; விழுகிறது; ஆனால், இறுதியில் எளிதில் நடக்கிறது. வளர்ச்சியாலும் அனுபவத்தாலும் குழந்தை தன்னுடைய பிழைகளைத் திருத்திக்கொள்கிறது. வாழ்க்கையின் குற்றமில்லாத நெடும்பாதையை நாம் எப்பொழுதும் பின் பற்றுகிறோமென்று கற்பனை செய்துகொண்டோமானால், நாம் நம்மையே ஏமாற்றிக்கொள்பவர்களாவோம். உண்மை என்னவென்றால், நாம் பிழைக்கு மேல் பிழைகளைத் தொடர்ந்து செய்துகொண்டே போகிறோம். ஆனால், நாமே நம்மைத் திருத்திக்கொள்வதில்லை. நம்முடைய பிழைகளை நாம் உணரத் தவிறிவிடுகிறோம். உண்மையை மறைக்கின்ற ஒரு மாயை நிலையில் நாம் வாழ்கின்றோம். தான் ஒரு பிழையும் செய்யாதவள் என்ற எண்ணத்துடன் தொடங்கித் தன் குற்றங்களைக் காணாத ஆசிரியை ஒரு நல்ல ஆசிரியை அல்லள். நாம் எப்படிப் பார்த்தாலும் ஏதோ ஒரு பிழை இருந்துகொண்டுதானிருக்கும். பரிபூரண நிலையை அடைய வேண்டினோமானால், நம்முடைய சொந்தப் பிழைகளின்மேல் நம் கவனம் செலுத்தப்பட வேண்டும். ஏனென்றால், இவற்றைத் திருத்தும் பொழுதுதான் நாம் நம்மை மேம்படுத்திக்கொள்ள இயலும். நாம் இவற்றை வெட்ட வெளிச்சத்தில் காண வேண்டும்; இவை நமது வாழ்நாள் முழுவதிலும் தவிர்க்க முடியாதவை என்று நாம் கருதவேண்டும்.

கணிதம், பௌதிகம், இரசாயனம் போன்ற துல்லியமான விஞ்ஞானங்களிலும் பிழைகள் ஒரு முக்கியப் பங்கு கொள்கின்றன. ஏனென்றால், அவற்றைப்பற்றிக் கவனிக்கப்படவேண்டியிருக்கிறது. **இருப்பு நிலை இயல்கள்**[1] தோன்றின பிறகு பிழைகளை விஞ்ஞான முறையில் ஆயவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. விஞ்ஞானத்தில் பிழையிராது என்று கருதப்படுகிறது. ஏனென்றால், பிழையைச் சரியாகக் கணக்கிடும் முறைகளைப் பயன்படுத்திக்கொள்வதால், அளவுகள் குறிக்கப்படும் பொழுது முக்கியமானவை இரண்டுள. ஒன்று, சரியான எண்களைக் குறித்தல்; மற்றொன்று, இது எந்த அளவுக்குப் பிழைபடவிருக்கலாம் என்பது. விஞ்ஞானம் எடுத்துக் கூறுவதெல்லாம் **தோராயமாகவே**[2] இருக்கும். **முழுமை**[3] அன்று. முடிவு கட்டும்பொழுது இதற்கு இடம் அளிக்கப்படுகிறது. எடுத்துக் காட்டாக ஒரு தொற்றுநோய் மருந்து 95 சதவீதம் குணப்படுத்தும் என்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். இந்த ஐந்து சதவீதம் சந்தேகத்துக்கு இடமுண்டாக்கும் நோயாளிகள் இருக்கிறார்கள் என்பதை உணரவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. நீட்டலளவையைக் குறிக்கும் பொழுதும் ஒரு பின்ன அளவில் சரி என்பதாகவே ஒப்புக்கொள்ளப்படுகிறது. இன்ன அளவுக்குப் பிழை இருக்கலாம் என்று கூறாமல், எந்த அளவெண்ணும் கொடுக்கப்படுவதும் இல்லை; ஏற்றுக்கொள்ளப்படுவதும் இல்லை. இந்த விதமாக அளவிடுவதுதான் அதன் மதிப்பை நிலைநிறுத்துகிறது. விவரங்கள் எவ்வளவு முக்கியமோ, நிகழக்கூடிய பிழைகளைக் குறித்தலும் அவ்வளவு முக்கியம் ஆகும். இவையில்லாமல் விவரங்களை எடுத்துக் கொள்வதே இல்லை. துல்லியமான விஞ்ஞானங்களில் பிழையைப் பற்றிக் கவனிப்பது முக்கியமென்றால், நம்முடைய வேலையில் அது இன்னும் அதிக முக்கியமானதாகும். ஏனெனில், பிழைகள் என்பவை நமக்குக் குறிப்பிட்ட முக்கியமானவை. அவற்றைத் திருத்தவோ நீக்கவோ வேண்டுமானால், நாம் முதலில் அவற்றைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும்.

எனவே, நாம் ஒரு விஞ்ஞானக்கொள்கையைக் காண்கிறோம். இக்கொள்கையும் நிறைவுக்கு ஒரு வழியாய் இருக்கிறது. இதை நாம் '**பிழைக் கட்டுப்பாடு**'[4] என்று வழங்குகிறோம். பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்கள், குழந்தைகள், மற்றுமுள்ளோர் எவரும் எதைச் செய்தாலும் அதில் தவறுதல் இராமலிராது. ஆதலால், இந்த விதி பள்ளிக்கூட வாழ்க்கையின் ஓர் அங்கமாய் இருக்க வேண்டும்;

---

1. Positive Sciences, 2. Approximation, 3. Absolute,
4. Control of error

அதாவது, பிழை திருத்துவது அவ்வளவு முக்கியமன்று; பிழை ஏற்பட்டிருக்கிறதென்பதை ஒவ்வொரு தனிப்பேர்வழியும் உணர்வதே முக்கியமானது. தான் செய்வது சரியா தவரு என்பதைக் கண்டுபிடிக்கத் தகுந்த வசதி ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும். நான் நன்ருகச் செய்கிறேனு தவருகச் செய்கிறேனு என்பதை நானே அறிந்து கொள்ள வேண்டும். முதலில் நான் என் பிழைகளை முக்கியமானவையல்ல என்று நடந்துகொண்டேனுனல் இப்பொழுது நான் அவற்றின் மேல் அக்கறை கொண்டுவிடுகிறேன்.

சாதாரணப் பள்ளிக்கூடங்களிலுள்ள குழந்தைகளுக்குத் தாங்கள் பிழை செய்வதே தெரியாது. பிழைகளை அவை நனவிலா நிலையிலும் சிறிதும் அக்கறை இல்லாமலும் செய்து வருகின்றன. ஏனென்ருல், பிழைகளைத் திருத்துவது அவற்றின் பொறுப்பன்று. அது ஆசிரியருடையது. சுயேச்சை என்று நாம் கொள்ளும் கருத்துக்கு இது எவ்வளவு தொலைவிலிருக்கிறது பாருங்கள்!

ஆனுல், நானே என் பிழைகளைத் திருத்திக்கொள்ளாவிடில், வேருெருவருடைய உதவியை நான் தேடவேண்டியிருக்கிறது. அவர் என்னைவிட அதிகம் தெரிந்திருப்பார் என்பதுமட்டும் என்ன நிச்சயம்? என்னுடைய பிழைகள் இன்னவை என்று நானே கண்டுபிடித்து அவற்றைத் திருத்திக்கொண்டேனுனல், எவ்வளவு நன்ருக இருக்கும்! ஒருவருடைய சால்பை ஸ்திரமற்றதாக்குவதென்ருல், அது பிறருடைய உதவியைத் தேடாமல் ஒருவருடைய செயலை நடத்திவைக்கும் திறமை பெருத காரணம் என்று கொள்ள வேண்டும். இதனுல் ஊக்கம் குன்றும் ஒரு தாழ்ந்த மனப்பான்மை தோன்றி, தன்னம்பிக்கையை இழக்கச் செய்கிறது.

நாம் நமது குறிக்கோளை நாடிச் செல்கிருேமா, அல்லது எதிர்த் திக்கில் செல்கிருேமா என்பதைக் காட்டும் ஏற்பாட்டுக்கு நாங்கள் '**பிழைக் கட்டுப்பாடு**' என்று பெயர் வைத்திருக்கிருேம். நான் குறிப்பிட்ட நகரத்துக்குச் செல்லவேண்டுமென்று நினைக்கிறேன் என்று வைத்துக்கொள்வோம். அதற்கு வழி தெரியவில்லை என்றும் வைத்துக்கொள்வோம். இது அடிக்கடி தினசரி வாழ்க்கையில் நடைபெறுகிறது. காப்பீட்டுக்காக நான் ஒரு படத்தைப் பார்த்துக்கொள்கிறேன். மேலும், வழியில் வழிகாட்டிகளையும் பார்த்துக்கொள்கிறேன். வழியில் 'அகமதாபாதுக்கு இரண்டு மைல்' என்ற அடையாளத்தைக் கண்டவுடன் என் நம்பிக்கை வலுப்படுகிறது. ஆனுல், திடீரென்று, 'பம்பாய் ஐம்பது மைல்கள்' என்ற கை காட்டியைப் பார்த்தேனுனல், நான் தவருன வழியிற்செல்கிறேன் என்பது எனக்குத் தெரிய வருகிறது. படமும் கை காட்டிகளும் எனக்கு உதவியளிப்பவை. அவை இல்லாவிட்டால், நான் வழி நெடுகக் கேட்டுக்

கொண்டே செல்ல வேண்டியிருக்கும். ஒவ்வொருவரும் ஒன்றுக் கொன்று மாறுன வகையில் வழி காட்டுவர். நம்பக்கூடிய வழிகாட்டியும், நாம் சரியான வழியிற்செல்கிருேமா என்று காட்டக்கூடிய படமும் ஆகிய இவ்விரண்டும் எந்த வழிச் செலவுக்கும் இன்றியமையா தவையாகும்.

எனவே, விஞ்ஞானமும், நடைமுறை வாழ்க்கையில் தேவைப் படுகின்றவைகளும் தொடக்கத்திலிருந்து கல்வித் துறையிலும் இன்றியமையாதனவாகின்றன. ஒருவருடைய பிழைகளைத் தாமே தெரிந்து கொள்வதற்கு இவையே வழி காட்டியாய் இருக்கலாம். இவற்றுக்கு ஏற்பாடு செய்வதுடன் வேலை செய்வதற்குச் சாமான்களை எவ்வாறு செய்வதென்ற குறிப்பும் அளிக்கப்படவேண்டும். சுயேச்சை பெறுவதிலும் இவ்வாறுதான் செல்லவேண்டும் என்னும் பொறுப்புள்ள வழியும் இருந்தால், இவற்றைப்பொறுத்து முன்னேற்றமடையும் சத்தியும் வளரும். இவற்றுடன் நாம் வழியை விட்டு அகலும் பொழுது எப்படியாவது நமக்கு அறிவிக்கக்கூடிய ஏற்பாடும் இருக்க வேண்டும். இந்தக்கொள்கையைப் பள்ளிக்கூடத்திலும் இல்லத்திலும் உணர்ந்தோமாஞல், அப்பொழுது ஆசிரியர்களும் தாய்மாரும் பரிபூரண நிலை பெற்றவர்களாய் இருக்கவேண்டுமென்பதில்லை. பெரியவர்கள் செய்த பிழைகளுக்குத் தனி அக்கறை ஒன்றிருக்கிறது. குழந்தைகள் இதைக் கண்டு பரிவு காட்டுகின்றன; ஆனல், பற்றற்ற ஒரு முறையில் இதைக் காட்டுகின்றன. வாழ்க்கையின் இயல்பான பகுதி என்று இதை அவை எண்ணுகின்றன. நாம் எல்லாரும் பிழை செய்யக்கூடும் என்பது அவற்றின் நெஞ்சில் ஆழ்ந்த அன்பைத் தூண்டிவிடுகிறது. தாயும் சேயும் ஒன்றி வாழ்வதற்கு இது இன்னும் ஒரு காரணமாகிறது, நிறைவுப் பாதையைவிட, பிழையாகிய பாதையில், 'உடன் பிறப்புக் குழு' எண்ணம் எளிதில் தோன்றுகிறது. நிறைவு பெற்ற மனிதன் மாறுவதென்பது இயலாதது. நிறைவு பெற்றவர் இருவரை ஒன்று படுத்திஞேமாஞல், அவர்கள் தவருமல் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொள்வார்கள். ஏனென்ருல், ஒருவர் மற்றவரைப் புரிந்து கொள்ள மாட்டார். இருவருக்கும் இடையில் காணப்படும் வேற்றுமைகளைப் பொறுத்துக்கொள்ளவுமாட்டார்கள்.

நம் குழந்தைகள் முதல் முதலில் செய்கின்ற பயிற்சிகளுள் ஒன்று உருளைகளை இணங்கப் பொருத்துதல் என்பது நினைவிலிருக்கும். இவ்வுருளைகள் ஒரே உயரமாஞலும், வெவ்வேறு விட்டங்களைக் கொண்டவையாகும். ஒரு தனிக்கட்டையில் காணப்படும் தொளைகளுக்குள் இவற்றுள் ஒவ்வொன்றும் சரியாகப் பொருந்தும். முதலில் உணர வேண்டுவதென்னவென்ருல், ஒவ்வொன்றும் வெவ்வேறு என்பது. இரண்டாவது, ஒவ்வோர் உருளையின் உச்சியிலும் இருக்குங் குமிழைப் பெருவிரலாலும் முதல் இரு விரல்களாலும் பிடிப்பதாகும்.

அந்தத்தொளைகளுக்குள் ஒவ்வொன்ருகக் குழந்தை பொருத்திப் பார்க்கிறது. இறுதியில் ஏதோ பிழை செய்திருப்பதைக் குழந்தை உணர்கிறது. மீதி இருக்கும் ஒரு துளைக்கு மீதியிருக்கும் உருளை பெரிதாகக் காணப்படுகிறது. சில உருளைகள் தொளதொளவென்று அந்தந்தத் தொளைகளில் சரியாகப் பொருந்தவில்லை. குழந்தை அவற்றை இன்னும் ஒரு முறை நெருங்கிக் கூர்ந்து கவனிக்கிறது. இப்பொழுது ஒரு சிக்கலுக்கு வழி தேடுகிறது. ஓர் உருளை விடுபட்டிருக்கிறது. ஏதோ பிழை செய்திருப்பதையும் உணர்கிறது. இது தான் இவ்விளையாட்டுக்கு அக்கறை அளிக்கிறது. அதனுல், அதைச் செய்து செய்து பார்க்கச்சொல்கிறது; எனவே, இந்தந்துணைக்கருவி இரண்டு தேவைகளுக்கு ஏற்பாடு செய்கிறது. (1) குழந்தையின் புலன் காட்சிகளை[1] மேம்படச் செய்கிறது. (2) குழந்தைக்குப் பிழை கட்டுப்பாட்டையும் கையில் அளிக்கிறது.

கண்ணுக்குப் புலப்படக்கூடியதும், தொட்டறியக்கூடியதுமான பண்புகளைப் பெறுமாறு எம் துணைக்கருவிகள் எப்பொழுதும் உருவாக்கப்படுகின்றன. இரண்டாண்டுக் குழந்தை ஒன்று இதை உபயோகிக்கத் தொடங்கலாம். தன்னுடைய பிழைகளைத் தானே திருத்திக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் அதன் மனத்தில் தோன்றலாம். இதனுல், நிறை பாதையில் அது அடி எடுத்துவைக்கத்தொடங்கிவிடுகிறது; தினந்தோறும் பயிற்சி செய்வதால் தன் செயலைச் சரிப்படுத்திக் கொள்கிறது. அதனுல் அது அப்பொழுதே நிறைவு பெற்றுவிடுகிறதென்பது பொருளன்று. தன்னுடைய திறமைகளின் உணர்வை அறிந்து கொள்கிறது. இது அக்குழந்தையின் உள்ளத்தைத் தூண்டிவிட்டு முயற்சி செய்யச் செய்கிறது.

குழந்தை தனக்குள், 'நான் நிறைவு பெறவில்லை. நான் சர்வ வல்லமை பெற்றவள் அல்லேன். ஆனுல், இந்த அளவு நான் செய்ய இயலும். அது எனக்குத்தெரியும். நான் பிழை செய்யக்கூடும் என்பதையும் நான் அறிவேன். என்னைத் திருத்திக்கொள்ளவும் தெரியும். இவ்வாறு எவ்வழியைக் கண்டுபிடிக்கவும் இயலும்,' என்று சொல்லிக்கொள்ளலாம். இங்கு விவேகம், உறுதி, அனுபவம் ஆகியவை இருக்கின்றன. வாழ்க்கைப்பாதையில் நடந்து செல்வதற்கு நிச்சயமான கட்டுச்சோறு போன்றவை இவை. இத்தகைய ஆதரவு உணர்ச்சியை அளிப்பது நாம் நினைப்பது போல அவ்வளவு எளிய காரியமன்று; அல்லது நிறைவுப்பாதையில் குழந்தைகளைத் திருப்பிவிடுவதும் அவ்வளவு எளிதன்று. புத்திசாலி, இசை

1. Perception

வற்றவன்.[1] அறிவாளி, முட்டாள், நல்லவன், கெட்டவன் என்று ஒருவனைக் குறிப்பிடுவது ஒரு வகையில் காட்டிக்கொடுப்பதாகும். தன்னால் என்ன செய்ய இயலும் என்பதைக் குழந்தை தானுகப் பார்க்க வேண்டும். கல்விக்கு வேண்டுபவைகளை மட்டும் குழந்தைக்குக் கொடுத்தல் போதாது. தன்னுடைய பிழைகளைக் கண்டுபிடிக்கக் கூடிய குறி காட்டிகளும்[2] கொடுக்கப்பட வேண்டும்.

இந்த வகையில் கற்பிக்கப்பட்ட வயது வந்த சிறுவனைக் கவனிப் போம். அவன் கணக்குகளைப்போடுகிருன். விடையைச் சரிபார்ப்ப தெப்படி என்பதும் காட்டப்படுகிறது. இதைச் செய்வது அவனுடைய ஒரு பழக்கமாய்விடுகிறது. கணக்கைவிட விடை சரியா என்பது அவனுடைய அக்கறையைத் தூண்டிவிடுகிறது! படிப்பதிலும் இதே நடைபெறுகிறது. அவன் ஒரு பயிற்சியில், பெயர் உடைய அட்டைகளை அப்பெயரைக்கொண்ட பொருள்களுக்குப் பொருத்தமாக அடுக்கு கிருன். இதைச் சரி பார்ப்பதற்குத் தனியான ஓர் அட்டையில் அப் பொருள்களின் படமும் அவற்றின்கீழ்ப் பொருத்தமான பெயர்களும் இருக்கும்படி செய்யப்பட்டிருக்கிறது. தான் ஏதாவது பிழை செய் திருக்கிருனு என்று இந்த அட்டையைப் பார்ப்பதில் பெருமகிழ்ச்சி அடைகின்ருன்.

பள்ளிக்கூடத்தின் தினசரிச் செயல் வட்டத்தில் தெளிவாக எடுத்துக்கூறக்கூடிய பிழை திருத்தக் குறி காட்டிகளை ஏற்பாடு செய்தோமானுல், அப்பொழுது நிறைவுப் பாதையில் நம்மை அமைத்துக்கொள்வதற்கு இது உதவி புரியும், இன்னும் மேம்படச் செய்யவேண்டுமென்று குழந்தையின் அக்கறையும், அது அடிக்கடி சோதனை செய்து சரி பார்ப்பதும் அதற்கு மிகவும் முக்கியமானவை. அதன் முன்னேற்றம் நிச்சயமாக உறுதியாக்கப்படுகிறது. குழந்தை யின் இயல்பே துல்லியத்தை நாடுகிறது. அதைப்பெறுகின்ற வழிகள் அதன் கவனத்தை ஈர்க்கின்றன. எங்கள் பள்ளிக்கூடங்களுள் ஒன்றில் இருந்த சிறு பெண் குழந்தை ஒரு கட்டளை அட்டையைக் கண்டது. அதில், 'வெளியே போ; கதவைச்சார்த்து; பிறகு திரும்பி வா,' என்று எழுதப்பட்டிருந்தது. குழந்தை அவ்வட்டையைக் கூர்ந்து படித்தது; அதன்படி கீழ்ப்படியத்தொடங்கிற்று; ஆனுல், நடுவில் நின்றுவிட்டது; ஆசிரியையிடம் சென்றது. 'கதவைச் சார்த்திஞல் நான் எப்படித் திரும்பிவர இயலும்?' என்று கேட்டது.

ஆசிரியை 'நீ சொல்வது முற்றும் சரி; அது என் தவறு,' என்று கூறி, அந்தச் சொற்ருெடரைத் திருத்தி எழுதிஞள்.

---

1. Clumsy, 2. Indicators

அதைப் பெற்ற குழந்தை புன்முறுவலுடன், 'ஆம், இப்பொழுது என்னால் செய்ய இயலும்,' என்றது.

பிழை பற்றிய இந்த **உணர்வுகளால்**[1] ஒரு வகையான சகோதரத்துவம் தோன்றுகிறது. பிழைகள் மனிதர்களை வேறுபடுத்துகின்றன. ஆனால், அவைகளைத் திருத்துதல் ஒன்றுபடுத்தலுக்குத் துணையாய் இருக்கின்றது. பிழைகள் எங்குக் காணப்பட்டாலும், அவற்றைத் திருத்துதல் பொது அக்கறை ஊட்டுவதாகிவிடுகின்றது. பிழையே அக்கறையூட்டுவதாகிவிடுகிறது. அது ஒரு சங்கிலி போல ஆகிவிடுகிறது. மனிதர்க்கிடையே தோழமை ஏற்படுத்தக்கூடிய பிணைவு என்பது உறுதியாகிறது. முக்கியமாகக் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் இடையில் ஒற்றுமையை ஏற்படுத்த இது உதவி புரிகிறது. பெரியவர்களிடம் சிறு பிழையைக் கண்டு பிடிப்பது குழந்தையின் அவமரியாதையையோ, அல்லது பெரியவர்களின் மதிப்பையோ குறிப்பதன்று. பிழை என்பது **ஆள் குறியாதது**[2] ஆகிவிடுகிறது. அந்த நிலையில் அதை அடக்கிக்கட்டுப்படுத்த இயல்கிறது.

இந்த வகையில் சிறு செயல்கள் பெரியவைகளுக்கு வழி காட்டுகின்றன.

1. Awareness, 2. Impersonal

# 25. கீழ்ப்படிதலின் மூன்று நிலைகள்

சால்புப் பயிற்சியைப்பற்றி வாதாடும்பொழுது அது பெரும்பாலும் மனவுறுதி, கீழ்ப்படிதல் என்ற இரு பிரச்சினைகளைப்பற்றி ஆராய்வதில் கொண்டுபோய் விடுகிறது. பெரும்பாலார் மனத்தில் இவை எதிர் மறைக் கருத்துகளாகும். ஏனென்றால், கல்வியின் பெரும்பகுதி குழந் தையின் மனத்தை அடக்கி ஒடுக்கி, அதற்குப் பதிலாக ஆசிரியரின் மனவுறுதியைப் புகுத்தி, குழந்தையின் வாய் பேசாக் கீழ்ப்படி தலையே எதிர் பார்க்கிறது.

இக்கருத்துகளைத் தெளிவாக்குகிறேன். என் அபிப்பிராயங்களைக் கொண்டு நான் என் கருத்தை வெளியிடவில்லை. ஆனால், கூர்ந்து கவனிக்கப்பட்ட மெய்ந்நிகழ்ச்சிகளைக்கொண்டே நான் கூறுகிறேன். எட்டாவது அத்தியாயத்தில் கண்டதுபோல மனிதனுடைய மனவுறுதி யானது பிரமாண்டமான சத்தியிலிருந்து பிறக்கிறது என்று பேசும் கொள்கைகள் இருக்கின்றன. இந்தச்சத்திக்கு 'ஹார்மி'[1] என்பது பெயர். இந்தப் பிரமாண்டமான சத்தி ஸ்தூலமயமானதன்று; பரி ணாமத்தின் வாழ்க்கையின் முழுச்சத்தியாகும். பரிணாமத்தை நோக்கி இச்சத்தி ஒவ்வொரு சீவராசியையும் உந்துகிறது. இதிலிருந்து செயல் புரிய வேண்டிய **உள் தூண்டுதல்**[2] ஏற்படுகிறது. ஆனால், பரிணாமம் என்பது தற்செயலாக நடப்பதில்லை; அல்லது அதிருஷ்ட வசமாகவும் நடப்பதில்லை. ஆனால், நிருணயிக்கப்பட்ட விதிகளால் பாதிக்கப்படுகிறது. மனிதனுடைய மனவுறுதி அச்சத்தியின் வெளிக் காட்டுதலானால், அவனுடைய நடத்தை அச்சத்தியால் உருவாக்கப் பட வேண்டும்.'

சிறு குழந்தை வாழ்க்கையில் அது தானாக வேண்டுமென்று ஒரு செயல் ஆற்றினவுடனே இந்தச்சத்தி அதனுடைய நனவு நிலையில் புகுந்துவிடுகிறது. அதனுடைய மனவுறுதி என்று எதைச் சொல் கிறோமோ, அது வளரத் தொடங்கிவிடுகிறது. இந்தச் செயல் இனி மேல் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. ஆனால், இது அனுபவம்

---

1. Horme, 2. Impulse

காரணமாகத்தான் நடைபெற்று வருகிறது. ஆதலால், ஏதோ பிறக்கும்போதிருந்து மனவுறுதி இருப்பதில்லை என்று நாம் எண்ணத் தொடங்கியிருக்கிறோம். இனிமேல் வளர்க்கப்பட வேண்டுவது என்றும், இது இயற்கையின் ஒரு பகுதி ஆனபடியால் இந்த வளர்ச்சி இயற்கை விதிகளுக்குக் கீழ்ப்படிந்தால்தான் தோன்ற இயலும் என்றும் நாம் கருதுகிறோம்.

குழந்தைகளின் இயற்கையான செயல்கள் கட்டாயம் ஒழுங்கற்றனவாயும் முரட்டுத்தனமாயும் இருக்கும் என்ற நம்பிக்கையால் மேலும் குழப்பம் தோன்றுகிறது. குழந்தைகள் ஒழுங்கற்ற முறையில் நடந்துகொள்ளும்பொழுது, இந்தச் செயல்களெல்லாம் அதனுடைய மனவுறுதியால் நடைபெறுகின்றன என்று பிறர் நம்புகின்றனர். ஆனால், இதுவன்று உண்மை. இத்தகைய செயல்கள் சர்வமயமான 'ஹார்மி'யில் இடம் பெறுது. காக்கை வலி வந்தவன் ஒருவனைக் கண்டதும் அவ்வியக்கங்கள் அவனுடைய இச்சா இயக்கங்கள் என்றோ, அல்லது அவன் கோபத்தில் செய்த செயல்கள் எல்லாம் பகுத்தறிவுடன் கூடியவையென்றோ, கருதிவிடலாமா ? அவ்வாறு செய்வது அறியாமையாகும். நாம் பழக்கத்தில் மனவுறுதி என்ற பதத்தைப் பயன்படுத்தும்பொழுது ஏதோ குறிக்கோள் அதற்கு இருப்பதாக நினைத்து அதற்கு வழியில் பல இடையூறுகளைக் கடக்கவேண்டுமென்று கருதப்படுகிறது. அதற்குப் பதிலாக நம்முடைய இச்சா கிரியைகள் அனேகமாக ஒழுங்கில்லாத முறையில் நடைபெறுகின்றன என்று கொண்டோமானால், அப்பொழுது மனவுறுதியை நாமும் அடக்கி ஆளவேண்டும் என்ற அவசியத்தை அறிவோம். அல்லது, பிறர் கூறி வந்தது போல, அதை ஒடுக்க வேண்டி வரும். இதன் அவசியத்தை உணர்ந்த பிறகு தர்க்க முறையில் காணும் பொழுது குழந்தையின் மனவுறுதியின் இடத்தில் நமது மனவுறுதியைப் புகுத்தி அக்குழந்தையை நமக்குக் கீழ்ப்படியச் செய்வோம்.

நிலைமையின் மெய்ந்நிகழ்ச்சி என்னவென்றால், மனவுறுதி ஒழுங்கின்மையையும் பலாத்காரத்தையும் தூண்டாமை. இவைகளெல்லாம் மனவெழுச்சியின் அமைதிக்குலைவும் தொல்லையும் காரணமாகப் பிறந்தவை. தக்க சூழ்நிலையிருந்தால், மனவுறுதி வாழ்க்கைக்கு நன்மை பயக்கும் செயல்களைத் தூண்டிவிடும் சத்தியாகும். குழந்தை வளர வேண்டும் என்ற கடமையை இயற்கை அன்னை அதன்மேல் சுமத்துகிறாள். அக்கடமை குழந்தையின் மனவுறுதி முன்னேற்றம் அடையவும் அது தன் சத்திகளை வளர்ச்சி பெறச் செய்யவும் வழி காட்டுகிறது.

தனிப் பேர்வழி செய்துகொண்டிருப்பதுடன் மனவுறுதியும் இணங்கி இருக்கும் பொழுது அது தனது நனவுடைய வளர்ச்சி பெறு

வதற்கு வழியைக் கண்டு பிடிக்கிறது. எம் குழந்தைகள் தங்கள் வேலைகளைத் தாங்களே தேர்ந்தெடுத்துக்கொள்கின்றன. **குழந்தைகளே தேர்ந்தெடுத்த செயலைத் திரும்பப் பல முறை செய்வதால் தங்களுடைய செயலில் ஓர் உணர்வைப் பெறுகின்றன.** தொடக்கத்தில் உயிர்ப்புடை உள் தூண்டுதலாக [1] (ஹார்மி) இருந்தது, இப்பொழுது ஆழ்ந்தாராய்ந்து செய்யப்படும் செயலாகிவிடுகிறது. சிறு குழந்தையின் முதல் இயக்கங்கள் இயல்பூக்கமானவை. இப்பொழுது அது தெரிந்தும் தானாக இயங்குகிறது. இதனுடன் அதன் சக்தியும் விழிப்படைகிறது.

குழந்தையே இவ்வேறுபாடுகளை உணர்கிறது. இவற்றுள் ஒரு குழந்தை ஒரு முறை சொன்ன சொற்கள் எங்கள் மனத்தில் நீக்க முடியாத பெருஞ்செல்வமாய் நிலைத்திருக்கும். உயர்ந்த நிலையிலுள்ள ஓர் அம்மையார் ஒரு முறை எங்களுடைய பள்ளிக்கு வருகை தந்தார். அவருடைய கருத்துகள் திருந்தாதவையாதலால், அவர் ஒரு சிறுவனைப் பார்த்து, 'அப்படியானால் உங்கள் விருப்பம் போலச் செய்கிற பள்ளிக்கூடமா இது ?' என்று வினவினார். 'இல்லையம்மா, **எங்கள் விருப்பம் போல நாங்கள் செய்வதில்லை. ஆனால், நாங்கள் செய்வதை விரும்புகிறோம்,**' என்று உடனே அது விடையளித்தது. இன்பம் தருவதால் ஒன்றைச் செய்வதற்கும், ஒன்றைச் செய்யலாம் என்று தீர்மானித்த ஒருகாரியத்தைச் செய்வதில் மகிழ்ச்சி பெறுவதற்கும் உள்ள வேற்றுமையை அது நுண்மையாக உணர்ந்திருக்கிறது.

ஒரு விஷயம் தெளிவாக இருக்க வேண்டும் : நனவு மனவுறுதி [2] என்பது உபயோகத்தாலும், செயலாலும் வளம்பெறுகிறது, மனவுறுதியை வளர்க்கும் நோக்கத்தைப் பெறவேண்டும்; அதை முரிக்கும் வகையன்று. மனவுறுதியை ஒரு விநாடியில் முரித்துவிடலாம். அதன் வளர்ச்சி மெதுவான செயல் முறையாகும். [3] அது சூழ்நிலையுடன் ஒத்து இயங்கிய இடையறாத இயக்கங்களாய் வளர்ச்சி பெற்றது. அழித்துவிடுவது எவ்வளவோ எளியது. பூகம்பத்தாலோ வெடிகுண்டுகளாலோ ஒரு கட்டடத்தை வீழ்த்துவது ஒரு விநாடிக்குள் நடைபெறச் செய்துவிடலாம். ஆனால், அதைக் கட்டுவது எவ்வளவு பாடாய் இருந்திருக்கும்? அதைக் கட்டுவதற்குச் சமநிலை விதிகள், பொருள்களின் வலிமை, கண்களைக் கவரும் கலை விதிகள் போன்றவைகளைப் பற்றிய அறிவு தேவைப்பட்டது.

---

1. Vital impulse, 2. Couscious will, 3. Process

உயிரற்ற ஒரு கட்டடத்தை அமைப்பதற்கு இவைகளெல்லாம் தேவைப்படுமானுல், மனிதச்சத்தியைக் கட்டியமைக்க எவ்வளவு வேண்டியிருக்குமென்று சிந்தித்துப்பாருங்கள்! ஆனுல், இது இரகசிய மாகத் தானுக அமைத்துக்கொள்ளப்படும் கட்டடம். ஆதலால், இதைக் கட்டுவிப்போர் தாயாராகவோ, ஆசிரியராகவோ, சிற்பியாகவோ இருக்க இயலாது. அவர்கள் முன்னிலையில் நடைபெறும் இவ்வாக்குந்தொழிலுக்கு அவர்கள் வேண்டுமானுல் உதவி புரியலாம். உதவி புரிதல் என்பதுதான் அவர்கள் கடமை யாகவும் நோக்கமாகவும் இருக்கவேண்டும். எனினும், மனவுறுதியை முரிக்கவும் பலாத்காரத்தால் அதை அடியோடு அழிக்கவும் பெரியவர் களுக்குச் சத்தி இருக்கிறது. பல சார்பெண்ணங்கள் [1] ஒன்று கூடி விஷயத்தை மங்கலாக்கிவிடுகின்றன. முதலில் இதை விலக்குவது பலன் தர வல்லது.

கல்வியில் பொதுவாகப் பார்க்கக்கூடிய சார்பெண்ணங்களுள் ஒன்று எல்லா விஷயமும் பேச்சால் சாதித்துவிடமுடியும் என்பதாகும். அதாவது, குழந்தையின் செவியில் படும்படி கேட்டுக்கொள்வதால் எதையும் நிறைவேற்றிவிடலாம் எனக்கருதப்படுகிறது. அல்லது ஒருவர் தம்மை ஓர் எடுத்துக்காட்டாகவும் பிறர் இதைப் பின்பற்ற வேண்டும் என்றும் அனுசரிப்பதால் நிறைவேற்ற இயலும் என்பது கருதப்படுகிறது. இது கண்களைக்கொண்டு காணச் செய்வதாகும். உண்மை என்னவென்ருல், **ஆளுமை என்பது, தன்னுடைய சொந்த சத்திகளைப் பயன்படுத்திக்கொள்வதாலேயே வளர்கிறது.** குழந்தை ஓர் ஏற்கும் [2] பேர்வழியேயன்றி இயங்கும் [3] பேர்வழி அன்று என்பது பொதுவாகக் கருதப்படுகின்றது. இது குழந்தை வாழ்க்கையின் ஒவ் வொரு பகுதியிலும் நடைபெறுகிறது. குழந்தையின் கற்பனையையும் இப்படியே கருதி வருகின்றனர்; குழந்தையின் கற்பனையை வளர்ப் பதற்காக, மாயக்கதைகளையும் அற்புத இளவரசிகள் கதைகளையும் சொல்லிவைக்கின்றனர். இவைகளையும் இவை போன்ற கதைகளையும் கேட்கும் பொழுது குழந்தை உளப்பதிவாகவே இவற்றை ஏற்றுக் கொள்கிறது; ஆக்கு முறையில் கற்பனுசத்தியை வளரவைக்கும் தன் சத்திகளை விருத்தியாக்குவதில்லை. மனிதனுடைய மனச்சத்தி களில் உயர்ந்த நிலையைப் பெறக்கூடிய ஆக்கும் மனுேசத்தி யானது குழந்தை உள்ளத்தில் தோன்றுவதில்லை. இந்தக் குற்றம் மனவுறுதியினிடம் செய்யப்படும் பொழுது விளைவு இன்னும் பெரு விபத்தாகிவிடுகிறது. ஏனென்ருல், சாதாரணப் பள்ளிக்கூடங்களில்

1. Prejudice, 2. Receptive, 3. Active

குழந்தையின் மனவுறுதியை உபயோகிக்கின்ற ஒவ்வோர் அவகாசத்துக்கும் இடம் மறுப்பதோடு அது வளரவிடாமல் நேர்முகமாகத் தடுத்தும் ஒடுக்கிவிடுகின்றனர். குழந்தை காட்டுகின்ற ஒவ்வொரு எதிர்ப்பும் புரட்சியாகக் கருதப்படுகிறது. குழந்தையின் மனவுறுதியை அடியோடு ஒழித்துக்கட்ட ஆசிரியர் வேண்டுவன யாவற்றையும் செய்கிறார் என்று கூசாமல் சொல்லிவிடலாம்.

கதை சொல்வதுடன் எடுத்துக் காட்டின் மூலம் கற்பிப்பது என்ற கொள்கையை அனுசரித்து ஆசிரியை தன்னைக் குழந்தைகளுக்கு ஒரு மாதிரியாகக் காட்டி, அவை அவளைப் பின் பற்ற வேண்டுமென்பது ஏற்படுகிறது. அப்பொழுது குழந்தையினுடைய கற்பனை சோம்பிக் கிடக்கிறது; 'ஆசிரியை என்ன சொல்கிறாள்? என்ன செய்கிறாள்?' என்று எப்பொழுதும் எதிர்பார்த்திருக்கும் பேர்வழி என்ற நிலைமைக்கு வந்துவிடுகின்றது.

இந்தச்சார்பெண்ணங்களிலிருந்து முடிவில் நம்மை விடுதலை செய்துகொண்டு உண்மைக்கு அஞ்சாது நடந்துகொள்ள வேண்டும்.

பழைய கல்வி முறையில் ஆசிரியர் தர்க்கவாதம்போலத் தோன்றுகிற முறையில் தமக்குள் வாதாடினார். 'கற்பிப்பதற்கு நான் நல்லவனாகவும், நிறைவு பெற்றவனாகவும் இருக்க வேண்டும். எது செய்ய வேண்டும், எது செய்யக்கூடாது என்பவை எனக்குத் தெரியும். ஆதலால், குழந்தைகள் என்னைச் சார்ந்து நடந்து எனக்குக் கீழ்ப்படிந்தார்களானால், எல்லாம் நன்றாகிவிடும்,' என்று சொல்லிக்கொண்டார். எல்லாவற்றிற்கும் அடிப்படை இரகசியம் கீழ்ப்படிதல். யாரோ ஒரு பேராசிரியர் சொன்னார். அவர் எவர் என்பது என் நினைவிலில்லை. அவர் கூறிய முதுமொழி[1] இது: 'குழந்தையின் எல்லா நற்குணங்களையும் ஒரு நற்குணத்துக்குள் அடக்கிவிடலாம். அதாவது, கீழ்ப்படிதல்.' இம்முதுமொழியால் ஆசிரியருடைய நிலைமை சுலபமும் பெருமையும் வாய்ந்ததாகிவிட்டது. அவர், 'எனக்கு முன் இருக்கும் பேர்வழி நிறைக்கப்படாதவன். கோணலானவன். நான் அவனை நேர்படுத்துவேன்; என்னைப்போல ஆக்குவேன்,' என்று நினைத்தார். கிறித்தவ வேத நூலில், 'ஆண்டவன் மனிதனைத் தன்னுருவத்தில் படைத்தான்,' என்பது கூறப்பட்டிருக்கிறது. அதே போல ஆசிரியரும் அந்தச் சத்திகள் தம்மிடத்தில் இருக்கவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டார்.

ஆண்டவன் நிலையில் முதிர்ந்தோன் தன்னை இருத்திக்கொள்கிறான் என்பதை உணர்வதில்லை. வேத நூலில் அடுத்தபடியாகக்

---

1. Maxim

கூறப்படுவது, 'ஆண்டவனை வீழ்த்தி அவ்விடத்தில் நான் அமர்வேன் என்று சைத்தான் தன் கர்வத்தால் எண்ணினவுடன் அவன் சைத்தான் ஆனான்,' என்பதாகும். இவற்றை மனிதன் மறந்துவிடுகிறான்.

குழந்தையின் அகத்தில் ஆக்குவோன் சத்தி ஒன்று இருக்கிறது. அது ஆசிரியர் தாய் தந்தையரைவிட மிகவும் உயர்ந்தது; இவ்வாறு இருந்தும், அவர்களுடைய தயைக்கு அடிமைப்பட்டிருக்கிறது. தங்களுடைய கட்டளைகளை நிறைவேற்றி வைப்பதற்கு ஆசிரியர்கள் பிரம்பை உபயோகித்தார்கள். அண்மையில், உயர்ந்த நாகரிகம் பெற்ற நாட்டில் ஆசிரியர்கள் ஒன்று கூடிப் பொது இடங்களில் மறியல் செய்தார்கள்; 'நாங்கள் பிரம்பை உபயோகிக்கக்கூடாதென்றால், நாங்கள் கற்பிக்க முயலுவதை நிறுத்திவிட வேண்டும்,' என்று கோஷமிட்டார்கள். கிறித்தவ வேத நூலிலும் சாலமோன் என்பவருடைய பழமொழிகளுள் ஒன்றிலும் இந்தப் புகழ்பெற்ற சொற்றொடரைக் காண்கிறோம். 'பிரம்பை உபயோகிக்காமல் பெற்றோர் குழந்தைகளைப் பாழ்படுத்துகின்றனர்,' என்பதே அது.[1] இம்மொழியின்படி குழந்தைகள் நரகலோகத்துக்கு உந்தப்படுகின்றன. கட்டுப்பாடு என்பது அச்சுறுத்தலால் நிலை நிறுத்தப்படுகிறது. கீழ்ப்படியாத குழந்தை கெட்ட குழந்தை என்றும் கீழ்ப்படியும் குழந்தை நல்ல குழந்தையென்றும் நாம் இறுதியில் முடிவு கட்டிவிடுகிறோம்.

இக்காலத்தில் பொது ஆட்சிக்கொள்கைகளும், சுதந்தரமும் நிலவியிருக்கும்பொழுது மேலே கூறப்பட்ட போக்கைப்பற்றிச் சிறிது சிந்தித்துப் பார்த்தோமானால், இப்பொழுது நடைமுறையில் இருக்கும் கல்வி, இவ்வாசிரியர்களைச் சர்வாதிகாரிகள் என்றே கண்டனம் செய்யும் என்பதை நாம் கட்டாயம் அறிவோம். சர்வாதிகாரிகள் ஆசிரியர்களைவிட நுண்ணறிவில் சிறந்தவர்கள். அவர்களுடைய கட்டளைகளில் சிறிது புதுப்பாங்குடன் [2] கற்பனையையும் இணைத்திருப்பார்கள். ஆனால், பண்டைமுறை ஆசிரியர்கள் நியாயமல்லாத விதிகளை உறுதியாகப் பிடித்துக்கொண்டு, மாயையும் சார்பெண்ணமும் தவிர வேறு எவ்வழி காட்டியும் இல்லாமல் இருப்பார்கள். சர்வாதிகாரிகளின் கொடுமைக்கும், ஆசிரியர்களின் கொடுமைக்கும் உண்மையான வேற்றுமை இருக்கிறது. ஆக்குவதற்காகக் கொடிய முறைகளைச் சர்வாதிகாரி அனுசரிக்கலாம். ஆனால், ஆசிரியரிடம் அம்முறைகளே அழிப்பதற்குப் பயன்படுகின்றன.

இதில் அடிப்படையான பிழை என்னவென்றால், 'குழந்தை நமக்குக் கீழ்ப்படிய வேண்டுமானால் முதலில் அதன் மனவுறுதி முறிவுபெற

1. 'அடியாத பிள்ளை படியாது.' 2. Originality

வேண்டும் ; அதாவது, வேறொருவருடைய கட்டளையைக் கேட்டுக் கீழ்ப்படிவதற்குமுன் அக்குழந்தையிடம் மனவுறுதி திறனற்றுப் போக வேண்டும்,' என்பது. இதே நியாயத்தை நுண்ணறிவு விஷயத்திலும் அனுசரித்தோமானால், முதலில் குழந்தையின் மனத்தை அடியோடு அழித்துவிட்ட பிறகே அதற்கு அறிவூட்ட இயலும் என்பதாகிறது.

ஆனால், ஒருவர் தமது முயற்சியை முற்றிலும் வளர்ச்சி பெறச் செய்துகொண்ட பிறகு, தாமே பிறருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப் படிய ஒப்புக்கொண்டிருக்கும் பொழுது வேறு நிலைமையைக் காண் கிறோம். இத்தகைய கீழ்ப்படிதல் ஒரு வகையான கிழடக்கம் அல்லது வழிபாடாகிறது. தம்மைவிடக் கட்டளை இடுவோர் சிறந்தவர் என்பது உணரப்படுகிறது. இத்தகைய கீழ்ப்படிதலைப் பெறுகின்ற ஆசிரியர் பாராட்டற்குரியவராவார்.

மனவுறுதியும், கீழ்ப்படிதலும் இணை பிரியாதவை. வளர்ச்சி நிரலில் மனவுறுதி என்பது முதலிடம் பெறுகிறது. கீழ்ப்படிதல் என்பது முன் ஏற்பட்ட அடிப்படையின்மேல் நிற்கின்றது. சாதாரணமாகக் கீழ்ப்படிதலுக்கு அளிக்கப்படும் பொருளைவிட இப்பொழுது புதுமைக் கருத்துத் தோன்றுகிறது. ஒரு தனிப் பேர்வழியின் மனவுறுதி தூய்மை யுறுதலே [1] கீழ்ப்படிதலாகும்.

மனித வாழ்க்கையில் இயல்பான தோற்றம் என்பதைக் கண்டு கொள்வது எளிதாகும். இது சாதாரணமான மனிதச் சிறப்பியல்பு. நம் குழந்தைகளிடம் இதன் வளர்ச்சியை ஒரு வகை மலர்ச்சியாகக் காணலாம். நீண்ட முதிர்ச்சிச் செயல்முறையினால் இது இயல்பாகவும் எதிர்பார்க்கப்படாத முறையிலும் வெளிப்படுகிறது.

இந்தப்பண்பை மனித ஆன்மா பெருமலிருந்தால்—ஏதோ ஒரு பரிணும வகையால் இதை மனிதன் பெற்றிராமலிருந்தால்—இந்தக் கீழ்ப்படியும் திறமை இல்லாதிருந்தால்—கூடி வாழ்வது இயலாததா யிருந்திருக்கும். உலகத்தில் என்ன நடைபெறுகிறது என்பதை மேலோடியாகக் கவனித்தோமானால், மக்கள் எந்த அளவுக்குக் கீழ்ப் படிந்து வருகின்றார்கள் என்பது தெளிவாகும். இந்த வகையான கீழ்ப் படிதல் இருப்பதனாலேதான் ஆயிரக் கணக்கான மக்களை ஒன்று திரட்டி எளிதில் அழித்துவிட இயல்கிறது. இது கட்டுக்கடங்காத கீழ்ப்படிதலாகும். இது முழு நாட்டையே பாழாக்கும் கீழ்ப்படிதல். நமது உலகத்தில் கீழ்ப்படிதலுக்குப் பஞ்சமில்லை. இதற்கு எதிர்மறை யாக அது நிறைந்திருக்கிறதெனலாம். ஆன்ம வளர்ச்சியின் இயல்பான பகுதியே கீழ்ப்படிதல் என்பது எளிதில் புரிகிறது. வருந்தக்கூடிய பகுதி என்னவென்றால், கீழ்ப்படிதலைக் கட்டுப்படுத்துவது எதுவும் இல்லாததே.

---

1. Sublimation

குழந்தைகள் தங்கள் இயற்கையான வளர்ச்சியில் முன்னேறுவதற்குத் தக்க அமைப்புகளை ஏற்படுத்தி, அவற்றில் எவ்வாறு வளர்ந்து வருகின்றன என்பதை நாம் கவனித்து வந்திருக்கிறோம். அந்த நிலையில் மனிதச் சால்பின் முக்கிய அமிசமாகக் கீழ்ப்படிதல் வளர்ந்துவருவது எங்களுக்குத் தெளிவாகியது. இந்த விஷயத்தில் எங்களுடைய கூர்ந்து கவனிப்பு நிறைந்த விளக்கம் அளிக்கும்.

குழந்தையின் மற்றச் சால்புப் பகுதிகள் எங்ஙனம் வளர்ச்சி பெறுகின்றனவோ, அங்ஙனமே கீழ்ப்படிதலும் வளர்கிறது. முதலில் ஹார்மியின்[1] தூண்டுதலால் கீழ்ப்படிதல் கட்டளையிடப்படுகின்றது. பிறகு அது நனவுநிலை மட்டத்துக்கு உயர்கிறது. அங்கிருந்து படிப்படியாக வளர்ந்துகொண்டே போய், இறுதியில் மனவுறுதியின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கிவிடுகிறது.

ஒருவனுக்குக் கீழ்ப்படிதல் என்பது என்ன என்பதை ஆராய்ந்து பார்க்க முயற்சி செய்வோம். இதுதான் அடி மட்டத்தில் என்றும் நடைபெறுவது. ஆசிரியரும் பெற்றோரும் 'இதைச் செய்,' என்று குழந்தைகளுக்குக் கூறுகின்றனர். குழந்தைகள் அவர்களுடைய கட்டளைக்கு இணங்கி[2] அதன்படி நடந்துகொள்கின்றன.

ஆனால், இந்தக் கீழ்ப்படிதல் என்பது இயல்பாக மலர்ச்சி பெறுவதை உற்று நோக்கினோமானால், இது மூன்று நிலைகளில் அல்லது மட்டங்களில் இருப்பது விளங்கும். **முதல் மட்டத்தில் குழந்தை சில வேளைகளில் கீழ்ப்படியும் ; ஆனால், எப்பொழுதும் கீழ்ப்படியாது.** இது காண்போருக்கு ஒரு நிலையற்ற[3] போக்காகத் தோன்றலாம். ஆனால், இதை ஆழ்ந்து பாகுபடுத்தி ஆராயவேண்டியிருக்கிறது.

'நல்ல எண்ணம்' என்று நாம் பழக்கத்தில் கூறி வருகிறோமே, அதைப் பொறுத்திருப்பதில்லை கீழ்ப்படிதல் என்பது. இதற்கு மாறாகக் குழந்தையின் தொடக்க வாழ்க்கைப்பருவத்தில் உள்ள செயல்களெல்லாம் ஹார்மியால் கட்டுப்படுத்தப்படுகின்றன. இது எல்லார்க்கும் பொருந்தும். இந்த முறை முதல் ஆண்டு முடியும் வரை நடைபெறுகிறது. முதல் ஆண்டுக்கும் ஆறும் ஆண்டுக்கும் இடையில் இந்த நிலை அவ்வளவு காட்டிக்கொள்வதில்லை. குழந்தை தன் நனவு நிலையை மலரச்செய்து தன்னைக் கட்டுப்படுத்தும் திறமையைப் பெறப்பெற மேலே குறிப்பிட்ட நிலையும் குறைந்துகொண்டே வருகிறது. இந்தப் பருவத்தில் (1—6) குழந்தையின் கீழ்ப்படிதல் அது அடைந்திருக்கிற திறமைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஒரு கட்டளையை நிறை

1. Hormic impulse, 2. Respond, 3. Capricious,

வேற்றவேண்டுமானால், அதற்குத் தக்க முதிர்ச்சியும்[1] அதை நடத்தி வைக்கவேண்டிய தனிப்பட்ட திறமையும் ஏற்கெனவே பெற்றிருக்க வேண்டும். ஆதலால், அந்தச்சமயத்தில் கீழ்ப்படிதலை அப்பொழுது பெறப்பட்ட திறமைகளைக்கொண்டே தீர்மானிக்க இயலும். எவரை யாவது தம் மூக்கால் நடக்கச்சொல்வோமானால், அது அசம்பாவித மாகும். ஏனென்றால், அது தூல உடலால் நடைபெற இயலாத காரி யம். அதே போலத் தற்குறியைக் 'கடிதம் எழுது' என்று கட்டளை இடுவதும் பேதைமையாகும். குழந்தை அடைந்த வளர்ச்சி மட்டத் தில் குழந்தையால் நடைமுறையில் கீழ்ப்படிய இயலுமா என்பதை நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும்.

மூன்று வயதுக்கு முன் தனக்கு இடப்பட்ட கட்டளை தன் உயிர்ப் புத் தூண்டுதல்களுக்கு ஒட்டியதாய் இருந்தாலொழிய, அக்குழந்தை யால் கீழ்ப்படிய இயலாது. ஏனென்றால், குழந்தை இன்னும் தன்னை உருவாக்கிக்கொள்ளவில்லை. தனது சொந்த ஆளுமைக்குத் தேவைப் படும் இயக்கங்களை நனவிலா நிலையில் அது இன்னும் ஆக்கிக்கொண் டிருக்கிறது. தன் விருப்பத்துக்கு உபயோகப்படுத்தவோ, நனவுடன் நடத்திவைக்கப்படவோ தேவையான இந்த ஆளுமை இன்னும் அவ் வளவு உறுதி நிலை அடையவில்லை. இவற்றின்மேல் ஆதிக்கம் செலுத் துவதென்பது வளர்ச்சியில் ஒரு புது மட்டத்தை அடைவதாகும். குழந்தைகளுடன் வாழ்கின்ற முதிர்ந்தோரின் நடத்தையால் இரண்டு வயதுக் குழந்தையிடம் கீழ்ப்படிதலை எதிர்பார்க்க முடியாதென்பது மறுக்க முடியாமல் ஒப்புக்கொள்ள வேண்டிய உண்மை என்பது வெளியாகிறது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகக் குழந்தைகளுடன் பெரியவர் களும் கூடிவாழ்ந்து வந்திருக்கின்றனர். குழந்தையை இந்த வயதில் பெரியவர்கள் எந்த விதத்தில் கீழ்ப்படியச்செய்ய இயலும் என்பதைத் தர்க்க ரீதியில் உணர்ந்துகொண்டிருக்கிறார்கள். குழந்தை சொல்லச் சொல்லச் செய்துகொண்டிருக்கும் செயல்களைப் பெரியவர்கள் பலாத் காரத்தால் வேண்டுமானால் தடுக்க இயலும் என்பதை உணர்ந்து கொண்டிருக்கின்றனர்.

எனினும், கீழ்ப்படிதல் என்பது எப்பொழுதும் எதிர்மறையான தன்று. எல்லாவற்றிற்கும் மேலாக இதில் அடங்கியிருப்பதென்ன வென்றால், வேறொருவருடைய மனவுறுதிக்கு இணங்கி நடப்ப தென்பது. மூன்றாண்டுக்கு முற்பட்ட வயதில் குழந்தையின் உள்ளத் தின் கர்ப்ப கிருகத்தில் ஆக்கத்தொழில் நடைபெற்றுக்கொண் டிருப்பதை நாம் இதற்கு முன் பார்த்திருக்கிறோம். மூன்றாண்டுக்கு மேற்பட்ட குழந்தையின் வாழ்க்கை இந்த மூல நிலையைப்போல இல்லை

1. Maturity

எனினும், இப்பருவத்தில் அவை போன்ற நிலைகளையும் காண்கிறோம். மூன்றாண்டுக்குப் பிறகு கீழ்ப்படிவதற்கு முன் கீழ்ப்படிவதற்குத் தக்க சில பண்புகள் குழந்தையிடம் வளர்ச்சியடைந்திருக்க வேண்டும். திடீரென்று வேறொருவருடைய மனவுறுதிக்கு இணங்கிக் குழந்தையால் நடந்துகொள்ள இயலாது. ஒரு நாளிலிருந்து அடுத்த நாளைக்குக் குழந்தை இன்னின்னது செய்ய வேண்டுமென்பதை அதனால் புரிந்துகொள்ளவும் இயலாது. சில முன்னேற்றங்கள் அகத்திலிருந்து தோன்றுகின்றன. இவை உருவாவதற்குப் பல கட்டங்களைக் கடந்திருக்கின்றன. இந்த ஆக்கங்கள் நடைபெற்று வருகின்ற காலத்தில் நம் வேண்டுதல்களில் சிலவற்றுக்கிணங்கக் குழந்தை சில வேளைகளில் ஒரு செயலைச் செய்து முடிக்கலாம். இதன் பொருள் என்ன? இப்பொழுது உருவாக்கிக்கொண்டிருக்கிற ஓர் அந்தரங்கத் திறமையைப் பயன்படுத்திக்கொள்கிறதென்பது. அதன் சேமிப்பு முழுமையும் நிலைநாட்டப்பெற்ற பிறகே அதன் மனவுறுதி அதை எப்பொழுதும் பயன்படுத்திக்கொள்ள இயலும். இயக்கத்தின் பகுதிகளைக் குழந்தை நிலைபெறச்செய்யும் முயற்சியில் என்ன நடைபெறுகிறது? சுமார் ஓராண்டிருக்கும்பொழுது குழந்தை முதல் அடி எடுத்துவைக்கத் தீர்மானிக்கிறது; ஆனால், அடிக்கடி தவறிவிடுகிறது; சில காலம் இப்பரிசோதனையைத் தள்ளி வைத்துவிடுகிறது. ஆனால், நடக்கும் உறுப்பமைப்புகள் உறுதி பெற்றவுடன் எப்பொழுது வேண்டுமானாலும் அவற்றைப் பயன்படுத்திக்கொள்ள இயலும்.

முதல் முக்கியத்துவமுடையது இங்கொன்றிருக்கிறது. குழந்தையின் இப்பருவக் கீழ்ப்படிதலானது அதன் சக்திகளின் வளர்ச்சியைப் பொறுத்தது. ஒரு முறை ஒரு கட்டளைக்குக் கீழ்ப்படிதலைச் சாதித்துவிட இயலும். ஆனால், அடுத்த முறை அதைச் சாதிக்க இயலாது. இதைக் கண்டவர்கள் கெட்ட நடத்தை என்றே பெரும்பாலும் முடிவு கட்டிவிடுகின்றார்கள். ஆசிரியர் இதனுடன் மல்லுக்கட்டினாலோ, அல்லது இதைத்திட்டினாலோ, அந்தரங்கத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் வளர்ச்சிக்குத் தடை ஏற்பட்டுவிடுகிறது. பெஸ்டலொஸி என்பவர் ஸ்விட்ஸர்லாந்து நாட்டுப் பேராசிரியர். உலகத்தின் பல்வேறு நாடுகளிலும் இவரது முறை இன்றும் பெரும்பயன் அளித்து வருகின்றது. இவரது வாழ்க்கையில் நடைபெற்ற ஒன்று இந்தச் சந்தர்ப்பத்தில் நமக்கு அக்கறையூட்டுகின்றது. பள்ளிக்கூடக் குழந்தைகளைத் தந்தையின் பராமரிப்புப்போல நடத்திவர வேண்டும் என்று முதலில் எடுத்துக்காட்டிய முதல்வர் பெஸ்டலொஸி ஆவர். அவர் குழந்தைகளின் கஷ்டங்களைக்கண்டு பரிவு கொண்டார்; அவை செய்த குற்றங்களை மன்னிக்கவோ, மறக்கவோ செய்தார். ஆனால், மன்னிப்புக்குள் அடங்காதது ஒன்றிருந்தது. அதுதான் மனோ

சௌல்யம்.[1] ஒரு நிமிடத்தில் கீழ்ப்படிந்து மறு கணத்தில் மறுத்த அவர் குழந்தையை அவரால் மன்னிக்க இயலவில்லை; ஒரு முறை கீழ்ப் படிந்த குழந்தையால் வேண்டுமென்றால் மறுபடியும் அதே செயலைச் செய்ய இயலுமல்லவா என்று கருதினார். மறுபடியும் செய்யாததற்கு அவர் ஒரு மன்னிப்பையும் ஒப்புக்கொள்ள மறுத்தார். இந்த ஒரு சந்தர்ப்பத்திலேதான் அவரது அன்பு தோல்வியடைந்தது. பெஸ்ட லௌஜியே இவ்வாறு கருதினாரென்றால், சாமானிய ஆசிரியர் இதே பிழையை எத்தனை தரம் செய்யவேண்டியிருக்கிறது?

புது ஆக்கங்கள் உருவாகும் தருணத்தில் ஊக்கங் கெடுத்தலைப் போலத்தீங்கிழைப்பது வேறெதுவும் இல்லை. குழந்தை தன்னுடைய செயல்களுக்குத்தானே தலைவனாகாத தருணத்தில், தன்னுடைய மன உறுதிக்கே கீழ்ப்படிய இயலாத நிலையில் இருக்கும் பொழுது, வேறொருவருடைய மனவுறுதிக்கு எங்ஙனம் கீழ்ப்படிய இயலும்? அதனாலே தான் குழந்தையால் சில சமயங்களில் கீழ்ப்படியவும் வேறு சமயங் களில் இயலாதுபோகவும் நேர்கின்றன. இவை குழந்தைப் பருவத்தில் தான் நடைபெற இயலும் என்று கொள்ளுதல் கூடாது. இசைக்கருவி வாசிக்கப் பழகுபவர் எத்தனை தரம் தொடக்கத்தில் இனிமை யாக வாசிப்பதைப் பார்த்திருக்கிறோம்? ஆனால், அதையே அடுத்த நாளும் மீண்டும் வாசிக்கச்சொன்னால், அவர் மிகவும் மோசமாகத் தடுமாறுகிறார். இதற்கு மனவுறுதி இல்லை என்பதா பொருள்? இதற்குத் தேவையான இசைவாணரின் திறமையும் ஐயமிலா வன்மை யும் இன்னும் உருவாகவில்லை என்பதே இதற்குக் காரணமாகும்.

கீழ்ப்படிதலின் முதல் நிலை என்று நாம் குறிப்பிட்டது, 'குழந்தை யால் கீழ்ப்படிய இயலும்; ஆனால் எப்பொழுதும் அன்று,' என்பது. இந்தப் பருவத்தில் கீழ்ப்படிதலும் கீழ்ப்படியாமையும் இரண்டும் இணைந்திருப்பது போலத் தோன்றுகின்றன.

கீழ்ப்படிதலின் இரண்டாவது நிலை குழந்தை எப்பொழுதும் கீழ்ப்படிதலின் போது ஏற்படுகின்றது. தன்னால், கட்டுப்படுத்த இயலாது என்பதால் ஏற்பட்ட காரணங்கள் இல்லாத பொழுது இந்நிலை தோன்றுகிறது. குழந்தையினுடைய சத்திகளெல்லாம் இப்பொழுது அதனுடைய மனவுறுதியின் விருப்பத்துக்கு இணங்கு வதுடன் வேறொருவருடைய மனவுறுதிக்கும் ஒத்து நடக்கின்றன. கீழ்ப் படியும் பாதையில் இது ஒரு பெரிய முன்னேற்றமாகும். இது ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்குப் பெயர்ப்பது போலாகும். இது வேறொருவருடைய விருப்பங்களைத் தனக்குள் கவர்ந்துகொண்டு

---

1. Caprice

அவற்றைத் தன் நடத்தையில் காட்டிக்கொள்ளும். இக்காலக் கல்வி கனவு காண்கின்ற உயர்ந்த வகைக் கீழ்ப்படிதல் இதுவேயாகும். சாதாரண ஆசிரியை தனக்குத்தான் கீழ்ப்படிய வேண்டும் என்று கோருகிறாள்.

ஆனால், குழந்தை தன் இயல்பான விதிகளுக்கிணங்க வளரும்படி விடப்படும்பொழுது இதைக்காட்டிலும் அதிகமாக முன்னேறுகிறது; நாம் எதிர்பார்த்ததற்கும் அதிகமாக முன்னேற்றமடைகிறது.

குழந்தை கீழ்ப்படிதலின் மூன்றும் நிலையை அடைகிறது. தனக்குக் கிடைத்திருக்கும் புதுமையான திறமையை உபயோகப்படுத்துவதில் இது நின்றுவிடுவதில்லை இப்பொழுது இதன் கீழ்ப்படிவதெல்லாம் ஒருவருடைய ஆளுமையை நோக்கித்திருப்பப்படுகிறது. அவருடைய ஆளுமையின் உயர்வை இது உணர்கிறது; தன் சத்தியை விட ஆசிரியையின் சத்தி உயர்ந்ததென்பதையும் அவளால் தன்னைவிட மேலாகச் செய்ய இயலும் என்பதையும் உணர்ந்துவிட்டது போலக்காட்டிக் கொள்கிறது. 'என்னிலும் எவ்வளவோ உயர்ந்தவர் ஒருவர் இங்கிருக்கிறார். அவர் தமது வல்லமையை என் மனம் உணரும்படி செய்து என்னையும் அவரைப்போல அறிவாளியாக்க வல்லவர். எனக்குள் அவர் இயங்குகிறார்,' என்று தனக்குள்ளே சொல்லிக்கொள்வது போல இருக்கிறது. இந்த வகையில் கருதும் பொழுது குழந்தையின் உள்ளம் மகிழ்ச்சியால் நிறைகிறது. இந்த உயர்ந்த வாழ்விலிருந்து கட்டளையை ஏற்றுக்கொள்ள இயலும் என்பது திடீரெனக் கண்டு பிடித்ததாகும். இதனுடன் ஒரு புதுமை ஊக்கமும் தோன்றுகிறது. இந்த நிலையில் குழந்தை கீழ்ப்படிவதற்கு ஆத்திரப்படுகிறது. இது அற்புதமானது எனினும், இயல்பானது. இந்தத் தோற்றத்துக்கு இணை ஏதாவதுண்டா? நாய் தனது இயற்கை உணர்வால் தன் எசமானனை நேசிக்கிறது. அதன் மனவுறுதியைக் கீழ்ப்படிதலில் காட்டிக்கொள்கிறது. இதை நாம் மேலே பார்த்த கீழ்ப்படிதலும் ஓரளவுக்கு ஒத்திருக்கிறது. நாய் என்ன செய்கிறது? எசமானன் காட்டுகின்ற பந்தைக் கூர்ந்து கவனிக்கிறது; அப்பந்து தொலைவில் எறியப்படும் பொழுது அதற்காக ஓடி அதைத்திரும்பவும் வெற்றியுடன் கொண்டு வந்து சேர்க்கிறது. பிறகு அது அடுத்த கட்டளைக்குக் காத்திருக்கிறது; கட்டளைகள் இடப்படவேண்டுமென்று ஆவலோடு இருக்கிறது; அவற்றிற்குக் கீழ்ப்படிய மகிழ்ச்சியுடன் வாலை ஆட்டிக்கொண்டு ஓடுகிறது. குழந்தையின் மூன்றும் வகைக் கீழ்ப்படிதல் இதைப் போல இருக்கிறது. மிக்க ஆவலுடன் குழந்தை கீழ்ப்படியும் என்பதில் ஐயமே இல்லை. அவ்வாறு கீழ்ப்படிதலுக்கு அது ஆவலுடன் எதிர்பார்ப்பது போலத் தோன்றுகிறது.

பத்தாண்டு அனுபவம் பெற்ற ஒரு தலைமை ஆசிரியை அக்கறை யூட்டும் சான்றை நமக்கு எடுத்துக்கூறுகின்றாள். மிகவும் சிறப்பான முறையில் நடத்தப்பட்டு வந்த வகுப்பு ஒன்று அவளுக்குண்டு. ஆனால், அடிக்கடி கருத்தேற்றங்களைத்[1] தாராமல் இருப்பது அவளுக்கும் பெரும்பாடாய் இருந்தது. ஒரு நாள், 'இன்றிரவு வீட்டுக்குப்போவதற்கு முன் எல்லாவற்றையும் எடுத்து வைத்துவிட்டுச் செல்லுங்கள்,' என்று சொன்னாள். அந்தச்சொற்றொடரை அவள் முடிக்கும் வரை, குழந்தைகள் காத்துக்கொண்டிருக்கவில்லை. 'எல்லாவற்றையும் எடுத்துவைத்துவிட்டுச் செல்லுங்கள்,'[2] என்பதைக் கேட்டவுடனே அவை மிகவும் கவனத்துடனும் வேகமாகவும் அந்த அந்தப்பொருளை எடுத்து வைக்கத்தொடங்கின. பிறகு 'இன்றிரவு நீங்கள் வீட்டுக்குத் திரும்பிப்போவதற்குமுன்' என்ற பகுதித் தொடரையும் வியப்புடன் கேட்டன. அவற்றின் கீழ்ப்படிதல் உடனுக்குடனே நடைபெற்றது. ஆதலால், ஆசிரியை தன் கட்டளையை எவ்வாறு பிறப்பிப்பது என்று மிகவும் கவலைப்பட வேண்டுவதாயிற்று. உண்மையாக அந்த அம்மை இந்தச் சந்தர்ப்பத்தில், 'இன்றிரவு வீட்டிற்குப் போவதற்கு முன்' என்னும் தொடரை முதலில் அமைத்துச் சொல்லியிருக்க வேண்டும்.

தான் அதிகமாகச் சிந்திக்காமல் இட்ட கட்டளைகள் இவை போன்ற பல கீழ்ப்படிதல்களை உண்டாக்கிவிட்டன என்று அவள் கூறினாள். அவை எக்கட்டளைக்கும் உடனடியாகக் கீழ்ப்படியக் காத்திருப்பதால் அவள் தன் பொறுப்பை உணர்ந்தாள். இது ஒரு புதுமையான அனுபவம். சாதாரணமாகத் தலைமை வகிப்போர் தமக்கு விருப்பமானபடி கட்டளை இடுவதே நடைமுறையில் காணப்படுவதாகும். அதற்குப் பதிலாக அவளுடைய பொறுப்புள்ள பதவி பெருஞ்சுமையாய்த் தோன்றிற்று. 'அமைதி' என்று அவ்வம்மை கரும்பலகையில் எழுதத் தொடங்கி 'அ' என்று எழுதி முடிப்பதற்குள்[3] ஒவ்வொன்றும் அமைதியாகிவிட்டது. அவை அமைதியை என்ன வேகத்துடன் நிலைபெறச் செய்தன !

என் அனுபவமும் இப்படியேதான் இருந்தது. அதுவேதான் அமைதிப்பாடத்தைப் புகுத்த என்னைத் தூண்டிற்று. என் அனுபவமும் ஒரு சான்று. ஆனால், அதில் எல்லாரும் ஒரு குழுவாய் நடந்து கொண்டனர். எதிர் பாராத வகையில் ஓர் அற்புதமான ஒற்றுமை பிறந்தது. ஒரு குழந்தைக்குழு என்னுடன் ஒன்றிவிட்டது.[4]

---

1. Suggestions, 2. ஆங்கில அமைப்பு, 'Put everything away before you go home tonight,' என்பது. 3. Silence—'S'
4. 'குழந்தைமை இரகசியம்' என்ற நூலில் காண்க.

கூடிய எல்லாரும் விரும்பினுலொழிய முழு அமைதி பெற இயலாது. ஒரு தனிப் பேர்வழி அதைக் கலைத்துவிட இயலும். வெற்றி பெறுவது நனவு நிலையுடன் ஒற்றுமையாய் இயங்குவதைப் பொறுத்திருக்கிறது. இதிலிருந்து **கூடிவாழ் ஒருமுகப்பாட்டு உணர்ச்சி**[1] தோன்றுகிறது.

அமைதிப்பாடம் குழந்தையின் மனவுறுதியைச் சோதிப்பதற்கு வழிவகுக்கிறது. இந்த விளையாட்டைத் திரும்பச் செய்யும் பொழுது இது இன்னும் வளர்ந்தது. அமைதிக்காலம் வரவர நீண்டது. பிறகு குழந்தையின் பெயர் முணுமுணுக்கப்பட்டது. தன் பெயரைக் கேட்டவுடன் அது அமைதியாய் நடந்து வர வேண்டும். அந்தச் சமயத்தில் மற்றவை தமக்குரிய இடத்தில் அசைவற்று இருக்க வேண்டும். அழைக்கப்பட்ட குழந்தை சத்தம் செய்யாமல் மெதுவாக அடிமேல் அடி எடுத்து வைத்து நடந்து வந்தது. இப்படியே செய்தால் கடைசிக் குழந்தைக்குத் தவணை வருவதற்குள் எவ்வளவு நேரம் காத்திருக்க வேண்டுமென்பதை நாமே கற்பனை செய்துகொள்ளலாம். இந்தக் குழந்தைகள் எவ்வளவு மனவுறுதியை வளரச் செய்துகொண்டன என்பதை நம்மால் நம்ப இயலாது. இந்தப் பயிற்சி **உள் தூண்டுதலை**[2] **உள் தடை**[3] செய்தது ; இயக்கத்தைக் கட்டுப்படுத்திற்று. இந்த முறையின் பெரும்பகுதி அதைப் பொறுத்திருக்கிறது. ஒரு பக்கம் எதையும் தேர்ந்தெடுக்கும் சுதந்தரமும் விடாமுயற்சியும் இருக்கின்றன. அதே சமயத்தில் உள் தடையும் இருக்கின்றது. இந்த நிலையில் குழந்தைகள் தங்களுடைய மனவுறுதியைப் பயன்படுத்த இயலும். செயல் புரிவதற்கும், செயல் புரிவதைத் தடுப்பதற்கும் மனவுறுதியைப் பயன்படுத்திக்கொள்ளலாம். முடிவில் அவை வியக்கத்தக்க ஒரு குழுவாகிவிட்டன. கீழ்ப்படிதலுக்குத் தேவையானவைகளெல்லாம் அவற்றின் உள்ளத்தில் ஆக்கப்பட்டுவிட்டதால், அவற்றிடையே கீழ்ப்படிதல் தோன்றுவதை நாங்கள் கண்டோம்.

மனவுறுதி வளர்ச்சிப் பகுதியில் இறுதிக் கட்டந்தான் கீழ்ப்படிவதற்கு வேண்டிய சக்தி. மனவுறுதியாலேதான் கீழ்ப்படிய முடிந்திருக்கிறது. எம் குழந்தைகளின் கீழ்ப்படியும் திறமை மிகவும் உயர்ந்த நிலை பெற்றிருப்பதால், ஆசிரியை கட்டளை உடனுக்குடனே கீழ்ப்படியப்படுகிறது—அவளுடைய கட்டளை எதுவானுலும் சரி. இம்மாதிரி தன்னலம் கருதாத தியாகத்தைத்தனது சுய நலத்துக்காகப் பயன்படுத்திக்கொள்ளக் கூடாதென்பதை அவ்வாசிரியை உணரத் தொடங்குகிருள். ஆதலால், பொறுப்பாளியாய் இருப்பவளிடம் என்னென்ன பண்புகள் இருக்க வேண்டுமென்பதையும் அவள் உணர்கிருள். பொறுப்பாளி ஒருத்தி தன் நடத்தையில் உறுதியுடையவளாய் இருக்கவேண்டுமென்பதில்லை. ஆனுல், அவளுடைய பொறுப்புணர்ச்சியை ஆழ்ந்து உணர்ந்தவளாய் இருக்க வேண்டும்.

---

1. Sense of Social Solidarity, 2. Impulse, 3. Inhibition

# 26. கட்டுப்பாடும் ஆசிரியையும்

அனுபவம் இல்லாத ஆசிரியை ஊக்க நிறைவுடனும், 'அந்த ரங்கக்கட்டுப்பாடு நம்முடைய சிறு கூடிவாழ் குழுவிடம் தோன்ற வேண்டும்,' என்ற நம்பிக்கையுடனும் வரும் பொழுது அவள் காண் கின்ற பிரச்சினைகள் எளியவையல்ல.

குழந்தைகள் தங்களுக்குத் தேவையான தொழில்களைத் தேர்ந் தெடுத்துக்கொள்ளச் சுதந்தரம் பெற்றவையாய் இருக்கவேண்டுமென் பதைப் புரிந்துகொள்வதுடன், நம்பிக்கையுள்ளவளாகவும் அவ்வா சிரியை இருக்கிருள்; குழந்தைகளின் தன்னியல்யான செயல்களில் பிறர் குறுக்கிடக் கூடாதென்றும் நம்புகிருள்; எந்த வேலையும் அவற்றின்மேல் சுமத்தப்படக் கூடாதென்றும், அச்சுறுத்தலோ, பரி சளித்தலோ, தண்டித்தலோ கூடாதென்றும் நம்புகிருள். ஆசிரியை அமைதியாகவும், செயலற்றும்[1] பொறுமையாகக் காத்துக்கொண்டு இந்த நிகழ்ச்சியிடத்திலிருந்து ஓரளவுக்கு விலகியிருந்து, தனது ஆளுமையைத் தலை தூக்காமல் தடுத்து, குழந்தையின் சத்தி விரிவ டைய வேண்டிய அளவு அவகாசம் அளிக்க வேண்டும் என்றும் அறி வாள்; பலதுணைக்கருவிகளை எடுத்துக் குழந்தைகளின் முன் பரப்பி வைத்திருக்கிருள். அனேகமாக—முழுமையுமே என்று கூடச் சொல்லலாம்—இவை ஒழுங்கின்மையைக் குறைப்பதற்குப் பதிலாக இன்னும் அஞ்சும் வகையில் அதிகரித்துவிடுகிறது.

இவள் கற்றுக்கொண்ட கொள்கைகளெல்லாம் தப்பா ? இல்லை. இவள் படித்த கொள்கைகளுக்கும் அவை காட்டும் பலன்களுக்கும் இடையில் ஏதோ ஒன்று குறைவுபடுகிறது. அதுதான் ஆசிரியையின் நடைமுறை அனுபவக் குறைபாடு. இந்த இடத்தில் அனுபவமில்லாத புது ஆசிரியைக்கு உதவியும் புத்திமதியும் தேவைப்படுகின்றன. புதியவராகத் தொழிலில் இறங்கிய இளமருத்துவருக்கு நேரிடும் அனுபவம் இதற்கு ஒப்பாகும். அல்லது வேறு எண்ணங்களையும் கொள்கைகளையும் நன்ருகக் கற்ற பிறகு நடைமுறையில் பார்க்கும்

---

1. Passive

பொழுது அங்குத்தோன்றுகின்ற உண்மையான காட்சிகள் கணிதச் சமன்பாட்டில்[1] மறைந்து கிடக்கும் அளவைக்காட்டிலும் இது அதிக மாயமுடையதாய்க் காணப்படுகிறது.

அக்கட்டுப்பாடென்பது இனிமேல் தோன்றுவதென்பதையும், ஏற்கெனவே நிலைத்திருப்பதில்லை என்பதையும் எப்பொழுதும் நம் கருத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். கட்டுப்பாட்டுக்கு வழி காட்டுவது நமது வேலை. **குழந்தையை ஈர்க்கக்கூடிய பொருளின்மேல் உன்னிப்பைச் செலுத்தும் பொழுது கட்டுப்பாடு பிறக்கிறது.** இந்தப் பொருள் பயன் தரும் பயிற்சியை அளிப்பதுடன் **பிழை திருத்தத்தையும் தன்னகத்தே பெற்றிருக்கிறது.** இந்தப் பயிற்சிகளுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும். ஏனென்றால், இவைகளால் ஓர் அற்புதமான ஒருமைப்பாடு குழந்தையின் உள்ளத்தில் மலர்ச்சி பெறுகிறது. இது காரணமாகக் குழந்தை அமைதி, முகமலர்ச்சியுடன் மகிழ்ச்சி, சுறுசுறுப்பு, தன்னை மறத்தல், இதன் தொடர்பாகப் பரிசுக்கும் பருப்பொருளான வெகுமதிகளுக்கும் அசட்டையாயிருத்தல் போன்ற பண்புகள் தோன்ற ஆரம்பிக்கின்றன. தம்மை வென்று; தம் சூழ்நிலையையும் வெல்கின்ற இந்தச் சின்னஞ்சிறு வீரர்கள் மெய்யான உயர்மனிதர்கள்[2] ஆகிவிடுகின்றார்கள். இவை மனித ஆன்மாவின் தெய்விக மதிப்பை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. ஆசிரியையின் இன்பமான வேலை என்னவென்றால், நிறைவுக்கு வழிகாட்டவேண்டுவதாகும். அதற்குத் தேவையான துணை அவகாசங்களை ஏற்பாடு செய்வதும் தடங்கல்களை விலக்குவதும் அவள் பணியாகும். தொடக்கத்தில் அவளால் ஏற்படக்கூடிய குறுக்கீடுகளையும் தவிர்க்கவேண்டியிருக்கிறது. ஏனென்றால், எல்லாத் தடங்கல்களிலும் ஆசிரியையால் ஏற்படக்கூடிய தடங்கல் மிகப்பெரியதாய் இருக்கலாம். கட்டுப்பாடு தொடக்கத்திலே இருந்திருக்குமானால், நம் வேலைக்கு அங்கு இடமில்லை. ஒவ்வோர் இடையூற்றையும் எவ்வாறு சாமளிப்பது என்பதற்குக் குழந்தையின் இயல்பூக்கமே அதற்குத் தேவையான வழிகாட்டியாகும்.

ஆனால், பள்ளிக்கூடத்தில் சேரும் மூன்றாண்டுக் குழந்தை அனேகமாகத் தோற்கடிக்கப்பட்ட வீரன்போல இருக்கிறது. தன்னைக் காத்துக்கொள்ளவேண்டும் என்ற கொள்கையை அப்பொழுதே அது அனுசரித்துவிட்டதால் தன் ஆழ்ந்த இயல்புகளை மறைத்துவிடுகிறது. கட்டுப்படுத்தப்பட்ட அமைதியும் தெய்விக ஞானமும் மலரச் செய்யக்கூடிய உயர்ந்த சத்திகள் அதனுள் உறங்கிக் கிடக்கின்றன. செயலூற்றிருப்பதெல்லாம் மேலோடியான ஓர் ஆளுமையே. அதுவும், இசைவற்ற இயக்கங்களிலும், தெளிவற்ற எண்ணங்களிலும், பெரிய

1. Mathematical equation, 2. Super men

வர்களின் வற்புறுத்தல்[1] களை எதிர்ப்பதிலோ, அல்லது தள்ளு வதிலோ காலம் போக்குவதிலும் தன்னை வற்றச் செய்துவிடுகிறது.

ஆனால், மெய் அறிவும் கட்டுப்பாடும் குழந்தை உள்ளத்தில் மலரக் காத்துக்கொண்டிருக்கின்றன. அமுக்கி வைத்தல்[2] இதை எதிர்த்து வேலை செய்திருக்கிறது. ஆனால், இன்னும் குழந்தை முழுத் தோல்வி அடையவில்லை; நம் முயற்சிகள் பலன் அளிக்காமல் போகும்படி விலக்கங்களில் தன் கருத்தை அவ்வளவாக ஊன்றிவிட வும் இல்லை. குழந்தையின் சத்திகள் வளர்வதற்கு இடமும் அவகாச மும் பள்ளிக்கூடம் அளிக்க வேண்டும். அதே சமயத்தில் ஆசிரிய ருடைய பழக்கத்திலுள்ள தற்காப்பு எதிர் வினைகளும், பொதுவாகத் தாம் பெற்ற தாழ்ந்த சிறப்பியல்புகளும் குழந்தையின் தெய்விக வாழ்க்கை மலர்ச்சிக்குத் தடங்கல்களாகும் என்பதை ஆசிரியை நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். இத்தடங்கல்களிலிருந்து குழந்தை தன்னை விடுவித்துக்கொள்ள வேண்டும்.

இதுதான் கல்வியின் தொடக்க முனை. அமைதியடைந்த நிலையி லிருந்து தன்னியல்பான சத்திகள் உயிர் பெறுகின்றன. இதற்கும் உண்மையான உள் தூண்டுதலுக்கும் உள்ள வேற்றுமையை ஆசிரியை உணராவிடில் அவளுடைய செயல்களால் பயன் ஏதுமில்லை. இரண்டு வகைச் செயல்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் இயல்பாக நடை பெறுவது போல இருக்கிறது. ஏனென்றால், இரண்டிலும் குழந்தை தானகவே செயல் புரிகிறது. ஆனால், உண்மையில் இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று எதிரிடையானவை. இவ்விரண்டுக்கும் உள்ள வேற் றுமையை ஆசிரியை கண்டுகொள்ளும்பொழுது அவளுடைய திறமை யின் உண்மையான அடிக்கல் நடப்படுகிறது. இவ்விரண்டுக்கும் உள்ள வேற்றுமையைத் தெரிந்துகொள்ளும்பொழுதுதான் ஆசிரியை உண்மையான வழி காட்டியாகவும் கூர்ந்து கவனிப்பவளாகவும் இருக்க இயலும். மருத்துவர் நோயாளியின் இயல்பு எது, உடல் நல முள்ளவர் இயல்பெது என்னும் வேற்றுமையை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். நோயை உடல் நலத்திலிருந்து பிரிக்க முடியா விடில், ‘இவன் பிழைத்திருக்கிறான்; இவன் இறந்துபட்டான்’ என் பதை மட்டும் அவர் கண்டுபிடிக்கத் தெரிந்துகொண்டிருந்தால், இன் னும் நுண்மையான நோய்களில் காணப்படும் வேற்றுமைகளை எங்ங னம் அறிவார்? ஆதலால், அத்தகைய மருத்துவர் நோய் இன்ன தென்று நிச்சயமாக அறியமுடியாத நிலையில் இருப்பார். அதே போல, ஆசிரியை ஆயத்தமும் இருக்க வேண்டும். ‘நல்லது இது; கெட்டது இது,’ என்று காணக்கூடிய சத்தி, நிறைவை நிலைபெறச் செய்கின்ற

1. Constraint, 2. Oppression

கட்டுப்பாட்டாக்கத்தின் வழியில் காணப்படும் நிழலை அகற்றும் ஒளியாகிறது. குழந்தையுள்ளம் கட்டுப்பாட்டை உருவாக்கும் முயற்சியில் இன்னின்ன குணங்களோ குணத்தொகைகளோ இருக்க இயலும் என்று வருணிப்பது எளிதானதா ? ஆம். அது ஓரளவுக்கு இயலும். ஆங்காங்குச் சில எல்லைக்கற்களைப் போன்ற குறிப்புகள் ஆசிரியைக்கு வழி காட்டியாய் இருக்கலாம்.

## குழப்பத்திலுள்ள குழந்தை

அந்தரங்கக் கட்டுப்பாட்டை உண்டாக்கக்கூடிய எந்தக் காரணியாலும் இது வரை பாதிக்கப்படாத மூன்று நான்காண்டுக்குழந்தையைப்பற்றி ஆராய்வோம் : எளிய வருணையால் அதன் மூன்று வகைகளையும் அவற்றின் சிறப்பியல்புகளையும் தெரிந்துகொள்ள இயலும்.

(1) முதலாவது, தன்னியல்பான இயக்கங்களில் இசைவின்மை. இந்த இயக்கங்களுக்குப்பின் என்ன நோக்கங்கள் இருக்கின்றன என்பது குறிக்கப்படுவதில்லை. அந்த இயக்கங்களைப்பற்றியே இங்குக் கூறப்படும். அடிப்படையில் இயக்கங்களில் இசைவின்மை, இணக்கமின்மை, நரம்புக்கோளாறு. மருத்துவருக்கு இக்குணங்கள் தத்துவ ஞானிக்கு இருப்பதைவிடப் பல கருத்துகளைத் தூண்டிவிடும். இது மிகவும் முக்கியமானது. பக்கவாதம் போன்ற நோயால் பீடிக்கப்பட்ட ஒரு நோயாளியைப் பரிட்சை செய்யும்பொழுது, தன்னியல்பாக நடைபெறும் அற்பமான இயக்கங்களையும் அவர் குறித்துக்கொள்வார். ஏனென்றால், இவை அடிப்படையானவை என்பதை அவர் அறிவார். இந்த நோய்க்குக் காரணங்கள் மனக் கோளாறுகளும், ஒழுங்கற்ற நடத்தை போன்றவைகளும் ஆகும். ஆனால், இவற்றைக்காட்டிலும் சாதாரண இயக்கக் குறைபாடுகளைக்கொண்டே நோயை அவர் நிருணயிப்பார். தன் இயக்கத்தில் இசைவற்றிருக்கும் குழந்தை வேறு குணங்களையும் காட்டிக்கொள்ளும். எடுத்துக்காட்டு, மரியாதைக் குறைவான நடத்தை, இசைவற்ற அசைவு (வெடுக்கு வெடுக்கென்ற இயக்கம்), வளைந்து வளைந்து நடத்தல், இரைதல் போன்றவையாகும். ஆனால், இவை குறைபாட்டை நிருணயிப்பதற்கு அவ்வளவு மதிப்புடையவைகளல்ல. **குழந்தையின் இளமைப்பருவத்தில் நுண்மையான இயக்க ஒருமைப்பாட்டைத் தோன்றச் செய்யும் கல்வி தன்னியல்பு இயக்கங்களில் காணப்படும் ஒழுங்கின்மையைக் குறைத்துவிடும்.**

நேர்மை வளர்ச்சியை விட்டு விலகியுள்ள ஆயிரக்கணக்கான கண்ணுக்குத் தெரியும் விலக்கங்களைத் திருத்துவதைவிட, இன்னும்

உயர்வான ஒன்றுபட்ட இயக்கங்கள் நுண்ணறிவு கலந்து வளர்வதற்கு ஏதுவான அக்கறையூட்டும் வகையில் குழந்தைகளுக்கு ஆசிரியை ஏற்பாடு செய்வது மேலாகும்.

(2) இரண்டாவதாக, இதுவரை நாம் எடுத்துக் கூறிவந்த ஒழுங்கின்மையுடன் தொடர்ந்துவரும் குழந்தை இயல்பு ஒன்றுள்ளது. அது உண்மையான பொருள்களின்மேல் குழந்தை தன் உன்னிப்பைச் செலுத்த இயலாத நிலையாகும். குழந்தையினுடைய மனம் மாய உலகத்தில் அலைந்து திரிய விரும்புகிறது. கற்களையும் உலர்ந்த இலைகளையும் வைத்துக்கொண்டு விளையாடும் பொழுது ஏதோ பரந்த மேசைகளின்மேல் பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்வதுபோலப் பேசிக்கொள்கிறது. இக்குழந்தை வளர்ந்த பிறகு இதன் கற்பனை பயனற்ற கேவலமான உருவங்களைப் பெறும். மனமானது தன் நேர்மையான செயல்களிலிருந்து எவ்வளவுக்கெவ்வளவு பிறழ்ந்து செல்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அது சலித்துப்போய்விடுகிறது ; அதன் சக்திக்குப் பணியும் பயனற்ற ஆளாகிவிடுகிறது. இந்தச் சக்தியின் குறிக்கோள் அந்தரங்க வாழ்க்கையின் வளர்ச்சியாகும். குழந்தையின் ஆளுமையைக் கலைக்கின்ற இக்கற்பனைச் செயல்கள், அதன் தெய்விக வாழ்வை வளரச் செய்கின்றன என்று பலர் கருதுவதும் வருந்தத்தக்கதாய் இருக்கிறது. ' கற்பனை என்பதே வளர்ச்சி அல்லவா ?' என்று வாதாடுகின்றனர். அதற்கு நேர் எதிர்மறையாகக் கற்பனையில் ஒன்றுமில்லையென்றே கொள்ள வேண்டும். அவை நிழல்களும், கூழாங்கற்களும் உலர்ந்த சருகுகளுமேயாகும்.

வெளியுலகத்துடன் நன்கு இணைந்து ஒன்றிய ஓர் ஆளுமையின் அடிப்படையில் தெய்விக வாழ்வு உண்மையாகக் கட்டப்படுகிறது. உண்மையிலிருந்து விடுவித்துக்கொண்டு திரியும் மனம், நல்வாழ்வுடைய நேர்மையினின்றும் பிரிந்து போகிறதென்று கொள்ளப்பட வேண்டும். கற்பனை உலகத்தில் மனம் செழிப்புறும் பொழுது அதைத் தன் குற்றங்களினின்று கட்டுப்படுத்தும் ஏற்பாடுகள் எவையும் இல்லை. எண்ணங்களை ஒருமைப்படுத்த எதுவும் இல்லை. இதிலிருந்து பிறக்கும் எல்லா வித எதிர்கால முயற்சிகளின் மேலும் மெய்யான உன்னிப்பைக் காட்டுவது முடியாத காரியமாகிவிடுகிறது. கற்பனையின் வாழ்வு என்ற இப்போலிப் பெயர் பெற்றது அங்கங்களை அடியோடு செயல் புரியவொண்ணாது தடுக்கும் முறையாகும். இச்செயல்களாலேதான் தெய்விக வாழ்வு அமைக்கப்படும். உண்மையான ஒரு பொருளின் மேல் குழந்தையின் உன்னிப்பைக் குவிய வைக்க முயற்சி செய்கிறாள் ஆசிரியை ; உண்மையான பொருளைக் குழந்தைக்குக் கவர்ச்சிகரமாகவும் அதன் கைக்கு அகப்படும் முறையிலும் ஏற்பாடு செய்கிறாள்.

உண்மையாக மேசையை அமைக்கவும்[1] உண்மையாக உணவைப் பரிமாறவும் ஏற்பாடு செய்கிருள். இவ்வாறெல்லாம் செய்கின்ற ஆசிரியை தனது நல்வழியை விட்டு அலேந்து திரியும் தெளிவற்ற மனத்தைத் திரும்ப வருவிக்கும் ஒரு சங்கநாதம் போல ஆகிருள். நிறைவு பெறப்பட்ட இயக்கங்களே ஒருமைப்படுத்துவதும், உண்மையிலிருந்து தப்பித்துக்கொண்ட உன்னிப்பைத் திரும்பவும் கைப்பற்றுவதும் ஆகிய இரண்டுமே குணப்படுத்துவதற்கு வேண்டுவனவாகும்.

அடிப்படையான விலக்கங்களே ஒவ்வொன்ருகச் சீர்திருத்த வேண்டுமென்று நமக்கு எவரும் கட்டளே இடவில்லே. உண்மையான பொருள்களின்மேல் உன்னிப்பைப் பதியவைக்கும் திறமை ஏற்பட்டவுடன் மனம் தனது நல்வாழ்வு நிலேக்குத் திரும்பி மறுபடியும் முன் போல நேர்மையாய் நடந்துகொள்ளும்.

(3) மற்ற இரண்டைப் போன்றதே மூன்ருவது தோற்றமும். இது சார்பெண்ணம். இது எப்பொழுதும் ஆயத்தமாகவும் தீவிரமாகவும் இருக்கும். இது ஆழ்ந்த வலிமையின்மைக்கு அறிகுறியாகும். இரண்டாண்டுக் குழந்தையிடம் காணப்படும் சிறப்பியல்புகளின் பெருக்கமே இது. (இன்னும் சிறு குழந்தைகளின் சார்பெண்ணம் வேறு. இதைப்பற்றி 15-ஆம் அத்தியாயத்தில் ஆய்ந்திருப்பது காண்க.) தனக்கு வேண்டிய கருவிகளே இன்னும் அமைத்துக்கொள்ளாத ஒரு மனவுறுதியை இந்தப் போக்கு அறிவிக்கின்றது. மனவுறுதிக்கு இன்னும் தக்க வழி ஏற்படவில்லே. ஆதலால், குழந்தை மற்றவர்கள் போக்கிலே நடந்துகொள்ளப் பார்க்கின்றது. நிறைவுப்பாதையை நாடிக் குழந்தை செல்வதில்லே; சுக்கானில்லாத கப்பலேப் போல, காற்றடித்த பக்கம் சாய்கிறது. சார்பெண்ணத்தினடியாகத் தூண்டப்பட்ட குறிப்பிட்ட அளவுடைய கருத்துகளேக் கொண்ட ஈராண்டுக் குழந்தையைக் கவனிப்போர்க்கும் நான் இது வரை எடுத்துக் கூறி வந்த தாழ்ந்த மனப்போக்குக் காட்சி அளிக்கும். ஒழுங்கின்மையுடனும், நிலே பெருமையுடனும் சம்பந்தப்பட்ட உருவம் இது. இது படிக்கட்டில் சரிவதைப் போலக் குழந்தையைத் தாழ்வுபடுத்த முயல்கிறது.

குழந்தை ஏதாவது தவறுதல் செய்ய வேண்டும்; அல்லது இரைய வேண்டும்; தரைமேல் விழுந்து உருள வேண்டும்; சிரிக்கவோ கத்தவோ தொடங்கிவிட்டால் போதும், மற்றக் குழந்தைகளில் பெரும்பாலன—அல்லது ஒரு வேளே எல்லாமே—அக்குழந்தையைப்

---

1. பாயோ மணேயோ இட்டு, இலேயோ தட்டோ வைப்பது நம் சாதாரணப் பண்பாடு.

பின்பற்றத் தொடங்கிவிடும்; அல்லது இதைவிட மோசமானவைகளைச் செய்யும் முட்டாள்தனமான செயல், குழுவாய் இருக்கும்பொழுது பன்மடங்காகப் பெருகிறது. இது வகுப்பை விட்டு வெளியிலும் பரவலாம். இம்மாதிரியான குழுவூக்கம்,[1] கூட்டு ஒழுங்கின்மையை உண்டாக்குகிறது. இது கூடி வாழ்வதற்கு எதிர்மறையானது. கூடி வாழ்வது தொழில் புரிவதாலும் தனிப்பட்டவர்களின் ஒழுக்கத்தாலும் உருவாக்கப்படுகின்றது. கூட்டத்தில் சார்பெண்ணம் பரவித் தனிப் பேர்வழியின் குறைகளை இன்னும் அதிகமாக்கிவிடுகிறது மிகக்குறைந்த தடுப்புடைய[3] நிலை. இங்கிருந்துதான் சீர் கேடு தொடங்குகிறது.

எவ்வளவுக்கெவ்வளவு இந்தச் சீர் கேடு நடைபெறுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு நல்ல காரியங்களில் ஈடுபடும்படி குழந்தைகளை அழைப்பவருக்குக் கீழ்ப்படிதலும் கடினமாய் இருக்கிறது. ஆனால், அவற்றை நல்ல வழியில் ஒரு முறை திருப்பிவிட்டால், இந்தச் சீர் கேட்டுக்குக் காரணமாயிருந்த ஒன்றினால் ஏற்பட்ட பற்பல விளைவு களும் சீக்கிரம் ஒரு முடிவுக்கு வந்துவிடுகின்றன.

## அழைப்பு

மேலே குறிப்பிட்ட வகையான குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளச்சொல்லி ஆசிரியை அழைக்கப்படும் பொழுது, குழந்தைகள் தங்கள் இச்சை போலச் செயல் புரியப் பயன்படும் பொருள்களைக் கொடுத்து, அவற்றின் மூலம் அக்குழந்தைகள் தம்மைத் தங்கு தடை யில்லாமல் வெளிப்படுத்த ஏற்பாடு செய்யும் அடிப்படைக் கருத்து களைத் தவிர அவ்வாசிரியையிடம் வேறெதுவும் கைவசம் இல்லா விட்டால், ஆசிரியை மிகவும் துன்பகரமான நிலைமையில் தன்னைக் காண நேர்ந்துவிடும். இந்தக் குழந்தைகள் மூலம் சிறு நரக லோகத் தின் கவாடங்கள் திறந்து விடப்பட்டது போலாகும். இவற்றின் கைக்கு அகப்பட்டதெல்லாம் இழுக்கப்படும். ஆசிரியை செயலற்றுச் சும்மா இருந்தால் கட்டுக்குமீறிய குழப்பம் உண்டாகி நம்ப முடியாத படி ஒரே சத்தமாய் இருக்கும். இம்மாதிரி நிலையில் தன்னைக்கண்ட ஆசிரியை, இந்நிலை தனது அனுபவக் குறைவாகவோ, அல்லது அளவுக்கு மீறின கொள்கைகளாலும் கருத்துகளாலுமோ, அல்லது ஒரு கொள்கையும் அனுசரிக்கப்படாததாலோ, எந்தக் காரணத் தால் ஏற்பட்டிருந்தாலும் சரி, ஒன்றை மட்டும் மறந்துவிடக் கூடாது. தெய்விகத்தூய்மையும் ஈகையும் நிறைந்த இவ்விள

1. Gregarious instinct, 2. Collective disorder,
3. Point of least resistance

ஆன்மாக்களுக்குள் மறைந்து கிடக்கும் சக்திகளை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். இந்தச் சின்னஞ்சிறு குழந்தைகள் பெரிய மலைச்சிகரத்திலிருந்து சரிந்துகொண்டிருக்கின்றன. இதைத் தடுக்க வேண்டும். திரும்பிப் பார்க்கச்சொல்லி மறுபடியும் ஏறச்செய்யவும் ஆசிரியை உதவி புரிய வேண்டும். இவற்றை ஆசிரியை கூவி அழைக்கவேண்டும். அவளுடைய எண்ணத்தாலும் குரலாலும் தட்டி எழுப்ப வேண்டும். இந்தச் சிறு மனங்களுக்குத் தேவையான ஓர் உண்மையான உபகாரச் செயல் என்னவென்றால், வேகம் நிறைந்த உறுதியான ஓர் அழைப்பாகும். **தீமையை அழிப்பதற்கு அஞ்ச வேண்டா ; நன்மையை அழிப்பதற்கே நாம் அஞ்ச வேண்டும்.** ஒரு குழந்தை நமக்கு விடை அளிக்கமேண்டுமானால், முதலில் நாம் அதன் பேரைச் சொல்லி அழைக்க வேண்டும். அதே போல, ஆன்மாவைத் தட்டி எழுப்ப வேண்டுமானால், அதை வேகமாக அழைக்க வேண்டும். ஆசிரியை தன்னுடைய துணைக்கருவிகளைப் பள்ளிக்கூடத்தைவிட்டு அப்புறப்படுத்த வேண்டும். அவள் கற்றுக்கொண்ட கொள்கைகளையும் அப்புறப்படுத்த வேண்டும். பிறகு எவ்வாறு அழைப்பது என்ற பிரச்சினையை நடைமுறையில் தனியாக எதிர்க்க வேண்டும். அவளது நுண்ணறிவு ஒன்றே இதை விடுவிக்க இயலும். ஒவ்வொரு குழந்தையிடமும் வெவ்வேறு முறையை அனுசரிக்க வேண்டிவரும். அடிப்படையான அடையாளங்களும் அவற்றிற்கு வேண்டிய தடுப்பு முறைகளும் ஆசிரியைக்குத்தெரியும். நல்ல மருத்துவரும் ஆசிரியையைப் போன்ற ஒரு பேர்வழிதான். இருவருள் எவரும் வெற்று இயந்திரமல்லர். மருந்தைக் கொடுக்கவோ, அல்லது **ஆசிரிய முறைகளை**[1] அனுசரிக்கவோ அவர்கள் இயந்திரமா? இன்னின்ன செய்ய வேண்டுமென்பதை ஆசிரியைக்கு விட்டுவிட வேண்டும். அந்த ஆசிரியையும் ஒரு புது வழியில் இப்பொழுதே அடியெடுத்து வைக்கிறாள். பெருங்குழப்பத்துக்கிடையே தன் குரலை உயர்த்துவதா, அல்லது எவரோ ஒரு சிலரிடம் இரகசியமாகப் பேசுவதா, அது என்ன பேசுகின்றது என்று தெரிந்துகொள்ள ஆசைப்படும் மற்றக் குழந்தைகள் அமைதியை நிலவச்செய்ய விடுவதா என்பதெல்லாம் ஆசிரியையே தீர்மானிக்க வேண்டும். பியானோவில் ஓர் இசையை உயர்ந்த ஒலியாக வாசிக்கத் தொடங்கினவுடன் குழப்பம் எல்லாம் மின்னல் போல மறைந்துவிடுகிறது.

## போலி ஒழுங்கு

நிறைந்த அனுபவம் உடைய ஆசிரியை வகுப்பில் அச்சுறுத்தும் குழப்பம் எதுவும் இருப்பதில்லை. ஏனென்றால், அவள் குழந்தைகளைத்

---

1. Pedagogical methods

தனியாக விட்டு விலகுவதற்கு முன் அவற்றைக் கூர்ந்து கவனித்து அவற்றுக்கு வேண்டிய வழிகளைக் காட்டி அவற்றை எதிர் மறையில் ஆயத்தமாக்கிவருகிருள். எதிர்மறை என்பது, கட்டு மீறின இயக்கங்களை விலக்குதலாகும். இதை நிறைவேற்ற ஆயத்தப் பயிற்சிகள் பல தொடர்பாய் இருக்கின்றன. இவற்றை ஆசிரியை தன் கருத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். உண்மையிலிருந்து விலகி அலைந்துகொண்டிருக்கும் மனத்தையுடைய குழந்தைகள், 'என்ன சத்தி நிறைந்த உதவி நம் ஆசிரியர் நமக்கு அளிக்கிருர்!' என்று உணரத்தொடங்கும். அமைதி, உறுதி, பொறுமை ஆகிய பண்புகளைப் பெற்ற அவளுடைய குரல் குழந்தைகளின் உள்ளங்களைப் புகழ்ந்தும் ஊக்குவித்தும் தொட்டுவிடுகிறது. சில பயிற்சிகள் நடைமுறையில் பயனளிக்கக்கூடியவை. இவற்றுக்கு எடுத்துக்காட்டு, சத்தம் செய்யாமல் எல்லா மேசை நாற்காலிகளையும் அதனதன் இடத்தில் அடுக்குவது, நாற்காலிகளை வரிசையாக அடுக்கி அவற்றில் உட்காருவது, நுனிப்பாதத்தால் அறையின் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்திற்குச் சத்தம் செய்யாமல் ஓடுவது. ஆசிரியை தன்னைப் பொறுத்த மட்டிலும் நம்பிக்கையுள்ளவளாய் இருந்தால், இவைகளே போதும். இவற்றுக்குப் பிறகு, 'குழந்தைகளே, பேசாமல் அமைதியாய் இருப்போம்,' என்பாள். ஏதோ மந்திரம் போல உடனே அமைதி நிலவும். **நடைமுறை வாழ்க்கைப்** பயிற்சி[1]களில் மிகவும் எளிமையானவை, அலைந்து திரியும் மனத்தை விண்ணிலிருந்து உண்மையான வேலையாகிய தரைக்கு இழுத்துக் குழந்தையைத் தன் நிலைக்கு வரச் செய்கின்றன. ஆசிரியை சிறிது சிறிதாகத் துணைக்கருவிகளைக் குழந்தைகளுக்கு எடுத்துக்காட்டுவாள். அவற்றின் பயனைப் புரிந்து கொள்ளும் வரை எல்லாக்கருவிகளையும் ஆசிரியை குழந்தைகளின் சுயேச்சை உபயோகத்துக்காக வைக்கமாட்டாள்.

இப்பொழுது வகுப்பு அமைதி பெற்றிருப்பதைக் காண்கிறோம். குழந்தைகள் உண்மையுடன் நேரடித் தொடர்பு கொள்கின்றன. மேசையைத்துடைப்பது, ஒரு கறையை நீக்குவது, **நிலையறைப் பெட்டியினருகே**[2] செல்வது, ஒரு **செய்கருவியை**[3] எடுப்பது, அதனைச் சரியான முறையில் உபயோகிப்பது போன்றவைகளே குழந்தையின் திட்டமான நோக்கங்களாய் இருக்கின்றன.

பயிற்சியால் **தடையில்லாத் தேர்வுத்திறம்**[4] இன்னும் வலிமை பெறுகிறது என்பது தெளிவாகிறது. சாதாரணமாக ஆசிரியை திருத்தி அடைகிருள். ஆனால், மான்டிசோரி அம்மையாரால் அளிக்கப்பட்ட

1. Exercise of practical life, 2. Cupboard,
3. Apparatus, 4. Capacity for free choice

செய்கருவிகள் போதாதன போலத் தோன்றுகின்றன. இன்னும் அவற்றுடன் வேறு சிலவற்றையும் சேர்க்க வேண்டும் என்பதை அவள் உணர்கிருள். ஒரு வாரத்துக்குள் எல்லாக்கருவிகளையும் குழந்தை திரும்பத்திரும்ப உபயோகித்துவிடுகிறது. இத்தகைய பள்ளிக்கூடங்களின் முன்னேற்றம் இதனுடன் நின்றுவிடுகிறது. இந்த ஒழுங்குப் போலியை ஒரே ஒரு காரணி காட்டிவிடுகிறது ; முழுமையும் சாயும்படியாக அச்சுறுத்துகிறது ; அது என்ன ? குழந்தைகள் ஒன்றிலிருந்து மற்ருென்றுக்குச் சென்றுகொண்டிருக்கின்றன ; ஒவ்வொன்றையும் ஒரே ஒரு முறை செய்து பார்க்கின்றன ; பிறகு சென்று வேருென்றைக் கொண்டு வருகின்றன. நிலையறைப் பெட்டிக்கு முடிவில்லாமல் போவதும் வருவதுமாக அவை இருந்துகொண்டிருக்கின்றன. தான் இறங்கியுள்ள உலகத்தில் ஒரு குழந்தையாவது தனது தெய்விகச்சத்தி இயல்பைத் தட்டி எழுப்பக்கூடிய போதுமான வலுவுள்ள ஒரே அக்கறையையும் இது வரை கண்டுகொள்ளவில்லை. இக்குழந்தையின் ஆளுமை பயிலப்படுவதில்லை. அது வளர்வதில்லை ; பின்னும் வலிமை பெறுவதில்லை. இவ்வாறு அலைந்து திரிகின்ற பயிற்சிகளால் தன் உள்ளத்துக்கு அமைதியூட்டும் வகையில் வெளியுலகம் குழந்தையை எவ்விதத்திலும் பாதிக்க இயலுவதில்லை. குழந்தை ஒரு தேனியைப்போல இருக்கிறது ; ஒரு பூவிலிருந்து மற்ருென்றுக்குப் பறக்கிறது. தங்கியிருந்து தேன் பருகி நிறைவு பெறும்படியான ஒரு மலரையும் இன்னும் காணுத தேனீப்போல இருக்கிறது இவ்வகையான குழந்தை. குழந்தையின் அகத்தில் அபாரமான இயல்பூக்கச் செயல் இருக்கிறது. இது குழந்தையின் சால்பையும் மனத்தையும் உருவாக்குவதற்கென்றே இருக்கிறது. இந்தச்சத்தி தட்டி எழுப்பப்படும் வரை குழந்தை எவ்வகைத் தொழிலிலும் ஈடுபட இயலாது.

இவ்வகையான நிலையற்ற நிலைமை ஏற்படும் பொழுது ஆசிரியை தனது வேலை கடினமாய் இருப்பது போல உணர்கிருள் ; இதனுடன் ஒரு குழந்தையிடமிருந்து மற்ருெரு குழந்தையிடம் ஓடிக்கொண்டேயிருக்கிருள் ; தன் கவலையும், சலிப்பும், அமைதி இன்மையும் கலந்த நோயை மற்றவர்க்கும் பரவச் செய்கிருள். சலித்து வெறுப்படைந்த குழந்தைகளில் பெரும்பாலன ஆசிரியை திரும்பினவுடன் துணைக் கருவிகளை வைத்துக்கொண்டு விளையாட ஆரம்பிக்கின்றன ; அவற்றை மிகவும் அறிவற்ற முறையில் உபயோகிக்கின்றன. ஆசிரியை ஒரு குழந்தையிடம் ஏதோ செய்துகொண்டிருக்கும் பொழுது மற்றவை ஒழுங்கற்ற முறையில் நடந்துகொள்கின்றன. நன்னெறியும் நுண்ணறிவும் முன்னேறும் என்னும் நம்பிக்கையுடன் எதிர்பார்த்தபடி இன்னும் தோன்றவில்லை.

ஒழுங்குத்தோற்றம் ஒரு வேளை பெற்றிருக்கலாம். ஆனால், உண்மையாகப் பார்க்கப்போனால் இது பனி போல இலேசானது. ஏதோ குழப்பம் நடக்கும்போல இருப்பதாக அஞ்சி அதை விலக்குவதற்காக முயற்சி செய்துகொண்டிருக்கும் ஆசிரியை எப்பொழுதும் மன நெருக்கடியான நிலையில் இருக்கிறாள். தேவையான அளவுக்குப் பழக்கமும் பயிற்சியும் பெறாத பெரும்பாலாரான ஆசிரியைகள் என்ன முடிவுக்கு வருகிறார்கள்? 'இந்தப் புதுமைக் குழந்தையைப்பற்றி எவ்வளவோ சொன்னார்களே! இது உருவாகும் என்று நாமும் ஆவலுடன் காத்திருந்தோமே! இவையெல்லாம் மாயம்; வெறுங்கனவு,' என்று முடிவு கட்டிவிடுகிறார்கள். இவ்வகையில் நரம்பு சத்தி முயற்சியால் ஒன்றாக இணைக்கப்படும் ஒரு வகுப்பினால் குழந்தைகளுக்கும் பயனில்லை; ஆசிரியையும் சலித்துப்போகிறாள் என்னும் முடிவுக்கும் இவ்வாசிரியைகள் வரலாம்.

குழந்தைகளின் நிலைமையை ஆசிரியைகள் புரிந்துகொள்ளவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்தச் சின்னஞ்சிறு சத்திப் பேர்வழிகள் மாறும் கட்டத்தில் இருக்கின்றன. முன்னேற்றக் கவாடம் இன்னும் அவற்றுக்குத் திறக்கப்படவில்லை. அவை கதவைத் தட்டிக்கொண்டு வெளியில் காத்திருக்கின்றன. கூர்ந்து பார்த்தால், ஒரு முன்னேற்றமும் இது வரை அடைந்ததாகத் தெரியவில்லை. இருக்கும் நிலைமை குழப்பத்துக்கு நெருங்கியிருக்கிறதேயொழிய, ஒழுங்கை எட்டிக் கூடப் பார்ப்பதில்லை. இத்தகைய குழந்தைகளுடைய வேலை அரைகுறையாகத்தான் இருக்கும். அவற்றின் ஆரம்ப ஒருமைப்பாடுள்ள இயக்கங்களுக்கு வலிமையும் இசைவும் இல்லை. அவற்றின் செயலோ, நிலையற்றவை.[1] அவற்றின் முதற்கட்டத்தில் உண்மையுடன் தொடர்பற்றவைகளாய் இருந்தன. அந்தக் கட்டத்துடன் ஒப்பிட்டுப்பார்த்தால், இப்பொழுது ஒரு முன்னேற்றமும் அடையவில்லை. இது நோய்க்குப் பிறகு உடல் தேறும் பருவம் போன்றிருக்கிறது. வளர்ச்சியில் ஒரு முக்கியமான நிலை இப்பொழுது இங்கிருக்கிறது. ஆசிரியை இரண்டு காரியங்களை நடத்திவைக்க வேண்டும். குழந்தைகள் அவள் கண்காணிப்பில் இருக்க வேண்டும். அதனுடன் அவற்றுக்குத் தனித்தனி பாடம் கற்பிக்கவும் வேண்டும். அப்படியென்றால், செய்கருவியை ஒழுங்காக எடுத்து அதன் உபயோகத்தையும் காட்ட வேண்டும். பொதுக்கண்காணிப்பும், தனித்தனி பாடமும் சரிநுட்பத்துடன் அளித்தலும் ஆகிய இவ்விரு வழிகளில் குழந்தையின் வளர்ச்சிக்கு ஆசிரியை உதவி புரியலாம். ஒரு குழந்தைக்குப் பாடம் சொல்லும்பொழுது ஆசிரியை தன் முதுகைப் பிற குழந்தைகளுக்கு

---

1. Capricious

ஒரு போதும் காட்டும் வகையில் நடந்துகொள்ளக்கூடாது. வாழ்க்கைக்காகத் தேடி அலைந்துகொண்டிருக்கும் இப்பிஞ்சு நெஞ்சங்கள் ஆசிரியைஇருப்பதை உணர வாய்ப்பளித்துக்கொண்டிருக்கவேண்டும். ஒவ்வொரு குழந்தைக்கும் தனித்தனியாக அளிக்கப்படும் பாடம் சரியாகவும், அற்புதம் நிறைந்ததாகவும், மிகவும் நெருங்கிய தொடர்புடையதாகவும் இருக்க வேண்டும். அவ்வாறு செய்யும் பொழுது அது குழந்தையின் ஆழ்ந்த ஆன்மாவுக்கு அளிக்கப்படும் காணிக்கையாகும். பிறகு ஒரு நாள் இந்த இளம்பிஞ்சுகளுள் ஒன்று விழித்துக் கொள்ளும். ஒரு குழந்தையின் அகத்தின் கருத்து ஒரு பொருளின் மேற்செல்லும். அது அப்பொருளைத் தாற்காலிகமாகத் தனதென்று கொள்ளும்; இப்பயிற்சியைத் திரும்பத் திரும்பச் செய்வதில் குழந்தை தன் உன்னிப்பைக் குவியவிடும்; இவ்வாறு திரும்பத் திரும்பச் செய்வதால், இன்னும் சிறப்பான திறமை பெறும். குழந்தையின் மன நிறைவு ஒளி விட்டு அதனுடைய உளச்சத்தி மறுமலர்ச்சி பெற்றிருக்கிறது போலக் காட்டும்.

## கட்டுப்பாடு

மனச்செயல் முறையில் மிகவும் உயர்ந்தவைகளுள் ஒன்று **தடையில்லாத தேர்வு.**[1] தெய்விக வாழ்வின் வளர்ச்சிக்குத் தேவையான பயிற்சிகளின் அவசியத்தை உணர்ந்த குழந்தைதான் மெய்யாகத் தடையில்லாத தேர்வுநடத்தஇயலும் என்று சொல்லலாம். எல்லாவகையான வெளி நிகழ்ச்சிகளையும் கடந்து குழந்தையின் அக்கறையைத் திருப்பும்பொழுதுஅதனுல் தடையில்லாத தேர்வு நடத்த இயலும் என்று எங்ஙனம் கூற இயலும்? அந்த நிலையில் அதற்கு மனவுறுதி இல்லாத காரணத்தால் ஒவ்வொரு பொருளும் நிகழ்ச்சியும் அதனை அழைக்கின்றன. ஆதலால், அது ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளுக்கு மாறிக்கொண்டே இருக்கிறது. முக்கியமான வித்தியாசங்களில் இது ஒன்று என்பதை ஆசிரியை கண்டுபிடிக்கவேண்டும். அந்தரங்க வழிகாட்டியைப் பின்பற்றச் சத்தியில்லாத குழந்தை, நிறைவை நோக்கிச் செல்லும் நீண்ட குறுகிய பாதையில் செல்லக்கூடிய பேர்வழியன்று. வெளிப்படை உணர்ச்சிகளுக்கு அது இன்னும் ஓர் அடிமைதான், அது சூழ்நிலையின் தயைக்குட்பட்ட பேர்வழியாய் இருக்கிறது. அதன் ஊக்கம் ஒரு பந்தைப்போல முன்னும் பின்னும் குதித்துக்கொண்டிருக்கிறது. அதன் ஆன்மா தன்னைத்தான் உணர்ந்துகொள்ளும் பொழுது தனக்குள் மலர்கிறது. இம்மலர்ச்சிக்குத் தானுக ஒரு வேலையை நியமித்துக்கொண்டு தன் வழியைத் தேடி அதைத் தேர்ந்தெடுத்தல் தேவைப்படுகிறது.

---

1. Free choice

ஆக்கப்படும் பொருள்களில் எல்லாம் சிக்கலில்லாமையும் தூய்மை யான தோற்றமும் காணப்படுகின்றன. சிக்கலான பல விதப்பொருள் கள் நிறைந்த சூழ்நிலையில் ஒவ்வோர் உயிர் விலங்கும் தேர்ந்தெடுக் கும் சக்தியைப் பெற்றிருக்கின்றது. அது தன் வாழ்க்கைக்கு எது பயன் அளிக்குமோ, அதைத் தவிர, வேறு எதையும் தேர்ந்தெடாது.

தரையில் ஊன்றிய ஒவ்வொரு செடியின் வேர்களும் தரையில் உள்ள பல பொருள்களில் தமக்கு வேண்டுவனவற்றை மட்டும் தேர்ந் தெடுத்துக்கொள்கின்றன. அங்ஙனமே பூச்சிகளின் தேர்வும் தீர்மா னிக்கப்படாததன்று. இத்தகைய பூச்சிகள் தங்களை வரவேற்கும் மலர்களுக்கே செல்கின்றன. மனிதனிடமும் இதே பகுத்தறிவு தெளிவாகிறது. ஆனால், அவன் விஷயத்தில் இனிமேல் இயல்பூக்கத் தால் நடைபெறுவதில்லை. அவனால் இவற்றைப் பெறவேண்டியிருக் கிறது. எனினும், குழந்தை தொடக்க ஆண்டுகளில் தெய்விகத் தேவையால் நெருங்கிய உணர்ச்சிப்பருவம் பெற்றிருக்கிறது. கோண லாகத் திருப்பப்பட்டதோ, அல்லது ஒடுக்கப்பட்ட கல்வியோ இதை அடியோடு மறைக்கச் செய்யலாம். அதற்குப் பதிலாக வெளியுலகத் தில் காணப்படும் ஒவ்வொரு பொருளுக்கும் தன் வெளியுணர்ச்சிகளை அடிமையாக்கிவிடும் நிலைமையை ஏற்படுத்திவிடும். நாமே இந்த முக் கியமான ஆழ்ந்த உணர்ச்சியை இழந்துவிட்டிருக்கின்றோம். இது குழந்தைகளிடம் மலர்ந்து வருவதைப் பார்க்கும் பொழுது ஏதோ ஒரு மாயச்சக்தி விரிவடைவது போல நமக்குக் காட்சி அளிக்கிறது. நுண்மையான செயலாகிய தடையில்லாத தேர்வின் மூலமாக இது தன்னைக் காட்டிக்கொள்கிறது. கூர்ந்து கவனிப்பதில் பயிற்சி பெறாத ஆசிரியையாய் இருந்தால், இது மலர்வதைக் கண்டுபிடிப்பதற்கு முன் மிதித்து நசுக்கிவிடலாம். புல்லுப்பாதையில் மலரக் காத்திருக்கும் மொக்குகளை யானை தன் காலடியில் மிதித்து நசுக்கிவிடுவதற்கு இதை ஒப்பிடலாம்.

தானாகத் தேர்ந்தெடுத்த ஒரு பொருளின்மேல் ஒரு குழந்தையின் உன்னிப்புப் பதிந்திருக்கும்பொழுதும், திரும்பத் திரும்பச் செய்வதில் தன் முழுக்கவனத்தையும் செலுத்தும் பொழுதும் அது நாம் கூறிவந்த தெய்விகப் பாதுகாப்பு நிறைந்த விடுதலை பெற்ற ஆன்மா எனக் கொள்ளல் வேண்டும். இந்த நிலையிலிருந்து இத்தகைய குழந்தையைப் பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை. ஆனால், அதற்கு மகிழ்ச்சி தரும் சூழ்நிலையை அமைத்து நிறைவுக்குத் தடையாயிருப்பவைகளைப் பாதையினின்று அகற்றுவது நம் கடமையாகும்.

இத்தகைய அக்கறையும் உன்னிப்பும் தோன்றுவதற்கு முன் ஆசிரியை தன்னை அடக்கிக்கொள்ளக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அப்பொழுதுதான் குழந்தையின் சத்தி விரிவடைவதற்குத் தடையில்லாமல் இருந்து, அச்சத்தியைக் காட்டிக்கொள்ள இயலும். குழந்தை தன் முயற்சியில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும்பொழுது அதில் குறுக்கிடுவது ஆசிரியையின் கடமையின் சாரமன்று. பயிற்சிக்காலத்தில் பெற்றுவந்த ஆசிரியையின் நன்னெறி நுண்மையுணர்ச்சி தன்னைக் காட்டிக்கொள்வதற்கு இதுதான் சமயம். உதவி புரிவதோ, அல்லது சும்மா இருந்து கவனித்து வருவதோ, அவ்வளவு எளிதன்று என்பதை ஆசிரியை தெரிந்துகொள்ளவேண்டும். குழந்தைகளுக்கு உதவி செய்து சேவை புரியும்பொழுதும் குழந்தைகளை உற்றுக்கவனிப்பதை நிறுத்திவிடக்கூடாது. குழந்தையின் உள்ளத்தில் உன்னிப்புத் தோன்றுவது அரும்பு மலர்வதைப்போல அவ்வளவு நுண்மையான நிகழ்ச்சியாகும். தான் ஒருத்தி இருக்கிருள் என்பதைக் குழந்தைகள் உணரும் நோக்கத்துடன் இருந்து ஆசிரியை கவனித்துவரமாட்டாள்; அல்லது வலிமையற்ற குழந்தைகளுக்குத் தன் வலிமையால் உதவி புரியவும் மாட்டாள். உன்னிப்பைப் பெறும் சத்தி பெற்ற குழந்தைகளைக் கண்டுபிடிப்பதற்கு அவள் கவனித்து வருவாள்; குழந்தையின் அற்புதச் சத்தியின் மறுபிறப்பைக் கண்டு மகிழ்ச்சி பெறக் குழந்தைகளைக் கவனித்து வருவாள்.

உன்னிப்புடைய குழந்தையின் மகிழ்ச்சிக்கு அளவில்லை. தனக்கு அக்கம்பக்கத்தில் இருப்பவர்களையும் தன்னைச் சுற்றிலும் நடந்துவரும் விருந்தினரையும் பற்றி இக்குழந்தை பொருட்படுத்துவதில்லை. இப்போது இதனுடைய சத்தியைப் பாலைவனத்தில் வாழும் துறவிக்கு ஒப்பிடலாம். ஒரு புதுமையான நனவு நிலை பிறந்திருக்கிறது. அதன் உன்னிப்பிலிருந்து வெளிவருவது உலகம் முழுவதும் புதிகாக் கண்டுபிடிப்படவேண்டிய எல்லையற்ற வெளி என்பதை உணர்வது போல இருக்கிறது. குழந்தை தன் வகுப்புத்தோழர்கள் இருப்பதையும் உணர்கிறது; அவர்களிடம் அன்பையும் அக்கறையையும் காட்டுகிறது; எல்லாருக்கும் தோழனுகிவிடுகிறது; அழகான எதையும் கண்டு மகிழ ஆயத்தமாய் இருக்கிறது. இந்தத் தெய்விகப் போக்கு, தெளிவானது; வெளியுலகத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்கிறது. இதனுடன் ஒருமைப்படுத்திக்கொள்ளும் சத்தியைப் பெறுவதற்கே இந்த விடுவிப்பு. ஒரு காட்சியின் பரப்பைக்கண்டு மகிழ்வதற்கு நாம் நகரத்தை விட்டு நீங்குவதில்லையா? ஒரு விமானத்திலிருந்து காணும் பொழுது பூமி நம் கண்களுக்கு இன்னும் சிறப்பான முறையில் எடுத்துக் காட்டுகிறது. அதே போல்வதுதான் மனிதச் சத்தியும். நம்முடைய தோழர்களுடன் கலந்து வாழவேண்டுமானல், சில சமயங்களில் நாம் தனிமையை நாடி வலுவைப் பெறவேண்டியிருக்கிறது. அப்பொழுதுதான் நமக்குத் தோழமையாகிய சீவராசிகளை அன்புடன் பார்க்கிறேம்; பொது மக்களுக்குத் தெரியாமல் கிடக்கும்

கூடிவாழ் தேவைகளை நியாயமாகவும் அறிவுடனும் காண்பதற்கு ஒரு துறவி தனியிடத்திருந்து தன்னை ஆயத்தமாக்கிக்கொள்கிருன். பாலை நிலத்தில் செய்து வந்த ஆயத்தம் அன்பும் அமைதியும் கொண்ட பெரிய சமய சங்கத்துக்கு அடிப்படையாகும்.

ஆழ்ந்த தனிமை வாழ்க்கையைக் குழந்தை எளிய முறையில் அனுசரித்துக்கொள்கிறது; அந்தத் தனிமையில் வலிமை பெற்ற அமைதியான சால்பைத் தன்னுள் படைத்துக்கொள்கிறது; இங்கிருந்து தன்னைச் சூழ்ந்திருப்பவருக்கு அன்பைப் பொழிகிறது. இந்தப் போக்கிலிருந்து தன்னைத் தியாகம் செய்தல், வேலையில் ஓர் ஒழுங்கு, கீழ்ப்படிதல் முதலியவை தோன்றுகின்றன. இவற்றுடன் வாழ்க்கையின் இன்பம் தெளிவாகப் பாறைக்குளிருந்து பீரிட்டு வரும் ஊற்றுப் போலத் தோன்றித் தன்னருகில் வாழ்வோர்க்கெல்லாம் இன்பத்தையும் உதவியையும் அளிக்கிறது.

உன்னிப்பின் பலன் கூட்டுவாழ்வுணர்ச்சியைத் தட்டி எழுப்பிவிடு வதாகும். ஆசிரியை இதைப் பின்தொடர ஆயத்தமாய் இருக்க வேண்டும். குழந்தைகளின் நெஞ்சம் மலர்ந்தவுடனே ஆசிரியை யிடமே அவை நேராக வரும். நீல வானத்தைக் காண்பது போலவும், புல்லில் மறைந்து கிடக்கும் மலரின் மணத்தை இது வரை நுகராது இப்பொழுது நுகர்ந்தது போலவும், இக்குழந்தைகள் இது வரை காணுத ஆசிரியையை இப்பொழுது கண்டவைபோலாகின்றன.

இந்தக் குழந்தைகளின் ஊக்கம் நிறைவு பெற்றது. இவற்றின் வெளித்தோற்றம் வியப்பையும் அதிவேகத்தையும் கொண்டது. இவற்ருல் தேவைப்படுபவை பழக்கமில்லாத ஆசிரியையைத் திடுக் கிடச் செய்யும். முதல் பருவத்தில் குழந்தைகளின் கலக்கமான பல செயல்களைக் கண்டு ஆசிரியை தன் காலத்தை வீணுக்கிக்கொள்ள வில்லை; ஆனுல், குழந்தைகள் தமக்குத் தேவைப்படும் அடிப்படை யானவைகளின்மேல் கவனம் செலுத்தி வந்தாள். அதே போல, இப்பொழுது குழந்தைகள் தங்கள் நன்னெறிச் செல்வத்தையும் அழகையும் காட்டக்கூடிய எண்ணற்ற அறிகுறிகளால் வெல்லப்படக் கூடாது. ஆசிரியை எப்பொழுதும் எளிமையானதும், மையமானதும், ஒரு கதவின் கீலைப்போல இயங்குவதையுமே தன் நோக்கமாக வைத்துக்கொள்ள வேண்டும். இயல்பாக இந்தக் கதவின் கீல், மறைந்து கிடக்கிறது. இது நடத்தி வைக்கின்ற கதவின் அழகுக்கு ஒரு சம்பந்தமும் இல்லாமல் தானுக இயங்குகிறது.

ஆசிரியையின் நோக்கம் எப்பொழுதும் நிலையுள்ளதாகவும் துல்லிய மானதாகவும் இருக்க வேண்டும். அவள் தான் மேற்கொண்ட முயற்சிக்கும், கொண்ட பங்குக்கும் பொருத்தமான அளவில் குழந் தைகளின் முன்னேற்றம் இல்லையே என்று வீணை வருத்தத்துடன்

தொடங்குகிருள். வரவரக் குழந்தைகள் மேலும் மேலும் சுயேச்சை யாகவே தத்தம் வேலையைத் தேர்ந்தெடுத்துக்கொள்கின்றன. அவை தம்மை வெளியாக்குவதில் சிறந்த செல்வாக்குக் காணப்படுகிறது. சில வேளைகளில் அவற்றின் முன்னேற்றம் மிகவும் அற்புதமாகக் காண்கிறது. ஆசிரியை சூழ்நிலையை ஆயத்தமாக்கிவிட்டுத் தலை மறைவாக ஒதுங்கித் தன்னுடைக்கத்துடன் அவற்றுக்குச் சேவை புரியத் தக்கவளேயன்றி, வேருென்றுமில்லை என்று கருதுகின்ருள். ஏசுநாதர், 'ஜான்-தி-பாப்திஸ்து' என்ற ஞானசாரியருக்கு எடுத்துக் கூறினுரே, '**அவன் வளர வேண்டும் ; நான் தளர வேண்டும்,**' என்று, அப்பொன் மொழிகளை ஆசிரியை தன் கருத்தில் இருத்திக் கொள்கிருன்.

ஆனுல், இந்தச் சமயத்திலேதான் குழந்தை அவளது அதிகாரத் தின் உதவியை நாடுகின்றது. குழந்தை தன் சொந்த நுண்ணறிவை யும், செயலையும் உபயோகித்து ஒன்றைச் சாதித்திருக்கின்றது. எடுத்துக்காட்டாக, ஓர் ஓவியம் தீட்டியிருக்கலாம் ; ஒரு சொல்லை எழுதியிருக்கலாம் ; அல்லது வேறேதாவது ஒரு சிறு தொழிலைப் புரிந்திருக்கலாம். உடனே குழந்தை ஆசிரியையிடம் ஓடுகின்றது. 'இது சரியா ?' என்று வினவுகிறது. என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்று சொல்லச்சொல்லிக் குழந்தை எதிர் பார்ப்பதில்லை. அது அத்தகைய உதவி தனக்கு வேண்டா என்று தன்னைக் காத்துக்கொள்ளுகின்றது. தேர்வும் நடத்தி வைப்பதும், விடுதலை பெற்ற ஆன்மாவின் உரிமையும் வெற்றியும் ஆகும். ஆனுல், குழந்தை அவ்வேலையை முடித்த பிறகு, தன்னுடைய ஆசிரியையின் அங்கீகாரத்தை விரும்புகிறது.

தம்முடைய தெய்விகத் தனிமையை[1]க் காத்துக்கொள்கின்ற அதே இயல்பூக்கத்துக்கு—ஒவ்வொருவரும் தம்முள்ளிருந்து கேட்கப்படும் அந்தரங்க வழிகாட்டும் குரலுக்கு—ஒவ்வொரு குழந்தையும் கீழ்ப்படி கிறது. அதே இயல்பூக்கம் இப்பொழுது வெளிப்படையான அதிகாரி யிடம் தாம் செய்த வேலையைக் காட்டச் சொல்கிறது. அவ்வாறு செய்யும் பொழுது குழந்தைகள் கடைப்பிடிக்கும் பாதை நேர்மை யானதா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகின்றன. குழந்தையின் முதல் தளர்நடை நம் நினைவுக்கு வருகிறது. அந்த நிலையில் தன்னுள் நடக்கத் தொடங்கும் சத்தி நிறைந்திருந்த போதிலும், அதுவும் குறை வில்லாமல் சாதிக்க வல்லதாய் இருந்தாலும், பெரியவர்களுடைய நீட்டின கரங்களை அக்குழந்தை எட்டிப் பிடிக்க எதிர் பார்க்கிறது. அதே போல, இங்கும் நடை பெறுகிறது. அவ்வாறு கேட்கப்படும் பொழுது ஆசிரியை தன்னுடைய ஏற்பைக்[2] காட்டும் வகையில்

---

1. Spiritual privacy, 2. Approval

இணங்கும் சொல் கூற வேண்டும்; ஒரு புன்னகையால் அதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும்—தாய் குழந்தைக்குப் புன்னகை காட்டு கிறுளே, அதே போல. நிறைவும் தன் நம்பிக்கையும் குழந்தையின் அந்தரங்கத் தொடக்கத்திலிருந்து வளர்ச்சி பெற வேண்டும். இவற்றைப்பற்றி ஆசிரியர்க்கு ஒரு சம்பந்தமும் இல்லை.

ஒரு தரம் தன்னைப் பொறுத்தமட்டில் ஐயம் ஏதும் இல்லாத நிலையைப் பெற்றவுடன் குழந்தை ஒவ்வொரு படிக்கும் அதிகாரியின் ஏற்பைத் தேடாது; அது நிறைவேற்றின வேலைகளை ஒன்றின்மேலொன்ருக அடுக்கிக்கொண்டே போகும். மற்றவர்களுக்கு இதைப் பற்றி ஒன்றும் தெரியாது. தன் முயற்சியின் பயனுகப் பழுக்கும் கனியை ஆக்குவதற்கும், அதை நிறைவு பெறச் செய்வதற்கும் தேவைப் படும் அளவுக்கு அது கீழ்ப்படிகிறது. குழந்தையின் அக்கறை அதன் தொழிலை நிறைவேற்றுவதே; அதைக் கண்டு வியத்தலன்று; அல்லது, தன் சொத்தென்று பாதுகாத்து வைத்திருப்பதும் அன்று. தன்னை முன்னேறச் செய்யத் தூண்டிவிடும் சிறப்பான இயல்பூக்கம் இருக்கும் இடத்தில் பொருமையும், பேராசையும் காணப்படுவதில்லை. எமது பள்ளிக்கூடத்தைப் பார்வையிட விருந்தினர் பலர் வந்து போவதுண்டு. ஆசிரியைகள் குழந்தைகளின் மிகச் சிறப்பான வேலைகளை வந்தவர்களுக்கு எடுத்துக்காட்டுவதுண்டு. இன்னுள் செய்தது என்று கூருமலே, இவ்வாறு காட்டுவார்கள். பார்வைக்கு இது வேண்டுமென்று தவறிழைத்தது போலத் தோன்றலாம்; ஆனுல், உண்மையில் அவ்வாறில்லை. ஏனென்ருல் இதைப் பற்றி நம் குழந்தைகள் கவலைப்படுவதில்லை. வேறு எவ்வகையான பள்ளிக்கூடத்திலும் ஆசிரியை குழந்தையை அறிமுகப்படுத்தாமல் அழகான வேலைப் பாட்டை மட்டும் எடுத்து விளக்கினுல், தான் ஒரு குற்றவாளி எனத் தனக்குள் வருத்தமடைவாள். அப்படி ஒரு வேலை மறந்து போயிருந்தால், ‘ நான் செய்தேன் ,’ என்ற குரல் எங்கிருந்தோ கேட்கப்படும்.

எங்கள் பள்ளிக்கூடத்தில் பிறர் மதிப்பைப் பெறக்கூடிய அளவு சிறப்பான தொழிலுக்கு உரிய குழந்தை ஏதோ ஒரு மூலையில் புது முயற்சியில் கண்ணுங்கருத்துமாய் இருந்துகொண்டு, தன்னை எவரும் அமைதியிலிருந்து கலைக்காமல் விட்டுவிடுவது போதும் என்றிருக்கலாம். இந்தப் பருவத்தில் கட்டுப்பாடு நிலைபெற்றுவிடுகிறது. இது ஒரு வகையில் செயலுற்ற சமாதானம், அல்லது அமைதி; கீழ்ப்படிதலும் அன்பும் கொண்டது. வேலை குற்றமில்லாமல் சீராக்கப்படுகிறது; பெருக்கப்படுகிறது. வசந்த காலத்தில் மலர்கள் தங்கள் வண்ணங்களைப் பெறுவதெதற்கு? எதிர்காலத்தில் இனிய சுவையூட்டும் கனிகளை ஆக்குவிப்பதற்கு.

# 27. ஆசிரியையின் முன் ஏற்பாடு

மான்டிசோரி ஆசிரியை ஒருத்தி முதன்முதலாக மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கை, **தன்னையே ஆயத்தமாக்கிக்கொள்ளல் ஆகும்.** முக்கியமாக அவள் தன் மனக்கற்பனையை உயிர்ப்புடன் இருக்கச் செய்ய வேண்டும். அவள் சாதாரணப் பள்ளிக்கூடங்களில் தன் கண் முன் இருக்கும் குழந்தைகளின் அன்றைய நடத்தையைப் பார்க்கிறாள். அவற்றைப் பார்த்துக்கொள்ள வேண்டுமென்பதும் அவற்றுக்கு என்ன கற்றுக்கொடுக்க வேண்டும் என்பதும் அவளுக்குத் தெரிந்திருக்கும். ஆனால், மான்டிசோரி ஆசிரியை இனி மலரப் போகின்ற குழந்தைக்காகக் கூர்ந்து கவனித்த வண்ணமாக எதிர் பார்த்துக்கொண்டிருப்பாள். இதுதான் இரண்டு முறைகளுக்கும் உள்ள முக்கியமான வேற்றுமையாகும். எம் பள்ளிக்கூடங்களில் வேலை தொடங்கும் ஆசிரியை, 'தொழிலின் மூலமாகக் குழந்தை தன்னை மலரச் செய்துகொள்ளும்,' என்னும் உண்மையில் நம்பிக்கை கொண்டவளாய் இருக்க வேண்டும்; குழந்தைகள் எந்தெந்த மட்டத்தில் இருக்க வேண்டுமென்ற முன் கூட்டிய கருத்துகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள வேண்டும். பொதுவாக எம் பள்ளிக்கூடத்திற்கு வரும் குழந்தைகள் நேர்மைப்படாதவையாகவே இருக்கலாம். அவற்றுள் பல வகைகள் இருக்கலாம். அதற்காக ஆசிரியை தன்னைக் கலக்கிக்கொள்ளக்கூடாது. அவள் தெய்விக வாழ்வு நடத்தும் நேர்மைக் குழந்தைகளாகிய ஒரே ஒரு வகையே தன் கண் முன் இருப்பதாகக் கற்பனை செய்துகொள்கிறாள். தன் மனத்தைக் கவரக்கூடிய ஒரு தொழிலைக்காணும் நற்பிள்ளை[1] தன்னைக் காட்டிக்கொள்ளும் என்பதில் ஆசிரியை நம்பிக்கை கொள்ள வேண்டும். ஆதலால், ஆசிரியை எதைக் காணத் தேட வேண்டும்? ஏதோ ஒரு குழந்தையில்லாவிட்டால் மற்றொரு குழந்தையாவது தன் உன்னிப்பைக் காட்டாதா என்று தேடிக் காத்திருக்க வேண்டும். இதற்காக அவளுடைய சக்திகளைத் திருப்ப வேண்டும். அவளுடைய செயல்களும்

---

1. Normalised child

தெய்விக மார்க்கத்தில் இருப்பது போலக் கட்டத்துக்குக் கட்டம் மாறிக்கொண்டே போகும். அவள் செய்வதில் மூன்று நிலைகள் சாதாரணமாய் இருக்கலாம்.

**முதல் நிலை:** ஆசிரியை பாதுகாக்கும் பேர்வழியாகின்றாள்; குழந்தைகளின் அமைதியின்மையைப் பொருட்படுத்தாது இதன்மேல் கவனம் செலுத்தி வருகின்றாள். இதிலிருந்து குணப்படுத்துவது தோன்றும்; குழந்தையின் மனவுறுதியை ஒன்றின்மேல் குவியச் செய்யும் வகையில் கவரக்கூடியது தோன்றும். எங்களுடைய நாடுகளில் தனித்தனி மனையிருக்கும் இடங்களில் மனையாட்டி வீட்டை எவ்வளவு கவர்ச்சிகரமாக வைக்க இயலுமோ, அவ்வளவு கவர்ச்சிகரமாகவைத் திருப்பாள். தனக்கும் தன் கணவனுக்கும் அது கவர்ச்சியாக இருக்க வேண்டும். அவள் தன் முழு அக்கறையையும் கணவன் மேல் செலுத்துவதைவிடப் பெரும்பகுதியை மனையைப் பார்த்துக் கொள்வதிலும் செலுத்துகிறாள். இதனால், நேர்மையுள்ள ஆக்கும் வாழ்க்கை செழிப்புற்று வளர வகை ஏற்படும். வீட்டைச் சௌகரியம் நிறைந்த அமைதியான இடமாக்க முயற்சி செய்கிறாள். நிறைந்த பல அக்கறையூட்டும் வகைகளை ஏற்பாடு செய்கிறாள். ஒரு மனையின் சிறப்பான பெருமை, **துப்புரவும் ஒழுங்குமாகும்.** ஒவ்வொன்றும் அதற்குரிய இடத்தில் இருக்க வேண்டும்: தூசி தட்டப்பட்டும், பளபளப்பாகவும், மகிழ்ச்சியூட்டும் வகையில் இருத்தல் வேண்டும். அவள் இவற்றையே தன் முதல் கவனிப்பாகக் கொள்கிறாள். பள்ளிக்கூடத்து ஆசிரியையும் இதையே செய்தல் வேண்டும். எல்லாச் செய் கருவிகளும் ஒழுங்காக அதனதன் இருப்பிடத்தில் இருக்க வேண்டும். அவற்றுள் எதுவும் அரை குறையாகக் காணப்படக்கூடாது. அவற்றைக் குழந்தை எப்பொழுது பார்த்தாலும் புத்தம்புதியன வாகவே தோற்றம் அளிக்க வேண்டும்; முழுமையும் கூடிப் பயன் படுத்த ஆயத்தமுள்ளவைகளாய் இருக்க வேண்டும். அப்படியானால், ஆசிரியையும் பார்வைக்குக் கவர்ச்சியுடையவளாகக் காணப்பட வேண்டும். பார்வைக்குக் களிப்பூட்டும் வகையில் ஆடை சுத்த மாகவும் ஒழுங்காகவும் இருப்பதுடன் மன அமைதி பெற்ற பெருந் தன்மை வாய்ந்தவளாகவும் காணப்பட வேண்டும். இவைகளெல்லாம் குறிக்கோள்கள். அவரவர் போக்கில் இவற்றைப் பெறலாம். ஆனால், குழந்தைகளின் முன் நாம் அறிமுகப்படுத்திக்கொள்ளும் பொழுது, அவை தனிப்பெருஞ்சிறப்புடையவை[1] என்பதை மட்டும் நம் மனத்தில்

---

1. மான்டிசோரி அம்மையார் குழந்தைகளைக் காணச் செல்லும் பொழுது ஓர் இளவரசரைக் காணச் செல்வதாக எண்ணி ஆபரணங்களை அணிந்து செல்வாராம்.

இருத்திக்கொள்ளல் வேண்டும். ஆசிரியையின் முதல் தோற்றம் குழந்தையின் நம்பிக்கையையும் மதிப்பையும் பெற வல்லது. ஆசிரியை தன் நடத்தையைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். கூடிய மட்டும் இசைவுடனும், மென்மையாகவும் அழகுறவும் இருக்கும்படி செய்துகொள்ள வேண்டும்.[1] இந்தப் பருவக் குழந்தை தன் தாயை இவ் வரிசையில் காண்கிறது. அந்தத் தாய் எத்தகையவள் என்பது நமக்குத் தெரியாது. அழகி ஒருத்தியை ஒரு குழந்தை காணும் பொழுது, 'ஆ! எவ்வளவு அழகாய் இருக்கிருள்—என் அம்மாளைப் போல!' என்று பெருமை கொள்வதை அடிக்கடி நாம் கேட்டிருக் கிறேம். தாய் ஒரு வேளை அழகற்றவளாகவே இருக்கலாம். ஆனால், குழந்தையின் கண்களுக்கு அவள் அழகுடையவளாகவே காணப்படு கிருள். அவள் புகழ்கின்ற ஒவ்வொருவரும் தன் தாயைப் போலவே இருக்கின்றனர். ஆதலால், குழந்தை வாழும் சூழ்நிலையில் ஒருவர் தம்மைப் பொறுத்த மட்டில் நடையுடை பாவனைகளில் கண்ணைக் கவரும் வகையில் இருக்க வேண்டும். **குழந்தை உலகத்தில் ஆசிரியையே மிக்க சீவாதாரமுடைய பகுதி.**

ஆசிரியையின் முதற்கடமை சூழ்நிலையைப் பாதுகாப்பதேயாகும். மற்றவை எல்லாவற்றையும்விட இதையே முதலில் பார்த்துக்கொள்ள வேண்டும். இதனுல் ஏற்படக்கூடிய பலாபலன்கள் நேர்முகமானவை அல்ல; மறைமுகமானவை. இது செம்மையாகச் செய்யப்படாவிடில், ஒரு பயனும் விளையாது. உடல், நுண்ணறிவு, அறநெறி ஆகிய எத் துறையிலும் நிரந்தரமான பயன் எதுவும் ஏற்பட இயலாது.

**இரண்டாம் நிலை:** சூழ்நிலையைப் பற்றி ஆராய்ந்த பிறகு ஆசிரியை குழந்தைகளிடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை ஆய்வோம். இந்த ஒழுங்கில்லாத குழந்தைகளை வைத்துக் கொண்டு என்ன செய்வது! தெளிவற்ற குழப்பமான இளமனமுடை யவைகளுக்கு ஏதோ ஒரு தொழிலில் அக்கறையை ஊட்டுமாறு நாம் எதிர்பார்த்திருப்போமா? எளிதில் புரியும்படியான ஒரு சொல்லை நான் அடிக்கடி பயன்படுத்துவதுண்டு. ஆசிரியை **மயக்க வேண் டும்**;[2] குழந்தைகளைத் தன் வசப்படுத்த வேண்டும். சூழ்நிலை கவனிக் கப்படாமல், தட்டுமுட்டுச் சாமான்களின்மேல் தூசி படிந்தும், செய் கருவிகள் முரிந்தும், அதனதன் இடத்திலில்லாது பெயர்ந்தும், இவை போதாமல் ஆசிரியையும் சுருசுறுப்பிழந்து, மரியாதை குறைவாகக் குழந்தைகளைக் கடுஞ்சொற்களால் புண்படுத்தி வந்தாளாளுல், அவள் எதிர்பார்க்கின்ற இலட்சியத்துக்குத் தேவையான அடிப்படைகள்

1. நம் இலக்கியம் அன்னத்தையும் மயிலையும் உவமையாக எடுத்துக் காட்டுகிறது.
2. Seductive

குறைவுபடுகின்றன. உன்னிப்புத் தன்மையைக் காட்டிக்கொள்வதற்கு முற்பட்ட முதற்பருவத்தில் எல்லாரையும் வரவழைத்து, வெப்பத்தையும் வாழ்வுணர்ச்சியையும் ஊட்டுகின்ற கூதிர்காலத்தைப் போல இருக்க வேண்டும். 'சில முக்கியமான **உளவியல் செயல் முறைகளை**[1] எங்குக் குறுக்கிட்டுத் தடுத்துவிடுவேனே !' என்று ஆசிரியை அஞ்ச வேண்டுவதில்லை. ஏனென்றால், இவை இன்னும் தொடங்கவில்லை. உன்னிப்புத் தோன்றுவதற்கு முன் தலைவி தனக்கு எது நல்லது என்று தோன்றுகிறதோ, அதைச் செய்யலாம் ; எவ்வளவு வேண்டும் என்று நினைக்கிறாளோ, அவ்வளவுக்கு அவள் குறுக்கிடலாம். ஒரு நகர மக்களின் நடத்தை நாகரிகமற்றதாய் இருந்தது. அந்நகரத்தில் சிறுவர் சிலர் திக்கற்றவராய்க் காணப் பட்டனர். இத்தகைய சிறுவரைத் துறவியார் ஒருவர் கூட்டிக்கொண் டார். அவர் என்ன செய்தார்? அவர்களை மகிழ்வித்தார் என்று முன்னொரு நாள் நான் படித்திருக்கிறேன். ஆசிரியையும் இந்தச் சமயத் தில் அப்படித்தான் நடந்துகொள்ள வெண்டும். கதைகள் சொல்ல லாம் ; குழந்தைப் பாட்டுகளையும் வேறு பாடல்களையும் பாட வைக்க லாம் ; குழந்தைகளைத் தன் வசப்படுத்தும் திறமை பெற்ற ஆசிரியை பல விதப் பயிற்சிகளை அளிக்கலாம். இவை கல்வி முறைப்படி அதிக மதிப்புப் பெறுவிட்டாலும், குழப்பமடைந்த குழந்தைகளை அமைதி பெறச் செய்யப் பயன்படும். சுறுசுறுப்பில் லாத ஆசிரியையைவிடச் செயலுற்ற ஆசிரியை குழந்தைகளைக் கவர் வாள் என்பது எல்லார்க்கும் தெரியும். நாமும் முயற்சி செய்தால் எல்லாரும் உயிருற்றவராய்[2] இருக்க இயலும். 'இன்றைக்கு எல் லாத் தட்டுமுட்டுச் சாமான்களையும் அப்புறப்படுத்துவோம்,' என்று எவராலும் மகிழ்ச்சியுடன் சொல்ல இயலும். சொன்னதுடன் குழந் தைகளோடு சேர்ந்து உழைத்து அவற்றுக்கு ஊக்கமளித்து, களிப் போடும் அவற்றுக்கு விருப்பம் ஏற்படும் வகையில் புகழ்ந்தும் காட்ட வேண்டும். அல்லது, 'இந்தப் பித்தளைச்சாடியைப் பார்த்தீர்களா ! இது மங்கிக் கிடக்கிறது ; விளக்கப்படவேண்டும்,' என்று கூறலாம். அல்லது, 'தோட்டத்துக்குச் சென்று மலர் பறிப்போமா ?' என்று அழைக்கலாம். ஆசிரியையின் ஒவ்வொரு செயலும் குழந்தைக்கு வரவேற்பாகிவிடுகிறது.

இதுதான் ஆசிரியையின் இரண்டாவது நிலைசம்பந்தமான வேலை. இந்த நிலையில் ஏதாவது ஒரு குழந்தை ஓயாமல் பிறரைத்துன்புறுத்திக் கொண்டேயிருந்தால், நடைமுறையில் சிறந்த பரிகாரம், அதன் செயலில் குறுக்கிடுவது. ஒரு குழந்தை ஒரு தொழிலில் ஈடுபட்டு இருக்கும்பொழுது எவரும் அதன் இடையில் புகுந்து தடுக்கக்கூடாது என்று நாம் இதற்கு முன் எடுத்துக் கூறியிருப்பது உண்மைதான்.

1. Psychic process, 2. Lively

அவ்வாறு செய்வதால் அதனுடைய செயல் வட்டம்[1] அறுபடுவதில்லை. அதனுடைய சுதந்தரப் பெருக்கமும் தடைபெருமல் இருக்கும் என்பதைத் தெரிந்துகொண்டிருக்கிறோம். ஆனால், இப்பொழுது அனுசரிக்கப்பட வேண்டிய முறை நேர் விரோதமானது. கலைக்கும் வேலைத்தொடர்பை அறுக்கவேண்டியிருக்கிறது. குறுக்கிட்டு நிறுத்த வேண்டிய முறை எந்தவித வியப்பினுல் வேண்டுமானுலும் தெரிவிக்கலாம். அல்லது அந்தக் குறும்புக்காரக் குழந்தையிடம் தனிப்பட்ட அன்பைக் காட்டலாம். வம்பும் குழப்பமும் செய்துகொண்டே போகும் குறும்புக் குழந்தையிடம் இவ்வாறு இடைவிடாது அன்பு செலுத்தப் படும்பொழுது அது அக்குழந்தையின்மேல் மின் அதிர்ச்சி [2] போலத் தொடர்ந்து, பாய்ந்து, தன் வேலையைத் தக்க காலத்தில் செய்துவிடுகிறது. பெரும்பாலும், ‘ஜானகிராமா, சௌக்கியமா ? வா என்னுடன். உனக்கொரு வேலை இருக்கிறது,’ என்று சொல்வது போதும். ஒரு வேளை எந்தப் பொருளையும் தனக்குக் காட்டப்படுவதில் அவன் அக்கறை செலுத்த விரும்பாமலும் இருக்கலாம். ‘பரவாயில்லை ; அதிருக்கட்டும். நாம் தோட்டத்துக்குச் செல்வோம்,’ என்று ஆசிரியையே அவனுடன் செல்வாள் ; அல்லது தன் துணை ஆசிரியையை உடன் அனுப்பி வைப்பாள். இந்த முறையில் அவனும் அவனுடைய துட்டத்தனமும் துணை ஆசிரியரிடம் ஒப்படைக்கப்படுவர். இப்பொழுது மற்றக் குழந்தைகளுக்கு அவனுடைய தொல்லை இராது.

**மூன்ருவது நிலை :** இறுதியாகக் குழந்தைகள் ஏதோ ஒன்றின் மேல் அக்கறை காட்டுகின்ற காலம் பிறக்கிறது. அவை பெரும்பாலும் **நடைமுறை வாழ்க்கைப் பயிற்சியில்** [3] தம் கருத்தைச் செலுத்துகின்றன. அவை பலன் அடையக்கூடிய பருவம் அடைவதற்குமுன் அவற்றுக்குப் புலனறி கருவிகளையும் பண்பாட்டுச் செய்பொருளையும் கொடுப்பதில் ஒரு பயனும் இல்லை என்பதை அனுபவம் காட்டுகிறது.

இத்தகைய பொருள்களை அவற்றுக்கு அறிமுகம் செய்வதற்கு முன் குழந்தைகள் ஏதாவது ஒரு பொருளின்மேல் தம் முனைப்பைச் செலுத்தும் சக்தி பெறும் வரை நாம் காத்திருக்க வேண்டும். நான் முன்பு கூறினது போலச் சாதாரணமாக நடைமுறை வாழ்க்கைப் பயிற்சியில் இதன் அக்கறை செல்லும். குழந்தை ஒரு பொருளின் மேல் தன் அக்கறையைக் காட்டும் பொழுது ஆசிரியர் குறுக்கிடலாகாது. ஏனென்ருல், இந்த அக்கறையானது இயற்கையான விதிகளை ஒட்டியிருக்கிறது ; இன்னும் புதுச்செயல்தொடரைத் தூண்டிவிடுகிறது. ஆனுல், முதல் அடி எடுத்து வைப்பது மிகவும் மென்மையானது ; வலுவற்றது. சோப்புக் குமிழி போலத் தொட்டால் மாயமாகப்

---

1. Cycle of activity, 2. Electric shock,
3. Exercise of practical life

பறக்க வல்லது. அதனுடன் அந்த நிமிடத்தில் தோன்றின அழகெல்லாம் மறைந்துவிடுகின்றன. இந்தச் சமயத்திலேதான் பெரும்பாலும் ஆசிரியை தவறிழைக்கின்ருள். இது வரை கட்டுக்கடங்காதிருந்த குழந்தை, இறுதியில் ஒரு தொழிலின்மேல் தன் உன்னிப்பைச் செலுத்துகின்றது. ஆசிரியை நடந்து அக்குழந்தையின் ஓரமாகச் செல்லும்பொழுது, 'நன்ருயிருக்கிறது!' என்று சொல்வதே போதும் மறுபடியும் எல்லாத் தொல்லைகளும் தொடங்குவதற்கு. மறுபடியும் குழந்தை வேறு ஒன்றில் இயல்பாக அக்கறை காட்டுவதற்கு இன்னும் இரண்டு வாரங்கள் கழிந்தாலும் கழியலாம். வேருெரு குழந்தை ஒரு காரியத்தைச் செய்வதற்குத் திணறிக்கொண்டிருந்தால், ஆசிரியை அதற்கு உதவி செய்ய வேண்டுமென்று நெருங்கினுல், அவள் கையில் ஒப்படைத்துவிட்டுக் குழந்தை விலகிக்கொள்ளும். குழந்தையின் அக்கறை செயலில் மட்டும் கவனம் செலுத்தப்படுவதன்று; அதில் அடங்கியுள்ள கஷ்டத்தை வெல்வதிலும் அதிகம் கவனம் செலுத்தப்படுகிறது. 'ஆசிரியர் எனக்குப் பதிலாகக் கஷ்டத்தை வெல்ல வேண்டுமென்று நினைத்தால், அவரே செய்யட்டுமே! இனிமேல் அதில் எனக்கு அக்கறை இல்லை,' என்று குழந்தை விலகிக்கொள்கிறது. அதுதான் அதன் மனப்பான்மை. பளுவான ஒரு பொருளைக் குழந்தை தூக்குவதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கும் பொழுது ஆசிரியை அதற்குத் துணை புரிய வந்தால், பெரும்பாலும் குழந்தை அப்பொருளை ஆசிரியை கையில் விட்டுவிட்டு ஓடிவிடுகிறது. ஆசிரியையின் புகழ்ச்சியோ, உதவியோ, நோக்கோ இருத்தல் போதும், அதன் வேலை தடுக்கப்படுவதற்கு அல்லது அடியோடு அச்செயல் அழிக்கப்படுவதற்கு. மேலே குறிப்பிட்ட எது இருந்தாலும், அது போதும். இதைக் கூறுவது விந்தையாக இருக்கலாம். ஆனுல், இது நடக்கலாம். தன்னை எவரோ கவனித்து வருகிருர் என்று குழந்தை உணர்தலே போதும். அது செய்துகொண்டிருந்த தொழில் நின்றுவிடும். நாமுங்கூட அப்படியேதான் செய்வோம். நாம் செய்துகொண்டிருப்பதை எவராவது பார்க்கவந்தால், நாம் நம் காரியத்தைச் செய்யச் சக்தியற்றவர்களாய்விடுகிறேம் அல்லவா? ஆசிரியைக்கு வெற்றி தரக்கூடிய பெரிய கொள்கை இது. உன்னிப்புத் தொடங்கிவிட்டவுடனே அந்த இடத்தில் குழந்தை ஒன்று இல்லை என்றே வைத்துக்கொள்வோம். கடைக்கண்ணில் பார்த்தால் மின் வேகத்தில் அது என்ன செய்துகொண்டிருக்கிறதென்பதை அறிந்துவிடலாம். ஆனுல், அதற்குத் தெரியாமல் செய்ய வேண்டும். இது வரை ஒரு பொருளிலிருந்து மற்றென்றுக்குச் சென்று ஒன்றின்மேலும் தன் மனத்தைப் பதியவிடாமல் சலித்துப்போயிருந்த குழந்தை, இதற்குப் பிறகு தானே தன் இயல்பாக வேண்டுமென்று ஒரு பொருளைத் தேர்ந்தெடுக்கத் தொடங்குகிறது. இந்த நிலையில் ஒரே பொருளை ஒரே சமயத்தில் பலரும் தேர்ந்தெடுக்கிறது என்று வந்துவிட்டால் அது ஒரு பிரச்சினை

ஆகிவிடுகிறது. இத்தகைய சிக்கல்களை விடுவிப்பதற்கு நம்மை அவை கேட்டுக்கொள்ளாத வரைக்கும் நாம் குறுக்கிடக்கூடாது. குழந்தைகள் தாங்களே இதைத் தீர்த்துக்கொள்ளும். ஆசிரியையின் கடமை புதுப்பொருள்களைக் குழந்தைக்கு அறிமுகப்படுத்துவதாகும். அதுவும் இதற்கு முன் உபயோகித்து வந்த பொருள்களை இனிமேல் உபயோகிக்கத் தேவையில்லை என்பதை உணர்ந்த பிறகு இதைத் தான் செய்ய வேண்டும்.

குறுக்கிடாதபடி இருப்பது என்பது பயிற்சியின் பிறகு ஆசிரியை பெறக்கூடிய திறமை. மற்றவைகளைப் போன்றதுதான் இதுவும். இது எளிமையாகப் பெறப்படுவதன்று. அப்படியென்றால் தெய்விக (ஆன்மிக) உச்சத்தை அடைவதுபோலாகும். ஆன்மிக வாழ்வில் பிறருக்கு உதவி புரிவதும் பெருமையின் அடிப்படையிலிருந்து தோன்றலாம் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது.

உண்மையில் ஆசிரியை அளிக்கக்கூடிய உதவியானது பற்றுதல் தூண்டுதலுக்குக்[1] கீழ்ப்படிவதன்று; ஒருவருடைய அன்பைக் கட்டுப்படுத்துவதால் தோன்றுகிறது. ஏனென்றால், அன்பை அளிப்பவர் அளிக்கப்படுபவரைவிடப் பெரிய இன்பத்தைப் பெறுகிறார். மெய்யான அன்பு, அளிப்போரைக் காட்டிக்கொடாமல் தேவைப்படுவோர்க்கு அளிக்கப்படுவதாகும். அது உதவியெனக் கருதப்படுவதில்லை; தன் இயல்பானதும் அப்பொழுது இயற்கையாகத் தோன்றியதுமாகக் கொள்ளப்படும்.

ஆசிரியைக்கும் குழந்தைக்கும் இடையே உள்ள தொடர்பு தெய்விக நிலையைச் சார்ந்ததாய் இருந்தாலும், அதற்கு அவள் போக்குக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டை ஒரு நல்ல பணியாள் தன் எசமானனுக்குத் தொண்டாற்றுவதில் காணலாம். அவன் எசமானருடைய உடை மேசையைத்[2] துப்புரவாக வைக்கிறான்; பிரஷ்களை அதனதன் இருப்பிடத்தில் வைக்கிறான். ஆனால், பிரஷ்களை எப்பொழுது உபயோகிக்க வேண்டுமென்று எசமானருக்கு அவன் சொல்வதில்லை. அவருக்கு உணவைப் பரிமாறுகிறான்; ஆனால், உண்ணும்படி சொல்வதில்லை. நல்ல முறையில் எல்லாம் பரிமாறின பிறகு ஒரு வார்த்தையும் பேசாமல் விலகி வந்துவிடுகிறான். குழந்தையின் உளச்சத்தி உருவாக்கப்படும்பொழுது நாமும் அதே போல நடந்துகொள்ள வேண்டும். தேவைப்படும்பொழுது ஆசிரியை அதற்குத் துணை புரியச் செல்ல வேண்டும். எசமானர் தனிமையாய் இருக்கும்பொழுது பணியாள் எசமானரைத் தொந்தரவு செய்வதில்லை.

---

1. Sentimental impulse, 2. Dressing table

ஆனுல், அவர் கூப்பிட்டால், உடனே சென்று அவருடைய தேவையைக் கேட்டு, ‘சரி’ என்கிருன். போற்றுதல் எதிர் பார்க்கப் பட்டால் அவன் அப்படியே போற்றுகிருன்; ‘ஆ! எவ்வளவு அழகாய் இருக்கிறது!’ என்றுகூடச் சொல்லிவிடுவான். அதில் ஒரு வித அழகையும் தன்னுல் காண முடியாத போதிலும் அவன் சொல்லிவிடுவான். அதே போல ஒரு குழந்தை நிறைந்த உன்னிப்புடன் ஒரு காரியத்தைச் செய்துகொண்டிருந்தால், நாம் எட்ட நிற்க வேண்டும். ஆனுல், நம்முடைய ஆமோதிப்பை எதிர்பார்ப்பது போலக் காட்டிக்கொண்டால் நாம் தாராளமாகக் காட்டவேண்டும்.

குழந்தைக்கும் ஆசிரியைக்கும் உளவியல் தொடர்பில் ஆசிரியையுடன் பங்கும் அதன் இயங்கு முறையும் பணியாளுக்குரியவற்றைப் போன்றவையாகும். அவை உதவி புரிவதற்கானவை; நல்ல முறையில் உதவி புரிவதற்கானவை; குழந்தையின் உள்ளத்துக்கு உதவி புரிய வேண்டுபவை. இது ஒரு புதுமை; கல்வித் துறைக்கு முக்கியமான ஒரு புதுமையாகும். அழுக்கடைந்த பொழுது குழந்தையைக் கழுவிவிடுவதோ, அல்லது அதனுடைய துணிகளைத் தைப்பதோ, சுத்தமாக்குவதோ அன்று இங்கு ஏற்படும் பிரச்சினை; நாம் குழந்தையின் உடலுக்கு உதவி புரிவதுமன்று. ஏனென்ருல், அது வளரவேண்டுமானுல் அது தனக்கு வேண்டியவைகளைத் தானே செய்துகொள்ள வேண்டுமென்பதை நாம் அறிவோம். இந்த வகையில் நாம் அதற்கு உதவி புரியக்கூடாது என்பதே எமது கொள்கையின் அடிப்படையாகும். தன்னைப் பொறுத்த மட்டில் தன் நிறைவுடன் குழந்தை **ஸ்தூல சுதந்தரத்தைப்**[1] பெற வேண்டும். தன்னுடைய தேர்வு சக்தியை உபயோகித்துச் சுதந்தரச் சூழ்நிலையில் சுதந்தர மனவுறுதியைக் குழந்தை பெற வேண்டும்; குறுக்கிடுவோர் எவரும் இல்லாமல் தன்னந்தனியாக வேலை செய்து சுதந்தர எண்ணம் பெறும் திறமை வாய்ந்ததாக வேண்டும். குழந்தையின் வளர்ச்சி படிப்படியான சுதந்தரத்தைப் பெற்றதாகும். இதைப் பற்றித் தெரிந்துகொண்ட நம் அறிவு, குழந்தையிடம் நாம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்று வழி காட்ட வேண்டும். தானுக எண்ணி மனவுறுதி பெற்று நடந்துகொள்ளும் வகையில் குழந்தைக்கு நாம் உதவி புரிய வேண்டியிருக்கிறது. இதுதான் உள்ளத்துக்குச் சேவை செய்யும் கலை. குழந்தைகளுடன் பழகும் பொழுதுதான் இக்கலையை நிறைவு பெறும் வகையில் பயிற்சி செய்ய இயலும்.

தன் பொறுப்பில் குழந்தைகளின் குழு ஒன்று விடப்பட்டிருந்து. அக்குழந்தைகளின் தேவைகளை ஆசிரியை சந்திக்கும் பொழுது கூடி

---

1. Physical independence

வாழ்வதன் பண்புகள் வியப்பூட்டும் வகையில் மலர்வதைக் காண்பாள்; குழந்தை ஆன்மாவின் மலர்ச்சியைக் கவனிக்கும் மகிழ்ச்சியை அடைவாள். இவற்றைப் பார்க்கக் கொடுத்து வைப்பது பெரும் பேருகும். இது ஒரு பிரயாணி கொடிய பாலைவனத்தில் திண்டாடும் பொழுது அது வரையும் வரண்டு தீக்காய்வது போல நம்பிக்கை எதுவும் ஊட்டாத மணற்றரையிலிருந்து பொங்கி எழும் நீர் ஊற்றின் ஓசை கேட்டு எவ்வாறு மகிழ்ச்சி அடைவாளோ, அதற்கு நிகராகும். ஏனென்ருல், மனித ஆன்மாவின் உயர்ந்த பண்புகள் எல்லாம் கோணல் குழந்தைகளிடம் சாதாரணமாக மறைந்து கிடக்கின்றன. ஆசிரியையால் எதிர்பார்க்கப்பட்ட அவை தோன்றும் பொழுது அவள் மகிழ்ச்சியுடனும் நம்பிக்கைக்குப் பெற்ற பரிசாகவும் வரவேற்கிருள்; இந்தக் குழந்தையின் சால்புகளில் மனிதன் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைக் காண்கின்ருள். மனிதன் சலிப்படையாத தொழிலாளி. ஏனென்ருல், தன்னைத் தூண்டிவிடும் சக்தி என்றும் குறையாத ஊக்கமாகும். தனக்கு ஏற்படும் தொல்லைகளை வெல்வதில் தன் இடையருப் பேராவலைச் செலுத்துவதற்குத் தன் பெருமுயற்சிகளைப் பயன்படுத்துகிருன் மனிதன்; வலிமையற்றவர்கட்கு உதவி புரிய முயற்சி செய்கிருன். ஏனென்ருல், இவன் நெஞ்சில் மெய்யான கருணை குடிகொண்டிருக்கிறது. இதற்குப் பிறரிடம் மரியாதை செலுத்த வேண்டுமென்பது என்ன என்பது தெரியும். ஒருவனுடைய தெய்விக முயற்சிக்கு மரியாதை செலுத்துவது அவனது ஆன்மாவின் வேர்களுக்கு வார்க்கப்படும் தண்ணீராகும். இந்தச் சிறப்பியல்புகளைப் பெறுவதில் உண்மையான மனிதனின் தந்தையாகிய உண்மையான குழந்தையை ஆசிரியை காண்பாள்.

ஆனுல், இது சிறிது சிறிதாகத்தான் நடைபெறும். முதலில் ஆசிரியை, 'குழந்தை எவ்வாறிருக்க வேண்டும் என்பதைக் கண்டு கொண்டேன். அது நான் கற்பனை செய்வதைவிட இன்னும் மேலாகவே இருப்பதைக் கண்டேன்,' என்று கூறுவாள். குழந்தைமையைப் புரிந்துகொள்வது இதுதான். இந்தக் குழந்தையின் பெயர் 'சானகிராமன்' என்பதைத் தெரிந்துகொள்வது மட்டும் போதாது; இவன் தந்தையார் ஒரு தச்சர் என்பது தெரிதல் போதாது; குழந்தைமையின் இரகசியத்தை ஆசிரியை தன் அன்ருட வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டும். இதனுல், அவள் ஆழ்ந்த அறிவைப் பெறுவதுடன் ஒரு புதுமை அன்பையும் பெறுகிருள். இவ்வன்பு, குறிப்பிட்ட பேர்வழியை ஒட்டியதன்று; ஆனுல், இந்த இரகசியத்தின் இருளில் மறைந்து கிடக்கும் ஒன்றுக்குக் காட்டப்படும் அன்பாகும். குழந்தைகள் தங்கள் உண்மையான இயல்புகளைக் காட்டிக் கொள்ளும் பொழுது ஒரு வேளை முதல் முதலாக மெய்யான அன்பு என்ன என்பதை ஆசிரியை புரிந்துகொள்கிருள். இந்தப் பேருண்மை

அவளையும் மாற்றிவிடுகிறது. இது அவளுடைய நெஞ்சையே தொட்டு விடுகிறது. சிறிது சிறிதாக இது மக்களையே மாற்றிவிடுகிறது. இந்த மெய்ந்நிகழ்ச்சிகள் ஒரு முறை காணப்பட்ட பிறகு இவற்றைப்பற்றி எழுதாமலோ பேசாமலோ சும்மா இருக்க இயலாது. குழந்தைகளின் பெயர் மறந்து போயிருக்கலாம். ஆனால், அவற்றின் உள்ளங்கள் பதிய வைத்ததையும் அவற்றால் மலரச் செய்த அன்பையும் எவரால் அழிக்க இயலும் ?

அன்பில் இரு நிலைகள் இருக்கின்றன. குழந்தையிடத்தில் நம் அன்பைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அவற்றுக்கு நாம் காட்டும் பாதுகாப்பையும் கொஞ்சுவதையும் குறிப்பிடுகிறோம்; நமக்குத் தெரிந்தவர்களிடம் காட்டும் பரிவையும், நம்முடைய இன உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவோரிடம் காட்டும் கருணையையும் குறிப்பிடுகிறோம். ஒரு தெய்விகப் பிணைவு நம்மை அவற்றுடன் இணைக்குமானால் அவற்றுக்கு இறைவழிபாட்டைக் கற்றுக்கொடுப்பதில் நாம் அதைக் காட்டிக்கொள்கிறோம்.

ஆனால், நான் வேறொன்றைப் பற்றிக் கூறுகின்றேன். நான் பேசுகின்ற அன்புநிலை இனி ஆளைப்பொறுத்ததோ அல்லது பொருளைப் பொறுத்ததோ அன்று. குழந்தைக்குத் தொண்டாற்றுவது மனிதச் சத்திக்கே தொண்டாற்றுவதாகும். அது தன்னைத்தானே விடுவித்துக் கொள்ள வேண்டிய சத்தியாகும். அன்பின் நிலை வேற்றுமையைக் காட்டி வைத்தவள் ஆசிரியை அல்லள் ; குழந்தையேயாகும். இது வரை தான் உணராது உயர்வுக்கு உயர்த்தப்பட்டதாக உணர்பவள் ஆசிரியையே ஆவள். குழந்தையின் உலகத்துக்குள் வரும் வகையில் குழந்தை ஆசிரியையை வளரச் செய்திருக்கிறது.

இதற்குமுன் ஆசிரியை தன் பணி மேலானதென்று கருதிவந்தாள்; விடுமுறை நாள்கள் வந்த பொழுது மகிழ்ச்சியடைந்தாள்; மற்றவர்களுக்குப் பணி செய்யும் பொது மக்களைப் போலத் தனக்கும் வேலை நேரம் குறையும் என்றும் சம்பளம் உயரும் என்றும் எதிர்பார்த்து வந்தாள். அவளுடைய திருத்தி எல்லாம் அதிகாரம் செலுத்துவதிலும் தன்னைக் கண்டு குழந்தைகள் தான் ஒரு குறிக்கோளாகவும் எடுத்துக் காட்டாகவும் நினைத்து நடப்பார்களென்று கருதுவதிலும் இருந்தது. தான் ஒரு தலைமை ஆசிரியை ஆவதில் அவள் மனநிறைவு பெறுவாள்; அல்லது ஒரு நாள் கல்வித்துறை ஆய்வாளர் ஆகலாம் என்று எதிர்பார்த்திருப்பாள். இத்தனையும் எதிர் பார்த்த நிலையிலிருந்து இதற்கும் மேலான ஒரு நிலையைப் பெறுவதென்றால், இவைகளில் எல்லாம் மெய்யான இன்பம் இல்லை என்ற உண்மையை உணரவேண்டும். தெய்விக ஆனந்த நீரோடையில் பருகின ஒருவர், உத்தியோகப்

பதவியில் பெற்ற ஓர் உயர்வினால் கிடைக்கும் மன நிறைவைத் தாமாகவே உதறித் தள்ளிவிடுவார். இது அனேக தலைமை ஆசிரியர்களும் கல்வி ஆய்வாளர்களும் தம் பதவிகளைத் தாமாகத் துறந்துவிட்டுச் சிறுகுழந்தைகள் சேவைக்குத்தம்மை அர்ப்பணித்துக் 'குழந்தை ஆசிரியர்தானே!' என்று பிறரால் ஏளனமாக வழங்கப் படுவதில் காணப்படுகிறது.

பாரிஸ் நகரத்தில் தம் பதவியைத் துறந்த மருத்துவர் இருவரை எனக்குத் தெரியும். இந்தத் தோற்றங்களின் உண்மையை ஆய்ந்து இவற்றுக்காக முழு நேரத்தையும் செலவிடுவதற்காகவே அவர்கள் தங்கள் வேலையைத் துறந்தார்கள். இவ்வாறு பதவியிழத்தலில் கீழ்ப் பதவியிலிருந்து மேற்பதவிக்கு அவர்கள் சென்றதாகக் கருதினார்கள்.

இம்மாதிரியாக மாறுதல் அடைந்த ஆசிரியரின் வெற்றிக்கு மிகப்பெரிய அறிகுறி என்ன? **'நான் இல்லாதது போலக் குழந்தைகள் தங்கள் வேலைகளைச் செய்து வருகின்றன,'** என்று சொல்லக்கூடிய திறமையாகும்.

மாறுதலுக்கு முன் அவளுடைய உணர்ச்சிகள் எதிர்மறையாய் இருந்தன. குழந்தைகளுக்குக் கற்பித்தவளும், தாழ்ந்த நிலையிலிருந்து உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்தவளும் தானே என்று கருதி வந்தாள். இப்பொழுது குழந்தையின் சத்திகள் வெளிப்படுவதைக் கண்ணாரக்கண்ட பிறகு தான் சாதித்தவைகளின் பெருமதிப்பை இவ்வார்த்தைகளால் குறிப்பிடலாம்: 'சிருஷ்டியால் அதற்கென்று அளிக்கப்பட்ட பணிகளை நிறைவேற்றுவதற்காக அதனுடைய வாழ்க்கைக்கு நான் உதவி புரிந்தேன்.'

இது மெய்யான மனநிறைவை அளிக்கிறது. மனிதக்குலத்தின் முக்கியமான ஆக்கும் பருவத்தில் உதவி புரிந்திருப்பதாக ஆறுவயது வரையுள்ள குழந்தைகளின் ஆசிரியை உணர்கிறாள். குழந்தைகளின் மற்ற விஷயங்களைப் பற்றி ஒன்றும் அவள் அறியாள்; அவைகளே உரையாடிக்கொண்டதிலிருந்து அவளுக்கு அவைகளே எடுத்துக் கூறினவையல்லாமல் வேறொன்றும் தெரியாது. ஒரு வேளை அவற்றின் எதிர்காலத்தைப்பற்றி ஓர் அக்கறையும் காட்டுவதில்லை போலும்! அவை உயர்நிலைப்பள்ளிகளுக்கோ பல்கலைக் கழகங்களுக்கோ போய்ச் சேருமா, அல்லது சீக்கிரம் தம் படிப்பை முடித்துக் கொள்ளுமா என்பவைகளைப் பற்றி எல்லாம் கவலைப்படாதவளாய் இருக்கலாம். ஆனால், ஒரு விதத்தில் அவள் மகிழ்ச்சி அடைகிறாள்; ஆக்கும் பருவத்தில் அவை என்ன செய்ய வேண்டுமோ, அவற்றைச் செய்தன என்று மகிழ்ச்சி அடைகிறாள். 'இக்குழந்தைகளின் உள்ளச்சத்திகளுக்கு நான் தொண்டு புரிந்தேன். இவற்றின்

வளர்ச்சி நிறைவேறிவிட்டது. இவற்றின் அனுபவங்களில் நானும் தோழமை கொண்டேன்,' என்று அவளால் சொல்லக்கூடும். மேல் அதிகாரிகளுக்கு ஆசிரியை பொறுப்புடையவள் என்பது ஒரு புறம் இருக்கட்டும். அவள் தன் வேலையின் மதிப்பை உணர்கிருள். திருத்தி அடைந்த தெய்விக வாழ்வு வடிவத்தில் தான் அடைந்ததை எண்ணுகிருள். இந்த வாழ்க்கை **'என்றும் அழியாத வாழ்க்கை.'** இன்று காலையிலிருந்து நாளை வரை வேண்டப்படும் பிரர்த்தனையை இதில் காண்கிருள். இந்த வாழ்க்கையை அனுசரியாதவர்களுக்கு இதைப் புரிந்துகொவது எளிது அன்று. இது தன்னைத் தியாகம் செய்கின்ற ஒரு நற்பண்பு என்று பலர் எண்ணுகின்றனர். 'எவ்வளவு அடக்க ஒடுக்கமாக இருக்கிருர்கள் இவ்வாசிரியைகள்! குழந்தை களிடத்தில் தங்கள் அதிகாரத்தைச் செலுத்துவதிற்கூட இவர்கள் அக்கறை கொள்வதில்லையே!' என்று கூறலாம். வேறு பலர், 'ஆசிரியைகளுடைய இயற்கையானதும் தன்னியல் பாகத்தோன்றுவது மாகிய ஆசைகளில் பெரும்பகுதியை விட்டுவிடச் சொன்னல் உங்களுடைய முறை எங்ஙனம் வெற்றி பெறும்?' என்று கேட்கலாம். ஆனல், ஒருவராவது புரிந்துகொள்ளாதது என்னவென்ருல், **இது தியாகமன்று;**[1] **திருத்தி;**[2] துறத்தலன்று; ஆனல், நோக்கங்களின் மதிப்பு வேருன புதுமை வாழ்க்கையாகும். இது வரை மறைந்து கிடந்த வாழ்க்கை இலட்சிய மதிப்புகள் புத்துயிர் பெறுகின்றன.

மேலும், எல்லாக் கொள்கைகளும் வெவ்வேருனவை. எடுத்துக் காட்டு நியாயம் என்பது. பள்ளிக்கூடங்களிலும், கூடி வாழ்விலும், பொது மக்கள் ஆட்சி பெற்ற நாடுகளிலும், நியாயம் என்பதை எல்லாருக்கும் ஒரே சட்டம் என்ற வகையில் நம்புகின்றனர்; திருவுடை யோர்க்கும், சத்தி பெற்றவர்க்கும், பசியால் சாகின்றவர்க்கும் சட்டம் ஒன்றே என்று கருதுகின்றனர். நீதி என்பது வழக்குகளி லும், தண்டனைகளிலும், சிறை வாசத்திலும் சேர்த்துப் பேசப்படு கிறது. நீதி மன்றங்களெல்லாம் நீதி அரண்மனை என்று வழங்கப் படுகின்றன.[3] 'நான் ஓர் உண்மையான குடி'[4] என்ருல், போலீஸ் சட்ட மன்றம் போன்றவைகளுக்கும் இவருக்கும் ஒரு விதத்திலும் ஆட்சி சம்பந்தத் தொடர்பு இல்லை என்பது பொருள் ஆகிறது. பள்ளிக்கூடத்திலும் ஆசிரியை குழந்தையிடம் கொஞ்சுவதில் எச்சரிக்கை உள்ளவளாய் இருக்க வேண்டும்; அல்லாவிடில் எல்லா ரிடமும் கொஞ்ச வேண்டி வரும். அவள் எல்லார்க்கும் சமமாக நடந்துகொள்ள வேண்டும். எல்லாரையும் மிகத் தாழ்ந்த நிலையில்

---

1. Sacrifice, 2. Satisfaction

3. இத்தாலி மொழியில் அப்பொருளில் இருக்கலாம். நீதி மன்றம் என்பதே நாம் அறிந்தது.

4. True citizen

இருக்கச் செய்கின்ற ஒரு வகையான நீதி ஆகிறது இது. எல்லாரும் ஒரே மட்டத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக உயர்ந்தவர்களுடைய தலையை வெட்டிவிடுவது போன்றிருக்கிறது இது.

இம்மாதிரியான உயர்ந்த கல்வி மட்டத்தில் நீதி என்பது மெய்யான தெய்விகத்தன்மை பொருந்தியது; ஒவ்வொரு குழந்தையும் தன்னால் இயன்ற சிறப்பை அடைய அவகாசம் அளிக்கிறது. ஒவ்வொரு மனிதனும் அவனுடைய முழுத் தெய்விக வளர்ச்சியைப் பெறுவதற்கு வேண்டுவதை அளிப்பதே நீதியாகும். ஒவ்வொரு வயதின் சத்திக்கும் உதவி புரிவதென்பது இதைத் தோற்றுவிக்கும் சத்திகளுக்கு உதவி புரிவதாகும். வருங்காலத்தில் கூடிவாழ் குழு அமைக்கப்படுவது இந்த அடிப்படையில் இருக்கும் போலும்! இந்தத் தெய்விகச் சொத்துகளுள் எதுவும் இழக்கப்படக் கூடாது. இவற்றைப் பற்றி ஆராயும் பொழுது சாதாரண வாழ்க்கைக்குத் தேவையான சொத்துகளுக்கு மதிப்பே இல்லை. நான் ஏழையானாலும் தனவதியானாலும் அது பெரிதன்று. என் முழுச் சத்தியையும் பெறக்கூடுமானால், சாதாரண வாழ்க்கைப் பிரச்சினைகள் தாமாகவே தீர்ந்து விடும். மனிதக்குலம் முழுவதும் தன் சத்தியைத் தூய்மை நிறைவு படுத்திக்கொள்ளும்பொழுது அதிகப் பொருள்களை ஆக்கவல்லதாகும். கூடிவாழ் போக்கின் பிரச்சினைகளின் முக்கியத்துவம் விலகிவிடும். கால்களாலும் உடல்களாலும் மக்கள் எதையும் ஆக்குவதில்லை. ஆனால், அவர்களுடைய உள்ளத்தாலும் நுண்ணறிவாலுமே ஆக்குகின்றார்கள். இவை தமக்குரிய அளவு வளர்ச்சி பெற்றுவிட்டால், தீர்க்க முடியாத நம்முடைய பிரச்சினைகளெல்லாம் தீர்க்கப்பட்டு விடும்.

உதவி புரியப்படாமலே குழந்தைகள் ஒழுங்கான சமூகத்தைப் படைத்துக்கொள்ள இயலும். பெரியவர்களாகிய நமக்குத்தான் சிறைச்சாலைகள், போலீஸ், சிப்பாய்கள், துப்பாக்கிகள் எல்லாம் தேவை. குழந்தைகள் தங்கள் பிரச்சினைகளைச் சமாதான முறையில் தீர்த்துக்கொள்கின்றன. சுதந்தரமும் கட்டுப்பாடும் ஒரு பதக்கத்தின் இரு பக்கங்களாகும் என்பதைக் குழந்தைகள் நமக்குக் காட்டியிருக்கின்றன. ஏனென்றால், விஞ்ஞானச் சுதந்தரம் கட்டுப்பாட்டுக்கு வழியாக்கும். நாணயங்களுக்கு இரு பக்கங்கள் இருக்கின்றன. ஒரு பக்கம் மற்றதைவிட அழகாகவும் மென்மையாகவும் செதுக்கப்பட்டு ஒரு தலையோ கதைத் தொடர்புடைய உருவமோ பொறிக்கப்பட்டிருக்கும். ஆனால், மற்றப் பக்கமோ, அலங்காரத்தில் குறைவாகவும், ஏதோ ஓர் எண்ணையோ சில எழுத்துகளையோ பெற்றுமிருக்கும். வேலைப்பாடற்ற பக்கத்தைச் சுதந்தரத்துக்கு ஒப்பிடலாம். சிறப்பாகச் செதுக்கப்பட்ட பக்கத்தைக் கட்டுப்

பாட்டுக்கு ஒப்பிடலாம். இது முழுமையும் உண்மையானது. வகுப்பில் கட்டுப்பாடு குலைந்த பொழுது குழப்பத்தில் எங்கோ அவளால் ஏற்பட்ட ஒரு குற்றத்தின் அறிகுறியை ஆசிரியை கண்டுபிடித்து விடுகிறாள்; உடனே திருத்தவும் செய்கிறாள். சாதாரணப் பள்ளிக் கூட ஆசிரியை இதை மானக்கேடாகக் கருதுவாள். ஆனால், அப்படி ஒன்றும் மானக்கேடில்லை. புதுமைக் கல்வியில் அனுசரிக்க வேண்டிய முறையில் இது ஒரு பகுதியாகும். குழந்தைக்குச் சேவை புரிவது வாழ்க்கைக்கே சேவை புரிவதாகும். இயற்கைக்கு உதவி புரியும் பொழுது அதற்கு அடுத்த நிலைக்கு உயர்கிறோம்; மேனிலை இயற்கையை அடைகிறோம். ஏனென்றால், மேலும் மேலும் உயரத் தில் செல்வது வாழ்க்கையின் விதியாகும். இவ்வகையில் உயரச் செல்லக்கூடிய அழகான படிக்கட்டைக் கட்டிவிட்டவை சிறு குழந்தைகளே. இயற்கையின் சட்டம் ஒழுங்கு. ஒழுங்கு தானாக வரும்பொழுது நாம் மறுபடியும் விசுவ ஒழுங்குக்குள் நுழைந்திருக் கிறோம் என்பதை அறிகிறோம்.

குழந்தையினிடத்தில் இயற்கை அன்னை எத்தனையோ பணிகளை ஒப்படைத்திருக்கிறாள். அவற்றுள் ஒன்று, வயது வந்தவர்களாகிய நம்மை இன்னும் உயர்ந்த நிலைக்கு எழுப்பிவிடுவதாகும். சத்தியின் உயர்ந்த நிலைக்குக் குழந்தைகள் நம்மை அழைத்துச் செல்கின்றன. அந்த நிலையில் பொருள் சம்பந்தமான பிரச்சினைகள் தீர்ந்துவிடு கின்றன. விடை பெற்றுக்கொள்ளும் வகையில் மறுபடியும் திரும்பச் சொல்ல விரும்புகிறேன். இது வரை பேசிக்கொண்டு வந்தவைகளை நம் மனத்தில் இருக்க உதவி புரிந்த சில வார்த்தைகளைக் கூற விரும்பு கிறேன். அது இறை வணக்கம் அன்று; நமக்கு நினைவூட்டும் சொற்கள்; நம் ஆசிரியைகளுக்கு ஒரு வேண்டுகோள்: ஒரு வகை யான பாடத் திட்டம்—நமக்குள்ள ஒரே ஒரு பாடத் திட்டம்— **‘ஆண்டவனே, குழந்தைமையின் இரகசியத்துக்குள் நாங்கள் நுழையும்படி எங்களுக்கு உதவி புரிவாயாக. உனது நீதியின் சட்டத்தையும் உனது தெய்விகக் கட்டளையையும் பின் பற்றி நாங்கள் குழந்தையை அறிந்து, அதற்கு அன்பு கலந்த சேவை புரிய எங்களுக்கு அருள் புரிவாயாக,’** என்பது.

# 28. அன்பும் அதன் மூலமும்—குழந்தை

எமது கூடிவாழ் வேளைகளில் [1] சரியான மான்டிசோரி கூட்டமாய் வந்து அமைகிறது. அடிக்கடி மாணவ மாணவிகள் தத்தம் தோழர்களையும் உறவினரையும் உடனழைத்துக்கொண்டு வருவார்கள். கைக்குழந்தைகள், சின்னஞ்சிறு குழந்தைகள், சிறுவர்கள், பெண்கள், இளைஞர், மகளிர், வயது வந்தவர், தொழில் புரிவோர் புரியாதவர், உயர்ந்த கல்வி அறிஞர், அவர்க்கு எதிர்மறையானவர் ஆகிய எல்லாரும் கலந்த கூட்டம் வரும். இந்தக் குழுவினர் இப்படி இப்படி நடந்துகொள்ளவேண்டும் என்று சிறிதளவும் நாங்கள் கவலைப் படவேண்டிய நிலைமை எங்களுள் எவர்க்கும் ஏற்படுவதில்லை. இந்தப் பலபடித்தரமான எங்களுடைய கூட்டங்கள் மற்றத் துறைகளின் கூட்டங்களைவிட வேற்றுமையான தோற்றம் அளிக்கின்றன. எங்களுடைய கல்வி முறைப்பயிற்சியில் ஈடுபட்ட மாணவ மாணவிகள், ஒரு கல்வித்தரத்தை அடைந்திருப்பார்கள். இது ஒன்றுதான் விதிக்கப்படும் நிபந்தனை. அவர்களில் மெற்றிகுலேஷன் படித்தவர்கள், பேராசிரியர்கள், வழக்கறிஞர், மருத்துவர், முன் இருவர்க்கு நோயாளிகளாகவும் வழக்காடவும் தகுதியுள்ளவர்களும் கூடியிருந்தார்கள். ஐரோப்பாவில் நடைபெற்ற கூட்டங்களில் பல நாட்டு மாணவர்கள் கூடுவது வழக்கமாய் இருந்தது. அமெரிக்கக் கூட்டம் ஒன்றில் ஒருவர் ஆட்சியின்மைப் பற்றுடையவர். இத்தனை வகையினர் கலந்திருப்பினும், ஒரு வித உராய்வும் ஏற்படவில்லை. இதை நடைபெறச் செய்தது என்ன ? எல்லாருக்கும் ஒரு பொது நோக்கம் இருந்ததால் இது நடைபெற்றது. பெல்ஜியம் என்பது மிகச்சிறிய நாடு. இந்தியாவின் ஒரு சிறு மூலையில் அதை அடக்கிவிடலாம். அவ்வளவு சிறிய நாடு பெல்ஜியம். அங்கு இரண்டு மொழிகள் இருக்கின்றன—ஃப்ளெமிஷ், ஃபிரெஞ்சு. சனத்தொகையும் அரசியல் கொள்கைப்படி பிரிக்கப் பட்டிருக்கிறது. இது போதாதெனக் கத்தோலிக்கச் சோசலிஸ்டுகளாகவும், வேறு அரசியற்குழுவினராகவும் பிரிந்து சிக்கலை உண்டுபண்ணி

---

1. Social occasions

யிருக்கின்றனர். ஒவ்வொருவரும் தம்முடைய குழுவுக்குக் கட்டுப் பட்டவர். சாதாரணமாக ஓரிடத்தில் இவ்வாறு பிரிக்கப்பட்டவர்கள் கூடுவதைக் காண்பது அரிது. எனினும், எங்களுடைய முறைப் பயிற்சியின் போது இவை ஒரு போதும் தவறி நடைபெறுவதில்லை. இந்த நிகழ்ச்சிகள் மிகவும் விந்தையாகக் காணப்பட்டதைக் குறித்துச் செய்தித்தாள்கள், 'பல ஆண்டுகளாக எல்லாப் பிரிவினரையும் கூட்டுவிக்கும் விருந்துகளை ஏற்பாடு செய்ய எவ்வளவோ முயற்சி செய்திருந்தும், இங்கு அது தானுகவே நடைபெறுகிறதே!' என்று வரைய ஆரம்பித்தன.

குழந்தையின் சத்தி இத்தகையது. அரசியல் கொள்கைகளும், மதப்பற்றுகளும் என்னவாயிருந்த போதிலும், நாம் எல்லாரும் குழந் தைக்கு நெருங்கியவர்கள். எல்லாரும் குழந்தையிடம் அன்பாய் இருக்கிறோம். இந்த அன்பிலிருந்துதான் குழந்தையின் ஒன்றுபடுத் தும் சத்தி பிறக்கிறது. வயது வந்தவர்களிடம் வலுவுடைமையும், அடிக்கடி தீவிர நம்பிக்கைகளும் இருக்கின்றன. இவை இவர்களைத் தனித்தனி குழுக்களாக்கிவிடுகின்றன. இவற்றைப்பற்றி வாதிக்கத் தொடங்குவது அடிதடியில் எளிதில் முடிகிறது. ஆனுல், ஒன்று: குழந்தை விஷயத்தில் எல்லாரும் ஒரே உணர்ச்சி பெற்றிருக்கின்றனர். இதற்குக் காரணமான குழந்தையின் சத்தி எவ்வளவு பெரிது என் பதைச் சிலரே உணர்கின்றனர்.

அன்பின் இயல்பைப்பற்றிச் சிந்தனைசெய்து பார்ப்போம்: இதைப் பற்றி மத குருமார்களும், புலவர்களும் என்ன கூறியிருக்கிறார்கள் என்பதைப் பார்ப்போம். ஏனென்ருல், இவர்கள் இந்தப் பெயர்பெற்ற மாபெருஞ்சத்தியைப்பற்றிச் சிறந்த முறையில் விளக்கியிருக்கின்றார் கள். எல்லா வாழ்வும் தோன்ற வைக்கும் பெருமன எழுச்சிகளைப் பற்றிய பாடல்களைவிட இனிமையானதும் உள்ளம் திருத்துவதும் வேறென்ன இருக்கிறது? மிகவும் நாகரிகமற்ற கொடிய மக்களையும் இவை உருகச் செய்வதில்லையா? சனத்தொகைக்கே சாவும் அழிவும் விளைவிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவர்களும் இந்தச் சொற் களின் அழகைக்கண்டு உணர்ந்து மாறுவதில்லையா? அவரவருடைய தொழில் எத்தன்மையதாயிருந்தாலும், இவர்கள் தங்கள் உள்ளத்தில் அந்தச் சத்தியை இன்னும் பெற்றிருக்கின்றார்கள். அச்சத்தி தூண் டப்படும்பொழுது அதனுல் ஏற்படும் இசைவு இவர்களுடைய இரு தயத்தைத் தொட்டுவிடுகிறது. இவ்வாறில்லையென்ற இப்பெரியோர் மொழிந்த சொற்களின் அழகு அவர் செவியில் பட்டிருக்குமா? அம் மொழிகள் வீணனவை என்றும் பொருளற்றவை என்றும் கருதியிருப் பார்கள். அவர்கள் இவ்வழகை உணர்வதென்ருல் அவர்களுடைய வாழ்க்கையில் அன்பு எவ்வளவு சிறிதளவில் வேலை செய்தாலும்,

அவர்கள் அவ்வன்புக்கு ஈடுபடக்கூடியவர்களாகவும் நனவில்லா நிலை யில் அதன் வேட்கை கொண்டவர்களாகவும் இருக்கின்றார்கள்.

உலகத்தில் இசையைப் பரவச் செய்யவேண்டுமானால், இதைப் பற்றி நாம் இன்னும் அதிகமாகச் சிந்திக்க வேண்டுமென்பது தெளிவா கிறது. இதனுடைய உட்கருத்துகளை ஆராய வேண்டும். ஒவ்வொரு வரிடமும் உள்ள மென்மையும் அன்பும் ஒன்றாகக் குவியும் இடம் குழந்தையிடந்தான். குழந்தைகளைப்பற்றிப் பேசப்படும் பொழுது மக்களுடைய உள்ளம் குழைகிறது ; இனிமையாகிறது. இவை தட்டி எழுப்புகின்ற ஆழ்ந்த மனவெழுச்சிகளில் மனிதர்குலம் முழுவதுமே பங்கு கொள்கிறது. **குழந்தையே அன்பாகிய மணற்கேணி.** குழந் தையைத் தொடும்பொழுது அன்பைத் தொடுகிறோம். அன்பு இன்னது என்று வருணிப்பது கடினமான விஷயம். நாம் அதை உணர்கிறோம். அதனுடைய வேர்களைப்பற்றி எவராலும் விவரிக்க இயலாது. அதனடி யாகப் பிறக்கின்ற பல விளைவுகளை மதிப்பிடவும் இயலாது. அல்லது மனிதர்களை ஒன்றுபடுத்துவதற்கு அதனுள் அடங்கியிருக்கும் சத்தி யைக் கூட்டிவைக்கவும் இயலாது. நமக்கிடையே காணப்படும் மதம், சாதி, கூடி வாழ் நிலைமை ஆகியவற்றின் வேற்றுமைகள் இருந்த போதிலும், குழந்தையைப்பற்றி வாதாடும்பொழுது உடன் பிறப்பு ஒற் றுமை ஒன்று நமக்கிடையே வளர்கிறது. இது நம்முடைய வெட் கத்தை வென்றுவிடுகிறது. மனிதனுக்கு மனிதன், குழுவுக்குக் குழு தினசரி வாழ்க்கையில் தம்மைக் காத்துக்கொள்ளத் துள்ளி எழக் காத் துக்கொண்டிருக்கும் தற்காப்புகளைத் தகர்த்தெறிகிறது.

குழந்தைகளின் அருகிலிருக்கும் பொழுது அவநம்பிக்கை அகல் கிறது. நாம் இனியவர்களாகவும் அன்பு நிறைந்தவர்களாவும் மாறி விடுகிறோம். ஏனென்றால், அவைகளைச் சுற்றிக் கூடும் பொழுது வாழ்க்கையே ஊற்றெடுக்கும். அவற்றின் உள்ளத்தில் தோன் றும் வாழ்க்கை ஒளியால் நாங்கள் குளிர் காய்கிறோம். பெரியவர் களிடம் அன்புணர்ச்சியுடன் தற்காப்புணர்ச்சியும் இணைந்து காணப் படுகின்றன. இவ்விரண்டில் அடிப்படையானது அன்பு ; மற்றது, அதன்மேல் பரப்பப்பட்டதாகும். குழந்தையிடம் நாம் கொண்டுள்ள உணர்ச்சியைப் போல அன்பும் மனிதர்க்கிடையே மறைந்து கிடக்க வேண்டும். ஏனென்றால், மனித ஒற்றுமை இருந்து வருகிறது. அன் பில்லாத ஒற்றுமையே இல்லை.

இக்காலத்தில் இது வரை காணப்பெறாத அளவில் போர்கள் அழிவை உண்டாக்கியிருக்கின்றன. இந்த அழிவு உலகத்தின் பல் வேறு நாடுகளையும் பாதித்திருக்கிறது. இந்த நிலையில் அன்பைப் பற்றிப் பேசுவது முற்றிலும் முரணானதென்றாலும், மக்கள் அதைப்

பற்றி எப்பொழுதும் போல விடாமல் பேசிக்கொண்டிருக்கின்றார்கள். எதிர்கால ஒற்றுமைக்குத் திட்டம் வகுக்கப்படுகிறது. அப்படியானால், அன்பு இன்னும் நிலைத்திருக்கிறதென்பதும், அதனுடைய அடிப் படைச் சத்தி இருக்கிறதென்பதும் தெளிவாகின்றன. இப்பொழுது ஒவ்வொரு நிகழ்ச்சியும் மனிதனைப் பார்த்து இவ்வாறு கூறுவது போன்றிருக்கிறது. ' அன்பு என்ற கனவு போதும். உண்மை என்ன பார்ப்போம். நமக்குத் தெரிந்தது அழிவைத் தவிர வேறெதுவும் இல்லை. அல்லது நகரங்களும், காடுகளும், பெண்களும், குழந்தைகளும் அழிக்கப்பட்டார்களென்பது பொய்யா ? சீர்திருத்துவதையும் அன்பை யும் பற்றி நாம் பேசிக்கொள்கிறோம். மாதா கோவிலிலும் அன்பு பேசப்படுகிறது; அதன் எதிரிகளாலும் பேசப்படுகிறது. ஏழையும் வறிஞனும், வெவ்வேறு மதக் கொள்கைகளைப் பின் பற்றுவோரும், மற்றுமுள்ளோர் அனைவரும் அன்பைப் பற்றியே பேசுகின்றனர்.

அன்பின் சத்தி இன்னும் இருக்கிறதென்பதற்கு வேறு சான்று வேண்டுவதில்லை. இது இப்படியானால், இந்தப் பெருந்தோற்றத்தைப் பற்றி ஏன் நாம் ஆராய்ச்சி செய்யக் கூடாது ? பொறாமை தன் தொழிலால் எதையும் பாழாக்குகின்ற போது மட்டும் ஏன் இது வாதாடப்பட வேண்டும் ? இதனுடைய சத்தி நமக்குப் பயன் அளிக்கும் வகையில் ஏன் இதை எப்பொழுதும் ஆய்ந்து பகுத்தறியக் கூடாது ? இது எவ்வாறு தோன்றுகிறதென்று நம்மையே நாம் ஏன் கேட்டுக்கொள்ளக் கூடாது ? நமக்குத் தெரிந்த மற்றச் சத்திகளுடன் இந்த முக்கியமான அடிப்படைச் சத்தியையும் கற்கலாம் என்று எவரும் ஏன் இது வரை சிந்தித்ததில்லை ? மற்ற இயற்கைச் சத்தி களைப் பற்றி ஆராய்வதற்கு எவ்வளவு நேரம் தன் நுண்ணறிவை மனிதன் திருப்பியிருக்கிறான் ! அச்சத்திகளைத் துருவிப் பார்த்துப் பாகுபடுத்தியிருக்கிறான் ! இவற்றைப் பற்றி அளவு கடந்த உண்மை களைக் கண்டுபிடித்திருக்கிறான்! இந்த உழைப்புச் சத்தியில் ஒரு கடுகளவாவது ஏன் மனிதனை ஒற்றுமைப்படுத்தும் சத்தியை ஆய் வதற்குப் பயன்படுத்தக் கூடாது? அன்பில் மறைந்து கிடக்கும் சத்தியை வெளியாக்குவதற்கு மேற்கொள்ளும் ஒவ்வொரு முயற்சியும், அன்பைப்பற்றி விளக்கம் கூறும் முயற்சியும் மிகுந்த ஆவலுடன் வரவேற்கப்பட வேண்டும் ; மிகவும் முக்கியமானதென்று கருதப்பட வேண்டும். மதாசாரியர்களும் புலவர்களும் அன்பை ஒரு குறிக் கோளாக வைத்துக்காட்டியிருக்கிறார்கள் என்று நான் மேலே கூறி யிருக்கிறேன். அது வெறுங்குறிக்கோள் மட்டுமன்று. அது என்றும் ஓர் உண்மையாய் இருந்தே வந்திருக்கிறது ; இனியும் இருக்கும்.

இந்த அன்பின் உண்மையை உணர்ந்தோமானால், இது நம் பள்ளிக்கூடத்தில் கற்றுக்கொண்ட பாடத்தால் ஆனது அன்று என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

மதகுருக்களும் புலவர்களும் கூறிய பொன் மொழிகளை நாம் மனப்பாடம் செய்திருந்தோமானாலும், சிறு எண்ணிக்கையுடைய அச் சொற்களை நம்முடைய வாழ்க்கைத் தொல்லைகளிடையே இதற்குள் மறந்து போயிருப்போம். மக்கள் அன்பைப்பற்றித் தீவிரமாக வேண்டினார்களானால், அது அவர்கள் கற்றதாலும் கேட்டதாலும் அன்று. அன்பும் அதன் நம்பிக்கையும் ஒருவரால் கற்றுக்கொள்ளக்கூடியவை அல்ல. அவை வாழ்க்கையின் மரபினடியாக வரும் ஒரு பகுதியாகும். புலவர்களும் மதாசாரியர்களும் பேசினது போல வாழ்க்கையே பேசுகிறது.

மதமும் செய்யுளும் தவிர வேறு வகையில் அன்பைப் பற்றி ஆராயலாம். வாழ்க்கை சம்பந்தப்பட்டதாகவே அதைக் காணலாம். ஏதோ ஒரு கற்பனை செய்யப்பட்டதாகவோ விரும்பப்பட்டதாகவோ கருதப்படுவதன்—எதனாலும் அழிக்க இயலாத என்றும் நிறைந்த உண்மையின்—சக்தியாக அன்பை ஆய்வோம்.

இந்த உண்மையைப்பற்றியும், புலவர்கள் மதாசாரியர்கள் பொன் மொழிகளைப் பற்றியும் சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். அன்பு என்று கூறுகிறோமே, இது அண்டத்தில் காணப்படும் மாபெருஞ்சக்தி. இதற்குப் பொருத்தமான பதத்தை என்னால் உபயோகிக்க இயலவில்லை. இது சக்தி மட்டுமன்று; அதற்கும் மேலானது. இதுவே சிருஷ்டி. இதை இன்னும் மேலாகக் கூற விரும்புகிறேன். **அன்பே ஆண்டவன்.**[1]

எல்லாப் புலவர்களும் துறவிகளும் சொல்லிப் போந்த நீதியுரைகளை உங்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். ஆனால், அவை எல்லாம் எனக்குத் தெரியா. அத்தனை மொழிகளாலேதான் என்னால் பேசவும் இயலுமா? ஆனால், எனக்குத் தெரிந்த ஒருவருடைய சொற்களை எடுத்துக்கூறுகிறேன். அவர் அன்பைப் பற்றிப் பேசும் பொழுது தம்மையே தீவிரமாக விளக்கிக் காட்டியிருக்கின்றார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் இறித்தவர் உள்ளங்களில் அவருடைய சொற்கள் ஆழமாகப் பதிந்து பிரதிபலிக்கின்றன.

'மனிதர்கள் மொழியிலும் தேவர்கள் மொழியிலும் நான் பேசி என்னிடம் அறம்[2] இல்லாவிடில், நான் ஒலிக்கும் பித்தளை போலவும், இசைக்கும் ஜாலராப் போலவும் ஆகிவிடுகிறேன். ஜோதிடம் தெரிந்து, எல்லா மாயைகளையும் ஞானங்களையும் அறிந்து, எல்லா மத நம்பிக்கைகளையும் பெற்று, மலைகளையும் பெயர்க்க வல்லவனாய் இருந்தும், என்னிடம் அறம் இல்லை எனில், நான் ஒன்றும் இல்லாதவன்.

---

1. 'அன்பே சிவம்.' 2. Charity

என்னுடைய சொத்தெல்லாம் ஏழைகளின் பசி நீக்கச் செலவழித்தேனுனாலும், என்னுடைய உடலை எரிக்கக் கொடுத்துவிட்டேனுனாலும், என்னிடம் அறம் இல்லாவிடில் எனக்கு ஒரு பயனும் இராது; (செயின்ட் பால் காரிந்தியருக்குக் கூறியது : I, XIII)

'இதைப் பற்றி இவ்வளவு ஆழமாக உணர்கிறீர்களே! உங்களுக்கு அன்பு இன்னதென்பது தெரிந்திருக்குமே! அது ஓர் அற்புதமானதாக இருக்க வேண்டும். அதை எங்களுக்கு விளக்கிக் கூற மாட்டீர்களா?' என்று அந்த ஞானியைப் பார்த்து நாம் எவராவது கேட்டுக்கொண்டோமானுல், அதற்காக எவரும் நம்மைக் குறை கூற மாட்டார்கள். ஏனென்ருல், மிகவும் உயர்ந்த இப்பற்றுதலைப் பற்றி விளக்குவது என்பது நமக்கு எளிதன்று என்பதை அறிகின்ரேம். செயின்ட்பாலின் சொற்களை இக்கால நாகரிகத்தில் காணலாம். மலைகளைப் பெயர்க்கவும், இன்னும் பெரிய அற்புதங்களைச் செய்யவும் நம்மால் இப்பொழுது இயலாதா? நாம் இரகசியமாய்ப் பேசுவதை உலகத்திலுள்ளார் அனைவரும் கேட்கும்படி செய்ய இயலாதா? ஆனுல், இத்தனையும் அன்பில்லாவிடில் ஒன்றுமே இல்லை எனலாம். ஏழைகளுக்கு உணவூட்டி உடை அளிப்பதற்கு மிகப்பெரிய அமைப்புகளை ஏற்படுத்தியிருக்கிரேம். ஆனுல், அவற்றுக்கடியில் இருதயம் ஒன்று இல்லாவிட்டால், அவைகளெல்லாம் உள்ளே ஒன்றுமில்லாத வெறுந் தோற்கருவியின் ஒலி போன்றவை ஆகிவிடும். எனவே, இந்த அன்பின் இயல்பென்ன? மேலே எடுத்துக்காட்டிய செயின்ட்பால் அன்பின் பெருமையை இன்னும் தொடர்ந்து தத்துவக் கொள்கை எதையும் கூருமல் காட்டுகிருர். அவர் கூற்றுப் பின் வருவது :

'அறம் என்பது எளிதில் கோபியாது; பரிவுடையது. அறம் அழுக்காறு கொள்ளாது; அநியாயமாக நடந்துகொள்ளாது; தற்புகழ்ச்சியடையாது; பேராசை கொள்ளாது; தனதெனக் கொள்ளாது; எதிர்ப்பைத் தூண்டாது; தீமைக்குத் திட்டம் வகுக்காது; அநீதியில் மகிழ்ச்சி அடையாது; ஆனுல், உண்மையில் இன்புறுகிறது; எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்கிறது; எல்லாவற்றையும் நம்புகிறது; எல்லாவற்றையும் எதிர் பார்க்கிறது; எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்கிறது.'

இது மெய்ந்நிகழ்ச்சியின் நீண்ட பட்டியல்; மனப் படங்களின் வருணனை. இத்தனை படங்களும் அதிசயிக்கும் வகையில் குழந்தைமையின் பண்புகளைக் குறிக்கின்றன. அவை **உட்கவர் மனத்தையே** வருணிப்பது போலத் தோன்றுகின்றன. எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளும் இந்த மனமானது எதையும் தீர்மானிப்பதில்லை; மறுப்பதில்லை; எதிர்வினை ஆற்றுவதில்லை; எல்லாவற்றையும் உட்கவர்ந்து கொள்கிறது; வருகின்ற மனிதனில் மறுபிறப்பெடுக்கச் செய்கிறது.

(**புத்துயிர் பெறச்**[1] செய்கிறது.) மற்ற மனிதர்களிடம் சமவுரிமை பெறுவதற்கும் அவர்களுடன் கூடி வாழ்வதற்கும் தன்னைத் திருத்திக் கொள்வதற்கும் இப்புத்துயிர்ச்செயலை ஆற்றுகிறது. குழந்தை எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்கிறது. அது உலகத்தில் பிறக்கும் இடத்தில் எத்தகைய நிலைமைகள் இருந்த போதிலும், தன்னை அவற்றிற்குத் தகுந்தவாறு அமைத்துக்கொண்டு, அவ்விடத்தில் வாழ்கிறது. இனிப் பெரியவனுக்ப் போகின்ற சிறு குழந்தை, அந்தச் சூழ்நிலையில் இன்புற்று வாழ்கிறது. உஷ்ணமண்டலத்தில் பிறந்தால் வேறு எந்தத் தட்பவெப்பநிலையிலும் வாழ முடியாதபடி தன்னை ஆக்கிக்கொள்கிறது. அக்குழந்தையை வரவேற்பது பாலைவனமானாலும் சரி, அல்லது கடலை அடுத்த பரந்த சமவெளியானாலும் சரி, அல்லது மலைச் சரிவுகளானாலும் சரி, அல்லது ஆர்க்டிக்கு மகா சமுத்திரத்தின் உறைந்த பனி வயலானாலும் சரி—அவற்றுள் ஒவ்வொன்றிலும் அது மகிழ்ச்சி பெறுகிறது. அது எவ்விடத்தில் பிறந்து வளர்கிறதோ, அவ்விடத்தில் தன் வாழ்க்கைச் சிறப்பைக் காண்கிறது.

உட்கவர் மனம் எல்லாவற்றையும் வரவேற்கிறது; தன் நம்பிக்கைகளை அனைத்திலும் வைக்கிறது; செல்வத்தையும் வறுமையையும் சமநோக்குடன் வரவேற்கிறது; எந்த மதத்தையும் ஏற்றுக்கொள்கிறது; தன் நாட்டைச் சார்ந்தவர்களுடைய சார்பெண்ணங்களையும் பழக்க வழக்கங்களையும் தனக்குள் புத்துயிர் பெறச் செய்துகொள்கிறது.

**இதுதான் குழந்தை!** வேறு விதமாக இருந்திருந்தால், உலகத்தின் வெவ்வேறு கோடிகளில் இருக்கும் மக்கள் குலம் நிலைபெற்றிருக்க இயலாது. அது ஒவ்வொரு தரமும் புதிதாகத் தொடங்க வேண்டியிருந்தால், மனிதக்குலம் இந்தத் தொடர்ந்த முன்னேற்றத்தை அடைந்திருக்க இயலுமா ?

**மனிதனுல் சிருஷ்டிக்கப்பட்ட சமூகத்துக்கு அடிப்படையாய் இருப்பது உட்கவர் மனம்.** அதை மென்மையான சின்னஞ்சிறு சிசு வடிவத்தில் நாம் காண்கிறோம். அது மனிதனின் வருங்கால வாழ்க்கையின் மாயத்தொல்லைகளைத் தன் அன்பினால் தீர்த்துக்கொள்கிறது.

இதுவரை கற்றதைவிட இன்னும் அதிகமாகக் குழந்தையைப்பற்றிக் கற்போமானால், அதனுடைய எல்லாக் கூறுகளிலும் நாம் அன்பைக் காண்கிறோம். அன்பு கவிஞர்களாலும் மத குருக்களாலும் பகுக்கப்படவில்லை ; ஒவ்வொரு குழந்தையும் தனக்குள் வெளியாக்கிக்கொள்ளும் உண்மைகளால் பகுக்கப்படுகிறது.

---

1. Incarnates

செயின்ட் பாலின் வருணனையை எண்ணிக் குழந்தையைப் பார்ப்போமானல், அது,'குழந்தையிடத்தில் இதுவரை கூறப்பட்டதெல்லாம் காணக்கூடும். ஒவ்வோர் அறத்திலும் அடங்கியுள்ள செல்வங்களெல்லாம் இக்குழந்தையிடம் உருவாக்கப்பட்டிருக்கின்றன,' என்று நம்மைச் சொல்லச் செய்யும்.

முக்கியமாக இந்தச் செல்வம் கவியிலும் மதத்திலும் எடுத்துக் கூறப்பட்ட சில இடங்களில் மட்டும் காணப்படுவதோடு ஒவ்வொரு மனிதனிடமும் காணப்படுகிறது. எல்லோர்க்கும் அளிக்கப்படும் ஒரு மாயம் இது. இந்தப் பெரிய சக்தி உருவாக்கப்படுவதை நாம் எங்கும் காண்கிருேம். மனிதன் பிரிவும் பூசலும் நிறைந்த பாலைவனம் ஆக்குகிருன். ஆண்டவன் புத்துயிராக்கும் இம்மழை இடைவிடாது பெய்யச் செய்கிருன். ஆதலால், மனிதன் ஆக்குகின்ற ஒவ்வொன்றும்—அது சீர்திருத்தம் என்று கருதப்பட்டாலும்—அன்பின் துணையில்லாமல் சாதிக்க இயலாதென்பதை நாம் தெளிவாகப் புரிந்துகொள்கிருேம். எம்மிடையே கொண்டுவரப்பட்ட ஒவ்வொரு குழந்தையிடமும் இந்த அன்பு என்ற கொடை பிறக்கிறது. இதனுடைய மறைந்து கிடக்கும் சக்திகளைப் புரிந்துகொண்டோமானல், அல்லது இதனுடைய முழு மதிப்பும் வளர்ச்சி பெற்ருல், நாம் இதுவரை அடைந்த பெருஞ்சாதனைகளெல்லாம் இன்னும் அளவு கடந்து பெருகும். வயது வந்தவர்களும் குழந்தைகளும் தங்கள் சக்திகளை ஒன்ருகத் திரட்ட வேண்டும். சிறப்படைய வேண்டுமானல், வயது வந்தவர்கள் அடக்கமுடையவர்களாகிக் குழந்தையிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும். மனிதன் எத்தனையோ அற்புதங்களைக் கண்டுபிடித்திருக்கிருன் ; அவற்றுடன் தொழில் புரிந்திருக்கிருன். ஆனல், ஒரே ஒரு துறையில் அவன் அவ்வளவு கவனம் செலுத்தாது விட்டிருக்கிருன். அது தொடக்கத்திலிருந்து ஆண்டவனல் செய்யப்பட்ட அற்புதம் ; குழந்தைகளின் அற்புதம். இதைச் சிந்திக்கும் பொழுது அதிசயமாகத்தானே இருக்கிறது !

இது வரை நாம் எடுத்துக்காட்டினதற்கு இன்னும் மேலானது அன்பு. அது மனிதன் மனத்தில் மனக்கோட்டையாக உயர்த்தப்பட்டிருக்கிறது. பல சிக்கல்கள் நிறைந்த அண்டச் சக்தியின் ஒரு பகுதியே நம்மிடத்தில் இருக்கிறது. இது, ' கவர்ச்சி, உடன்பாடு ' என்னும் சொற்களால் குறிக்கப்படுகின்றது. அன்பு உலகத்தை ஆள்கிறது ; விண் மீன்களை அதனதன் இருப்பிடத்தில் நிலைபெறச் செய்கிறது ; அணுக்களை ஒன்ருக்கிப் புதுப் பொருளை உண்டுபண்ணுகிறது ; உலகப் பரப்பில் பொருள்களை இருக்கச்செய்கிறது ; உயிருள்ளவற்றை

யும், உயிர் அற்றவற்றையும் ஒழுங்குபடுத்தி நடத்திவைக்கிறது ; ஒவ்வொரு பொருளின் மூலச் சத்தியாய் ஒன்றிக்கிடக்கிறது ; மோட்சத்துக்கு வழி காட்டி போன்றிருக்கிறது ; பரிணமத்தின் ஈறிலாமைக்குக் காரணமாயிருக்கிறது. பொதுவாக இது நனவில்லா நிலையுடையது. மனிதன் இருதயத்தை உணர்ந்த பொழுது இதை **அன்பு** என்று வழங்குகிருன்.

எல்லா விலங்குகளும் காலாகாலங்களில் இனப்பெருக்கு ஊக்கத்தைப் பெறுகின்றன. இதுவும் அன்பின் ஒரு வகையாகும். இவ்வகையான அன்பு இயற்கை அன்னையின் கட்டளையாகும். ஏனென்ருல், இவ்வூக்கமில்லாமையால் வாழ்க்கைப் பெருக்கம் இல்லாது போய் விடும். ஆதலால், இந்த அண்டச் சத்தியில் ஒரு சிறு பகுதி, உயிருடைய உருவங்களுக்குச் சிறிது நேரத்துக்கு அளிக்கப்படுகிறது. அப்பொழுது இனம் அற்றுப்போகாமலிருக்கும்.

விலங்குகள் அதை ஒரு கண நேரம் உணர்கின்றன. உடனே அவற்றின் நனவு நிலையிலிருந்து அது மறைந்து போகிறது. அன்பை அளிப்பதில் இயற்கை அன்னை எவ்வளவு சிக்கனமாய் இருக்கிருள் பாருங்கள்! இது அவ்வளவு குறைவான அளவில் அவளால் அளிக்கப் படும். இவ்வன்பின் சத்தி எவ்வளவு விலையுயர்ந்ததென்பதைப் பாருங்கள். ஏதோ இவ்வாறு சிறு சிறு அளவே காட்ட வேண்டுமென்று ஆஞ்ஞை பெற்றது போலல்லவா செய்கிருள் இயற்கையன்னை ! குட்டிகள் பிறக்கும் பொழுது அன்பின் கொடை அவற்றை ஈன்பனவற்றுக்கு மறுபடியும்; அளிக்கப்படுகின்றது. இது ஒரு தனிப்பட்ட அன்பு. தம் குட்டிகளுக்கு உணவூட்டும் வகையில் இவ்வன்பு அவற்றைத் தூண்டிவிடுகிறது ; குட்டிகளை வெதுவெதுப்புடன் இருக்கச் செய்கிறது ; தம் உயிரையும் கொடுத்துத் தம் குட்டிகளைக் காக்கச் செய்கிறது. குட்டிகளின்மேல் தாய்க்கிருக்கும் பற்றுதலால் அது இரவு பகலாகக் குட்டியின் அருகிலேயே இருக்கிறது. குட்டியின் நலத்தையும் பாதுகாப்பையும் நடத்திவைத்து இனம் அழியாது காக்க வைப்பதும் இவ்வன்பேயாகும். இந்தச் சத்தியின் விசேஷப்பகுதிக்கு வரம்புள்ள பணியிருக்கிறது ; ' இனம் வளர்க்கப்பட வேண்டும் ; பாதுகாக்கப்பட வேண்டும். இதற்காக நீ உன்னை அதற்கு ஆளாக்கிக் கொள்ள வேண்டும். குட்டிகள் உன் உதவி வேண்டா என்கின்ற வரைக்கும் உன் சேவை நடந்துகொண்டு வரவேண்டும்,' என்கிருள் போலும் இயற்கை அன்னை ! ஐயோ ! குட்டிகள் வளர்ந்த பிறகு இந்த அன்பு எங்கோ மாயமாய்ப் பறந்துவிடுகிறது. ஒரு விணுடிக்கு முன் இருந்தது, அடுத்த விணுடியில் மறைந்துவிடுகிறது. இது வரை அறுக்க முடியாத அன்புத்தளையால் கட்டப்பட்ட இணைபிரியாதவை இப்பொழுது பிரிந்துவிடுகின்றன. அவை எங்காவது சந்தித்தால்

முன் பின் தெரியாதவை போல நடந்துகொள்கின்றன. தாயினிடமிருந்து குட்டி ஒருவாய் உணவைக் கௌவ முன் வந்தால் இதுவரை தன் குட்டிக்கு எதையும் கொடுக்க மறுக்காதது இப்பொழுது தன் குட்டியைக் கடுமையாகத் தாக்குகிறது.

இதன் பொருள் என்னவாய் இருக்கலாம் ? இதன் பொருள் இது : நனவு நிலையாகிய மேகத்துக்குள் புகுந்துவந்த சத்திக்கிரணங்கள் ஒவ்வொருவருக்கும் தாற்காலிகமாக அளிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் வேலை நிறைவேற்றப்பட்டவுடன் அச்சத்தி திரும்பவும் முன்னிருந்த நிலைக்கு இழுக்கப்பட்டுவிடுகிறது.

இதெல்லாம் விலங்குகளில் நடைபெறுவது. ஆனால், மனிதனில் இவ்வாறு நடைபெறுவதில்லை ; குழந்தைகள் வளர்ந்தவுடன் அன்பு இருந்த இடம் தெரியாமல் மறைவதில்லை. இது அதனுடன் நின்றுவிடுவதில்லை. இது தன் குடும்பத்துக்கு அப்பாலும் செல்கிறது. ஒரு குறிக்கோள் நம் நெஞ்சைத் தொட்டவுடன் நம்மிடம் அவ்வன்பு தோன்றி நம்மை எல்லாம் ஒற்றுமைப்படுத்திவைத்ததை நமக்குள்ளே கண்டதில்லையா ?

மனித குலத்தில் அன்பு நிரந்தரமானது. அதனுடைய பலாபலன்கள் ஒரு தனிப்பட்டவரின் வாழ்க்கையின் புறத்திலே உணரப்படுகின்றன. கூடிவாழ்குழு வரவர விரிவடைந்துகொண்டு போய், உலகம் முழுவதையுமே ஒன்றுபடுத்த முயல்கிறதே ! இது என்ன ? மற்றவர்கள் கடந்த நூற்றாண்டுகளில் உணர்ந்த அன்பின் பயன்தானே ?

இயற்கையன்னை இச்சத்தியைக் குறிப்பிட்ட காரியங்களுக்கென்று அளித்தாளானால், மற்றச்சீவராசிகளுக்கு அவ்வளவு திட்டமாக அளந்தளித்தாளானால், மனிதனுக்கு மட்டும் இவ்வளவு தாராளமாக அளிப்பதற்குக் காரணம் இல்லாமற்போகாது.

இவ்வன்பின் எல்லாக் கூறுகளினாலும் கடைத்தேற்றம் ஏற்பட வழியுண்டாயின், இதைப் பொருட்படுத்தாததால் அழிவுக்கு வழிகாட்டும் என்பதும் உறுதி.

மனிதன் வெற்றிபெற்ற பற்பல நாகரிக முன்னேற்றங்களைக்கண்டு அவற்றின்மேல் நிறைந்த பற்றுதல் கொள்கின்றான். ஆனால், நமக்கு அளிக்கப்பட்டிருக்கும் சத்திப் பகுதியானது அளவுக்கடங்காதது ; மற்ற வெற்றிகளிலும் மேம்பாடுடையது. இவைகளெல்லாம் அச்சத்தியின் தாற்காலிகத் தோற்றங்களே. சிறிது காலம் கழிந்த பிறகு இவற்றைப் புது வெற்றிகள் மறைத்த பிறகு இவைகளும் மறைந்துபோகும்.

ஆனால், சத்தி அழிந்து போவதில்லை. அது சிருஷ்டியை நடத்திக் கொண்டே போகும்; தன்னுடைய நோக்கத்தின் முடிவையும் வளர்ச்சி பெறச் செய்துகொண்டு போகும். **காத்தலும் கடைத்தேற்றலும்**[1] மனிதன் இவ்வுலகத்தினின்று அழிந்த பிறகும் நடைபெற்றுக்கொண் டிருக்கும்.

அன்பு மனிதனுக்கு ஒரு நன்கொடையாக அளிக்கப்பட்டிருக் கிறது; **விசுவ நனவு நிலை**[2]யால் உயிர் இனங்களுக்கு இரவலாக அளிக்கப்பட்டது போல இருக்கிறது. அதைப் பெரும்புதையலெனப் பாதுகாக்க வேண்டும். கூடிய வரை நிறைந்த அளவுக்கு அதை வளர்த்துப் பெருக்கவேண்டும். உயிர் இனங்களில் மனிதன் ஒருவனால் தான் இவ்வாறு பெற்ற சத்தியைத் தூய்மை செய்ய[3] இயலும்; தான் பெற்ற இச்சத்தியை மேலும் மேலும் வளர்ச்சி பெறச் செய்ய இயலும். இதைக் காப்பது இவன் கடமையாகும். இது விசுவத்தையே ஒன்று கப் பிணைக்கின்றது. ஏனென்றால், இது மெய்யான சத்தி; ஏதோ கருத்தன்று.

இதன் சத்தியால் மனிதன் தன் நுண்ணறிவாலும் கரங்களாலும் ஆக்குவித்தவைகளை ஒன்றுபடுத்த இயலும். அடிக்கடி நடப்பது போல இவ்வன்பின் துணை இல்லாவிட்டால், இவன் ஆக்குவித்தவை எல்லாம் ஒழுங்கின்மையையும் அழிவையும் பிறப்பிக்கும். மனிதனது சத்தி வளர வளர, இவ்வன்பில்லாவிடில் ஒன்றும் நிலைபெறாது; எல் லாம் வீழ்ச்சியடையும்.

இப்பொழுது அந்த ஞானியார் கூறிய பொன்மொழிகளை நம்மால் புரிந்துகொள்ள இயலும். **அன்பில்லாவிட்டால் எவையிருந்தும் ஒன்றுமில்லை.** நமது இருளைப் போக்குகின்ற மின்சத்தியைவிட உயர்ந் தது அன்பு; வான வெளியில் நம் குரலை எடுத்துச்செல்லும் வானொலி அலைகளைவிட மேலானது; மனிதனால் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன் படுத்தப்பட்ட மற்ற எல்லாச் சத்திகளையும்விட உயர்ந்தது. எல்லா வற்றையும்விட அன்பே சத்தியுள்ளது. மனிதர்களால் கண்டுபிடிக் கப்பட்டவைகளைக்கொண்டு மனிதன் செய்யக்கூடியதெல்லாம் உப யோகிப்பவனுடைய நனவு நிலையைப் பொறுத்திருக்கிறது. ஒவ்வொரு வரிடமும் இருக்கவேண்டுமென்பதற்கே இந்த அன்பு அளிக்கப்பட் டிருக்கிறது. மனிதனுக்கு அளிக்கப்பட்டிருப்பது திட்டப்படுத்தப்பட்ட தாகவும் ஓரளவுக்குத் தெளிவு பெறாததாகவும் இருந்த போதிலும்,

---

1. Protection and salvation, 2. Cosmic consiousness,
3. Sublimate

அவனுக்குக் கிடைத்திருக்கும் சத்திகள் எல்லாவற்றிலும்இதுஉயர்ந்த தாகும். நம்மிடம் நனவு நிலேயில் பெறப்பட்டிருக்கும் அன்புப்பகுதி, ஒவ்வொரு குழந்தை பிறக்கும் பொழுதும் மறுபடியும் அளிக்கப்படு கிறது. பிற்காலத்தில் சந்தர்ப்பங்கள் காரணமாக அது மறைந்து கிடக்கும் வகை ஏற்பட்ட போதிலும், அதற்காக நாம் மனே வேகத் துடன் பரிவு கொள்கிறேம். ஆதலால், இதை நாம் ஆராயவேண்டும். நம்மைச் சூழ்ந்துள்ள மற்றச் சத்திகளைவிட இச்சத்தியை நாம் அதிக மாகப் பயன்படுத்தவேண்டும். ஏனென்ருல், மற்றச் சத்திகளைப்போல இச்சத்தி சூழ்நிலேக்கு இரவல்ாகக் கொடுக்கப்படவில்லே. நமக்கன்றே அளிக்கப்பட்டிருக்கிறது ! அன்பைப்பற்றியும் அதைப் பயன்படுத்து வதைப்பற்றியும் ஆராயப்புகுந்தால், அது உற்பத்தியாகும் மூல ஸ்தானத்துக்கு நம்மை அழைத்துச் செல்லும். அந்த மூலமேகுழந்தை.

மனிதன் கடைத்தேறி மனிதக்குலத்தை ஒற்றுமைப்படுத்த ஆசை கொண்டாஞனல், அவனுடைய வேதனைகளிலும் கவலேக்ளிலும் இந்த வழியையே அவன் பின் பற்ற வேண்டும்.

# பொருட்குறிப்பு அகராதி



எ

ம

# பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 16 | குழப்பிக்கொண்டிந் தோம் | குழப்பிக்கொண்டிருந் தோம் |
| 8 | 23 | கல்வியின்மையும் | கல்வியின் மையம் |
| 12 | 15 | உந்து நிலை | உயர் நிலை |
| 19 | 22 | சிறு குழந்தையும் | சிறு குழந்தையின் |
| 23 | 25 | பெறு மாறுதல்களை | பெரிய மாறுதல்களை |
| 29 | 16 | எவ்வாறு | இவ்வாறு |
| 45 | 2 | கார்பஸ்கில்கள் | கார்பசல்கள் or கார்ப ஸல்கள் |
| 63 | 20 | இயாதது போல | இயலாதது போல |
| 66 | 12 | தோன்றுவற்கு | தோன்றுவதற்கு |
| 67 | 3 | எறும்புண்ணி | எறும்புண்ணிக்கு |
| 80 | 35 | முதிந்தோர் | முதிர்ந்தோர் |
| 86 | 1 | கனவுடன் | நனவுடன் |
| 98 | 34 | பெருப்பாலும் | பெரும்பாலும் |
| 107 | 32 | பயன்படுத்தப்பட்டிருக் கிறது, | (பயன்படுத்தப்பட் டிருக்கிறது) |
| 118 | 35 | Enertia | Inertia |
| 119 | 14 | உயிரியல் | உயிரியின் (organism = உயிரி) |
| 121 | 9 | கெஸெஸ் | கெஸெல் |
| 122 | 12 | வற்றுமைப்பகுதிகளும் | வேற்றுமைப் பகுதி களும் |
| 123 | 21 | புறகணித்தலாகாது | புறக்கணித்தலாகாது |
| 135 | 27 | முதுகோடு முதுவாய் | முதுகோடு முதுகாய் |
| 143 | 9 | பொது நுட்பம் | பொறி நுட்பம் |
| 150 | 14 | பேசுவதத்கு | பேசுவதற்கு |
| 150 | 17 | அடைப்படையில் | அடிப்படையில் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 153 | 17 | ஒரு நாயின் | ஓநாயின் |
| 160 | | பொருறுக்கும் | பொருளுக்கும் |
| 160 | 22 | குறி சொல் | குறுகிய சொல் |
| 161 | 19 | விரிட்டமுதது | வீரிட்டழுதது |
| 169 | 8 | மூழுவதும் | முழுவதும் |
| 171 | 1 | கூட்டிச் சொலிற்று | கூட்டிச் சொல்லிற்று |
| 178 | 18 | தீர்ப்புத் கூறவேண்டும் | தீர்ப்புக் கூறவேண்டும். |
| 180 (ஈற்றயலடி) | | வெளிப்படையுருங்கள் | வெளிப்படையுருவங்கள் |
| 212 | 5 | வைத்துக்கொண்டிருந்தாலோ | துவைத்துக்கொண்டிருந்தாலோ |
| 214 | | The forgotten citizen என்ற அடிக்குறிப்பு 213-ஆம் பக்க அடியில் '2' என்ற எண்ணுடன் வரவேண்டும். | |
| 213 | | 'குழந்தை மறைக்கப்பட்ட குடி' 2 என்ற எண் குறிப்பிருக்க வேண்டும் | |
| 219 | 29 | Trapeza | Trapeyia |
| 225 | 13 | நபன் | நான் |
| 240 | 2 | தன | தன் |
| 244 | | Foot Note - Charectero-logy | Characterology |
| ,, | 14 | ,, | ,, |
| 294 | 26 | ஈர்க்கப்படுவம்போலவும் | ஈர்க்கப்படுவது போலவும் |
| 317 | 10 | இந்தந் துணைக் கருவி | இந்தத் துணைக் கருவி |
| 317 | 26 | பெற்றவள் அல்லேன் | பெற்றவன் அல்லேன் |
| 341 | 11 | அளிக்கமேண்டுமானல் | அளிக்கவேண்டுமானல் |
| 348 | 37 | பொருத்தமாள | பொருத்தமான |
| 362 | 7 | பிரர்த்தனையை | பிரார்த்தனையை |
| 363 | 9 | புரிந்துகொவது | புரிந்துகொள்வது |

பக்கத்தலைப்புகளைப் பின் வருமாறு மாற்றுக:

பக்கம் 113, 115, 117, 119, 121—குழந்தையின் சுதந்தர வெற்றி
பக்கம் 321, 323, 325, 327, 329, 331, 333—கீழ்ப்படிதலின் மூன்று நிலைகள்.